தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி



# வெள்ளிவிழா மலர்





24, 25—10—1972

உ

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி

# வெள்ளி விழா மலர்





இம்மலர்

25—10—72இல் நிகழ்ந்த பல்கலைக் கல்லூரி வெள்ளி விழாவில்

தமிழ்நாடு முதலமைச்சர், டாக்டர், கலைஞர்,

மாண்புமிகு. திரு. மு. கருணாநிதி அவர்களால்

வெளியிடப்பெற்றது.



தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி

25—10—72

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

# முன்னுரை

செந்தமிழ்த் திருநாட்டின் கடந்த நானூருண்டு இலக்கிய வரலாற்றில், பிரித்தறிய ஒண்ணுச் சிறப்பிடம் பெறுவது நம் தருமையாதீனம். சைவமும் தமிழும் இரு கண்ணெனப் போற்றிப் புரந்துவரும் செந்தமிழ்ப் பண்ணையாம் தருமையாதீன வரலாற்றின், 25-வது தவ ஞான வேந்தராக விளங்கிய கயிலைக் குருமணி அவர்களின் அருளாட்சி பொன் னெழுத்துக்களால் பொறிக்கத்தக்க பொற்புடையது. நீண்ட நோக்கமும், உலகியற் பாங்கும் அறிந்த அவர்கள் தமிழ் நெஞ்சின் ஆர்வ வெளிப்பாட்டில் இன்றைக்கு 25 ஆண்டுகளுக்குமுன் பிறந்தது தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி. கயிலைக் குருமணியின் அன்பிற் கனிந்து, அருளிற் செழித்து இருபத்தைந்து ஆண்டுகளில் நானூற்றுக்கு மேற்பட்ட சமயப் பண்பாட் டோடு கூடிய தமிழாசிரியர்களை நாட்டிற்கு நல்கி நலம்பூத்து, வெள்ளிவிழாக் காணும் வீறு பெற்றுத் திகழ்கிறது.

வாழ்வும் வளமும் தந்த வண்ணத் தமிழ்க் கல்லூரி, வெள்ளி விழாக் காணும் அன்புத் திருநாளில், கல்லூரி கண்ட கயிலை மாமணியின் அருள் நினைவில் கற்ற தமிழ் நெஞ்சம் கசிந்துருகிநிற்கிறது. கைமாறு வேண்டாக் கடப்பாடு மிக்கார்க்கு ஏழை நெஞ்சகங்கள் எதைச் செய்யக் கூடும்? எங்கள் அன்பின் வெளிப்பாடாய், கல்லூரி கண்ட கயிலைக் குருமணியின் புகழ் பூத்த திருவடியில், இந்த வண்ண மலரை வைத்து வணங்குகின்றோம்! அஞ்சலித்துப் போற்றி அகம் மகிழ்ந்து நிற்கின்றோம்.

கயிலைக் குருமணியின் கான் முளையாய், பல்கலைக் கல்லூரி தந்த பைந்தமிழ் மலராய்த் தருமையாதீன ஞானபீடத்தின் 26ஆவது அருட்சுடராய் அருளரசோச்சும் ஸ்ரீ ல ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள், கல்லூரியைப் புரந்தருளி, கண்ணின் கருமணியாய்க் காத்து வளர்ப்பவர்கள். வெள்ளிவிழா வீறு பெற்றுச் சிறக்கவும், விழாமலர் மணம் பூத்து மலரவும் ஆக்கமும் ஊக்கமும் நல்கி ஆர்வம் புதுக்கியதோடு, அருளாசி வழங்கி மலரை அழகுறுத்தி அருளியுள்ளார்கள். அவர்கள் பேரருள் திறத்திற்கு மனமொழி மெய்களாலாகிய பணிவார்ந்த வணக்கங்களை நன்றியோடு காணிக்கையாக்கி மகிழ்கின்றோம்.

திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீ ல ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் தக்கதோர் ஆசி உரை வழங்கி, விழாமலர் சிறக்க அருள்பாலித்தார்கள். அவர்கள் பெருங்கருணைத் திறத்திற்கு மலர்க்குழுவின் சார்பில் பணிவான நன்றிகூறி வணங்குகின்றோம்.

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியில் மலர்ந்த நாடறிந்த ஞான மலர் தவத்திரு. குன்றக்குடி அடிகளார். அவர்கள் அன்பும், அயரா உழைப்பும், காட்டிய ஆர்வமும் விழாப் பொலிவிற்கு வித்திட்டன. உலக அரங்கில் வள்ளுவர் என்ற அமைப்பில் பல்வேறு

சிந்தனையாளர்களின் கருத்தை வள்ளுவத்தோடு ஒப்பிட்டு ஆராயும் முயற்சிக்கு அடியிட்டதோடு தாமே வள்ளுவத்தைக் கார்ல்மார்க்ஸ் கருத்துக்களோடு ஒப்பவைத்து ஆய்ந்து கட்டுரை ஒன்றை வடித்துக் கவினூட்டியிருக்கிறார்கள். ஆசியுரை நல்கி ஆக்கம் சேர்த்திருக்கிறார்கள். அவர்கள் பேரருள் உள்ளத்திற்கு மலர்க்குழுவின் பணிவான வணக்கங்களை அன்போடு சேர்ப்பித்து வணங்குகின்றோம்.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களும் பல்கலைக் கல்லூரியில் மலர்ந்த தவமலரேயாவார்கள். வெள்ளி விழாத் திருநாளில் நினைவுப் பரிசுக்கெனப் பெருந்தொகை வழங்கியதோடு விழா மலர் சிறக்க நல்லாசி வழங்கி அன்பு காட்டி ஆர்வம் விளைத்திருக்கிறார்கள். அவர்கள் அன்பிற்கும் – பேரருளுக்கும் மலர்க்குழுச் சார்பில் அஞ்சலி செலுத்தி அன்போடு வணங்குகின்றோம்.

மற்றும் காஞ்சிபுரம் தொண்டை மண்டல ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம், பேரூர் சாந்தலிங்கர் திருமடம் தவத்திரு. இராமசாமி அடிகளார், கௌமாரமடம், தவத்திரு. சுந்தரசுவாமிகள் முதலியோர் அருளுரை வழங்கி விழாமலர் விளக்கமுற ஆர்வம் புதுக்கினர். மலர்க் குழுவின் நன்றியினை அவர்கட்கெல்லாம் அன்போடு சேர்க்கின்றோம்.

தமிழ்நாடு, பாண்டிச்சேரி ஆளுநர்கள், அமைச்சர் பெருமக்கள், நீதிபதிகள், பல்கலைக் கழகத் துணைவேந்தர்கள், பேராசிரியப் பெருமக்கள் முதலியோர் வாழ்த்துரை வழங்கி மலர்க்கு மணமூட்டி மகிழ்வித்துள்ளனர். அவர்களும் நம் நன்றிக்கு உரியவர்கள்.

தங்கள் பல்வேறு அலுவல்களுக்குமிடையே, நாங்கள் வேண்டிய தலைப்புக்களில் பேராய்வு செய்து ஆழ்ந்த பொருள்நோக்குப் படைத்த அரிய கட்டுரைகளையும் கவிதைகளையும் வடித்துத்தந்து, விழாமலர்க்கு வலிவூட்டிய தமிழகத்துப் பெருமக்கள் அனைவருக்கும் எங்கள் நெஞ்சுகந்த நன்றிகூறி மகிழ்கின்றோம்.

கல்லூரியில் பயின்ற முன்னாள் மாணவர்களின் பொருள் உதவியால் வெளியிடப் பெறும் இம்மலரில் தங்கள் வணிக நிறுவனங்களின் சார்பிலும், கல்லூரியின் வளர்ச்சியில் கொண்டுள்ள நாட்டத்தாலும் விளம்பரங்கள் தருவதன்மூலம் மலர் வெளியீட்டிற்குப் பேருதவி செய்த அனைவருக்கும் எங்கள் நன்றியினை அன்போடு புலப்படுத்திக் கொள்ளுகிறோம்.

மலர் வெளியீட்டிற்குத் தேவையான தொகையைப் பல்கலைக் கல்லூரியில் பயின்று வெளிப்போந்த முன்னாள் மாணவர்களும், தற்போது பயிலும் மாணவ – மாணவியரும் அன்போடு வழங்கியுள்ளனர். அவர்கள் கடமையுணர்வோடு கூடிய நல்லன்பு நன்றிகூறத் தக்கதாகும்.

விழாமலர் அச்சிடும் பணியில் பெரும் பொறுப்பேற்று அனைத்து வகையிலும் ஊக்கமூட்டிய கல்லூரி முதல்வர் வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் அவர்களுக்கும், உடனிருந்து ஊக்கமூட்டிய பேராசிரியர் சிரோமணி வித்துவான். திரு. வி. சபேசனர் அவர் களுக்கும், அச்சுப்படிகளைச் சரிபார்த்து, மலரை வடிவமைத்த பேராசிரியர் புலவர் திரு. இரா. செல்வக்கணபதி அவர்களுக்கும், இவ்வகையில் ஒத்துழைத்த மாணவர்களுக்கும் எங்கள் நன்றி உரியதாகும்.

மிகக் குறுகிய காலத்தில் இவ்வண்ணமலரை அச்சிடும் பொறுப்பேற்று எம்மோடு, பெரிதும் ஒத்துழைத்து மிகச் சிறப்பாக உருவாக்கித் தந்த பெருமை கும்பகோணம் ஜெமினி அச்சகத்தார்க்கே உரியது. தொழிலாகக் கருதாது, தொண்டாக நினைத்து இம்மலரை உருவாக்கத் துணைபுரிந்த ஜெமினி அச்சக உரிமையாளர், திரு. எம். எஸ். கார்த்திகேசு, மேலாளர், திரு. ஆர். ஆர். ராஜா, அச்சிட்டுப் பொறுப்பாளர், திரு. எஸ். மகாலிங்கம் ஆகியோர் பெரிதும் நன்றிக்கு உரியவர்கள்.

இம்மலரில் வெளியிடப் பெற்றிருக்கும் வண்ணப் படங்களை அச்சிட்டு உதவிய தருமபுரம் ஸ்ரீ ஞானசம்பந்தம் அச்சகத்தார்க்கும் எம் நன்றி.

வெள்ளிவிழா மலரும் (25–10–72) இத்திருநாளில், இவ்வண்ணமலரை வெளியிட்டுச் சிறப்பித்து விழாப் பேருரை ஆற்றும் தமிழ்நாடு முதலமைச்சர் டாக்டர், கலைஞர், மாண்புமிகு, திரு. மு. கருணாநிதி அவர்களுக்கு மலர்க்குழுவின் சார்பில் நன்றி கூறி மகிழ்கின்றோம்.

இவ்விழா மலர் தமிழ் கூறும் நல்லுலகில் மலர்ந்து மணம்பெறத் தோன்றாத் துணையாக இருந்த திருவருளுக்கும், குருவருளுக்கும் எங்கள் வணக்கங்கள். வாழ்க தமிழ். வளர்க கல்லூரி.

இன்னணம்,

தருமபுரம் - மாயூரம்
25–10–72

**வெள்ளிவிழா மலர்க் குழுவினர்,**
தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி.

# பொருளடக்கம்

## தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி
## குறிக்கோள் சின்னம்
## விளக்கம்



திருவாசி — குருபக்தி
கோபுரம் — சமயப் பயிற்சி
சுவடி — இலக்கியப் பயிற்சி

முச்சுடர் விளக்கு
கல்வி — அறிவு — ஒழுக்கம்

இரு தாமரை மலர்கள்
கலைமகள் அருள் — திருமகள் அருள்

'கற்றல் கேட்டல் உடையார் பெரியார்'

என்ற ஞானசம்பந்தர் வாக்கு
குறிக்கோள்

வெள்ளி விழாக் கொள்ளும்

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியைத் தோற்றுவித்தருளிய



இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

கல்லூரியைப் புரந்தருளும்



தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ

குருபாதம்



திருக்கயிலாய பரம்பரைத்

தருமையாதீனம் 26ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ

சண்முக தேசிக ஞானசம்பந்த

பரமாசாரிய சுவாமிகள்

வழங்கியருளிய

# ஆசியுரை

நமது தருமையாதீனம் சிறந்ததொரு ஞானப் பண்ணை. இதில் தொன்றுதொட்டுச் சிவஞானச் செழும்பயிர் அபர ஞானமாகிய உவமையிலாக் கலைஞானம், பரஞானமாகிய உணர்வரிய மெய்ஞ்ஞானம் என்னும் இரு கிளைகளுடன் இனிது வளர்ந்து பயன்தந்து வருகின்றது.

இந்த ஞானப் பண்ணையைத் தோற்றுவித்தருளிய குருமுதல்வர் **ஸ்ரீ குருஞானசம்பந்தர்.** இவர்கள் தமது அருள்நோக்காகிய உழவின்வழி, அருளுபதேசமாகிய வித்தினை இடுதற்கு அன்பர்களது உள்ளங்களே நல்ல நிலங்களாய் அமைந்தன. அவைகளில் ஊன்றப்பட்ட அருள்வித்துக்களுக்கு ஆன்மார்த்தமூர்த்தி ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானது கருணை என்னும் நீரைப் பாய்ச்சி அயர்வென்னும் களையைப் பறித்து, ஆர்வம் என்னும் வேலியிட்டு அவர்கள் வளர்த்த சிவஞானப் பயிர் காலந்தோறும் தக்கபடி வளர்ந்து சிவபோக மாகிய விளைவைச் சிறக்கத் தந்துகொண்டிருக்கின்றது. இப்பண்ணையின் சிறப்பை

"ஆய்வார் பதிபசு பாசத்தின் உண்மையை ;
ஆய்ந்த றிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கை யெல்லாம் ; கல்வி
கேள்வி அல்லல்
ஒய்வார் ; சிவானந்த வாரியுள்ளே ஒன்
றிரண்டும் அறத்
தோய்வார், கமலையுள் ஞானப்ர காசன்மெய்த்
தொண்டர்களே"

என்ற ஆதினத்துப் பழம் பாடலால் அறியலாம்.

உலகியலில் உள்ள மக்களுக்கு மிகப் பெரிதாய்த் தோன்றுவது அபர ஞானமாகிய 'கலைஞானம்' என்னும் நூலறிவே. அதன்பொருட்டு இவ் வாதினத்தில் நூல் வெளியீடுகள் பல சிறந்த முறையில் வெளிவருவதுடன் பல்கலைக் கல்லூரி ஒன்றும் நன்முறையில் பணியாற்றி வருகின்றது.

"அன்புமிக உண்டாய் அதிலே விவேக முண்டாய்த்
துன்ப வினையைத் துடைப்பதுண்டாய் – இன்பம்
தரும்பூ ரணத்துக்கே தாகமுண்டாய் ஒடி
வருங்கா ரணர்க்குண்மை வை"

என்ற குருமுதல்வர் வாக்கின்படி பரஞானத்திற்கு உரியர் ஒரு சிலரேயாதலின், பல்கலைக் கல்லூரி கலைஞானத்தில் விருப்பமுடைய பலர்க்கு அதனை வழங்கி வருகின்றது.

நமது ஆதீனத்தின் 25ஆவது குருமகா சந்நிதானம் **ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி** அவர்கள் தங்கள் அருளாட்சிக் காலத்தை ஆதீன வரலாற்றில் ஒரு பொற்காலமாகத் திகழச் செய்தார்கள். எதையும் கலைக்கண்நோக்கத்துடன்

நோக்குகின்ற அவர்கள், அக்கலையில் ஒரு தெய்வீகக் கலையைத் தோற்றுவிப்ப வர்கள். சமயப் பணிகளில் நோக்கினால், ஆதீனக் கோயில்கள் அனைத்திலும் கலை உணர்வு பொலிய திருப்பணிகள் பல செய்து, அருள் உணர்வை அவர்கள் வளர்த் துள்ளார்கள். சென்னைச் சமயப் பிரசார நிலையம் சமயத்தை நாடெங்கும் பரப்பி நிற்கின்றது. சமுதாயப் பணியில், மாயூரத்தில் மகப்பேற்று மருத்துவமனை; வேலூரில் அனாதை இல்லம், சித்தவைத்தியசாலை முதலியவை முன்னிற்கின்றன. மற்றும் அவ்வப்பொழுது வெள்ள நிவாரண உதவி முதலியவைகளால் சமுதாய நலத்தை வளர்த்தவர்கள்.

கல்விப் பணிகளில் முன்னிற்பது ஆதீனப் பல்கலைக் கல்லூரி. மற்றும் ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளி, தொடக்கப் பள்ளிகளையும் புரந்தருளி யவர்கள். இவர்களது கைவண்ணப் பேரருள் திருமடத்திலும், ஆதீனக்கோயில் களிலும் சிற்பமாக, சித்திரமாக, காவியமாக, ஓவியமாக ஒளிர்கின்றது. அவர்கள் திருக்கரத்தால் துறவறம் மேற்கொண்ட **தவத்திரு. குன்றக்குடி அடிகளாரும்,** திருப்பனந்தாள் காசிமடம் **ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமார சுவாமித் தம்பிரான்** அவர் களும் இக்கல்லூரியில் கல்வி பயின்று இன்று நாட்டிற்கும், நல்லறத்திற்கும் துணைவராகத் திருமடங்களின் தலைவர்களாய் விளங்குகிறார்கள். இதில் பயின்ற பலர் ஆதீனத்திருக்கூட்டத்து அடியவர்களாக, கல்லூரிப் பேராசிரியர்களாக, அரசியல் சமய இலக்கியப் பேச்சாளர்களாக மேலும் பல பட்டங்களையும் தகுதி களையும் பெற்று விளங்குவது குறிப்பிடத்தக்கது.

அவர்கள் கைவண்ணத்தால் தோற்றுவித்து வளர்க்கப்பெற்ற பல்கலைக் கல்லூரியில் பயின்று பட்டம் பெற்றவர்கள் இன்று தமிழகத்தில் மிகச் சிறந்த புலவர்களாய் விளங்குகின்றனர். புலவர் பலரை ஈன்று புறந்தந்து சான்றோராக்கிய இக்கல்லூரி வெள்ளிவிழாக் கொண்டாடுவது, இக்கல்லூரியில் மொழியறிவும் தமிழ்ப் புலமையும் பெற்ற நமக்குப் பெருமகிழ்ச்சியைத் தருகின்றது. நம் ஆன்மார்த்தமூர்த்தி நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறிய செந்தமிழ்ச் சொக்கன். அப்பெருமானது திருமுன்பிலே ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமாமணி அவர்களால் தோற்று விக்கப் பெற்றது இப்பல்கலைக் கல்லூரி. இஃது இன்று நாட்டிற்குப் பல தமிழ் மொழி வடமொழிப் புலவர்களைத் தந்துள்ளது. இதன் வெள்ளி விழாவை இதன்கண் பயின்ற பழைய மாணவர்கள் சிறந்த முறையில் கொண்டாட முன்வந் திருப்பது, அவர்களது நன்றிப் பெருக்கோடு கூடிய கடமை உணர்ச்சியை நன்கு புலப்படுத்துகின்றது. வெள்ளி விழாவை அணி செய்யப் பல வண்ணங்களுடன் கூடிய சிறந்த மலர் ஒன்று வெளிவருவது புலமை உலகிற்குப் பெருவிருந்தாகும்.

தமிழ்நாடு ஆளுநர் மேதகு. **திரு. கே. கே. ஷா அவர்கள்** விழாவைத் தொடங்கி வைக்கவும், தமிழக முதல் அமைச்சர் **டாக்டர். கலைஞர். மாண்புமிகு. திரு. மு. கருணாநிதி அவர்கள்** விழாப் பேருரை ஆற்றி மலர் வெளியிடவும், தமிழ்நாடு அறநிலைய அமைச்சர் **மாண்புமிகு. திரு. மு. கண்ணப்பன் அவர்கள்** நூல்வழங்கிச் சிறப்புரை ஆற்றவும் இசைந்திருப்பது மகிழ்ச்சியைத் தருகின்றது.

வெள்ளி விழா எல்லா வகையாலும் சிறப்புற்றுத் திகழவும், விழா மலர் நன்கு மலர்ந்து தமிழ்மணம் பரப்பவும், விழாவில் பங்குகொள்ளும் அன்பர்களும், கல்லூரி ஆசிரியர்களும் பழைய, புதிய மாணவர்களும் எல்லா நலங்களும் எய்தி நீடு வாழவும், கல்லூரி மேலும் வளர்ச்சியுற்றுப் பொன்விழா, வைர விழாக்களைக் கொண்டாடவும் ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்தித்துப் பிரார்த்திக்கின்றோம்.



உ

சிவமயம்

Sri - La - Sri

*Ambalavana Pandarasannadhi Avl.,*

Adheenakarthar

THIRUVAVADUTHURAI MUTT.

THIRUVAVADUTHURAI

(Thanjavur Dt.)

12 — 8 — 1972.

# ஆசிச்செய்தி

நமது தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியின் வெள்ளி விழா சிறப்பாக நடைபெறுவதறிந்து நாம் மிக மகிழ்ச்சி அடைகிறோம். அக் கல்லூரி 1946இல் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த சுவாமிகளால் தொடங்கப் பெற்று, நாளும் நாளும் செந்தமிழ்ச் சொக்கர் திருவருளால் வளர்ந்து செழித்தோங்கி, 25 ஆண்டுகள் இடைவிடாத நல்லுழைப்பின் பயனாகத் தமிழ் நாட்டிலே நூற்றுக்கணக்கான மாணவர்களைத் தோற்றுவித்துத் தமிழ்ப் புலவர்களாக்கித் தமிழ்ப் பணியுடன் சைவப் பணியையும் நன்கனம் ஆற்றிவருவது உலகறிந்த செய்தியாம்.

இக் கல்லூரியில் வித்துவான் வகுப்பில் தேர்ந்தவர்களில் பலர் தமிழ்ப் பேராசிரியராய் விளங்கிக் கல்லூரிக்கும், ஆதீனத்திற்கும் பெரும் புகழைத் தேடித்தந்து தம் கடமையைச் செலுத்திவருதல் அவர்கள் நல்வாழ்வுக்கே பயன்தருவதாம். வித்துவான் வகுப்பில் மாணவர் படித்துவரும்பொழுதே தேவாரத் திருமுறைப் பயிற்சியும், ஆலய வழிபாடும், குரு வழிபாடும் சிறக்கப் பயின்றுவருதல் குறிப்பிடத்தக்கதாம். அதனால் எங்கெங்குமுள்ள தமிழ்க் கல்லூரிகளினும் இது பெருந் தொண்டினை நாட்டின் நலங்கருதிச் செய்துவருதல் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியின் திருவுள்ளத்திலே அன்று தோன்றி வளர்ந்து செழித்தோங்கி வெள்ளி விழாக் காணும் சிறப்பினை இன்று பெறுதல்போல என்றென்றும் செழித்துப் பொன் விழாக் காணும் சிறப்பினையும், வைர விழாச் சிறப்பையும் பெற்று விளங்கவும், கயிலைக் குருமணியின் திருவுள்ளக் கருத்தினைத் திருவுள்ளத்தடைத்து எல்லாவிதமான செயல்களையும் ஆற்றிக் கல்லூரியினையும் புரந்துவரும் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த சுவாமிகள் திருமேனி நலத்துடன் வாழ நமது பூஜாமூர்த்தியாகிய ஸ்ரீ ஞானமா நடராஜரைச் சிந்தித்திருக்கிறோம்.

தவத்திரு. குன்றக்குடி அடிகளார்
குன்றக்குடி.

12—8—72

# வாழ்த்துரை

தருமபுர ஆதீனம் தமிழ் வளர்த்த பண்ணை; தமிழ் வளர்த்துக் கொண்டிருக்கும் பண்ணை. பரஞானத்தில் தோய்ந்த அருளார்ந்த அனுபவத்தை அமுதத் தமிழில் எளியோரும் அனுபவிக்கும்படித் தர முடியும் என்பதற்கு, தருமைக் குருமுதல்வர் குருஞானசம்பந்தர் அருளிச்செய்த சொக்கநாத வெண்பா எடுத்துக்காட்டு. வட புலத்திலும், வண்மைத் தமிழை எடுத்துச்சென்று பரப்பிய பெருமை, கொழிதமிழ் குமரகுருபர முனிவர்க்கே உரியது. அந்தக் குமரகுருபரரைத் தந்ததும் தருமையே! மேலும் பைந்தமிழில் பண்டாரச் சாத்திரங்கள் பலவற்றைத் தந்ததும் தருமையே. பிற்கால இலக்கியங்கள் பலவற்றைத் தந்ததும் தருமையே. இன்றும் தமிழாராய்ந்த தவச்செல்வர் பலரைத் தந்து இசைபெற்று விளங்குவது தருமபுர ஆதீனமே.

இன்று, தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும் திருநகராக அரசு வீற்றிருந்தருளும் திருவருள் திரு. சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் செந்தமிழ் நூல் விரித்த புலமைச் செல்வம் உடையவர்கள் என்பது பெருமைக் குரியது. தருமையில் 25ஆவது குருமணியாக அருளாட்சி செய்த கயிலைக் குருமணி அவர்கள் முறையான தமிழ்ப் பயிற்சியை ஊக்குவிக்க தமிழ்க் கல்லூரியைக் கண்டார்கள். தமிழகத்திற்கு இந்தக் கல்லூரி தந்த தமிழறிஞர்கள் எண்ணில் பலராவர். கயிலைக்குருமணி அவர்கள் தமிழ்க்கல்லூரியைக் கண்டதோடன்றி, 'செந்தமிழ்ப்பொழி'லையும் படைத்தருளினர்கள். மூலையில் கிடந்த நம்மையும் நற்றமிழ் கற்கவைத்து நன்னெறியில் நிறுத்தி இன்ப அன்பு வாழ்வளித்த தருமபுர ஆதீனத்திற்குக் கடப்பாடுடையோம். கயிலைக் குருமணி அவர்களின் திருவருள் நினைவு, ஊனில் ஆவி உலாவும் காலம் வரை நிலைபெற்றிருக்கும். தருமபுர ஆதீனம் இன்றைய குருமணி அவர்களின் அருளாட்சி வளர நமது ஊழியம் குருமணி அவர்களுடைய திருவுள்ளப் பாங்கின் வண்ணம் உள்ள வைப்பாகும். தமிழ் வளர்க்கும் தருமபுர ஆதீனம் வாழ்க! தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி வளர்க!



திருவண்ணுமலை ஆதீனம், குன்றக்குடி
ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணுசல தேசிக
பரமாசாரிய சுவாமிகள்
( தவத்திரு. குன்றக்குடி அடிகளார். M. L. C. )

904



திருப்பனந்தாள், ஸ்ரீ காசிமடம்
ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

உ
சிவ சிவ

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்
சுவாமிகள் அவர்கள்

ஸ்ரீ காசிமடம்
திருப்பனந்தாள்
(தஞ்சை ஜில்லா)
27—7—72.

# வாழ்த்துரை

வம்மின் எனப்புல வோரை அழைத்து அருள் சுடரொளி,
உண்ணெகிழ் தொண்டர் உளத்து இருள் சிந்திட ஒளிவிடு முழுமணி,
உருகும் உளத்து அருள்பெருகி உவட்டெழு சலநிதி,
இழுமென் மொழித் தெளிதமிழின் வடித்திடு நவரசம் பொருந்து மதுரவசனன்,
இயலும் நடையும் வடிவும் அழகும் எழுத அரியன்,
ஒழுகு கருணை முழுகு கமல வதனன்,
விழுதுவிடு வெண்ணிலவு பொழியு நகையன்,

என்று இன்னோரன்னவாறு புகழ்ந்தோதி வழிபடத்தக்க தெய்வத் தன்மை வாய்ந்தவர்களும், தருமபுர ஆதீன மகாசன்னிதானங்களாகிய ''கமழுமணிக்கலன்'' ''நாப்பண்'' ''இழைத்திடுகுல மணி'' எனத்திகழ்ந்தவர்களும்,

தருமபுர ஆதீனத்து 26-வது பட்டத்து எழுந்தருளியுள்ளவர்களாகிய ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாச்சார்ய சுவாமிகள் அவர்கட்கும், தவப் பெருந்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கட்கும், நமக்கும் குருமணியாகியவர்களும்,

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் நமக்கு முன் தலைமை பூண்டருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் ''கயிலைக் குருமணி'' என்று அழைக்கப்பெற்று அத்திருப்பெயராலேயே குறிப்பிடப்பெற்றவர்களும் ஆகிய **ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பராமாச்சாரிய சுவாமிகள்** அவர்களால் தோற்றுவிக்கப்பெற்ற **தருமபுர ஆதீனப் பல்கலைக் கல்லூரி** வெள்ளி விழாக்கொண்டாடும் பேறு பெற்றுள்ளது. இவ்விழா இக்கல்லூரியைத் தோற்றுவித்த ஞானத் தந்தையார் காலத்திலேயே கொண்டாடப் பெற்றிருக்க வேண்டும். எனினும் அக்கல்லூரியிலேயே பயின்று, அதனைப் பேணிப் புரந்தருளும் ஞானத்தந்தையாகிய 26—ஆவது மகாசன்னிதானம் அவர்கள் அருளாட்சி நடத்துங்கால் நடைபெறுவதாக அமைந்தது திருவருட் செயலாகும். இக்கல்லூரியில் பயின்ற முனிபுங்கவர்கள் பலர் தலைமைப்பதவிகளில் உள்ளவராய்த் தமிழ்நாடு முழுவதும் வணங்கத் தக்க தவச்சுடர்களாகத் திகழ்ந்துள்ளனர். இது இக்கல்லூரிக்குரிய தனிச்சிறப்பாகும். சிலர் தமிழ் நாட்டவர் பலரும் அறிந்து போற்றும் வண்ணம் சொற்கொண்டல்களாய்ப் பேராசிரியப் பெருமக்களாய்ப் பணியாற்றுபவராவர். எஞ்சியோர் அடக்கமுடன் தமிழ்ப்பணி ஆற்றுபவர் ஆவர். இவ்வெல்லாத்திறத்தினர்க்கும் உரியதாகிய இக்கல்லூரி இனி எதிர் காலத்தும் ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர்களையும் நுண்மாண் நுழைபுலம் பொருந்தியோரையும் தோற்றுவித்து, அறிவுச்சுடர் கொளுவி, நானிலம் எங்கணும் தமிழ்ஒளி பரப்பி வளருமாறு குருவருளையும் செந்திலாண்டவன் திருவருளையும் போற்றுகின்றோம். செந்திலாண்டவன் துணை.

உ

சிவமயம்

சீலத்திரு.
ஞானப்பிரகாச தேசிக
பரமாசாரிய சுவாமிகள்.

தொண்டைமண்டலாதீன மடாலயம்,
59, நிபந்தகாரத் தெரு,
காஞ்சிபுரம் — 2.

தருமைப்பல் கலைக்கல் லூரி தமிழ்வளர்த் தென்றும் ஓங்கிப்
பெருமைக்கொப் பின்றி நன்றே பிறங்குக தோற்றிக் காத்த
குருவைத்தற் போது காக்கும் குருவை ஆசிரியன் மாரை
யருமைப்பண் புறுமா ணுக்கர் அவையைக்காத் தருள்க சொக்கன்.

கல்லூரி வாழ்க கலைபலவும் சூழ்கநற்
சொல்லூர் புலவரெலாம் தோன்றுகவே - பல்லூரும்
போற்ற வளர்ந்து புலமை சிறந்தொளிர
ஏற்றமிக நீடி யிருந்து.

வாழ்க தருமபுரம் வாழ்க குருமணிகள்
வாழ்க புலவரெலாம் மாட்சியொடு - வாழ்கவே
மாணுக்கர் தோற்றுவித்த வண்கயிலைத் தண்குருவின்
காணுக்கண் காணுங் கவின்.



உ

சாந்தலிங்கர் தாண்மலர் வாழ்க.

வித்துவான்,
சாந்தலிங்க இராமசாமியடிகள்,
பேரூராதீனம்.

(பேரூர் அஞ்சல்)
கோயமுத்தூர் - 10
நாள் : 14—2—1972.

# வாழ்த்துரை

செந்தமிழ் நாட்டை, மாதவம் செய்த தென்திசை என்பர் சேக்கிழார். தமிழ்நாட்டின் பெருமை, சமயச்செழுமையால், மொழிவளத்தால் உயர்ந்து விளங்குகிறது. விண்ணளாவும் கோபுரங்கள், சிற்பங்கள், மண்டபங்கள் ஆகியன ஆயிரமாயிரம் ஆண்டுகளாக வளர்ந்தோங்கி வாழ்வு தருவன. ஐந்திணை நெறியளாவிய நிலமும், அதற்குரிய கருப்பொருள், உரிப்பொருள் ஆகியனவும், இலக்கண, இலக்கியங்களுக்கு உரியனவாக அமைந்துள்ளன. மனிதன், மனிதனை, வானுறையும் தெய்வமாக, வானோர்க்குயர்ந்த உலகில் வாழும் மெய்ம்மையாகத் திறம்பெற நூல்கள் வழிகாட்டுகின்றன. அவை உலகியல் நூல்களாக மட்டுமல்ல, அருளியல் வாழ்வையும் அளிப்பன. அருளியல் வாழ்வுக்கு வித்திட்டோர், செந்தண்மை பூண்ட அறவோர்கள். தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராய் அந்தண்மையுடையராய் அழகிய குனித்த செஞ்சொலருளி, முடிவாகிய ஒன்றினையடையும் முயற்சியராய் வாழ்ந்தனர். அருள்நெறிவளர்த்த அத்துறவியர்கள் தங்கித் தவம்புரியத் திருமடங்களமைத்தனர்.

திருமடங்கள், மக்களைச் சமயச் செந்நெறியில் வாழ்வாங்கு வாழ்விக்கும் தெய்வநிலையங்கள்; செந்தமிழ் வளர்க்கும் பக்தி வயல்கள்; அறநெறிகாட்டும் கலங்கரை விளக்கங்கள், என மக்கள் மதித்தனர். நற்பணிகளைச் சிவநெறிச் செம்மனத்தோர் இனிதாற்றப் பொன்னும், பொருளும் நிலமும் அளித்தனர். திருமடங்கள் ஞானச் செங்கோல் செலுத்தும் அருட்பீடங்களாக விளங்குகின்றன.

அத்தகைய சிவநெறிப் பீடங்களில், தமிழகத்தின் சிறப்புக்குரிய தலைசிறந்த ஆதீனங்களுள் ஒன்றாக விளங்குவது தருமையாதீனம். தருமையாதீனத்தின் ஆதீனக் குருமுதல்வர், குருஞான சம்பந்தர் முதலாக இருபத்தைந்து குருமுதல்வர்கள், வழிகாட்டி அருள் வழங்கினர். 25-வது குருமுதல்வர், ஞாலமுய்ய, நாமுய்ய சிவநெறியும் செந்தமிழும் வளரத் துணைபுரிந்தனர். கண்டார்ப் பிணிக்கும் தோற்றப்பொலிவும், கேட்டார்ப் பிணிக்கும் சொல்வன்மையும் வாய்ந்தவர்கள். நாடுபுகழப் பல நற்பணிகளை ஆற்றியதுடன் கயிலை கண்டு வழிபட்ட கயிலைக் குருமாமணி. இவர்கள் தொடங்கிய நிறுவனங்கள் பலவற்றுள் தலையாய நிறுவனம் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி. இக்கல்லூரியில் பயின்று பயனடைந்தோர் பலர். நாடு புகழும் பரிசாக இக்கல்லூரி, எம், மனக்கினியவர் அருட்செம்மல், அருள்நெறித் தலைவர், மணிவாசகத்தில் மனங்கசிந்து, வாழ்பவர், நாவசையில் நாடசைந்து தொழில் கேட்கும் செஞ்சொல்லாளர், தூய தொண்டினர், தவத்திரு குன்றக்குடி அடிகளார் (திருவண்ணாமலையாதீனம்) அவர்களை உருவாக்கியது. தருமையாதீனத்தின் இருபத்தாறுவது குருமுதல்வராக எழுந்தருளி, அருளாட்சி செலுத்தும் எம் உளங்கொண்ட செந்தண்மையார், அறிவறிந்தடங்கிய தவத்தோற்றத்தினர், திருத்தொண்டின் நெறிவாழப் பணியாற்றும் பாங்குமிக்க, அருண்மிகு சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் அவர்களைப் பாங்குடன் பயில்வித்த பெருமைக்குரியது. இப்போது வெள்ளி விழாக்காண இருப்பது குறித்துப் பெரிதும் மகிழ்கிறோம். சமயப்பண்பால் உயர்ந்த நல்லாசிரியர்களது உழைப்பால் நன்மாணவர்களது பயிற்சியால், நற்றொண்டர்களது முயற்சியால் தருமைக் குருமுதல்வரின் அருள்நோக்கால் வளர்ந்துவரும் இக்கல்லூரி, சைவ சித்தாந்தப் பல்கலைக்கழகமாக வளர்ந்து பொன்விழா, பொலிவுடன் காண எமது ஆதிகுருமுதல்வர், அருண்மிகு சாந்தலிங்கப்பெருமான் தாண்மலர் நினைந்து வாழ்த்துகின்றோம்.

உ
குருவே துணை

தவத்திரு. சுந்தரசுவாமிகள்
ஆதீனகர்த்தர்
கௌமாரமடாலயம்

சின்னவேடம்பட்டி அஞ்சல்,
கோயம்புத்தூர்-6
6-2-72

## தருமையாதீனப் பல்கலைக்கல்லூரி வெள்ளிவிழா

# வாழ்த்துப் பாடல்கள்

1. உலகெலாம் பரவும் திருக்கயி லாயத் துயர்பரம் பரையதாத் திகழும்
அலகில்சீர் வளஞ்சால் தருமையா தீனத் தருளர சாட்சிசெய் ஞானத்
திலகமாய் இருபத் தைந்ததாம் பட்டத் தினிலருட் கோலினையோச்சி
இலகிய கயிலைக் குருமணி சிறப்பை இயம்பிடற் களவில மாதோ.

2. கோயில்கள் புதுக்கிக் கும்பநீ ராட்டிக் குளிர்திரு முறை,முறை பதித்துச்
சேயிலன் பர்களை ஆதரித் தருட்சீர் சேர்தரப் புரிந்துநற் றலங்கள்
மேயிய லடியா ருடன்வழி பட்டு மிளிர்திருக் கயிலையைக் கண்டு
தாயிலின் னருள்செய் குருமணி மரபு தழைத்திடச் செய்யறம் பலவே.

3. செந்தமிழ் மொழிக்கும் சிவநெறி யதற்கும் செயத்தகு பணிபல செய்து
பைந்தமிழ்க் கல்லூ ரியினுடன் சிறப்பார் பல்கலை யார்ந்தகல் லூரி
தந்தருள் புரிந்தின் றிருபத்தைந் தாண்டு சார்ந்தது குருமணி கயிலை
எந்தையின் அருளால் தோன்றுகல் லூரி ஏற்றமாய்ப் போற்றிட மாதோ.

4. இருபதிற் றுரும் பட்டமேற் றருளி, இலங்கரு ளாட்சிசெய் கல்வித்
திருவுடன், ஞானத் திருவதும், பூசைச் செல்வமும், உற்றவர்க் கினிதே
தருதவத் திருவார் சண்முக ஞான சம்பந்த பரமாச்சா ரியராம்
குரு,புர வலராய் வெள்ளிவி ழாவைக் கோலமே விடவியற் றினரே.

5. பல்கலைக் கல்லூ ரியினைத்தோற் றுவித்த படிபுகழ் குருமணி நினைவு
பல்வகை சிறக்க வெள்ளிவி ழாவிற் பங்குகொண் டியற்றுநர் பலர்க்கும்
நல்வகை படித்துப் பயன்பெறு வோர்க்கும் நன்குசொற் றுத்தரு வோர்க்கும்
சொல்லும்நன் நலங்கள் பெருக,வே லவன்றன் தூய்மல ரடியிணை துதிப்பாம்

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி
வெள்ளி விழாவைத் தொடங்கிவைக்கும்



தமிழ்நாடு ஆளுநர்,
மேதகு. திரு. கே. கே. ஷா அவர்கள்

K. K. SHAH
Governor of Tamil Nadu

RAJ BHAVAN

Madras 22.

10th August, 1972.

## MESSAGE

*I am very happy to know that Dharmapuram Adheenam College will celebrate its Silver Jubilee in a fitting manner. I offer my warm greetings to the Head of the Dharmapuram Adheenam, the Staff and the Students on this occasion. I congratulate the management on the signal service it is rendering in promoting the cause of Tamil Language. It is a tribute to the College that it has been producing Tamil Scholars during the last 25 years of its existence. I wish the College continued success.*

பி. டி. ஜட்டி
துணை நிலை ஆளுனர்

ராஜ் நிவாஸ்
பாண்டிச்சேரி
*9 — 8 — 1972*

# வாழ்த்துச் செய்தி



தருமையாதீனக் கல்லூரி தன் வெள்ளி விழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாட இருக்கும் நற்செய்தி அறிய நான் மகிழ்ச்சி அடைகிறேன்.

தருமை ஆதீனம் தமிழ் வளர்ச்சிக்கும் அறநெறி வளர்ச்சிக்கும் இருபத்து ஐந்து ஆண்டுகளாக ஆற்றிவரும் கலையும் தெய்வீகமும் நிறைந்த தொண்டுக்கு மிகவும் பாராட்டுகிறேன். சிறப்பும் பேரின்பமும் நிறைந்த இத் தொண்டு மேலும் மேலும் பெருக நான் வாழ்த்துகிறேன்.



தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி வெள்ளி விழா மலரை
வெளியிட்டுச் சிறப்பித்த



தமிழ்நாடு முதலமைச்சர், டாக்டர், கலைஞர்,
மாண்புமிகு. திரு. மு. கருணாநிதி அவர்கள்

மு. கருணாநிதி,
முதலமைச்சர்.
(தமிழ்நாடு அரசு)

சென்னை - 9.
24—1—72.



பல்வகைப் பணிகளுடன் தருமை ஆதீனம், பல்கலைக் கல்லூரியையும் சென்ற 25 ஆண்டுகளாக நடத்தி வருவது மகிழ்ச்சிக்குரியது.

வெள்ளிவிழா மலர், மக்கள் அனைவரின் உள்ளம் கவர்வதாய்க் கலை மணம் கமழ்ந்து பொலிய என் மனங்கனிந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.



JUSTICE
N. KRISHNASWAMY REDDY

"HOVINGHAM"
GREENWAY'S ROAD,
MADRAS-28.

தருமையாதீனம் 25-வது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரியர் அவர்களால் தோற்றுவிக்கப் பெற்றதும், இப்பொழுது இப்பீடத்தை அலங் கரிக்கும் 26-வது குருமகா சந்நிதானம் அவர்களை உருவாக்கித்தந்த பெருமையுடையதுமான தருமையாதினப் பல்கலைக்கல்லூரி, வெள்ளிவிழாக்காண இருப்பதைக் கண்டு மிகவும் மகிழ்ச்சி அடைகின்றேன். இக்கல்லூரி தெய்வத்தமிழ் புகட்டி சமய அறிவும், பண்பாடும், ஒழுக்கமும் நல்கி, பல புலவர் பெருமக்களை உருவாக்கித் தருவது நாடறிந்த செய்தியாகும். 26-வது குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாட்சியில் இக்கல்லூரி மேன்மேலும் புகழும் பெருமையும் பெற்று, தெய்வத்தமிழ் வளர, பண்பாடும், ஒழுக்கமும், அமைதியும், சமயநெறியும் நல்க, பல்லாண்டு பணிபுரிய எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றேன். வாழ்க தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி வாழ்க தெய்வத்தமிழ். வாழ்க தெய்வநெறி.

Justice
**B. S. SOMASUNDARAM**

MADRAS — 28.
*14 — 8 — 72.*

# ஆசிச்செய்தி

பாரத நாடு சுதந்திரமடைந்து 25 ஆண்டுகள் முடிந்து, வெள்ளி விழாக் கொண்டாடும் இந்த சரித்திர முக்கியத்துவம் பெற்ற மாதத்தில் தமிழும், தமிழகமும், கலை, சமயம், இத்துறைகளில் சிறப்புமிக்க வளர்ச்சி அடைந்திருப்பதைக் காண்கிறோம். இதற்கு ஒரு சான்றாக விளங்குவது தருமையாதீனம் நிறுவிய பல்கலைக் கல்லூரியின் வெள்ளி விழா. தமிழ்த் தொண்டும், சமயப் பணியும் புரியும் 400 புலவர்கள் இதுவரை இக் கல்லூரியின் வாயிலாக வந்து நாட்டில் பணிபுரிகிறார்கள். மக்களின் நல்வாழ்வுக்கும், மறுமலர்ச்சிக்கும் இந்தப் பெரு மக்களின் பணி இன்றியமையாததாகும். நாடு சுதந்திரம் அடைந்த நாளில், தருமையாதீனம் 25ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள் இந்தப் பல்கலைக் கல்லூரியை எந்தச் சீரிய லட்சியங்களுக்காக, தோற்று வித்தார்களோ அந்த நோக்கங்களுடன் இந்த நிறுவனம் பணியாற்றி வருகிறது. இதைக் கண்டு நாம் பெருமை அடைகிறோம். கல்லூரியின் பணி வருங்காலத்திலும், ஒளி வீசும் என்பதில் ஐயமில்லை. இந்த நிறுவனத்தை நான் மனமார வாழ்த்தி ஆசி கூறுகிறேன்.

Justice. SADASIVAM, M.L.
(Retired)

KILPAUK, MADRAS-10
7—8—1972

சைவ சமய நூல்களைப் படிக்கும் பொழுது சமயத்தைத் தமிழ் வளர்த்ததா? அல்லது தமிழைச் சமயம் வளர்த்ததா? என்னும் ஐயம் தோன்றுகிறது. சமயமின்றித் தமிழ் இல்லை; தமிழின்றிச் சமயமில்லை என்பதைத் தமிழ் இலக்கியங்களை நன்கு கற்றுத் தேர்ந்த பெருமக்கள் நன்குணர்வர். கலைகள் அனைத்திலும் இறையுணர்ச்சி பிரிக்க முடியா வகையில் இழையோடி இருக்கிறது. அதனால், தமிழும், சைவ சமயமும் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாகத் தமிழ் நாட்டின் முன்னேற்றத்திற்கும் நாகரிகத்திற்கும் பண்பாட்டிற்கும் அடிப்படைக் காரணமாகத் திகழ்ந்து வருகின்றன.

சைவமும் தமிழும் தழைத்தோங்க வேண்டும் என்ற பெரு நோக்குடன் தருமை ஆதினம் இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் தருமைப் பல்கலைக் கல்லூரியை இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் சிறந்த முறையில் தோற்றுவித்தருளினர்கள்.

ஒரு கல்லூரியின் பெருமை அதில் பயிலும் மாணவரைப் பொறுத்தே அமையும். தருமைப் பல்கலைக் கல்லூரி பெரும் புகழோடு விளங்குவதற்குக் காரணம் அதில் பயின்று உருவாகிய தமிழ்ச் சான்றோரே ஆவர். தருமை ஆதினம் இருபத்தாறுவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களும் அச்சான்றோர் பெருமக்களுள் ஒருவராவர். இவர்கள் அருள் ஆட்சியில் தருமைப் பல்கலைக் கல்லூரியின் வெள்ளி விழா நடைபெறுவது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

சொக்கநாதர் திருவருளால் தருமைப் பல்கலைக் கல்லூரி மேலும் பல துறைகளில் விரிந்து முன்னேறிப் பணியாற்றி நம் தமிழ் நாட்டிற்குப் போற்றுதற்குரிய முனிபுங்கவர்களையும், தமிழ்ப் பெரும் புலவர்களையும் உருவாக்கித் தரவேண்டும் என்று வாழ்த்துகின்றேன். அதற்குத் திருவருள் புரியுமாறு எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகின்றேன்.

வாழ்க தருமைப் பல்கலைக் கல்லூரி!

வளர்க அதன் தொண்டு!!

## UNIVERSITY OF MADRAS

N. D. SUNDARAVADIVELU,
*Vice-Chancellor.*

UNIVERSITY BUILDINGS,
TRIPLICANE,
MADRAS - 5.

சனவரி, 21, 1972.

அன்புடையீர்,

வணக்கம். தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி, வெள்ளி விழாக் கொண்டாடவிருப்பதையறிய மிக்க மகிழ்ச்சி. இக் கல்லூரி கடந்த இருபத்தைந்து ஆண்டுகளில் ஆற்றிய பணி அளவிடற் கரியது. இப் பணி மேலும் தொடர்வதாக.

மலர் செவ்வனே வெளிவர என் நல்வாழ்த்துக்கள்.

★ ★ ★

## மதுரைப் பல்கலைக் கழகம்

மு. வரதராசன்
துணைவேந்தர்.

பல்கலைக் கழகக் கட்டடம்
மதுரை - 2.

21—1—1972.

அன்புடையீர்,

வணக்கம். தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி 25 ஆண்டுகளாகச் சிறப்பாகப் பணியாற்றி இப்போது வெள்ளிவிழாக் காண இருப்பதை அறிந்து மிக மகிழ்கின்றேன். தமிழ்மொழியின் வளர்ச்சிக்காக இத்தனை ஆண்டு களாகக் கல்லூரி நிறுவி வளர்த்து வந்த சான்றோர்களின் பேரருளை நினைந்து போற்றுகிறேன். தமிழ்க் கல்லூரியின் தொண்டு வளர, மேன்மேலும் அதன் புகழ் விளங்க, எல்லாம் வல்ல இறைவன் அருள்வானாக.

## UNIVERSITY OF MADRAS

Centre of Advanced Study in Philosophy

DR. T. M. P. MAHADEVAN
(DIRECTOR)

MADRAS — 5.
*7—8—1972.*

பேரன்புடையீர்,

தங்கள் 3—8—72 கடிதம் இன்று கிடைத்தது. தருமையாதீனம் 26ஆவது குருமஹா சந்நிதானம் அவர்களைப் புரவலராகக் கொண்டு வளர்ந்துவரும் தருமையாதீனப் பல்கலைக் கழகத்தின் வெள்ளி விழாவை ஒட்டி விழா மலர் வெளியிடப்பெறுவது கேட்டு மகிழ்ச்சி. குருமஹா சந்நிதானம் அவர்களின் ஆசியுடன் வெளிவரும் இம் மலர் அறிஞர்களின் கட்டுரைகளைக்கொண்ட சிறந்த வெளியிடாக இருக்கும் என்பது உறுதி.

ஓம்.

கம்பன் அடிப்பொடி
சா. கணேசன்

KARAIKUDI
8—8—1972.

சைவத் துறையிலும் தமிழ்த் துறையிலும் பெருமைகொள்ளத்தக்க அருமைப் பணிகள் புரிந்து விளங்குவது தருமை ஆதீனம். கயிலைக் குருமணி அவர்களால் தோற்றுவிக்கப்பெற்ற பல்கலைக் கல்லூரி தன் வெள்ளிவிழாவைக் கொண்டாட உள்ளது. நல்லறிவுடைய தமிழ்ப் புலவர் பலரை உருவாக்கி உபகரித்த இக் கல்லூரி பல்லாண்டு பல்லாண்டு படர்ந்து நிழல் பரப்பிப் பைந்தமிழ் அறிஞர் பலரை நாட்டிற்கு அளித்து இறையுணர்வும் தமிழ்நெறியும் வளர முழுமுதலிறைவன் திருவருள்புரியவேண்டுமென மனமார, வாய்மணக்க வாழ்த்துகிறேன்.

இருபத்தாறுவது குருமகா சந்நிதானம் அவர்களின் அரவணைப்பிலும், ஆதரவிலும் இக் கல்லூரி வளம் பல பெற்று ஒரு தனிச் சமயக் கல்லூரியாய் வளர்ந்து பயன் சுரக்க வேண்டும். அதுவே எளியேன் வேணவா. இறையருள்க!

A. S. GNANASAMBANDAM
Professor & Head of the Dept. of Tamil
MADURAI UNIVERSITY

MADURAI - 2

29—1—72

அன்புடையீர், வணக்கம்.

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி தருமையாதீனம் மேற்கொண்டுள்ள பல்வேறு தொண்டுகளுள் தலையாயதாகும். 'அன்ன புண்ணியம் யாவினும் கோடி ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்திடல்' என்ற கவியரசின் கனவை நனவாக்கும் முறையில், காலத்திற்கேற்ற தொண்டாய் அமைந்திருப்பது இக் கல்லூரியாகும். இருபத்தைந்து ஆண்டுகள் தன் பணியைச் செவ்வனே செய்து முடித்தமையின், இன்று தமிழ் நாட்டில் பல்வேறு இடங்களிலும் பல்கலைக் கல்லூரி மாணவர்கள் சிறந்த முறையில் பணியாற்றி வருகின்றனர். கயிலைக் குருமணியவர்கள் இட்ட விதை இன்று மரமாகிப் பழம் தரும் நிலை அவர்களுடைய கருத்தை நிறைவேற்றுவதாகும்.

26ஆவது குருமகா சந்நிதானம் இக்கல்லூரியின் வளர்ச்சியில் பெரும் பங்கு கொண்டவர்கள். அவர்களுடைய அருளாட்சியில் இக்கல்லூரி பொன் விழா, வைர விழா என்பவற்றைக் கொண்டாடும் சிறப்புப்பெற்று விளங்க இறைவன் திருவருள் பாலிப்பானாக.

Dr. T. P. MEENAKSHISUNDARAN,
M. A., B. L., M. O. L., D. LITT.
Former Vice-Chancellor.
MADURAI UNIVERSITY.

# வாழ்த்துரை



உலகம் மாறிவருகிறது. இதற்கேற்ப இந்த மாறுதல்களுக்கு ஈடுகொடுக்கச் சைவ சமயத் தொண்டர்களும் ஆயத்தமாதல் வேண்டும். உலகம் பொது நோக்கையே முழுமூச்சாகக்கொண்டு உழைத்தல் வேண்டும். "தென்னாடுடைய சிவனே போற்றி" என்ற மணிவாசகர் உடனே "எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" என எல்லா உலகுக்கும் ஆகப் பாடியதை மனத்திற் கொள்ளுதல் வேண்டும். இந்த நிலைக்குத் தொண்டர்களை ஆயத்தம் பண்ணுவதற்கென்றே தருமை ஆதீனம் பல்கலைக் கல்லூரி ஒன்றினை நிறுவிப் புகழ்பெற்றது. இது சைவ சமய வரலாற்றில் ஒரு மைல் கல் என்றே கூறவேண்டும்.

"மரத்தை அதன் பழத்தால் அறிக" என்பது விவிலியம். 450 தமிழ்ப் புலவர்களை சைவப்பற்றோடு நாட்டில் தொண்டிற்கு அனுப்பியது ஒரு மாபெரும் வெற்றியே ஆம். இது எதிர்காலத்தில் ஆயிரம் ஆயிரமாக ஓங்கும்.

சைவத் தலைமைக்குப் பண்படுத்திய சிறப்பும் உண்டு. இன்று தருமையில் அருள் அரசு நடத்தும் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் இக் கல்லூரியில் கனிந்த சைவத் தமிழ்ப் பழமே ஆவார்கள். தெய்விக மகாசபையின் உயிர்நிலையான குன்றக்குடி அடிகளாரும் இக்கல்லூரியின் பழைய மாணவரே ஆம். இன்று திருப்பனந்தாளில் குமரகுருபரரின் வழியே காசிவாசிகளாக அமர்ந்துள்ள ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளும் இக்கல்லூரி உருவாக்கிய சைவத் தலைவரே ஆவார்கள். இதனினும் உயரிய சிறப்பு ஏது? வாழ்க தமிழ்! வாழ்க சைவம்! வாழ்க பல்கலைக் கல்லூரி! வாழ்க தருமை ஆதீனம்!

திரு. டி. எம். நாராயணசாமிப் பிள்ளை,
(முன்னாள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்)

திருச்சிராப்பள்ளி,
15—8—72.

தருமையாதீனம் தமிழ்ப்பணியும் சைவப்பணியும் செய்து தமிழக மக்களின் போற்றுதலுக்குரிய ஞான நிலையமாகும். இத்திருமடத்தின் அருளாதரவில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமகா சந்நிதானம் அவர்களால் தோற்றுவிக்கப்பெற்று 25 ஆண்டுகளில் 450 புலவர்களைத் தமிழகத்திற்கு வழங்கி வெள்ளிவிழாக்காண இருக்கிறது தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி.

திரு. வி. மகாலிங்க சாஸ்திரிகள், மகாவித்துவான் திரு. ச. தண்டபாணிதேசிகர், திரு. முத்து. சு. மாணிக்க வாசக முதலியார், திரு. கீ. இராமலிங்க முதலியார் போன்ற சிறந்த பேராசிரியர்கள் இக்கல்லூரியில் பணியாற்றினர். தருமையாதீனம் 26வது மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள், தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களும், காசிமடம் ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகளும் இக்கல்லூரியில் பயின்று மூன்று அறநிலையங்களின் தலைவர்களாக விளங்கிவருதல் குறிப்பிடத்தக்கது.

சிறந்த பல தமிழ்ப் புலவர்களை உருவாக்கி சமயப்பற்று, நல்லொழுக்கம் முதலிய பண்புகளை மாணவர்களுக்கு அளித்துச் சிறந்த முறையில் தருமையாதீனம் இக் கல்லூரியை வளர்த்து வருகிறது. இக்கல்லூரி மேலும் மேலும் வளர்ந்து தழைக்கச் செந்தமிழ்த் தாயின் திருவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகின்றேன்.

தருமையாதீனம் பரம்பரையாகப் பெரிய புலவர்களையும், ஞானிகளையும் படைத்திருக்கிறது. முக்கியமாகத் தற்போது தம்பிரான் சுவாமிகள் ஒவ்வொருவரும் இக்கல்லூரியில் படித்துத் தேர்ந்தவர்களே ! இது ஒரு தனிச்சிறப்பு.

குமரகுருபரசுவாமிகள், சம்பந்த சரணலயர், வெள்ளியம்பலவாணத் தம்பிரான் முதல் வித்வான் சண்முகத்தம்பிரான், வித்வான் சட்டநாதத்தம்பிரான் வரையுள்ள பல தம்பிரான்களைப் படைத்துச் சிறந்த தருமபுர ஆதீனம் இன்று அம்மரபில் வந்த ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் 26வது குருமகாசந்நிதானமாக விளங்குவதால் மேன்மேலும் சிறந்த புலமை படைத்த சிவஞானிகளையே இக்கல்லூரி படைத்தளிக்கும் என்ற எதிர்நோக்குத் திருவருள் வாய்ப்பால் எனக்குத் தோன்றுகிறது.

சிவாகமங்களுக்குப் பாடசாலைகளை அமைத்திருப்பதுடன், சிவாகம ஆராய்ச்சிக் குரிய நிலையம் ஒன்றையும் அமைத்து அருள்வார்கள் என்றும் எண்ணுகிறேன். இப்பணி இப்போதைய சமுதாய நிலைக்கு மிகமிக இன்றியமையாத ஒரு தொண்டாகும்.

நிலையம் ஓங்கி உயர்ந்து விரிந்து பரந்து விளங்க வேண்டும் என்பது என் பிரார்த்தனை.

கே. எஸ். நரசிம்மன்,
பி.ஏ.பி.எல்., ஐ.ஏ.எஸ்.,
ஆணையாளர்,
இந்து சமய அறநிலைய
(ஆட்சி)த்துறை.

சென்னை - 34.
5—8—1972.

# வாழ்த்துச் செய்தி

தருமையாதீனம் 25-வது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களால் தோற்றுவிக்கப் பெற்ற, **தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி**, நானூற்றுக்கு மேற்பட்ட புலவர் பெருமக்களை உருவாக்கிய பெரும் பணியில் ஈடுபட்டு, 25 ஆண்டுகள் நிரம்பி, **வெள்ளிவிழாக்** காணவிருப்பது அறிந்து மிகவும் மகிழ்கின்றேன்.

இடைக்காலத்தில், நமது சைவமும் தமிழும் நன்கினிது தழைத்தோங்கு வதற்குத் திருமடங்கள் சிறந்த பெருந் தொண்டுகளைச் செய்து வந்திருக்கின்றன.

" ஓது கிடைசூழ் சிறுவர்களும்
உதவும் பெருமை ஆசானும்,
போதின் விளங்கும் தாரகையும்
மதியும் போலப் புணர்மடங்கள் "

எனச் **சேக்கிழார் பெருமான்** குறிப்பிடுவது போல, இடைக்காலத்தில் சிறந்த ஆசிரியர்களையும், திறமை மிக்க மாணவர்களையும் தோற்றுவித்து, நாட்டின் கல்வி வளர்ச்சியும் பெருகி வளர்வதற்குத் திருமடங்கள் செய்துள்ள அரும்பெரும் தொண்டுகள் அளப்பரியனவாகும்.

தருமை ஆதீனம், முற்காலத்தில் **குமரகுருபரசுவாமிகள், வெள்ளி யம்பலவாண முனிவர், சம்பந்த சரணாலயத்தம்பிரான், படிக்காசுப் புலவர்** போன்ற பல சான்றோர் பெருமக்களைத் தோற்றுவித்தாற் போல, இக் காலத்திலும் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியின் மூலம் பற்பல ஞானத்தவ முனிபுங்கவர்களையும், நாடறிந்த பல புலவர் பெருமக்களையும் தோற்றுவித் திருப்பது, பெரிதும் போற்றிப் பாராட்டி மகிழ்தற்குரிய செய்தியாகும்.

வெள்ளிவிழாக் கொள்ளும் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி, **மேலும்** மேலும் சிறப்புற வளர்ந்து, **பொன்விழா, வைரவிழா, முத்துவிழா** முதலிய பல விழாக்களைக் கொண்டாடும் வகையில், சீரும் சிறப்பும் பெற்றுத் திகழ்ந் தோங்கி விளங்குதல் வேண்டும் எனச் **செந்தமிழ்ச் சொக்கனின்** திருவருளையும், ஆதீனத்தின் குரு முதல்வராகிய **குருஞான சம்பந்தரின்** திருவடிகளையும் துதித்து, எனது அன்பார்ந்த மனம் நிறைந்த வாழ்த்துதல் களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

**Dr. K. RANGASWAMY,** M.B., B.S., CHIDAMBARAM
D. T. M & H (Liver) Z. M. R. (Vienna)
MAYURA CLINIC.

தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும் ஒருங்கே அருளாட்சி செலுத்துகின்ற ஞானப் பண்ணையாக விளங்குவது தருமை ஆதீனம். தமிழும் சைவமும் இரு கண்களாகக் கொண்டு வளர்க்கிறவர்கள் அங்கே அரசு வீற்றிருக்கும் அருட்செல்வர்கள். அதன் 25வது குரு மகா சந்நிதானமாக விளங்கி கயிலையினைக் கண்டு தவச் சீலராக விளங்கி 26 ஆண்டுகள் அருந் தொண்டாற்றிப் பல நல்லறப் பணிகளைச் செய்தவர்கள் இங்கு தமிழ்ப் பல்கலைக் கழகத்தையும் தோற்றுவித்தார்கள். அவர்களது ஹஸ்த விசேஷத்தினல் இந்தப் பல்கலைக் கழகம் ஆல் போல் தழைத்து அருகு போல் வேரோடி பல்லாற்ருலும் சிறந்து விளங்குகிறது. அதில் புகழ்பெற்ற முதுபெரும் சைவ சித்தாந்தப் புலவர் திரு. அருணை வடிவேலு முதலியார் அவர்கள் சைவ சித்தாந்தமாகிய விதைகளைப் பல இளம் உள்ளங்களில் விதைத்து வளரச் செய்தார்கள். அதன் முதல்வராய் அறிவும் அடக்கமும் உடைய திரு. வி. சா. குருசாமி தேசிகர் அவர்கள் இருந்து பொறுப்புடன் பணி யாற்றி வருகின்ருர். அதில் அறிவும் பேச்சுத்திறனும் இளமை மிடுக்கு முடைய புலவர் இரா. செல்வகணபதி அவர்கள் தமிழ் விரிவுரையாளராக இருந்து செவியும் சிந்தையும் குளிரும் வண்ணம் பணி புரிந்து வருகின்ருர்கள்.

இந்தப் பல்கலைக் கழகத்தில் 26வது குருமகா சந்நிதானம் அவர்களும் திருவண்ணமலை குன்றக்குடி ஆதீனகர்த்தர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களும் காசிவாசி ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமார சுவாமி எஜமான் சுவாமிகள் அவர்களும் "செஞ்சொற் சிங்கம்" திரு. கீரன், தமிழறிஞர் செஞ்சொற் கொண்டல் திரு. சிங்கார வேலன் போன்ற புலவர்களும் தோன்றி பொன்மலர் நாற்ற முடைத்தது போல இப்பல்கலைக் கழகத்தின் புகழை மேலும் உயர்த்தி யுள்ளார்கள்.

அந்தப் பல்கலைக் கழகம் வெள்ளிவிழாக் கொண்டாடும்போது சென்னை சமயப் பிரச்சார நிலையத்தில் பல்லாண்டுகள் அருந்தொண்டாற்றி ஒழுக்க சீலராகவும், தவமும், சிவபூசையும் செய்து புனிதப் பொலிவு பெற்று விளங்கி 26வது குருமகா சந்நிதானமாக அருட் செங்கோல் செலுத்திவரும் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் புரவலராக அமைந்து பல்கலைக் கழகத்தில் இன்றும் பல புது பிரிவுகளை அமைத்து மதச் சார்பற்ற ஒருமைப்பாட்டை உண்டு பண்ண வேண்டும் என்று திருவுளங் கொண்டிருக்கிருர்கள். அவர்கள் சிறந்த புலவர், அறிஞர். அவர்களுடைய செயலாற்றும் திறமையால் புதுமையைப் புகுத்தும் முற்போக்காளராக உள்ளார்கள். அவர்களுடைய காலத்தில் இன்னும் இப்பல்கலைக் கழகம் சீரும் சிறப்பும் உற்று வளம் பெற்று விளங்க குருவருளும் திருவருளும் துணை நிற்க வேண்டி மகா சந்நிதானம் அவர்களது பொற்பாத கமலங்களுக்கு வணக்கம் தெரிவித்துக் கொள்கிறேன்.

## நீலகண்ட சர்மா

சுசீந்திரம்
7—8—72.

மனிதனை மனிதனுக்குவதற்கு இன்றியமையாதது சமயம். அதை வளர்ப்பது மாபெரும் புண்ணியம். பழங்காலத்தில் குருகுலங்களில் வாழ்ந்து மக்கள் அறிவும் அறநெறியும் பெற்றுர்கள். ஆனால் இன்று கலைக்கோயில்கள்தான் அந்தச் சிறந்த பணியை ஏற்று நடத்துகின்றன. கலைக்கூடங்கள் நமது நாட்டில் எவ்வளவு இருந்தாலும் சமய வளர்ச்சிக்கும் அதற்குச் சாதகமாக இருக்கும் தமிழின் வளர்ச்சிக்கும் தனிக் கவனம் கொடுத்து வருவன சிலவே. அவற்றுள் முக்கியமான இடம் பெற்றிருக்கிறது, தருமபுரத்தில் ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களின் நேரடியான நிர்வாகத்திலும் ஆசியுடனும் வளர்ந்து வரும் கல்லூரி. சீரும் சிறப்புமாக வளர்ந்துவரும் இக் கல்லூரி கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக நூற்றுக்கணக்கான பெரும் புலவர்களையும் தொண்டர்களையும் தயாரித்துத் தமிழகத்திற்கு அர்ப்பணித்து நாடெங்கும் வெற்றிக்கொடி நாட்டியிருக்கிறது. இந்த நிறுவனம் மேன்மேலும் வளர்ந்து பல்லாயிரக்கணக்கான மக்களைச் சமயப்பற்றுள்ளவர்களாக்கித் தாய், தமிழகத்திற்கு அறப்பணிபுரிய இறைவனை என்றும் வேண்டிக்கொள்கிறேன். அதை ஊக்குவிக்க நமது மகா சந்நிதானம் அவர்களுக்குப் போதிய ஆரோக்கியமும் நீண்ட ஆயுளும் கொடுப்பதற்குக் கடவுளை வேண்டிக்கொள்வதோடு மக்களின் அன்பும் ஆதரவும் இக் கல்லூரிக்கு என்றும் இருக்கவேண்டும் என்பதற்காக அவர்களையும் வேண்டிக்கொள்கிறேன்.

## பல்கலைக் கல்லூரியின் முன்னாள் முதல்வர்கள்



திரு. ய. மகாலிங்க சாஸ்திரி, எம். ஏ., பி. எல்.,
( 1946 — 55 )



திரு. கீ. இராமலிங்கனார், எம். ஏ.,
( 1955 — 56 )



திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார்
( 1956 — 61 )



திரு. சொ. சிங்காரவேலனார், எம். ஏ.,
( 1961 — 63 )

## கல்லூரியைப் புரந்தருளும்
## ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுடன்



கல்லூரிச் செயற்குழுவினர்



முதல்வரும், பேராசிரியர்களும்

## பல்கலைக் கல்லூரியின் முன்னாள் பேராசிரியர்கள்



திரு. மு. ஆறுமுக தேசிகர்
( 1946 — 54 )



திரு. ச. தண்டபாணி தேசிகர்
( 1948 — 54 )



திரு. பு. சி. புன்னைவனநாத முதலியார்
( 1946 — 50 )



திரு. ச. சேதுசுப்பிரமணியப் பிள்ளை
( 1954 — 56 )

# வெள்ளி விழாக் காணும்
# தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியில்
# நிகழாண்டில் பயின்றுவரும்



நான்காமாண்டு மாணவர்களும் ஆசிரியர்களும்



மூன்றும் ஆண்டு மாணவர்களும் ஆசிரியர்களும்

வெள்ளி விழாக் காணும்
தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியில்
நிகழாண்டில் பயின்றுவரும்



இரண்டாமாண்டு மாணவர்களும் ஆசிரியர்களும்



முதல் ஆண்டு மாணவர்களும் ஆசிரியர்களும்

# வெள்ளி விழாக் காணும்
# தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியில்
# நிகழாண்டில் பயின்றுவரும்



மூன்று, நான்காம் ஆண்டு மாணவிகளும் ஆசிரியர்களும்



முதல், இரண்டாம் ஆண்டு மாணவிகளும் ஆசிரியர்களும்

# தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி



ஸ்ரீ வெள்ளியம்பலவாணர் பழைய மாணவர் கழகத் தொடக்க விழா (5 — 9 — 1954)



கல்லூரியின் கவின்மிகு தோற்றம் — ஒருபகுதி

### வெள்ளி விழாக்காணும்

## தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியின்

# தோற்றமும் வளர்ச்சியும்

திருநெறிச்செம்மல், நல்லிசைப்புலவர்,

வித்துவான், திரு. வி. சா. குருசாமி தேசிகர்,

முதல்வர் (பொறுப்பு) ஆதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

மறைமுதற் கிளந்த வாயான் மதிமுகிழ் முடித்த வேணி
இறைவர்தம் பெயரை நாட்டி இலக்கணம் செய்யப் பெற்றே
அறைகடல் வரைப்பிற் பாடை அனைத்தும்வென் றாரியத்தோடு
உறழ்தரு தமிழ்த்தெய் வத்தை உள்நினைந் தேத்தல் செய்வாம்.

### தமிழின் சிறப்பியல்

'இருந்தமிழே உன்னால் இருந்தேன், வானோர் விருந்து அமிழ்தம் என்றாலும் வேண்டேன்' என்று தமிழ்விடுதூது ஆசிரியர் பாராட்டுவர். செந்தமிழ் மொழி சுவைமிக்க உயர் தனிச் செம்மொழியாய் உலகப்பெருமொழிகளுள் ஒன்றாக விளங்குவது. உலக நாகரிகங்கள் ஓங்குதற்கு முன்பே ஓங்கி விளங்கிய பெருமை உடையது தமிழர் நாகரிகம். அறிவியல், மொழியியல், வாழ்வியல் முதலிய எத்துறையிலும் சிறந்து விளங்கிய தமிழ், சங்க காலத்தில் மூவேந்தர் அரியணை நிழலில் சிறப்பிடம்பெற்று விளங்கியது. தென் பாண்டி மன்னர்கள் அமைத்த தலைச் சங்கத்தில் நம் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும், குன்றமெறிந்த குமரவேளும் தலைமைப் புலவர்களாக இருந்து தமிழ் ஆராய்ந்தனர் என்பது தமிழ்ச் சங்க வரலாறு. பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின் சென்றார் திருமால் என்று குமரகுருபரர் கூறுவர். இவ்வாறு செந்தமிழ் மொழி தெய்வத் திருமொழியாக விளங்கியதை இலக்கிய வரலாறுகளில் காண்கின்றோம். மொழியை விழியாகக் கருதி மூவேந்தர்கள் தமிழ்மொழியைப் போற்றிப் புரந்ததைச் சங்க நூல்கள் காட்டுகின்றன. முச்சங்கங்களில் எழுந்த இலக்கிய இலக்கணப் பெருநூல்கள் எண்ணற்றவை. இவற்றுட் காணப்பெறும் அக்காலத் தமிழ் மக்களது உயரிய வாழ்வியல் முறைகளைக் கற்றோர் பாராட்டுகின்றனர்.

### மூவேந்தர்களும் தமிழும்

சேர, சோழ, பாண்டியர்கள் செந்தமிழ் வளர்த்த காலத்தின்பின் களப்பிரரும், பல்லவர்களும் தமிழ்ப் பணிபுரிந்தனர்; தமிழ் நாவலர்களை ஆதரித்தனர். இவ்வாறு இடைக்காலத்தில் தமிழ் வளர்ந்து செழித்தது; தழைத்துப் பெருகிற்று. பக்தி இலக்கியங்கள் பழைய சங்க காலப் பாடல்களோடு இணைந்து பரவலாயின. மூவர் தமிழும் பன்னிருவர் பைந்தமிழுமாக சைவ வைணவப் பேரின்பப் பெருவாழ்வுக் கருவூலங்கள் பெருகலாயின.

### மடாலயங்கள்

மூவேந்தர்கள் களப்பிரர் பல்லவர்கள் ஆட்சிக்குப்பின் நாடு சிதறுண்டது. குறுநில மன்னர்களும், வட இந்திய மன்னர்களும், முகமதியர்களும் தமிழக மண்ணில் குடி ஏறினர். தமிழ் மொழியும் தமிழ்ப் பண்பாடுகளும் நிலைகுலையத் தொடங்கின. காலச் சுழலில் சிக்குண்டு நிலைதடுமாறிய நேரங்களில் தமிழையும் தமிழ்க் கலைகளையும் அரண்போலமைத்துக் காத்த பெருமை சைவ மடாலயங்கட்குரியது. சைவ மடாலயங்களின் தலைவர்களாக விளங்கிய தவப்பெருஞ் செல்வர்கள் சிறந்த தமிழ்ப் பெரும் புலவர்களாகவும் திகழ்ந்தனர். தமிழ்ச் சுவடிகளைப் பாதுகாத்தும், தமிழ்ப் புலவர்களை ஆதரித்தும், தமிழ்க் கலைகட்கு வாழ்வு அளித்தும் பேருதவி புரிந்தனர். சிறுவர்கட்கு உண்டி உறையுள் அளித்து தமிழ்க் கல்வி புகட்டினர்; சிறந்த தமிழ் நூல்களை வெளியிட்டனர். திருமடங்களின் வழி எண்ணற்ற ஞான நூல்கள் தோன்றின.

### தருமையாதீனத் தமிழ்த் தொண்டு

கி. பி. 16ஆம் நூற்றாண்டில் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகளால் நிறுவப்பெற்ற தருமை ஆதினத்தில் இருந்த தவப்பெருஞ் செல்வர்கள் வழங்கிய பைந்தமிழ்ச் சாத்திரப் பனுவல்கள் பண்டார சாத்திரம் என்னும் பெயருடன் தோன்றிப் பரவின. 10ஆவது குருமூர்த்திகளாக விளங்கிய ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள் வழங்கிய செந்தமிழ்த் தோத்திரப்பாக்கள் நெஞ்சம் உருக்கும் நீர்மையும், இறைவன் இணையடிகளில் உயிரைச் சரண் புகுவிக்கும் ஒட்பமும் உடையன. தருமையாதீனத் திருக்கூட்டத்து அடியவர்களில் ஸ்ரீ குமரகுருபரர், ஸ்ரீ வெள்ளியம்பலவாணர், ஸ்ரீ சம்பந்த சரணலயர், ஸ்ரீ படிக்காசு முனிவர், ஸ்ரீ தமிழாகரர் போன்றவர்கள் ஆற்றிய தமிழ்த் தொண்டுகளை உலகம் அறியும்.

### ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி

இவ்வாறு தமிழும், சைவமும் தழைத்திவிதோங்க அருளரசு புரிந்த இவ்வாதீனத் திருமடத்தின் 25 ஆவது குருமூர்த்திகளாக எழுந்தருளியவர்கள் ஸ்ரீ ல ஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்.

நிலையான அறங்கள் பலவற்றையும் தெய்விகத் திருப்பணிகள் பலவற்றையும் செய்த அருள் திறம் உடையவர்கள். இவர்கள் செய்துள்ள தமிழ்ப்பணிகள் பலவாகும். திருக்குறள் உரைவளம் வழங்கியும் திருமுறைகளைக் குறிப்புரைகளுடன் வெளியிட்டும் தருமையாதீனப் பழம்பெரும் நூல்களாகிய முத்தி நிச்சயப் பேருரை, ஞானவரண விளக்கம் முதலிய ஞான நூல்கள் மற்றும் பண்டார சாத்திர உரை விளக்கங்கள் முதலிய ஐந்நூறுக்கு மேற்பட்ட நூல்களை வெளியிட்டும், அருந்தொண்டாற்றியவர்கள். புலவர் பெருமக்கள் பலரை ஆதினப் புலவர்கள் என்று விருதுகள் அளித்து ஆதரித்தவர்கள். ஆவணி மூலத் திருநாளில் புலவர் பெருமக்கட்குப்

பட்டங்கள் வழங்கிப் பொன்னுடை போர்த்திச் சிறப்பிக்கும் மரபைத் தோற்று வித்தவர்கள். செந்தமிழ்ப்பூம்பொழில் என்ற அருளுபதேச மொழிகள் அடங்கிய நூல்களை வழங்கியவர்கள். கல்லூரிகள், உயர்பள்ளிகளில் பயின்று தமிழில் முதல் தகுதிபெறும் மாணவர்கட்குப் பொற்பதக் கங்கள் வழங்கி ஊக்கம் அளித்தருளியவர் கள். சிறந்த மாநாடுகள் நிகழ்த்திச் செந் தமிழ்ப்புலவர்களின், அறிவாராய்ச்சிச்சொற் பொழிவுகளை உலகம் கேட்டு உய்தி பெறச் செய்தவர்கள். இமயம் முதல் குமரி வரை யாத்திரைகள் செய்து அருளனுபவம் தேக்கி கயிலை கண்டு கனகாபிஷேகம் கொண்டரு ளிய தவவேந்தராக விளங்கிய ஸ்ரீ லஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் சிவஞானப் பண்ணையாக விளங்கிய தருமையைத் தமிழ்ப்பண்ணையாகவும் செய்தருளத் திருவுளங்கொண்டார்கள்.

### பல்கலைக் கல்லூரியின் தோற்றம்:

குருகுலவாசமாக மாணவர்கள், ஆசிரி யர்களை அடுத்து நின்று பாடங்கேட்டனர் அக்காலத்தில். இக்காலச்சூழலில் எண்ணற் றோர் அக்கல்வி நலம் பெறத் தனிப்பெருங் கல்லூரிதான் பயன்தரும் என்று கருதிற்று ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் திருவுள் ளம். இவ்வாறு கருதிய குருமணி அவர்கள் திருவுள்ளத்தே விரைவில் தமிழ்க் கல்லூரி ஒன்று தொடங்க வேண்டும் என்ற திருக் குறிப்பு அரும்பிற்று.

ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர்கள், தவஞானங்களுடன் கலைஞானங்களும் நிரம் பியவர்களாய் விளங்கி, செந்தமிழ்ப் பணி களும் சிவப்பணிகளும் புரிந்துவந்த திருமர பினர். அவர்களை உலகியற் கல்விபெறச் செய்து சிறந்த புலவர்களாக்கி-நாடெங்கும் அனுப்பிச் சமயப்பணிகளும் தமிழ்ப்பணி களும் செய்விக்க வேண்டும் என்று விரிவாகச் சிந்தித்து ஆதீன அடியவர்கள் பலரும் பயிலும் கல்வி நிலயமாக இதனை அமைக்கவேண்டும். மற்றவர்களும் அவர்க ளோடு உடன் கற்றுப் பயன் பெறட்டும் என்று கருதியவர்களாய் ஒருநாள் ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர்களாக விளங்கிய ஸ்ரீமத் சோமசுந்தர தம்பிரான் சுவாமிகள் (தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நி தானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிகஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்) ஸ்ரீமத் கந்தசாமித் தம்பிரான் சுவாமிகள் (தவத்திரு. குன்றக்குடி அடிகளார்) ஸ்ரீமத் மாணிக்கவாசகத் தம்பிரான் சுவாமிகள் ஆதீனத் தேவார பாடசாலை மாணவர்களில் ஐந்தாண்டுப் பயிற்சி முடித்த வி. சா. குருசாமி, வை. சு. தண்டபாணி, கோ. முருகையா ஆகிய அனைவரையும் அழைத்து தமிழ் வித்துவான் வகுப்புக்குரிய புகுமுக வகுப் புத் தேர்வுக்குப் படிக்குமாறு அருளாணை பிறப்பித்தார்கள். வித்துவான் திரு. மு. ஆறுமுக தேசிகர் அவர்களையும் மாயூரம் தேசிய உயர்பள்ளித் தமிழாசிரியர் திரு. கோபாலகிருஷ்ண பிள்ளை அவர்களையும், ஸ்ரீமத் நாகலிங்கத் தம்பிரான் சுவாமிகளையும் ஆசிரியர்களாக நியமித்தார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமணி அவர்களுடைய அருளாசியோடு செந்தமிழ்த் தெய்வமாக விளங்கும் தருமை ஸ்ரீ சொக்கநாதப் பெருமான் திருமுன்னிலை யில் நல்லதோர் நாளில் புகுமுக வகுப்புத் தொடங்கி நடைபெற்றது.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் ஆசிரியர்களையும், திருக்கூட்டத்து அடியவர் களையும் அடிக்கடி அழைத்து கல்வியில் ஊக்கமளித்தும் அருளினார்கள். திருமடத் துக்கு வருகின்ற அன்பர்களிடமெல்லாம் வித்துவான் வகுப்பு நடைபெறுவதையும் மாணவர்களை அழைத்து, கேள்விகளைக் கேட்டு விடையளிக்கச் சொல்லி மகிழ்விப்ப தையும் கண்ட அன்பர்களின் உள்ளம்

ஸ்ரீலஸ்ரீ குருமணி அவர்களின் தமிழார்வத்தைக் கண்டு வியப்பெய்தும். தமிழ்ப் பேரறிஞர்கள் பலரைக்கொண்டு தேர்வுகள் நடத்தி மாணவர்களின் தேர்ச்சி நிலைகளைக்கண்டு மகிழும் குருமணி அவர்களின் தாயன்பின் தரத்தை எவ்வாறு உணர்ந்து போற்ற முடியும். மாணவர்கள் அனைவரும் பல்கலைக் கழகப் புகுமுகத் தேர்வுகளை நன்முறையில் எழுதி வெற்றி பெற்றனர்.

### பல்கலைக் கல்லூரி திறப்பு

புகுமுக வகுப்பில் தேர்ந்தபின் முதனிலை நிறைநிலை வகுப்புக்களை, கல்லூரிகளிலிருந்தே மாணவர்கள் கற்கவேண்டும் என்பது பல்கலைக் கழக விதி. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் தருமையிலே கல்லூரி தொடங்கவேண்டும் என்று திருவுளம் பற்றினர்கள். பல்கலைக்கழக இசைவு கிடைத்தது. விய ஆண்டு ஆடித் திங்கள் 18 ஆம் பெருக்கன்று (2—8—1946) தருமையாதீனம் ஆதீன தேவஸ்தானங்களின் கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி, விநாயகர் கலைமகள் வழிபாடுகளுடன் தொடங்கப்பெற்றது. தமிழ் வித்துவான் வகுப்பும், வடமொழி சாகித்திய சிரோமணி வகுப்பும் தொடங்கப்பெற்றன. தமிழக அறநிலைய அமைச்சர் மாண்புமிகு கோட்டி ரெட்டி அவர்களைக்கொண்டு சிறந்த முறையில் கல்லூரித் திறப்புவிழா 10—8—1946 அன்று நடைபெற்றது.

பழம்பெரும் எழுத்தாளரும் வடமொழி வித்தகரும் அப்பய்யதீக்ஷிதர் வழிவந்த அருங்கலைவிநோதருமான பிர்மஸ்ரீ ய. மகாலிங்க சாஸ்திரிகள் M. A., B. L., கல்லூரியின் முதலாவது முதல்வர் என்னும் பெருஞ் சிறப்புக்கு உரியவராய் விளங்கினர்கள். பெருநாவலர் திரு. பு. சி. புன்னைவனநாத முதலியார், வித்துவான், திரு. மு. ஆறுமுக தேசிகர் சிரோமணி திரு. கே. இராசகோபால சாஸ்திரிகள், சிரோமணி திரு. இ. எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரியார் முதலிய பலரும் பேராசிரியர்களாக விளங்கி தமிழ் வித்துவான் வகுப்பையும், வடமொழி சிரோமணி வகுப்பையும் நடத்திவரலாயினர். முதனிலை வகுப்பில் தொடங்கிய கல்லூரி நான்காண்டுகளில் முதுநிலைக் கல்லூரியாக வளரத் தொடங்கிற்று. தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் மாணவர்கள் வந்து இலவச உணவும், உறையுளும் பெற்று கல்வி பயின்று வரலாயினர்.

### கல்விக்குழு

இக்கல்லூரிக்கென தனியே கல்விக்குழு ஒன்று அமைக்கப்பெற்றது. அக்குழு கல்லூரியின் வளர்ச்சியில் ஈடுபாடுகொண்டு உதவி வருகின்றது. கல்லூரியின் புரவலராக விளங்கிவரும் தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் இக் கல்விக் குழுவின் தலைவராகவும் இருந்து அருள்பாலிக்கிறார்கள். உறுப்பினர்களாக 1. வித்துவான். ஸ்ரீமத் இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள், 2. திரு. B. முத்துக்குமாரசுவாமி முதலியார், 3. திரு. A. கல்யாணசுந்தர தேசிகர், 4, திரு. M. சுப்பையா முதலியார் 5. திரு. S. V. சுப்பிரமணிய அய்யர் (ஆதீனம் மானேஜர், கல்லூரிச் செய்தியாளர்), 6. கல்லூரி முதல்வர் ஆகியோர் இருந்து வருகின்றனர்.

### முதல்வர்கள், பேராசிரியர்கள்

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி, தமிழகத்தின் தனிப்பெரும் கல்லூரியாக விளங்கத் துணை நின்றவர்கள் பேராசிரியர்கள் ஆவர். தமிழகத்தின் தலைசிறந்த புலவர் பெருமக்கள் இக்கல்லூரியின் பேராசிரியர்களாக இருந்தார்கள். சமய நூல் அறிவும், புலமை நலமும் வாய்க்கப்பெற்ற

பெருமக்கள் பேராசிரியர்களாக விளங்கினர். மகாவித்துவான், திரு. ச. தண்டபாணி தேசிகர் இக்கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவராக இருந்து பணி செய்தவர்கள். முதுபெரும் புலவர் முத்து சு. மாணிக்கவாசக முதலியார், (காஞ்சி தொண்டை மண்டல ஆதீனம் மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஞானப் பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்) ஆட்சிச் சொற் காவலர் திரு. கீ. இராமலிங் கனர், முதுபெரும் புலவர் திரு. சி. அருணைவடிவேல் முதலியார் போன்ற சிறந்த தமிழ்ப் பெரும் புலவர்கள் முதல்வர்களாக-பேராசிரியர்களாக விளங்கினர்கள். தருமை யாதீனம் 26-வது குருமகாசந்நிதானமாக எழுந்தருளி விளங்கும் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் இக் கல்லூரியில் கவுரவப் பேராசிரியராக விளங்கியவர்கள் என்பது பெருமைக்குரிய செய்தியாகும்.

1 திரு. Y. மகாலிங்க சாஸ்திரி M. A., B. L. (2—8—1946 முதல் 30—6—55)

2 திரு. C. புன்னைவனநாத முதலியார் (2—8—1946 முதல் 14—8—1950)

3 திரு. K. ராஜகோபால சாஸ்திரி (2—8—1946 முதல் 11—10—1958)

4 திரு. M. ஆறுமுகதேசிகர் (2-8-1946 முதல் 1—3—1954)

5 திரு. ச. தண்டபாணி தேசிகர் (28—6—1948 முதல் 6—7—1954)

6 திரு. E. S. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி (10—8—1949 முதல் 4—9—1954)

7 ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் (1 — 9 — 1950 முதல் 26—8—1951) கவுரவப்பேராசிரியர்

8 திரு. S. சிங்காரவேலு சேதிராயர் (27—8—1951 முதல் 24—11—1951)

9 திரு. முத்து சு. மாணிக்கவாசக முதலியார் (10 — 7 — 1952 முதல் 19-1-1956) பேராசிரியர் (20-1-1956 முதல் 26-6-1961) முதல்வர்.

10 திரு. சொ. சிங்காரவேலனர் (1-3-1954 முதல் 25—6—61 வரை) பேராசிரியர், (26-6-61 முதல் 17-12-63) முதல்வர்.

11 திரு. N. சம்பந்தம் (5 — 7 — 1954 முதல் 30—6—55)

12 திரு. ச. சேது சுப்பிரமணியப் பிள்ளை (14—9—1954 முதல் 30—6—1956)

13 திரு. கீ. இராமலிங்கனர் (15-11-1954 முதல் 19-1-1956)

14 திரு. செ. வேங்கடராமச் செட்டியார் (27—7—1956 முதல் 20—8—1957)

15 திரு. P. திருமால் (10—9—1956 முதல் 10—12—1956)

16 திரு. ம. சிவசம்பு (10—12—1956 10—6—1961)

17 திரு. V. பக்கிரிசாமி B. A., (HONS) (27—8—57 முதல் 11—4—58)

18 திரு. சி. அருணைவடிவேல் முதலியார் (1—7—1962 முதல் 21—6—1970)

**தற்போதைய முதல்வர் பேராசிரியர்கள்**

19 திரு. வி. சா. குருசாமி தேசிகர் (1—9—1950 முதல் பேராசிரியராகவும் (18 — 12 — 63 முதல் 17 — 1 — 67) 1—7—67 முதல் முதல்வர் பொறுப்பி லும் பணியாற்றுகிறர்.

20 திரு. வி. சபேசன் (7—7—1956 முதல்) பணியாற்றுகிறர்

21 திருமதி. ப. நீலா (22 — 6 — 1964 முதல்) பணியாற்றுகிறர்

22 திரு. இரா. செல்வக்கணபதி (10-7-1970 முதல்) பணியாற்றுகிறர்

எழுத்தர், திரு. M. சுப்பராம அய்யர் (1—6—1958 முதல்) பணியாற்றுகிறர்

### ஆதீன அடியவர்கள்

ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர்கள் பலரும் இப் பல்கலைக் கல்லூரியில் பயின்று வித்துவான் பட்டம்பெற்று விளங்கினர். தருமையாதீனம் 26ஆவது குருமகா சந்நிதானமாக தற்போது எழுந்தருளி அருளரசோச்சிவரும் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களும், திருவண்ணாமலை ஆதீனம் குன்றக்குடி மடாலயத்தில் குருமகா சந்நிதானமாக தற்போது எழுந்தருளி விளங்கும் ஸ்ரீலஸ்ரீ தெய்வ சிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களும், திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தின் அதிபராக எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களும் இக் கல்லூரியில் பயின்றவர்கள் என்பது பெருமைக்குரிய செய்தியாகும்.

திருநள்ளாறு தேவஸ்தானம் கட்டளை விசாரணை வித்துவான் ஸ்ரீமத் சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் தருமையாதீனம் சென்னை சமயப்பிரசார நிலையத்தில் பணியாற்றிவரும் வித்துவான் ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள், ஆகியோர் இக் கல்லூரியில் பட்டம்பெற்ற ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர்கள் ஆவர்.

### ஆயிர ரூபாய்ப் பரிசுகள்

சென்னை மாநிலத்திலேயே தமிழ் வித்துவான் வகுப்பில் முதன்மையாகத் தேர்ச்சிபெற்றுத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தின் 1000 ரூபாய்ப் பரிசுகளைப் பெற்ற வர்கள் நால்வர். இக் கல்லூரியின் முதல்வ ராக இருந்து இப்போது மாயூரம் A. V. C. கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராக விளங்கும் திரு. சொ. சிங்காரவேலன், M. A., ஆதீனத் தமிழ்க் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக விளங்கும் வித்துவான் திருமதி. ப. நீலா, வித்துவான் திரு. இரா. செல்வக்கணபதி, செங்கற்பட்டு மாவட்டத் தில் பணியாற்றிவரும் வித்துவான் திரு. சி. கோவிந்தசாமி ஆகியோர் அப்பரிசைப் பெற்றவர்கள் ஆவர்.

### பல மாவட்டங்களிலிருந்தும்

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் இருந்தும் மாணவர்கள் இங்குவந்து கல்வி அறிவும் சமய நூலறிவும் பெற்றுச் செல்கின்றனர். தஞ்சை, திருச்சி, நெல்லை, குமரி, மதுரை, இராமநாதபுரம், சேலம், செங்கற்பட்டு முதலிய பல மாவட்டங்களி லிருந்தும் மாணவர்கள் பயின்று செல்கின் றனர். கடல்கடந்த நாடுகளிலிருந்து வந்து கன்னித் தமிழ் பயின்று சென்றோரும் பலராவர்.

### சமய நூலறிவு

தருமையாதீனத்திற்கு வரும் பல பெரியோர்களுடைய சமய இலக்கிய விரி வுரைகளைக் கேட்கும் நல்வாய்ப்பை மாண வர்கள் பெற்று வருகின்றனர். ஆதீனத் தொடர்பான விழாக்கள், மாநாடுகள் பல வற்றிலும் கலந்துகொண்டு சமய நூலறிவும் ஒழுக்கமும் சமயப் பண்பாடும் உடையவர் களாய் விளங்கி வருகின்றனர். சிறப்பாகக் கல்லூரியில் தமிழ் வித்துவான் பாடத் திட்டங்களோடு சைவ சித்தாந்தப் பாட வகுப்புக்களும் நிகழ்த்திச் சான்றிதழ்களும் ரொக்கப் பரிசுகளும் வழங்கப்பட்டு வருகின்றன. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின் கனகாபிஷேக நினைவாகச் சைவ சித்தாந்தக் கல்லூரியும் இதனோடு இணைக்கப்பட்டு நடந்து வருகிறது. நிகழாண்டில் முதுபெரும் புலவர், சித்தாந்தக் கலைமணி. திரு. சி. அருணைவடிவேலு முதலியார் சமய பாட வகுப்புக்களை நிகழ்த்தி வருகின்றார்கள்.

**மாணவர்கள் தேர்ச்சியும், வளர்ச்சியும்**

இக்கல்லூரியில் பயின்று புலவர் பட்டம் பெற்றுத் தமிழ் ஆசிரியர்களாகத் தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் 463 புலவர்கள் பணி செய்கின்றனர். தமிழ்ப் புலமைத்துறையில் சிறந்து விளங்கி மேலும் பல பட்டங்கள் பெற்றுச் சிறந்து விளங்கு கின்றனர். சமயத்துறையில், இலக்கியத் துறைகளில், அரசியல் துறைகளில் மேம்பட்டு விளங்கி வருகின்றனர்.

வித்துவான் திரு. சொ. சிங்காரவேலன் அவர்கள், M.A. Dip. Ling என்ற பல்கலைக் கழகப் பட்டங்கள் பெற்றும், செஞ்சொற் கொண்டல் என்ற சிறப்பு விருதுபெற்று மாயூரம் A. V. C. கலைக்கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணி செய்கின்றார். டாக்டர். பட்டத்திற்கு 'அப்பர் தேவாரம்' ஆராய்ச்சிக் கட்டுரை நூல் எழுதியனுப்பியுள்ளார். வித்துவான் திரு. பழனி அரங்கசாமி ஆங்கில மொழிப் பயிற்சியில் எம். ஏ. பட்டம் பெற்று மதுரைப் பல்கலைக்கழக அஞ்சல் துறையில் ஆங்கிலப் பிரிவில் பணிசெய்கின்றார். வித்துவான் திரு. இராமாநுசம் அவர்கள், எம். ஏ., பட்டம் பெற்று கடலூர் அரசினர் கலைக் கல்லூரியில் துணைப் பேராசிரியராக விளங்குகின்றார். வித்துவான் திரு. இல.செ. கந்தசாமி அவர்கள் எம். ஏ., பட்டம் பெற்று கோவை வேளாண்மைப் பல்கலைக் கழகத்தில் துணைப் பேராசிரியராகப் பணியாற்றுகிறார். புலவர். திரு. அறிவுடை நம்பி தமிழக சட்டமன்ற மேலவை உறுப்பினராக விளங்கி வருகின்றார். புகழ் பெற்ற சமய நூற்பேச்சாளரும் பட்டிமன்ற மணி, கதாரத்தினம் முதலிய விருதுகள் பெற்று நாடு முழுதும் சென்று சென்று விரிவுரையாற்றி மகிழ்விக்கும் புலவர். திரு. கீரன் அவர்கள் இக்கல்லூரியிற் பயின்றவர். இவ்வாறு மேலும் மேலும் தங்கள் தகுதிகளை உயர்த்தி B. A., M. A. முதலிய பட்டங்கள் பெற்றுச் சிறந்து விளங்கும் பழைய மாணவர்கள் பலராவர்.

**கல்லூரியின் தனிச் சிறப்பு**

சென்ற இடங்களிலெல்லாம் சிறப்புக்கள் பெற்று தருமைக்குத் தனிப்புகழ் சேர்க்கும் மாணவச் செல்வங்கள் பலராவர். ஆண்டுதோறும் இக்கல்லூரியிற் பயின்று தேர்ந்த புலவர்களை, தங்கள் கல்வி நிறுவனங் களுக்கு வேண்டிப் பெறுவது இக் கல்லூரிக்குத் தனிச்சிறப்பு. சிறந்த கல்வி யறிவும், சமய நூலறிவும், ஒழுக்கமும் உடையவர்களாய் மாணவர்கள் விளங்குவர் என்ற நம்பிக்கையைப் பாதுகாத்து வருகிறது இக்கல்லூரி.

**மாணவர் கழகம்**

தருமையாதீன முதற்குரவர் ஸ்ரீ குருஞான சம்பந்தர் திருப்பெயரால் கல்லூரி இலக்கிய மன்றம் நிகழ்ந்து வருகிறது. நால்வர் நற்றமிழ் மன்றம் என்ற பெயரில் தோன்றி வளர்ந்தது இக்கழகம். இதன் முதற் செயலராக இருந்து நன்முறையில் நடத்தி யவர்கள் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள். இன்று புகழ்பெற்ற பேச்சாளர் களாக விளங்கும் இக்கல்லூரிப் பழைய மாணவர்கள் பலரும் இவ்விலக்கிய மன்றம் அளித்த நாவலர்களாவர். ஆண்டுதோறும் கட்டுரை, கவிதைப், பேச்சுப்போட்டிகள் நிகழ்த்திப் பரிசுகள், சான்றிதழ்கள் வழங்கி மாணவர்களை ஊக்க முறுத்தியும் சிறந்த சொற்பொழிவாளர்களை அழைத்து விழா நிகழ்த்தியும் விரிவுரை ஆற்றச் செய்தும் மாணவர்கள் பயனடையுமாறு செய்து வருகிறது.

ஆதீனத் திருமடத்தில் நிகழும் பல்வகை விழாக்களிலும் மாணவர்கள் சிறந்த இலக்கிய சமய நாடகங்கள் நிகழ்த்தி இன்புறுத்தி வருகின்றனர். ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்கள் எழுந்தருளியிருந்து

மாணவர்களது கலையார்வத்தைக் கண்டு மகிழ்ந்தும் பரிசுகள் வழங்கியும் ஊக்குவித் தருளுகிறார்கள். நாடகங்களுக்கென வண்ணத்திரைச் சீலைகள் பெரும்பொருட் செலவில் தயாரிக்கப்பட்டுள்ளன.

**சாரணர் குழு**

மாணவர்கள் பொதுப்பணிகளில் ஈடு பட்டுப் பொதுப்பணி செய்யும் பழக்கத்தை யுடையவர்கள் ஆதற் பொருட்டும் பிறர்க்கு உதவி செய்யும் பண்புடையவர்களாக விளங்குதற் பொருட்டும் சாரணக் குருளையர் குழாம் அமைக்கப்பெற்றது.

**மாணவர்கள் தேர்ச்சி நிலை**

| ஆண்டு | | தேர்வெழுதியோர் | | தேர்ச்சி பெற்றோர் |
|---|---|---|---|---|
| *1950* | — | 5 | — | 5 |
| *1951* | — | 7 | — | 5 |
| *1952* | — | 9 | — | 9 |
| *1953* | — | 9 | — | 7 |
| *1954* | — | 16 | — | 16 |
| *1955* | — | 15 | — | 14 |
| *1956* | — | 19 | — | 14 |
| *1957* | — | 22 | — | 22 |
| *1958* | — | 25 | — | 25 |
| *1959* | — | 36 | — | 24 |
| *1960* | — | 26 | — | 26 |
| *1961* | — | 21 | — | 16 |
| *1962* | — | 18 | — | 18 |
| *1963* | — | 12 | — | 12 |
| *1964* | — | 3 | — | 3 |
| *1965* | — | 9 | — | 8 |
| *1966* | — | 13 | — | 13 |
| *1967* | — | 9 | — | 9 |
| *1968* | — | 32 | — | 32 |
| *1969* | — | 32 | — | 27 |
| *1970* | — | 45 | — | 41 |
| *1971* | — | 75 | — | 69 |
| *1972* | — | 53 | — | 48 |
| *1972* முடிய தேர்ச்சிபெற்றவர்கள் | | | | *463* |

**பழைய மாணவர் கழகம்**

ஸ்ரீ வெள்ளியம்பலவாணர் திருப் பெய ரால் இக்கல்லூரியின் பழைய மாணவர்கள் பலரையும் இணைத்து வருகிறது இக்கழகம். ஆண்டுக்கொருமுறை பழைய மாணவர்களை ஒன்றுகூட்டிப் பல்வேறு கருத்துக்களைக் கேட்டறிதற் பொருட்டும், சிறந்த பல தமிழ் வளர்ச்சித் திட்டங்களை வகுத்தற் பொருட் டும், இக்கழகம் அமைக்கப்பெற்றுள்ளது. இக்கல்லூரியின் வெள்ளி விழாவைச் சிறந்த முறையில் நிகழ்த்துவதற்கும், வெள்ளி விழா மலர் ஒன்று கண்களையும் கருத்தையும் கவரும் வண்ணம் வெளியிடுதற்கும் இக் கல்லூரி பழைய மாணவர்களும் சிறந்த முறையில் செயலாற்றுகின்றனர்.

**தாளாளர்கள்**

ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களைத் தலைவராகக் கொண்ட கல்லூரி செயற்குழு கல்லூரி நடைமுறை வளர்ச்சிகளைக் கண்காணித்து வருகிறது. திரு. A. கல்யாணசுந்தர தேசிகர் (தருமையாதீன தேவஸ்தானங்களின் சூப்பிரண்டெண்ட்) அவர்களும், திரு. இராமச்சந்திர அய்யர் (தருமையாதீனம் மானேஜர்) அவர்களும் தாளாளர்களாகப் பணியாற்றினர். தற்போது திரு. S. V. சுப்பிரமணிய ஐயர் (தருமையாதீனம் மானேஜர்) தாளாளராகப் பணியாற்றி வருகின்றார்கள்.

**வெள்ளி விழாச் செயற்குழு**

தலைவர்: திருவண்ணாமலை ஆதீனம் குன்றக்குடி குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமா சாரிய சுவாமிகள் (தவத்திரு குன்றக்குடி அடிகளார்.) இணைத் தலைவர்: திருப்பனந் தாள் ஸ்ரீ காசிமடம் வித்துவான் காசிவாசி ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள். செயலாளர்: புலவர்.

திரு. அறிவுடைநம்பி எம். எல். சி., துணைச் செயலாளர்கள்: புலவர். திரு. சொ. சிங்கார வேலன் எம். ஏ., புலவர் திரு. பி. நடராசன் அலுவலகச் செயலாளர். புலவர். திரு. வி. சா. குருசாமி தேசிகர். பொருளாளர்; சிரோமணி வித்துவான், திரு. வி. சபேசன். இணைச் செயலாளர்கள் : வித்துவான், திருமதி. ப. நீலா. புலவர். திரு. இரா. செல்வக்கணபதி.

மலர்க்குழு :

புலவர். திரு. வி. சா. குருசாமி தேசிகர், புலவர். திரு. சொ. சிங்காரவேலன் எம். ஏ., புலவர். திரு. இரா. செல்வக்கணபதி, புலவர். திரு. சோ. சுவாமிநாதன்.

**ஆண்டுவிழா :** ஆண்டுதோறும் ஆவணி மூலத்திருநாளில் இக்கல்லூரியின் ஆண்டுவிழா நடைபெறும். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் சிறந்த தமிழ்ப் புலவர்களுக்குப் பட்டம் வழங்கி அவர்களுடைய அரும்பெரும் சொற்பொழிவுகளைக் கேட்கும் வாய்ப்பை மாணவர்களுக்கு வழங்கி வருகிறார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமணி அவர்களே எழுந்தருளியிருந்து அருளாசி வழங்கியும் பரிசுகள் வழங்கியும் மகிழ்விப்பார்கள்.

**வெள்ளி விழா :** 25 ஆண்டுகள் நிரம்பிய இக்கல்லூரியின் வெள்ளி விழாவைச் சிறந்த முறையில் நிகழ்த்துவதற்குத் திட்டங்கள் பலவற்றையும் வகுத்து விழாக்குழு ஒன்றை அமைத்துச் சிறப்புற நடைபெறச் செய்தருளுகின்றவர்கள், தருமையாதீனம் 26 வது ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள். தமிழ்ப் புலமையும், நாவன்மையும், பல கலையறிவும், உலகியற் பாங்கும் படைத்து தமிழ்நாடு இலங்கை முழுதும் சென்று தெய்வத்தமிழ்ச் சொற்பொழிவுகளால் மக்கள் மனமெலாம் கவர்ந்து மன்னி வீற்றிருந்தருளும் குருமகா சந்நிதானம் அவர்கள் திருவடிகளை வணங்கி வாழ்த்துகிறோம். கல்லூரியின் பொன் விழா மணி விழா முதலிய அனைத்து விழாக்களும் நிகழ்த்தி இளைய மாணவர்களின் வாழ்வு சிறக்க அருளாசி வழங்கும்படி பணிவுடன் வேண்டுகிறோம். கல்லூரியின் வளர்ச்சிக்கு நிலையான ஆக்கத்திட்டங்கள் பலவற்றையும் அமைத்தருளத் திருவுளம் கொண்ட மகாசந்நிதானம் அவர்கள் திருவடிகட்கு நன்றியறிதலோடு கூடிய வணக்கங்களைக் கூறிக்கொள்கிறோம். தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும் திருநகராக அரசு வீற்றிருந்தருளும் குருமூர்த்திகளின் திருவடி நிழலில் பயிலும் இக்கல்லூரி மாணாக்கர்கள் மறந்தும் புறந்தொழா அறக்கற்புடைய தனித் தொண்டர்களாக நாடெங்கிலும் உலவி இவ்வாதீனத்தின் அருட்பெருமையையும் அங்குத் தாம் பயின்ற தமிழ் மொழியின் மணங்கமழ் தெய்வத்து இள நலத்தையும் பரப்புவர் என்பது உறுதி. வாழ்க தருமையாதீனம்! வளர்க பல்கலைக் கல்லூரி !!

உ

சிவ சிவ

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

நிறுவியருளிய

# தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி வெள்ளி விழா நினைவுப் பரிசு நிதி ரூ. 2,500

தருமையாதீனம் 25-ஆவது மகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களால் தருமபுரத்தில் தோற்றுவிக்கப் பெற்று இற்றை ஞான்று வரை பன்னூறு சிறந்த புலவர்களைத் தோற்றுவித்த பெருமையுடையதும், நாடாட்சியில் இந்நாளில் பங்கு பூண்டு இருப்பவருள் சிலரும், செஞ்சொற் பாவலர்களும், முனிபுங்கவர்களும், புலவர் படிப்புப் படித்த தனிச் சிறப்புடையதும், தருமபுரம் ஆதீனம் 26-ஆவது மகா சன்னிதானம் அவர்களும், தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களும், நாமும் படித்த கல்லூரியாக விளங்குவதும், தருமபுரம் ஆதீனம் 26ஆவது மகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ ஷண்முக தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் அவர்களின் அருள் நிழலில் வளர்வதும் ஆன தருமையாதீனம் கீழ்திசைப் பல்கலைக் கல்லூரி 25 ஆண்டுகள் நிறைவுற்று வெள்ளி விழாக் கொண்டாடுகிறது. அவ்வெள்ளிவிழா நினைவில் தருமையாதீனக் கீழ்த்திசைப்பல்கலைக்கல்லூரியில் புலவர் வகுப்புக்களில் பயிலும் மாணக்கர்களுக்கும், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 19-ஆவது அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் நினைவில் 20-ஆவது அதிபர் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்** அவர்களால் 1944ல் நிறுவப் பெற்றுத் திருப்பனந்தாளில் நடைபெற்று வருவதும், நம்மால் புரக்கப்படுவதுமான திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியில் புலவர் வகுப்புக்களில் பயிலும் மாணக்கர்களுக்கும், பின்னே 3ல் விவரித்த வண்ணம் ஆய்வுக் கட்டுரை எழுதுவோர்க்குக் கல்லூரி ஒன்றுக்கு 2 பரிசுகள் வீதம் நான்கு பரிசுகள் அளித்தற் பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21-ஆவது அதிபர் **ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்** அவர்களால் இத் தருமநிதி நிறுவப்பெற்றது. இது **தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி வெள்ளி விழா நினைவுப் பரிசு நிதி** எனப் பெயர் பெறும்.

2. இதற்குரிய முதற் பொருள் ரூ. 2,500/- ரூபாய் இரண்டாயிரத்து ஐந்நூறு. இது ஆண்டு ஒன்றுக்கு 7% வட்டி வரக் கூடிய நிலையான முதலீடாகக் கும்பகோணம் சென்ட்ரல் பாங்கில் 7 ஆண்டுகளுக்கு முதலீடு செய்யப்பெற்றுள்ளது. பிக்சட் டெபாசிட் எண். 27/110. தேதி 21—8—'70 ரூ. 700/-, எண். 27/115. தேதி 2—9—'70 ரூ. 1000/-. எண். 27/122. தேதி 18-9-'70 ரூ. 800/-. ஆக ரூ. 2,500/- இது நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலனம் செய்யப்பெற்று வரும்.

3. இம்முதற் பொருளினின்றும் கிடைக்கும் வட்டித் தொகையில் இத் தருமத்தைப் பரிபாலனம் செய்வதற்குரிய நிர்வாகச் செலவுகள் போக எஞ்சிய தொகையில் ஆண்டு தோறும் ரூ. 140 மட்டும் பிற்கண்டு கட்டுப்பாடுகளில் கண்ட வண்ணம் 4 பரிசுகளாகப் பிரித்து வழங்கப் பயன்படுத்தப்பெறும் :

அ. தருமபுர ஆதீனக் கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரியில் புலவர் வகுப்புக்களில் பயிலும் மாணுக்கர்கள், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து முதல் அதிபர் ஸ்ரீகுமர குருபரசுவாமிகள் அருளிய பிரபந்தங்களில் ஏதாவது ஒரு பிரபந்தம் பற்றி 8 பக்க அளவில் ஒரு ஆய்வுக் கட்டுரை எழுத வேண்டும். அவ்வவ்வாண்டுக்குரிய பிரபந்தத்தின் பெயர் திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்தின் அதிபர் அவர்களால் ஜூலை மாதம் 31-ந் தேதிக்குள் அறிவிக்கப்பெறும். தருமையாதீனக் கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி மாணுக்கர் தத்தம் ஆய்வுக் கட்டுரைகளைத் தம் கல்லூரி முதல்வரிடம் டிசம்பர் மாதம் 31-ந் தேதிக்குள் கொடுத்தல் வேண்டும். அக்கட்டுரைகள் எல்லாவற்றையும் தருமைக் கல்லூரி முதல்வர் திருப்பனந்தாள் செந்தமிழ்க்கல்லூரி முதல்வருக்கு அனுப்பினல் அவர் அக்கட்டுரைகளை மதிப்பிட்டு எண் பட்டியலைத் திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபர் அவர்களுக்கும், தருமையாதீனக் கல்லூரி முதல்வருக்கும் அனுப்பி வைத்தல் வேண்டும். முதல் எண் பெற்றவர்க்கு முதற்பரிசு ரூபாய் 40/-ம், இரண்டாவது எண் பெற்றவர்க்கு இரண்டாவது பரிசு ரூபாய் 30/-ம் ஷை தருமபுர ஆதீனக் கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி ஆண்டுவிழா நடைபெறும் ஆவணி மூல நாளில் வழங்கும் பொருட்டுத் தொகை பணவிடை (எம்.ஓ.) வழியாக ஷை கல்லூரி முதல்வருக்கு அனுப்பி வைக்கப்பெறும். அத்தொகையையோ அல்லது அத்தொகைக்குரிய நூல்களையோ பரிசு பெறும் மாணுக்கர்களுக்கு அளித்துப் பற்றுச்சீட்டுப் பெற்றுத் திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கட்கு அனுப்பி வைத்தல் வேண்டும்.

ஆ. திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியில் புலவர் வகுப்புக்களில் பயிலும் மாணுக்கர்கள் தருமபுர ஆதீன முதற்குரவர் ஸ்ரீலஸ்ரீ குருஞான சம்பந்த சுவாமிகள் அருளிச் செய்த அருள் நூல்களில் ஏதாவது ஒரு அருள் நூலைப்பற்றி 8 பக்க அளவில் ஆய்வுக் கட்டுரை எழுதவேண்டும். அவ்வவ்வாண்டுக்குரிய அருள் நூலின் பெயர் திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபர் அவர்களால் ஜூலை மீ" 31-ந் தேதிக்குள் அறிவிக்கப்பெறும். திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி மாணுக்கர் தத்தம் ஆய்வுக்கட்டுரைகளைத் தம் கல்லூரி முதல்வரிடம் டிசம்பர் 31-ந் தேதிக்குள் கொடுத்தல் வேண்டும். அக்கட்டுரைகள் எல்லாவற்றையும் ஷை திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர் தருமையாதீனக் கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி முதல்வருக்கு அனுப்பினல் அத்தருமையாதீனக்கல்லூரி முதல்வர் அக்கட்டுரைகளை மதிப்பிட்டு எண் பட்டியலைத் திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபர் அவர்கட்கும், திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி முதல்வருக்கும் அனுப்புதல் வேண்டும். முதல் எண் பெற்றவர்க்கு முதற்பரிசு ரூ. 40/-ம், இரண்டாவது எண் பெற்றவர்க்கு இரண்டாவது பரிசு ரூ. 30/-ம் பரிசுக்குரியவர்கட்குப் பற்றுச்சீட்டின் பேரில் அளிக்கப் பெறும்.

இ. இதற்கென ஆகும் அஞ்சல் செலவுகளை அஞ்சல் இரசீதுகளுடன் இணைத்துக் கேட்டுக்கொண்டால் அச்

செலவுத்தொகை அவ்வக்கல்லூரி முதல்வருக்கு அனுப்பிவைக்கப்பெறும்.

ஈ. கட்டுரைகளை மதிப்பிடும் இரு கல்லூரி முதல்வர்களுக்கும் மதிப்பிட்டுத் தொண்டு செய்வதற்காக ரூ. 5/- வீதம் இருவருக்குமாக ரூ. 10/- மதிப்பு ஊதியம் அளிக்கப் பயன்படுத்தப்பெறும்.

உ. இரண்டு கட்டுரைகளே வரினும் அவையும் தரம் குறைவாக இருப்பினும், பரிசுத்தொகை குறைக்கவோ பரிசுகளின் எண்ணிக்கை குறைக்கவோ நமக்கும் நமக்குப்பின்வரும் உரிமையுள்ளவர்களுக்கும் உரிமையுண்டு.

ஊ. பரிசுகளுக்குரிய கட்டுரைகளை ஞானசம்பந்தம் அல்லது குமரகுருபரனில் பிரசுரிக்கச் செய்யலாம்.

4. மேலே கண்ட வண்ணம் செலவு செய்த பிறகு தொகை எஞ்சியிருப்பின் அத்தொகை முதற்பொருளோடு சேர்க்கப்பெற்று வரும்.

5. மேற்படி வட்டித்தொகை வேறு எம்முறையிலும் செலவு செய்யப்பெறமாட்டாது. வட்டி வரவிற்கு ஏற்பப் பரிசுத் தொகையோ பரிசுகளின் எண்ணிக்கையோ குறைக்கவும், கூட்டவும் பெறும்.

6. இம்முதற்பொருள் நம் பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்துவரும். இத்தொகை திருப்பியளிக்கப்பெற்றதும் அதிக வட்டி வரக்கூடிய அரசியல் கடன் தாள்களிலோ அல்லது நிலையான முதலீடுகளிலோ முதலீடு செய்யப்பெற்றுவரும்.

மனவாக்குக் காயமுயிர் மன்னியசைப் பானும்
அனமாதி போகமளிப் பானும் — நனவாதி
கூட்டிவிடு வானுமுந்தி கூட்டிடுவா னும்பிறப்பில்
ஆட்டிவிடு வானும் அரன்.

— சிவபோகசாரம்

திருப்பனந்தாள்,
21—8—'72.

(ஒப்பம்:) ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள்.

Registered at Tiruvidaimaruthur Sub-Registrar's Office on 21—8—1972 as No. 36/72 of Book 4, Volume 56, Pages 273 — 275.

## தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி



சாரணர் குழுவினர் (1954)



ஸ்ரீ குருஞானசம்பந்தர் மாணவர்கழகத் தொடக்கவிழா (29—3—1955)
தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்களும்,
திருமுருக. கிருபானந்தவாரியார் அவர்களும் பங்கேற்றல்.

## தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி மாணவர்கள் பங்கேற்று நடித்த



திருவள்ளுவர் நாடகம் (30—8—52)



குமாரகுருபரர் நாடகத்தில் ஒரு காட்சி (5—9—55)

# தருமையாதீனப் பல்கலைக் கல்லூரித் திறப்புவிழா!



10—8—1946 அன்று, சென்னை அறநிலைய அமைச்சர், மாண்புமிகு. கோட்டிரெட்டிகாரு அவர்கள் திறந்துவைத்தல்.



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களுடன்
கல்லூரிப் பேராசிரியர்களும் – திருக்கூட்டத்து அடியவர்களும்
1948



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களுடன்
ஆதீன கல்லூரிப் பேராசிரியர்களும் – மாணவர்களும்
1949

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களுடன் ஆதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர்கள்
1954

மு. கண்ணப்பன்
அறநிலைய அமைச்சர்

தமிழ்நாடு அரசு
தலைமைச் செயலகம்
சென்னை – 9
20—10—1972

பேரன்புடையீர்,

தஞ்சைத் தரணியில் அருள் வளர்க்கும் பணியோடு அருந் தமிழ் வளர்க்கும் பெரும்பணியில் ஈடுபட்டுள்ள தருமை ஆதீனம் கடந்த 25 ஆண்டுகளாக தமிழ்க் கல்லூரி ஒன்றினைச் சிறப்போடு நடாத்தி வருவதையும், அக்கல்லூரியின் வெள்ளிவிழா நிகழ்ச்சியில் தமிழக முதல்வர், டாக்டர், கலைஞர் அவர்களும் பங்கேற்க இருப்பதையும் அறிந்து மெத்தவும் மகிழ்ச்சியடைகிறேன். தருமை ஆதீனத்தின் தமிழ் வளர்க்கும் பெரும்பணி பல்கிப் பெருகவும், விழா சிறப்புற அமையவும் நான் என் நல்வாழ்த்துக்களை இணைத்துக்கொள்வதில் பெருமையடைகிறேன்.



உ

திருக்கயிலாய பரம்பரைத்
தருமையாதீனத்துக்குச் சொந்தமான

# வேளூர்
# ஸ்ரீ வைத்தியநாதசுவாமி
# தேவஸ்தானம்

## வைத்தீசுவரன்கோயில்.

உயிர் நோயாகிய பிறவியும், உடல் நோயாகிய பிணிகளும் நீங்க, இறைவனே வைத்திய நாதனாக – இறைவி தையல்நாயகியாக – குமரன் – முத்துக்குமாரனாக எழுந்தருளியுள்ள தலம் புள்ளிருக்கு வேளூர். புள்: (சடாயு) இருக்கு (வேதம்) வேள் (முருகன்) மூவரும் வழிபட்ட தலம். தற்காலத்தே வைத்தீசுவரன்கோயில் என்ற பெயருடன் விளங்கி வரும் இத் தலம், தருமையாதீனத்தின் இருபத்தேழு திருக்கோயில்களுள் முதன்மையாக விளங்குவது. மூர்த்தி, தலம், தீர்த்தம் இம் மூன்றாலும் சிறப்புடையது இத் தலம். பாரத நாட்டின் பழம் பெரும் பிரார்த்தனைத் தலங்களுள் ஒன்றாக உள்ளது.

நவக்கிரகத் தலங்களுள் இது அங்காரகன் எனப்படும் செவ்வாய்த் தலம். இங்கு வந்து வழிபடுவோர் நவக்கிரக தோஷம் நீங்கப்பெற்று, தீராப் பிணிகள் எல்லாம் தீரப்பெறுவது கண்கூடு.

மாதக் கிருத்திகைதோறும் ஸ்ரீ செல்வ முத்துக்குமரர் புறப்பாடும், சந்தனாபிஷேகமும் தலத்திற்குச் சிறப்பு.

பாடல் பெற்ற தலம்; குமரகுருபரர் அருணகிரிநாதர் பாமாலைகள் பெற்ற தலம். 'தீரா நோய் தீர்த்தருள வல்லான்' என்று அப்பரடிகள் பெருமானைப் போற்றியுள்ளார்.

வாரீர்; வாரீர்; வைத்தியநாதப் பெருமான் திருவருள் பெறுவதற்குச் சேரவாரீர்:

குறிப்பு: சிதம்பரம் – தஞ்சை புகைவண்டிப் பாதையில் உள்ளது இத்திருத்தலம்.

உ



திருக்கயிலாய பரம்பரைத்

தருமையாதீனத்திற்குச் சொந்தமான

# ஸ்ரீ சட்டைநாத சுவாமி

# தேவஸ்தானம்

## சீ கா ழி

— :: —

தஞ்சை மாவட்டம் சீகாழி வட்டத் தலைநகராக விளங்கும் இத் திருத்தலம் தருமையாதீனத்தின் இருபத்தேழு திருக்கோயில்களுள் ஒன்று.

சமயாசாரியர்களில் முதல்வராகிய திருஞானசம்பந்தர் அவதாரத் தலம் இது. இங்குள்ள பிரமதீர்த்தக் கரையில்தான் திருஞானசம்பந்தர் 'தோடுடைய செவியன்' என்று உலகம் உய்யத் திருப்பதிகம் பாடத் தொடங்கினர்.

இறைவன் பிரமபுரீசனுக, இறைவி திருநிலை நாயகியாக எழுந்தருளியுள்ள இத்தலம் மூர்த்திதலத் தீர்த்தச் சிறப்பு மிக்க முதன்மையும் உடையது.

தோணிபுரத்தில் உமாமகேசுவரனுக பெரியநாயகர் பெரிய நாயகியுடன் வீற்றிருக்கின்றூர். மகாவிஷ்ணுவின் தோலைச் சட்டையாகப் போர்த்திய சட்டை நாதர் திருமேனி சிறப்புடையது.

பிரமதீர்த்தம் முதலிய 22 தீர்த்தங்கள் உள்ளன. மூவர் தேவாரப் பதிகங்களைப் பெற்ற பெருமையுடையது இத்தலம். திருஞானசம்பந்தர் மட்டுமே அறுபத்தேழு பதிகங்கள் அருளியுள்ளார். புராணச் சிறப்பும் உடையது.

பிராகாரங்களில் உள்ள நாற்பத்தேழு கல்வெட்டுக்களால் அறியப் பெறும் வரலாற்று நலங்கள் பல. வரலாற்று முக்கியத்துவமும் வாய்ந்தது. திருமுலைப் பால் உற்சவம் முதலிய சிறப்பு விழாக்களும் உண்டு.

சேரவாரீர்! சீகாழியை வழிபட்டு, சட்டைநாதர் திருவடி பரவுவீர்!! நலம்பல பெறுவீர்!!!

உ

திருக்கயிலாய பரம்பரைத்
தருமையாதீனத்துக்குச் சொந்தமான

# ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி தேவஸ்தானம்

## திருக்கடவூர்



தஞ்சைமாவட்டம் மாயூரம் வட்டத்தில் உள்ள திருக்கடவூர் மாயூரம் – தரங்கம்பாடி புகைவண்டிப் பாதையில் உள்ளது. தருமை யாதீனத்தின் இருபத்தேழு திருக்கோயில் களுள் சிறப்புமிக்க ஒன்று.

இறைவன் அமிர்தகடேசுவரனுக, இறைவி அபிராமியாக வீற்றிருந்து அருள் பாலிக்கின்ருர்கள். அபிராமிபட்டர், அபிராமி அந்தாதி பாடித் தொழுத சிறப் புடையது. மூவர் பாடல் பெற்ற முதன்மை உடையது. மார்க்கண்டேயர் வழிபட்டு, இயமனை வென்ற தலம். பெருமானின் அட்டவீரட்டத் தலங்களுள் ஒன்ருக விளங்குவது. கால சங்காரக் கடவுளாக – கால காலனுகப் பெருமான் விளங்கித் தன்னை இங்கே வந்து வழிபடுவோர்க்கு நீடிய வாழ்நாளும், செல்வமும் வழங்குகின்ருன். ஆண்டில் பதினெரு முறை திருமஞ்சனம் இந்தப் பெருமானுக்கு. ஆண்டிற்கு ஒருமுறைதான் திருவீதிக்கு எழுந்தருள்வார். சித்திரைப் பெரு விழாவில் ஆரும் நாளில் நடக்கும் காலசங்காரம் புகழ் பெற்ற திருவிழா. நாடெங் கிலுமிருந்து திரளான மக்கள் கண்டு இருமைப் பயன்களும் எய்துவர்.

ஐம்பத்துநான்கு கல்வெட்டுக்கள் பிராகாரம், கருப்பக் கிரகச் சுவர்களில் உள்ளன. சோழர்கால ஆட்சி பற்றிய பல்வேறு செய்திகள் இக்கல்வெட்டுக்களி லின்று விளக்கம் அடைகின்றன. இவ்வகையில் வரலாற்று முக்கியத்துவமும் பெற்றுள்ளது. இன்றும் அபிராமி அந்தாதி ஒதி இருமைப்பயன்கள் எய்துவோர் பலர். இங்குவந்து சஷ்டியப்த பூர்த்தி செய்துகொண்டு மரணபயம் நீங்கப் பெறுதல் கண்கூடான உண்மை.

காலகாலன் கழலடி பரவிட வாரீர்,
அபிராமியம்மை அருள்மணம் பெற வாரீர்!

உ

திருக்கயிலாய பரம்பரைத்
தருமையாதீனத்திற்குச்
சொந்தமான

# ஸ்ரீ
# கம்பகரேசுவர சுவாமி
# தேவஸ்தானம்

## திருபுவனம்



கும்பகோணத்திற்குக் கிழக்கே, சிதம்பரம்–கும்பகோணம் சாலையில், சோழர் திருப்பணிச் சிறப்புடன் விளங்குவது இத் திருக்கோயில். தஞ்சை, தாராசுரம், கங்கை கொண்ட சோழபுரம் முதலிய சோழர் கற்றளிகளை ஒட்டிய பாங்கில் விளங்கும் வரலாற்றுப் புகழ் மிக்கது திருபுவனம் திருக்கோயில். தருமையாதீன 27 திருக்கோயில்களுள் ஒன்றாக விளங்குவது.

இறைவன் கம்பகரேசுவரனாக – நடுக்கம் தீர்த்த நாயகனாக; இறைவி – அறம் வளர்த்த நாயகியாக விளங்கும் திருத்தலம். இரணியனுடைய உதிரத்தை உண்ட நரசிம்மரது மதிமயக்கத்தை சரபப் பறவை வடிவம் கொண்டு இறைவன் மாற்றிய கோலமே ஸ்ரீ சரபமூர்த்தி. இவரை வழிபட்டு இருமைப் பயன்களையும் எய்துவோர் பலராவர்.

முதலாம் இராசராசனின் வழிவந்த மூன்றாம் குலோத்துங்கன் கட்டிய திருக்கோயில் இது. ஏழு கல்வெட்டுக்களும் எண்ணற்ற சிற்பங்களும் உள்ளன. கந்தர்வ கன்னியர், பரதநாட்டியக் கோலங்கள், இராமாயணச் சிற்பங்கள் முதலியன குறிப்பிடத் தக்க சிற்பங்களாக விளங்குகின்றன.

வரலாற்றுப் பெருமையும், மூர்த்தி தலப் பெருமையும் உடைய திருபுவனம் திருத்தலத்திற்கு வருக! இதன் கலையழகிலும், சிற்ப எழிலிலும் ஈடுபட்டு இன்புறுக! என்று அருள் மணக்கும் இத்திருத்தலம் அன்பர்களை அழைக்கிறது.

உ

திருக்கயிலாய பரம்பரைத்
தருமையாதீனத்திற்குச்
சொந்தமான

# ஸ்ரீ
# பஞ்சநதீசுவரசுவாமி
# தேவஸ்தானம்
## திருவையாறு.



தென் கயிலாயக் காட்சியைத் திருநாவுக்கரசு சுவாமிகட்குக் காட்டியருளிய திருத்தலம். இவ்வருட் பெருந்தலம். பழைமையும், திருவருள் நலமும் உடைய உயர் தலம். மூர்த்தி தலத் தீர்த்தச் சிறப்புடைய தலம். தட்சண கைலாயம், உத்தர கைலாயம், தண்டபாணிக் கோயில் முதலிய சுற்றுக் கோயில்களாக விளங்குகின்றன.

இறைவன் ஐயாறப்பனாக, பஞ்சநதீசுவரனாக, இறைவி அறம் வளர்த்த நாயகியாக எழுந்தருளியுள்ளார்கள். தெற்குக் கோபுரத்தை யடுத்து வடபால் ஆட்கொண்டார் சந்நிதியில் எப்போதும் குங்கிலியம் புகைந்துகொண்டேயிருக்கும்; வீர வடிவம்; எமனைச் சங்காரம் செய்த இவர் வழிபடுவோர் துன்பம் துடைத்து நல்லருள் வழங்குகின்றார்.

தல விருட்சம் வில்வமாக உள்ள இத் தலத்தில் தன்னைத் தானே இறைவன் பூசித்த வரலாறும், திருநந்தி தேவர் அவதார வரலாறும் சிறந்தவை.

சித்திரை மாதப் பெருவிழாவில் சப்தஸ்தானம் எனப்படும் 'ஏழூர்த் திருவிழா' மிகச் சிறப்புடையதாகும். மாதந்தோறும் அமாவாசை விஷு புண்ணிய காலங்களில் ஐயாறப்பர் திருவீதிக்கெழுந்தருளித் தீர்த்தம் கொடுத்தருள்வார்.

தருமையாதீனத்தின் 27 திருக்கோயில்களுள் ஒன்றாகத் திகழ்கின்றது இது.

எழுபதிற்கு மேற்பட்ட சோழர்காலக் கல்வெட்டுக்கள் உள்ள இத்திருக்கோயில் வரலாற்றுக் கருவூலம். தெய்வீகப் பாசறை. நால்வர் பாடலும் பெற்ற நற்றமிழ்த் தலம். வழிபட வாரீர்; இருமை பயனும் எய்துவீர்.



உ

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான

# ஸ்ரீ அருணஜடேசுவரசுவாமி தேவஸ்தானம்

## திருப்பனந்தாள்

கும்பகோணத்திலிருந்து வடகிழக்கில் பதினெறு கல் தொலைவில் அணைக்கரைச் சாலையில் உள்ளது இத்தலம். தருமையாதீனத்தின் 27 திருக்கோயில்களுள் இதுவும் ஒன்று.

தலவிருட்சம் பனையாதலாலும், பனையடியில் பெருமான் வீற்றிருப்பதாலும் திருப்பனந்தாள் என்று பெயர் பெற்றது.

இறைவன் அருணஜடேஸ்வரனுக — செஞ்சடையப்பனுக, இறைவி பெரிய நாயகியாக அருள் வழங்குகின்றூர்கள். நாகதீர்த்தம் திருக்கோயிலுக்குள் இருக்கின்றது. பாடல் பெற்ற தலம். புராணச் சிறப்பும் உடையது.

தாடகைக்காகப் பெருமான் தலைவணங்கி மாலையை ஏற்றுக் கொண்டு அன்பின் பெருமையை வையகம் உணரச் செய்தார். குங்கிலியக் கலயர் தம் கழுத்தில் கயிறு கட்டிக்கொண்டு வளைந்த பெருமானை நிமிர்த்தி அற்புதம் விளைத்த அருந்தலம்.

ஸ்ரீ குமரகுருபர அடிகள் நிறுவிய ஸ்ரீ காசிமடம் திருப்பனந்தாளில் உள்ளது.

திருப்பனந்தாள், அடியவர் அன்பின் பெருமையை உலகம் உணரக் காட்டிய உயர்தலம்.

'வாரீர் பனசைப் பெருந்தலத்திற்கு, வந்து பாரீர் பெருமான் திருக்கோலத்தை' என்று இத் திருக்கோயில் அன்புலகை அழைக்கின்றது.

உ

திருக்கயிலாய பரம்பரைத்
தருமையாதீனத்திற்குச் சொந்தமான

# ஸ்ரீ தியாகராஜ சுவாமி
# தேவஸ்தானம்

## திருக்குவளை

---

சப்தவிடங்கத் தலங்களுள் ஒன்ருகிய திருக்குவளை, திருக்கோளிலி என்ற பழம் பெயருடன் விளங்கிய திருத்தலம். திருவாரூர் – அறந்தாங்கி புகைவண்டிப் பாதையில் திருநெல்லிக்காவலுக்குக் கிழக்கே உள்ளது. தருமையாதீனத் திருக்கோயில்களுள் இதுவும் ஒன்று.

பிரமபுரீசுவரர், வண்டமர் பூங்குழலாள் என்ற திருப்பெயர்களுடன் இறைவனும் இறைவியும் வீற்றிருக்கின்ருர்கள்.

முசுகுந்தன் தேவேந்திரனிடம் பெற்றுக்கொண்டு வந்து பிரதிட்டை செய்த தியாகராசப் பெருமான் சிறப்பு மூர்த்தியாக எழுந்தருளியுள்ளார்.

மூவர் தேவாரப் பதிகங்களும் பெற்ற பெருஞ்சிறப்புடையது. சுந்தரமூர்த்தி நாயனர் குண்டையூர் கிழார் தந்த நெல்மலையைத் திருவாரூர் பரவையார் திருமாளிகைக்கு எடுத்துச் செல்ல ஆள்வேண்டிப் பாடிடலும், அவ்வாறே பூதங்கள் நெல்மலையைக் கொண்டு சென்று சேர்த்த அற்புதம் இத்தலத்தேயே நிகழ்ந்தது. ஒவ்வோராண்டிலும் மாசித் திங்களில் சுந்தரர்க்குப் பூதங்கள் நெல்கொண்டு செல்லும் திருவிழா எல்லோரும் பார்க்க வேண்டிய பெருஞ்சிறப்புடையது.

பத்தொன்பது கல்வெட்டுக்கள் உள்ளன. சோழ, பாண்டியர்களது வரலாற்றுக் குறிப்புக்களை உடையன இவை. வரலாற்றுப் பேழையாக – தெய்விகக் கருவூலமாக – உள்ள இத்திருக்கோயிலுக்கு வந்து இருமைப் பயன்களும் எய்துக என்று அன்புடன் அழைக்கின்ருேம்.



உ

சிவமயம்.

திருக்கயிலாய பரம்பரைத்

தருமையாதீனத்திற்குச்

சொந்தமான

# ஸ்ரீ

# வீரட்டேசுவரசுவாமி

# தேவஸ்தானம்

## குறுக்கை

அட்டவீரட்டத் தலங்களுள் ஒன்ருகிய இத்தலத்தில்தான் மன்மதன் தகனம் செய்யப்பெற்ருன். தக்கயாகத்தை அழிக்கத்தோன்றிய வீரபத்திர தேவர் சினம் நீங்கப்பெற்று இத்தலத்தில் கடுக்காய் மர நிழலில் எழுந்தருளி யோகுசெய்து யோகீசுவரர் ஆனர் என்பது புராண வரலாறு.

இறைவன் திருநாமம் : **வீரட்டேசுவரர்** இறைவி திருநாமம் : **ஞானம்பிகை**

எழுந்தருளும் மூர்த்தியாகிய காமதகனமூர்த்தியின் திருநாமம் : யோகீசுவரர். இறைவி பூரணி. மன்மதன் – இரதி உருவங்களும் உடன் உள்ளன.

இரதிதேவி, தீர்க்கவாகு முனிவர், ஜெயத்துவசன், அகத்தியர் முதலிய பல பெருமக்கள் வழிபட்டு உய்திபெற்ற திருத்தலம் இது.

திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்த இரு திருநேரிசைப் பதிகங்களும், மகாவித்துவான், மீனுட்சிசுந்தரம் பிள்ளை பாடிய தலபுராணம் ஒன்றும் இத் தலத்திற்கு உண்டு.

சூலதீர்த்தம், ஞானதீர்த்தம் என இரு சிறப்பு வாய்ந்த தீர்த்தங்கள் உள்ளன.

கற்பக்கிரகத்தின் வடபால் அமைந்திருக்கும் காமதகனச் சிற்பம் மிக நேர்த்திவாய்ந்தது.

இத்தலம் மாயூரம் மணல்மேடு பேருந்துப் பாதையில் கொண்டல் மதகடிக்குத் தென்மேற்கே $1\frac{1}{2}$ கல் தொலைவில் உள்ளது.

**வீரட்டேசன் திருவடி வணங்க விரைந்து வாரீர் !**

உ

சிவமயம்.

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச்
சொந்தமான

# ஸ்ரீ வீரட்டேசுவரசுவாமி தேவஸ்தானம்

## திருப்பறியலூர்

—::—

அட்டவீரட்டத் தலங்களுள் ஒன்ருகிய இத்தலம் தற்காலத்தில் பரசலூர் என வழங்கப்படுகிறது. சிவ நிந்தனை செய்த தக்கனை இறைவன் திருவுள்ளப்படி வீரபத்திர தேவர் அழித்த சிறப்புமிக்கது இத்தலம். தட்சன் யாகம் செய்த இடமாதலின் தட்சபுரி எனவும் வழங்கப்படுகிறது.

இறைவன் திருநாமம் : **வீரட்டேசுவரர்**

இறைவி திருநாமம் : **இளங்கொம்பனையாள்**

இராம சரிதத்தை வடமொழியில் பாடிய வால்மீகி முனிவர், புற்கலன் என்ற முன்னைய பெயரோடு இத்தலத்தில் கடுந்தவம் இயற்றிப் பேரருள் பெற்றுர் என்பது புராண வரலாறு.

ஆணவத்தால் சிவ நிந்தனை செய்வார் பெறும் தண்டனையை விளக்கும் வரலாற்றுச் சிறப்புடைய இத்தலம் மாயூரம் – தரங்கம்பாடிப் புகைவண்டிப் பாதையில் செம்பொன்னுர்கோயில் நிலையத்திற்குத் தென்மேற்கில் $1\frac{1}{4}$ கல் தொலைவில் உள்ளது.

திருஞானசம்பந்தர் அருளிய தேவாரப் பதிகம் ஒன்றும் இத்தலத்திற்கு உள்ளது. திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த பின்வேலப்ப தேசிக சுவாமிகள் பாடிய இத்தல புராணம் ‘திருப்பறியலூர்ப் புராணம்’ என வழங்கப்படுகிறது.

**வீரட்டேசுரர் விரைகழல் வணங்கி,**
**வெற்றிகள் பெற்றிட விரைந்து வாரீர் !**

உ
சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச்
சொந்தமான

# ஸ்ரீ சிவலோகத் தியாகராஜசுவாமி தேவஸ்தானம்

## ஆச்சாள்புரம்



சைவசமய குரவர்கள் நால்வருள் முதலாமவராகிய திருஞான சம்பந்தப்பெருமான், தம் திருமணநாளில் துணைவியாரோடும், அன்பர் களாகிய திருநீலகண்டயாழ்ப்பாணர், முருகநாயனர், திருநீலநக்க நாயனர், மற்றும் திருமணம் காணவந்திருந்த அடியார்களோடும் சிவசோதியில் கலந்தருளிய பெருஞ்சிறப்புடையது இத்தலம்.

இவ்வூர்க்கு நல்லூர், பெருமண நல்லூர் என வேறு பெயர்களும் வழங்கப்படுகின்றன.

இறைவன் திருநாமம் : **சிவலோகத் தியாகராசர்.**
இறைவி திருநாமம் : **திருவெண்ணீற்றுமையம்மை.**

திருஞானசம்பந்தர் அருளிய தேவாரப் பதிகங்களும், கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் எழுதிய தலபுராணமும், மகாவித்துவான். மீனட்சிசுந்தரம்பிள்ளை அருளிய திருவெண்ணீற்றுமையம்மை பிள்ளைத் தமிழும் இத்தலத்தில் எழுந்த இலக்கியங்களாகும்.

தீர்த்தங்கள் பல உண்டு. பஞ்சாக்கர தீர்த்தம் சிறப்புமிக்கது. தலவிருட்சம் மா. வசிட்டமுனிவர், திருமால், காகமுனிவர், கங்கை முதலியோர் வழிபட்டு உய்திபெற்ற சிறப்பு மிக்கது.

வைகாசி மூலத்திருநாளில் திருஞானசம்பந்தர் திருமணமும், முத்திப்பேறும் பெருவிழாவாகக் கொண்டாடப்படும்.

இவ்வரிய சிறப்புடைய தலம் தஞ்சைமாவட்டம் கொள்ளிடம் புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கே மூன்று கல் தொலைவில் அமைந்திருக்கிறது.

**சிவலோகத் தியாகராசர் திருவருள்பெற வாரீர்! வாரீர்!!**

# வள்ளுவரும் - சாணக்கியரும்

மகாவித்துவான், திரு. ச. தண்டபாணி தேசிகர்,

அண்ணமலைப் பல்கலைக்கழகம்.

[தெய்வப்புலமைத் திருவள்ளுவர் காலத்தை ஒட்டி உலகின் பல்வேறு பகுதிகளிலும் எழுந்த பொருளியல் நூல்கள் பலவற்றுள்ளும் வடமொழிவாணராகிய கௌடில்யர் என்னும் சாணக்கியரால் இயற்றப் பெற்ற 'அர்த்த சாத்திரம்' என்ற நூற்கருத்தை, வள்ளுவரின் பொருளியல் நோக்கோடு ஒப்பிட்டு ஒற்றுமை, வேற்றுமை காணமுயல்வது இக்கட்டு ரையின் எண்ணமாகிறது. ஆசிரியர் இதன் கண், மக்கள் வாழ்வின் அடித்தளமாகிய பொருள் என்பது யாது என விளக்கி, அதனை விளக்கவந்த நூல்களுள் அர்த்த சாத்திரம் மன்னன் வெற்றியை மட்டுமே நோக்கி எழ, வள்ளுவமோ அறம்நோக்கி எழுந்தது என மதிப்பிட்டு உரைக்கிறார். அடுத்து இவ்விரு ஆசிரியர்களின் சுருங்கிய வரலாறு பேசி, இவ்விரு ஆசிரியர்களால் வகுக்கப் பெற்ற நூல்களின் பொது அமைப்பின் நுண்மை காட்டி, இவற்றிற்குத் தனிச் சிறப்பினைத்தரும் நூல் கருத்துக்கள் சிலவற்றை மட்டும் சுட்டி, நால் வருண வேறுபாடுகள் பற்றிய இவற்றின் எண்ணங்களையும், குற்றத்திற்குரிய தண்டனைகள் இவை என்பது பற்றியும் விளக்கிச் சுற்றுச் சூழலுக்குத்தக இவ்விரு நூல்களுள் அடிப்படையிலும் சொல்லும் முறையிலும் எங்ஙனம் மாறுபடுகின்றன என்பவற்றையும் அழகுற விளக்கியுள்ளார்.]

### அடித்தளம்

''பொருளிலார்க்கு இவ்வுலகமில்லை''

''பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்லதில்லை பொருள்''

''கைத்துடையான் காற்கீழ் ஒதுங்கும்
கடன்ஞாலம்
பித்துடைய அல்ல பிற''

''பணம் பந்தியிலே குலம் குப்பையிலே''

என்ற பன்னூறு பாடல்களும், பழமொழி களும் பொருளினது இன்றியமையாமையை எடுத்தியம்புவன. கைப்புண்ணுக்குக் கண்ணடியா வேண்டும்; காசில்லாமல் மனிதன் படுகின்ற துன்பங்கள் எத்தனை?

''பொருளிலே யுலகம் இருத்தலால்'' ''முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியும்'' என்பன முற்றத்துறந்த அறிஞர் களின் அறிவுரைகள்.

ஆகவே, பொருள் உலகவாழ்விற்கு மிக மிக இன்றியமையாதது. அப்பொருள் நிலம்–புலம், பொன்–மணி, நெல்–கோதுமை எனப் பலவாம். அவற்றுள் பொன்னும் மணியும் முத்தும் வயிரமும் நேரே பொருட் டன்மையை யுடையன. நெல் – கோதுமை – பயறு உளுந்து முதலாயின மனிதனுடைய உழைப்பால் உண்டாகி, உணவாகிய இன்றியமையாத் தேவையாய்ப் பொருட் டன்மையை அடைவன. நிலம் – புலம்

வீடுவாசல் முதலாயின, என்றும் விளைவாகப் பயன் படுவதாகிய முதலீடு செய்யப்பெற்ற நிலைத்தமுதலாவன. இவ்வகையான எல்லா முதலும், பொருளெனப் பொதுப் பெயரை ஏற்று மக்களின் தேவைக்கு உதவுவன. ஆகவே நம் தேவையின் இன்றியமையாமை, விருப்பம் - அவற்றின் மிகுதி இவைகளைப் பொறுத்தே பொருள் பொருளாக எண்ணப் பெற்று, ஏற்றத்தாழ்வான மதிப்புகளைப் பெற்று விளங்குகின்றன. பொருள்களைப் பெற மனிதன் முயலும் முயற்சி அல்லது உழைப்பின் ஏற்றத்தாழ்வும் பொருள்களின் மிகுதியும் குறைவும் மதிப்பிற்குக் காரண மாகலாம். எங்ஙனமாயினும் பொருள் சமுதாயத்தில் நிலைத்த மதிப்பைப் பெற் றுள்ளது. மதிப்பை வழங்குகிறது. எல்லார்க்கும் இன்றியமையாததாகிறது.

பொருளின் வளர்ச்சியும் பாதுகாப்பும் அரசியலாலாவது ஆதலின் பொருள் அரசை ஒட்டியே ஆராயத்தக்கதாகிறது. நாண யங்கள் - மணி பொன் இவற்றின் மதிப்பு அரசியல் சதுரங்கத்தின் பகடைக்காய் களாக மேலுங் கீழும் உருள்வதை இன்றைய உலக அரங்கிலும் காண்கின்றோம் அல்லவா? ஆனாலும் பொருள் பொருளாக மதிக்கப்பெறுவது பொதுமக்களின் உழைப் பின் பயனை ஒட்டியே ஆதலால் பொருள் அரசுக்குரியதாக வளர்ந்தாலும் வாழ்ந் தாலும் பொதுமக்களாலேயே பயன் கொள்ளப்பெறுகிறது. ஆகவே அது இரு சாரார்க்கும், அதாவது ஆளுநர்க்கும் - ஆளப்படுநர்க்கும் உரியதாகின்றது.

அரசும் - நாடும் உயிரும் உடலும் போல் வன. வளர்ச்சியும் - தேய்வும் இரண்டற்கும் இணைந்தேதான் இயங்கும். ஆதலால் பொருளியலை அரசியலில் இணைத்து இயம்பு கின்றன நூல்கள்.

### பொருணூல்கள்

பொருளை ஆக்குதல் -அளித்தல் - அழித் துப் பயன்கோடல் இவற்றை யறிவிக்கும் நூல்களே பொருள் நூல்கள்.

தமிழில் பொருளியலை வகுத்தும் தொகுத்தும் முதற்கண் உரைத்த பெருமை வள்ளுவரைச் சாரும். தொல்காப்பியம் பொருள்வயிற் பிரிவிலே வைத்து உழைப் பின் இன்றியமையாமையையும்-தன்னுழைப் பால் வந்த ஊதியத்தைக்கொண்டே மனிதன் வாழவேண்டும் என்பதையும் சிறிது உணர்த்துமாயினும் தேடும் முறைகளையும் காக்கும் முறைகளையும் விரித்து உரைக்க வில்லை.. ஆதலால் முதன்முதல் வகுத்த பெருமை வள்ளுவத்திற்கே யுரியது.

வடமொழியில், முதன் முதலாகப் பொருளியல்பைப் புகன்ற பெரியோர்கள் வியாழனும் வெள்ளியுமாகிய இருவருமே. வியாழன் வகுத்தநூல் 'பார்ஹஸ்பத்தியம்'. வெள்ளியால் வகுக்கப் பெற்றது 'ஔசனஸம்'. மற்றுள்ள நூல்கள் அனைத் தும் இவைகளின் சுருக்கமும் பெருக்கமும் விளக்கமுமாக அமைந்தனவே எனலாம். அவருள் நாம் சாணக்கியரையும்-வள்ளுவரை யும் இணைத்து எண்ணுகிறோம்.

### பொருளாக்கத்தின் அடிப்படை

அரசன், தன்னிலத்தைப் பகைவர் கவராமற் பாதுகாப்பதாலும், பிறர் நாட்டைக் கவர்ந்து பரப்பைப் பெருக்குவ தாலுமே பொருளைப் பெருக்கலாம் என்பர் கௌடலியராகிய சாணக்கியர். ஆகவே வடமொழிப் பொருள் நூல்கள் நாடுபிடித்தல் என்ற பேராசையை அடிப்படையாகக் கொண்டு, அதற்கு உறுதுணையாகத் தன் னாட்டிற்குப் பகைவரால் நலிவுவராமற் காப்பது என்ற அடிப்படையில் உரு வாகிறது.

வள்ளுவமோ, நாடு வழிவழியாகத் தன்னுட்சியில் வருவதால் அதற்கு நலிவு வருதல் கூடாது என்ற-தன்னுட்டைக்காத்தல் என்ற அடிப்படையில் பொருளியலை விரிக்கிறது. அங்ஙனம் தன்னுட்டைக் காக்க முற்படுகிற போது பகைவன் தோற்பானுயின் அவன் நாட்டையும், அந்நாட்டு மக்கள் மனம் புண் படாத வண்ணம் காத்தலையும் உணர்த்துகிறது.

ஆனல்,

"பொதுச் சொற்பொருது
இடஞ்சிறிதென்னும் ஊக்கந்துரப்ப
.........................................
ஒடுங்கா வுள்ளத்துக் கடந்தடு தானையை"

என்று பேராசை காரணமாக – நாடுபிடிக்கும் ஆசையுடன் போர்செய்க; வெல்க; எனப் புறநானூறு புகலவில்லையா? எனக் கேட்கலாம். புறம் வள்ளுவத்திற்குப் பிந்திய நூல். அதன்காலத்தில் எத்தனையோ வடமொழிக் கொள்கைகள் விரவிவிட்டன. அதனுலெழுந்த ஊக்கவுரையும், அணிபற்றி எழுந்த அழகுரையுமாகலாம்.

இங்ஙனம், பலநூல்களையும் ஒத்தெண்ணும்போது கௌடலீயம் நாடுபிடிக்கும் ஆசையை அடிப்படையாகக்கொண்டும், வள்ளுவம் படையெடுத்து வந்தால் தன்னுட்டைப் பாதுகாத்துக்கொள் என்ற தன்னுடுகாத்தலை அடிப்படையாகக் கொண்டும் உருவாதலால் இருநூல்களும் அடிப்படையிலேயே வேறுபட்டவை என்பது விளங்கும்.

வள்ளுவர்,

"வலியார்க்கு மாறேற்றல் ஓம்புக ஓம்பா
மெலியார்மேல் மேக பகை"

என்கின்ருரே. இதனுல் மெலியனுயிருந்தால் பகைகொள் என்பதுதானே கருத்தாகிறது. இது நாடுபிடிக்கும் ஆசையாகாதா எனலாம். வலியான் பகைகொள்வனுயின் அவனேடு எதிர்த்து நின்று உள்ளதையும் இழந்துவிடாதே. அவன் உன்னின் மெலியனுய்ப் பகைகொண்டு உன்மேல்வரின் நீயும் பகையை மேவுக என்பதுதான் கருத்தாமேயன்றி அவன் நாட்டைப் பிடுங்கிக்கொள் என்பதன்று. ஆகவே வள்ளுவம் காவல் முறையிலேயே போர்தொடுத்தலை யறிவிப்பது எனற் கிடையூறின்று.

## இரு நூற்கோட்டையையும் எழுப்பியவர்கள்

வள்ளுவத்தை எழுப்பியவர் வள்ளுவர். கௌடலீயத்தை எழுப்பியவர் சாணக்கியர்.

வள்ளுவர் திருமயிலையிலோ, தக்கண மதுரையிலோ பிறந்தவர்என்பதை வள்ளுவமாலையும் வரலாறும் தெரிவிக்கின்றன. எங்ஙனமாயினும் தமிழகத்தில் தோன்றிய தமிழர் அவர்.

கௌடலீயர் சணக நாட்டில் தோன்றியதால் சாணக்கியர் எனப்பட்டார் என்று காமந்தகர் செய்த 'நீதிசார சயமங்கலம்' என்னும் நூல் சொல்லுகிறது. ஆகவே அவர் வடநாட்டவர்; அந்தணர்; குடல கோத்திரத்திற் பிறந்தவர் என்பது தெரிகிறது.

வள்ளுவர், 2000 ஆண்டுகட்கு முன் வாழ்ந்தவர். தமிழகம் அவரது 2000 ஆண்டு விழாவைக் கொண்டாடி இப்போது இரண்டாண்டுகள் ஆயின. மற்றும் தமிழகத்தில் வள்ளுவரைக் கொண்டு ஆண்டினைக் கணக்கிடும் வழக்கம் நெடுங்காலமாக இருந்து வருகிறது. ஆதலால் இவர் கி. மு. இரண்டு அல்லது மூன்ரும் நூற்ருண்டினர் ஆகலாம்.

கௌடலீயர் குசுமபுரத்தைத்தலை நகராகக் கொண்டு மகதநாட்டை யாண்ட நவநந்தர்களைக் கொன்று மௌரிய சந்திர குப்தனை அரசனுக்கி, அமைச்சராகவும்

இருந்தனர் என்ற செய்தியை முத்ரா ராட்சசம்போன்ற நூல்களும், வரலாற்று நூல்களும் தெரிவிக்கின்றன. ஆகவே இவர் கி. மு. 2ம் நூற்றாண்டினர் என வரலாற்று நூலார் துணிகின்றனர். ஆகவே சற்றேறக் குறைய வள்ளுவர் சாணக்கியர் காலங்கள் அண்மையிலிருக்கலாம்.

கௌடலீயர் காஞ்சிபுரத்திற்றோன்றியவர் என்றுசிலரும், சோழநாட்டினர், சோழிய அந்தணர் எனச்சிலரும் கூறுகின்றனர். இதனால் இவர் தமிழகத்திற்றோன்றிய அந்தணராவார்.

வள்ளுவர், உலகச்சார்பே சார்பாய், உலக ஏட்டில் அநுபவ ஆசான் அறிவித்தவைகளையே துணையாகக்கொண்டு ஆட்சிக்குரியஅளவு பொருள் நூலைப்புகன்ற ஓர் ஏழைத்தொழிலாளி.

கௌடலீயர் அரசகுடும்பத்தைச் சார்ந்து அமைச்சராயும் இருந்து மனு முதல் பாருதந்திபுத்ரர் ஈறான பதின்மர் இயற்றிய பொருணூல்களைக் கற்றுக் கௌடலீயத்தை எழுதிய முனிவர்.

இருவரும் ஒரே நூற்றாண்டினராகக் கருதப்பெறுவதால் எண்ண விளைவுகள் ஒரு வண்ணமாக இருப்பது இயல்பே யானாலும், அவரவர் வாழுகின்ற இடம், சமுதாயப் பிடிப்பு, பிறநூல்களின்படிப்பு இவைகளால் சிறுவேறுபாடுகளும் காணப்பெறும்.

கௌடலீயர் வருணாச்சிரமங்களையும், தொழில்களையும் அடிப்படையாகக் கொண்டு சமுதாய ஏற்றத்தாழ்வை ஏணியாகக் கொண்டு பொருணூற் கோட்டைக்குப் புது மெருகிட்டவர். நவநந்தர்களிடம் வெறுப்பும் சந்திரகுப்தனிடம் விருப்பும் கொண்டவர். அவைகளே அவருடைய பொருளியலுக்கு அடிப்படைக் காரணங்களாக இருக்கலாம்.

வள்ளுவர் உலக சமுதாயமுழுதையும் ஒப்ப நோக்கும் பொதுப் பார்வை கொண்டு, நாட்டின் தட்ப வெப்பநிலைக்கும், தொழிலுக்கும் ஏற்ப அமைந்த அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என்ற தொழிற்பாகுபாட்டினைக்கொண்டு, தனிமனிதன் மேலுண்டான விருப்பு வெறுப்புக்களை நோக்காது தம் நூலை வகுத்தவர். ஆகவே, வாழ்க்கைப் போக்காலும், நூலெழுச்சிக்குரிய காரணங்களாலும் வேறுபட்டவர்களாயினும் நூலமைப்பு முறையில் பெரும்பாலும் ஒன்றுபட்டுள்ளவர்களாதலின் இருவரையும் இணைத்து எண்ணி இன்புறுவோம். தனித்த கருத்துக்களைக் கண்டு பாராட்டுவோம்.

## இருபெருநூல்களின் அமைப்புமுறை

வள்ளுவர் பொருளீட்டுதலும், ஈட்டிய பொருளைக் காத்தலும், அவைகளை யறவழியில் வகுத்து நுகர்தலும் நெறியுடனும் நேர்மையாகவும் இருத்தல் வேண்டும் என்ற சிந்தனைமிகுந்தவர். ஆதலால் அரசன் மட்டுமல்லன்; தனிமகனும் ஒழுங்காகக் குடித்தனம் செய்ய வேண்டும்; காப்பவர்களைக் காக்க வேண்டும்; அடங்கி ஒடுங்கி, அளவோடு கொடுத்து கொண்டு, குறைவிலா மகிழ்ச்சியுடன் அழியாப்புகழோடு அமைதியாக வாழவேண்டும் என்கின்றார்.

வாழ்க்கையில் உவர்ப்பு ஏற்பட்டால், மனநிறைவு ஏற்பட்டால் துறந்து, விட்டதைத் தொடாமல், அரசியல் பொருளாதாரம் தொழில் இவைகளிலிருந்து முற்றும் விலகி, எல்லாவற்றானும் பிறர்க்கே பயன்படும் வகையில் முனிவனாகத் தவவாழ்வை மேற்கொண்டு பிறர்க்கு வழிகாட்டியாக வாழ்தல் வேண்டும் என்ற அடித்தளத்தின் மேல் பொருளாதாரக் கோட்டையை எழுப்புகின்றார்.

அரசு, மக்கட் சமுதாயம் வளரவும் வாழவும் அரண் செய்வது; ஆதலின்

அரசனைப் பொருளாதாரக் கோட்டையின் புரவலனுக்குகிறார். பின்பு சமுதாயம் ஒருவனும் ஒருத்தியுமாக இணைந்து கருத்தொத்துக் காதலித்து, கடிமணமுடித்து, கற்பு நெறியிற்றவருது, தமக்குள் தொழில், குலம், வாழிடம் முதலிய பற்றி நிகழும் ஏற்றத் தாழ்வுகள் தலைகாட்டாமல் வாழ்தல் வேண்டும். இத்தகைய வாழ்க்கையில் இருவரும் ஒருவருக்கொருவர் வாழ்க்கைத் துணையாவர். அவள் என்றுங் காதலியாகவே இருப்பாள்; அவன் என்றும் காதலனாகவே யிருப்பான். தலைநாள் தோன்றிய காதல் வளர்ந்து கொண்டிருக்குமே யன்றித் தேயாது எனத் தன் நீதி யிலக்கியத்திலே பொருளியல்பைப் பிணைத்துப் பேசுகிறார். அதனால், இந்நூல் அறம் - பொருள் - இன்பம் என்ற முப்பாலதாய், முப்பத்தெட்டு – எழுபது – இருபத்தைந்து அதிகாரங்களையுடையதாய், ஆயிரத்து முந்நூற்று முப்பது குறட் பாக்களைக் கொண்டு முடிகிறது.

சாணக்கியர், பொருளியல்பை மட்டும் புகலத் தொடங்கி அரசுக்கின்றியமையாத கல்வி, பெரியோரிணக்கம், அமைச்சர் ஒற்றர் புரோகிதர் வணிகர் வேளாளர் இவர்களின் கூட்டுறவு, தொழிற்றலைவர் செயன்முறை முதலாகத் தற்காப்பு ஈருக இருபத்தொரு அத்தியாயங்களால் அரசுக்கேயுரிய இயல்புகளைக் கூறி முதல் அதிகரணத்தை முடிக்கிறார்.

இரண்டாம் அதிகரணத்தால், நாடு அமைத்தல், தரிசு நிலத்தைப் பயன் படுத்துதல் முதலாகப் பலவேறு தலைவர்களின் கடமைகளீருகத் தொழிற்றலைவர்களின் செயன்முறைகளைக் கூறுகிறார்.

மூன்றும் அதிகரணத்தால், வழக்கு, மணவியல், தாயபாக முதலாகச் சூதாட்டம், பறவை விலங்குப் போட்டிகள் இவையீருக அறநிலையாட்சியை அறிவிக்கிறார்.

நான்காம் அதிகரணத்தால் தொழிலாளிகளால் நாட்டிற்கு நலிவு வராமற் காத்தல் முதலாக நெறிகடந்தாரை நெறியில் நிறுத்துதலீருகப் பதின்மூன்று அத்தியாயங்களால் சிறுபகை களைதலை விளக்குகின்றார்.

ஐந்தாம் அதிகரணத்தால் வஞ்சித் தொறுத்தலின் வகைகளை உணர்த்துகிறார்.

ஆறும் அதிகரணத்தால், அரசு அமைச்சு முதலான அங்கங்கள் வினை செயல்வகை முதலான மண்டலயோனியை யுணர்த்துகிறார்.

ஏழாம் அதிகரணத்தால், நட்பாக்கல் பகையாக்கல் மேற்சேறல் முதலான அறுவகைக் குணங்களை உணர்த்துகின்றார்.

எட்டாம் அதிகரணத்தால் நாட்டுக்கும் தனக்கும் துன்பம் வரும் வழிகளையும் அவற்றைத் தடுக்கும் உபாயங்களையும் விளக்குகிறார்.

ஒன்பதாம் அதிகரணத்தால் போர்மேற் சேறல் வகைகளான காலம் அறிதல், இடனறிதல், வலியறிதல் முதலானவற்றைக் கூறுகின்றார்.

பத்தாம் அதிகரணத்தால், பாசறையமைத்தல் முதலான போர் நிகழ்ச்சிகளையும், பதினொராம் அதிகரணத்தால் உட்பகையுடையார் செயல்களையும் அதனையடக்கும் உபாயங்களையும், பன்னிரண்டாம் அதிகரணத்தால் தூதுவன் செயல் முதலான வலியிலான் செய்கைகளும், பதின்மூன்றும் அதிகரணத்தால் பகைவர் அரணை யழிக்கும் வழிகளும், பதினன்காம் அதிகரணத்தால் பகைவரை யழித்தல் – வஞ்சித்தல் முதலான மந்தணச் செயல்களும், பதினைந்தாம் அதிகரணத்தால் தந்திரவுத்திகளும் முறையே கூறுகின்றார்.

இங்ஙனம், பதினைந்து அதிகரணங்களாலும் பொருள் செயல் வகைக்கு இன்றியமையாத நாடுகாவல், அங்க அமைப்பு, போர் செயல்வகை, தண்டனை வகைகள் முதலியவைகள் விரித்துணர்த்தப் பெறுகின்றன. இவையனைத்தும் 'விதிக்க' 'செய்க', 'ஒழுகுக' என்ற கட்டளைகளாகவே அமைந்து, அங்கங்கே அரசியற் போர்வையில் மறச்செயல்களும் விரவியுள்ளன. அற அமைப்பில் அமைந்தனவாகக் கருத இயலவில்லை.

இந்நூல், முதல் ஐந்து அதிகரணங்கள் ஒருபகுதியாகவும், அடுத்த எட்டு அதிகரணங்கள் ஒருபகுதியாகவும், அடுத்துள்ள பதினான்கு – பதினைந்தாம் அதிகரணங்கள் ஒவ்வொரு பகுதியாகவும் அமைந்துள்ளது. ஆக நான்கு பகுதியாகப் பதினைந்து அதிகரணங்களாக, நூற்றைம்பது அத்தியாயங்களாக, ஒவ்வொரு அத்தியாயங்களுள்ளும் ஒன்றும் பலவுமாகிய பிரகரணங்களையுடையதாக அமைக்கப் பெற்ற நூல். இது உரைநடையும் (சுலோகமும்) செய்யுளும் விரவயாக்கப் பெற்றது. உரைநடையில் சாணக்கியன் தன் முன்னோராகிய பொருநூல் ஆசிரியர்களின் கருத்துக்களைக் கூறி அவைகளை ஒட்டியும் வெட்டியும், மேற்கோள் காட்டியும், எடுத்துக்காட்டுகளாகச் சில நிகழ்ச்சிகளைக் கூறியும் செல்கின்றார். இதில் அரசியல் சூழ்ச்சிகளே தலைதூக்கி நிற்கின்றன. அவைகளே அரசியலறங்களாகக் கருதப்படுகின்றன.

இவ்வண்ணம் பல கோணங்களிலிருந்தும் இந்நூலைப் பார்க்கும்போது அவர்காலச் சூழ்நிலையில் சமுதாயத்திற்கு மிக இன்றியமையாதன என்று கருதியவைகளும், அவைகளை மனிதன் மேற்கொள்ளும்போது என்ன என்ன வகையில் இடையூறுகள் விளையலாம் என்பதையும், அவைகளைத் தடுக்குமுறைகளையும் கருதி யாக்கப் பெற்றவை என்று கருதலாம்.

சமுதாயத்தில் காலமாறக் கருத்தும் மாறும்; தேவை மாறும்; புதிய புதிய பிரச்சினைகள் உருவாகும். அதனால் காலச் சூழலுக்கு ஏற்ப அமைக்கப்பெற்ற நூல்கள், காலப்போக்கில் கந்தல் துணிகளாகி மதிப்பை யிழந்துவிடலாம் என்பதை இந் நூலிற் சில இடங்களிற் காணலாம்.

ஆனாலும் இரண்டாவது சந்திரகுப்தன் காலத்திலும் அதனையடுத்துள்ள நூற்றாண்டுகளிலும் பொருளாதாரநிலை எங்ஙனம் இருந்தது என்ற பழைமையையறிந்து கொள்ள இந் நூல் பெரிதும் பயன்படும்.

### தனி நோக்கு

இவை முழுதும் இணைத்து நயமும் சிறப்பும் காணத்தகும் நூல்களாயினும் விரிவஞ்சிக் குறிப்பிட்ட சில கருத்துக்களை மட்டும் தனித்து நோக்குவோம்.

பொருளியல்பை உணர்த்த வள்ளுவர் எடுத்த எடுப்பிலேயே இறைமாட்சியையமைக்கின்றார். எச்செயலிலும் எக்கணமும் அயர்வின்றிச் செயலாற்றுதலும், அறிவுடைமையும், துணிச்சலுமே மன்னனுக்கு உயிர்த்துடிப்புக்கள். செயலாற்ற அங்கங்களைத் துணைக்கொள்ளுதல் இன்றியமையாதது என்கின்றார்.

சாணக்கியர் அரசனிலக்கணத்தைத் தொகுத்து உணர்த்தாமல் நூல் முழுதும் பரவலாகப் பொறுக்கி இணைத்து எண்ணும்படிச் செய்கிறார். இவர்கள் இருவருமே நாடு. பொருளாதாரத்துறையில் முன்னேறக் கல்வியின் இன்றியமையாமையை வற்புறுத்துகின்றனர். வள்ளுவர் கல்வியை அரசியலில் அமைத்த நோக்கம் அரசன் தானுங் கற்று, குடிமக்களனைவரையும்

கல்வியாளராக்க வேண்டும் என்பதே. சாணக்கியர் பெரும்பாலும் அரசர்க்குரிய படைப் பயிற்சி வேதப் பயிற்சி நீதிநூற் பயிற்சிகளையே தொகுத்துணர்த்துகிருர்.

படிக்கத்தக்க நூல்களைப் பற்றிக் குறிக்கும்போது, 'கற்பவை கசடறக்கற்க' எனப் பொதுவகையில் விடுத்தார் வள்ளுவர். படிக்கத்தக்கவை அவனவனும் மேற்கொண்டுள்ள தொழில்முதலிய தேவைகட் கேற்ப மாறுபடுவன ஆதலின் தாம் அதனை விரித்தலியலாது எனத் தேர்ந்தெடுக்கும் உரிமையை – சுதந்திரத்தைப் படிப்பவனுக்கே வழங்கிவிட்டார். ஆனுலும், கருவிநூற் படிப்பு வேண்டும். அவை எண்ணும் எழுத்தும். ஆதலால், அவையிரண்டும் கண் போன்றவை. அவைகளைக் கொண்டுதான் பிறநூல்களைக் காணுதல் வேண்டும் என்றனர்.

சாணக்கியர் அரசன் கற்கும் வித்தைகள் நான்காம். அவை பொருள் உண்மையை யாராய உதவும் தருக்கமும், வேதங்களும், உழவு பசுக்காவல் வாணிகம் பற்றிக் கூறும் நூல்களும், தண்டநீதியும் ஆம்என்பர். பின்னர் அவரே முதற் பிரகரணம் மூன்றும் அத்தியாயத்துச் சூத்திரருக்குக் கற்றல் தொழிலைக் கூறிற்றிலர். இங்ஙனம் இவருடைய கல்விமுறை வருணச்சிரம வேறுபாடுகளையடியாகக் கொண்டு வகுக்கப்பெறுகின்றன.

வியாழன் கூறுகிருர் தண்டநீதியும் தொழில்நூலுமே படிக்கத்தக்கன என்று. வெள்ளியும், அவர் நூலைப் பின்பற்றி நூலெழுதிய ஆசிரியர்களும் தண்டநீதி மட்டும் போதாது என்பார்கள். இவர்கள் வழிவந்த இவர் நான்குவகையும் பயிலத் தக்கன என்பர். இங்ஙனம் வள்ளுவர்கருத்துச் சமுதாயப் பொதுமையினும், சாணக்கியர்கருத்து வருணவேறுபாட்டினும் உருவாகியதை உணரலாம்.

### வருணவேறுபாடுகள்

வள்ளுவர் அரசர் அந்தணர் வணிகர் வேளாளர் என நால்வகைத் தொழில் மக்களைக் குறிப்பர்.

அந்தணர்கட்கு அந்தண்மை பூண்டு அறநெறி நிற்றலும், வேதம் ஓதுதலும் தொழில் என்றும், அவர்களை யறுதொழிலோர் என்றும் குறிப்பர்.

அரசர்கட்கு ஓதுதலும் ஈதலும், இயற்றலும் காத்தலும், காத்த வகுத்தலும் தொழில் என்பர்.

வணிகர்க்குப் பிறவும் தமபோற் பேணி வாணிகம் செய்தலே தொழில் என்பர்.

வேளாளர்க்கு உழவும், உழப்பின் வந்த ஊதியத்தை உபகாரஞ் செய்தலுமே தொழில் என்பர்.

இங்ஙனம் அந்தணர் முதலிய பாகுபாடு அவ்வப்போது அவனவன் இயற்றும் தொழிலால் அமைவன. அந்தணன் ஆண்டால் அரசன்; உழுதால் உழவன் என்ற அடிப்படையிலே அவர் எழுத்துநடை இயங்கிக்கொண்டிருக்கிறது.

சாணக்கியர், அந்தணர் முதலிய வேறுபாடுகள் படைப்பிலேயே அமைந்தவை. அவரவர்களும் அவரவர்களுக்கு உரிய ஆறு தொழில்களையே செய்யவேண்டும். அதற்குரிய நூல்களையே படிக்கவேண்டும் என்ற அடிப்படையில் முதல் ஐந்து (கௌட- அதி 1 – பிரக 1 – சுலோகம் 2) அதிகரணத்திலும் கல்விப்பயிற்சியைக் கூறிச் செல்கின்ருர்.

### தண்டனையைப் பற்றி

சாணக்கியம், கல்விமுதலியவற்றிற்கும் தண்டம்வேண்டும்; அரசன் தண்டநீதி வல்லனுயின் அடையப்பெருத பொருளையும்

ஒவ்வொருவனும் அடையலாம்; பெற்றன காக்கலாம்; வளர்க்கலாம்; நல்வழியில் அழிக்கலாம். இவ்வளவு நற்பயனும் தண்ட நீதி படிப்பதால் விளைவனவாம் என்பர்.

### கல்வியைப் பற்றி

வள்ளுவம் கல்வி அனைவர்க்கும் வேண்டப்படுவது; படிக்கக்கூடியவைகளை நன்கு படிக்கவேண்டும். படிக்கக்கூடியன எண்ணும் – எழுத்தும் ஆகிய இரண்டுமே. கல்வி மக்களுக்குக் கண் போல்வது. கற்றவர்க்கு எங்கும் சிறப்புண்டு. செல்வன் முன்னே இரவலன் நிற்பதுபோல ஆசிரியன் முன்னே மாணவன் நின்று படித்தல் வேண்டும் என்று சொல்கிறது. கல்வி அரசியலில் இடம்பெற்றமையால் ஆசிரியன் முன்னே அரசன் தன்னை யரசனுகவே எண்ணிப் படிப்பானுயின் கல்வி நிலைபெருது என்பதனை உட்கொண்டு இங்ஙனம் கூறினர்.

சாணக்கியம், முதல் அதிகரணம் முதற் பிரகரணத்தில் படிக்கத் தகுவன மட்டும் கூறிப் பயிலுமுறைகளை விரிக்காமல் நால்வகை நிலைகளுக்கும் உரிய பொதுவான அறங்களைக் கூறுவதுடன் அமைந்தது.

### பல்வகைக் குறிப்புக்கள்

வள்ளுவம் 'வரைவின் மகளிர்' என்ற அதிகாரத்து எவர்க்கும் எந்தச் சூழ்நிலை யிலும் எங்கும் அவர்கள் தொடர்பு கூடாது என்று விதித்தது.

சாணக்கியம், 48-வது அத்தியாயம் 26-வது பிரகரணத்தில்,

"அரசனுடைய கட்டளையைப்பெற்று வந்த ஆடவனைக் கணிகை கூடுதல்வேண்டும்; மறுத்தால் இரண்டாயிரம் பொன் தண்டம்" என்றும் "அரசன் பொறியடக்கமில்லாத தன் பகைவன்பால் உள்ள ஒற்றர்களைக் கொல்லவும் அவர்கள் அறிவையும் ஆற்றலையும் அழிக்கவும் ஏவல் வேண்டும்" என்றும் கூறுகிறது. இதனுல் வரைவின் மகளிர் அரசியற் காரியங்களுக்கு இன்றி யமையாதவர்கள் என்பதை உறுதிப் படுத்துகிறது.

அரசன் அமைச்சர்களை நியமிக்க வேண்டியிருந்தால் அமைச்சராக வருபவர் களைச் சில மாதங்கள் சிறிய பதவிகளில் நியமித்து அவர்களை,

"அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்" (குறள் 501)

என்ற விதியின்படி ஆராய்ந்து நியமித்தல் வேண்டும் என்கிறது வள்ளுவம்.

சாணக்கியமும் அதி. 1–10ம் அத்தி யாயத்தில், அறம் பொருள் இன்பம் உயிரச்சம் ஆகிய நான்கினும் ஆய்ந்த தூயவர்களை அவரவர்களுடைய தூய்மைக் கும் தகுதிக்கும் ஏற்ப அமைச்சராக நியமிக்க வேண்டும் என்கிறது. இது இரு நூல்களி லும் ஒத்த கருத்து. ஆனல் சாணக்கியர் அமைச்சரையாராயத் தன்னையாவது தன் தேவியையாவது கருவியாகக் கொள்ள லாகாது. கொள்ளின் நல்ல அமைச்சன் தூயனுயினும் மனம் மாறித் தீமை செய்வன். ஆதலால் வேறு மக்களைக் கருவியாகக் கொண்டு ஆய்தல்வேண்டும் என்பர்.

### ஒற்றைப்பற்றி

சாணக்கியம் முதல்அமைச்சர்முதல் காட்டுத்தலைவன் ஈருன அலுவலர் அனைவ ரையும் ஒற்றர்களைக் கொண்டு ஆய்தல் வேண்டும் என்கிறது.

வள்ளுவமும்,

"வினைசெயவார் தஞ்சுற்றம் வேண்டாதார் [என்றுங்கு
அனைவரையும் ஆய்வது ஒற்று"

என ஒற்றன் கடமையை உணர்த்துகிறது.

இருநூல்களுமே ஒற்றர்களைப் பாராட்டிச்சிறப்புச் செய்யுமுறையில், ஒருவனுக்குப் பரிசில் வழங்குவதை மற்ற ஒற்றன் அறியா வண்ணம் செய்க. ஒற்றனுக்குத் தெரியாமல் அவன் ஒற்றிவந்த செயல் உறுதியானதா? உண்மையானதா என்பதை ஆய்க என்கின்றன. (குறள் 590. கௌ 1 - அத் 12.)

வள்ளுவம் புலால் உண்பவனுக்கு அருளில்லை; அவன் மனம் நல்லன நினையாது; ஊன் பிறிதோருடம்பின் புண், புலால் உண்ணுதானை எல்லாவுயிர்களும் கைகூப்பித்தொழும் என்றெல்லாம் போற்றுகின்றது.

சாணக்கியம், வீரர்கட்குப் புலால் வழங்குவதை ஒத்துக் கொண்டு, பிறவுயிர்களைக் கொல்லாத மீன் பறவைகளையும், பசு பசுக்கன்று முதலியவைகளையும் கொல்லக் கூடாது எனப் பகுத்துக்காட்டுகிறது. தான் கொன்று தின்னக்கூடாது, ஆனல் பிறர் கொன்று கொடுத்தவைகளை யுண்ணலாம் என்கின்றது.

சாணக்கியமும் வள்ளுவமும் காலம் அறிதல் இடம் அறிதல் வலியறிதல் முதலிய விளக்கங்களைத் தருகின்றன.

சாணக்கியம் தேவை ஏற்பட்டால் ஒற்றர் தூதர் முதலியவர்களையும் பகை மன்னனையும் வஞ்சனையாற் கொல்லலாம் என்கின்றது.

வள்ளுவம் யாரையும் வஞ்சனையாற் கொல்லலாகாது என்கின்றது.

பொற்பண்டாரத்தில் நிதிக்குறைவேற்படின், கப்பப் பொன்னும் வரிப்பொன்னும், பகைவரைக்கொல்லுதலால் வந்த பொன்னும் அரசனுக்குச் சொந்தம் என்று வள்ளுவம் கூற, சாணக்கியம் யாருடைய செல்வமாயினும் அரசன் அவற்றைப் பறித்துக் கொள்ளலாம்; வஞ்சனையாற் கொள்ளலாம்; வரியை மிகைப்படுத்தி வாங்கிக் கொள்ளலாம் என்கின்றது. மற்றும் படை வீரர்க்கு என்று ஒதுக்கப்பட்ட நிதியில் செலவு போக எஞ்சியது, மருந்துச் செலவு போக மிஞ்சியது முதலான மிச்சங்களையும் அரசன் எடுத்துக் கொள்ளலாம் என்கின்றது. இது உள்ளதை மறைத்ததும், மீளவும் அரண்மனை கணக்குக்குக் கொண்டு வராமல் மறைத்ததும்ஆன குற்றப்பாற் படுதலின் அவற்றை எண்ணிப்பார்க்கவும் செய்யாமல் ஒதுக்கியது வள்ளுவம். சாணக்கியம் இக்குற்றங்களின் வகைகளையும் அவற்றைப்பரிகரிக்கும் வழிவகைகளையும் கூறுகிறது.

இவ்வண்ணம் இருநூல்களும் பன்னூறு இடங்களில் இணைந்தும் சில இடங்களில் வேறுபட்டும் செல்கின்றன. அவற்றுட் சிலவே ஈண்டுத்தெரிக்கப் பெற்றன.

இவைகளால் அரசியல் பொருளாதார நூல்களின் ஆசிரியர்கள் அறிவும் ஆற்றலும் ஒத்தன என்பதும், சிறிது வேறுபடினும் அவை காலந்தந்த' சீலம் என்றறிதல் வேண்டும் என்பதும் விரித்துரைக்க பெற்றன.

## தமிழ் மணிமாலை

தருமையில் உறைகுரு தரணியில் புரையறு
அருமைநல் தமிழதை அகங்குழைந் தளித்தனன்
இருமையும் பெறுவதோ டெழுமையும் வருவது
உரிமையின் உயர்வினல் உவந்துமே போற்றுவாம்

— புலவர் முத்து வே. கணபதி, கோனூர்.

# வள்ளுவரும் - ரூஸ்ஸோவும்

பேராசிரியர் திரு. பா. சூரியநாராயணன் எம். ஏ., (வர) எம். ஏ., (அர) எம். லிட்.,

அழகப்பா கல்லூரி, காரைக்குடி.

(கி. பி. 18ஆம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் ஜெனிவா நகரத்தில் வாழ்ந்திருந்த தலைசிறந்த அரசியல் சிந்தனையாளராகிய ஜீன் ஜாக் ரூஸ்ஸோ என்பவர் வள்ளுவர் கண்ட பொருளியல் போக்கினை எவ்வளவு தழுவித்தம் கருத்துக்களைக் கூறியுள்ளார் எனப் பலமுனை நின்று இக்கட்டுரை விளக்க வருகிறது. ரூஸ்ஸோவின் 'சமுதாய ஒப்பந்தம்' என்ற பெருநூல் அரசியல் கோட்பாடு சமுதாய உணர்வுடன் அமைய வேண்டுமெனக் கூற, வள்ளுவரோ சமுதாய உணர்வுக்கும் அடிப்படையானது சமுதாய நீதி என விதந்தோதும் அருமையினையும், ரூஸ்ஸோவின் வாழ்வியல் சூழ்நிலையினையும் ஐரோப்பிய நாடுகளிடையே காணப்பட்ட அரசியல் வாழ்வின் குறைபாடுகளை ரூஸ்ஸோ தகர்த்த தன்மையினையும், அவரது அரசியல் பின்னணிக்குக் காரணமான மூன்று கூறுகள் எவை என்பதனையும் விளக்கி, ரூஸ்ஸோவின் அரசியல் கொள்கைகளை வகைப்படுத்தி ஆசிரியர் இக்கட்டுரைக்கண் நுணுக்கமாக எடுத்துரைக்கிருர். இதன்பின் வள்ளுவத்தோடு ரூஸ்ஸோவின் கருத்துக்கள் எந்த அளவுக்கு ஒன்றியுள்ளது என்பதனைப் பல அகச் சான்றுகள் காட்டி ஆழமாக ஆய்ந்து முடிவெடுக்கிருர்.)

"எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு"

என்பது வள்ளுவன் வகுத்த தமிழ் நெறியாகும். "உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" என்பதும் பண்டைத் தமிழ் மூதறிஞர் கண்ட தீதற்ற நலம்பயக்கும் நெறியாகும். தமிழர் கண்ட இந்நன்னெறியின் ஒருசில இயல்புகளை இப்பரந்த நிலவுலகின்கண்ணே வேறு ஒரு நாட்டில் வேறு ஒரு காலத்தில் வாழ்ந்த அரசியல் சிந்தனையாளரொருவர் எடுத்துக் காட்டியுள்ளார்; இதனை நாம் காணும் போது நமக்கு வியப்பும், மகிழ்ச்சியும் ஏற்படுகின்றன. இக்கருத்தின் முழுவடிவத்தை எந்த அளவுக்கு கி. பி. பதினெட்டாம் நூற்றுண்டில் வாழ்ந்த ஜெனிவா நகரத்து அரசியல் சிந்தனையாளர் ஜீன் ஜாக் ரூஸ்ஸோ என்பவர் எடுத்துக் கூறுகின்ருர் என்பதே நாம் இக்கட்டுரையில் ஆராயும் செய்தியாகும்.

## 1. ரூஸ்ஸோவின் வாழ்க்கை

ஜீன் ஜாக் ரூஸ்ஸோ என்ற சிந்தனையாளர் கி. பி. 1712-ஆம் ஆண்டில், ஜூன் 28-ல் ஜெனிவா நகரத்தில், (ஸ்விட்சர்லாண்டு நாட்டில்) பிறந்தார். அந்த நகரத்தின் ஆட்சிமுறையானது, அதில் குடிகள் யாவரும் சிறிதளவேனும் பங்கு கொள்ளத்தக்க வகையாக, நேர்முகக் குடியாட்சி வகையாக (Direct democracy) அமைந்திருந்தது; இவ்வித அமைப்பு இளமையிலேயே ரூஸ்ஸோவின் உள்ளத்தில்

சுதந்திர உணர்வை வளர்த்து, வலுப் பெறச் செய்தது. மேலும், அவர் இளமையில் வறுமையால் வாடிப் பல்வேறு இடங்களுக் குச் சென்றாலும், சுதந்திர உணர்வினல் தூண்டப்பட்டு, நேர்முகக் குடியாட்சியின் பண்டைப் பிறப்பிடமான, கிரேக்க நகரர சாகிய ஆதென்சின் வரலாறு, பண்டைய ரோமானியக் குடியரசின் ஆட்சிமுறை, ஐரோப்பிய வரலாறு முதலியவற்றை கவனமாகப்படித்தார். படித்துச் சிந்தித்துத் தெளிந்து தமது சுதந்திரக் கருத்தை அடிப் படையாக வைத்து, ஓர் அரசியல் கோட் பாட்டை **'சமுதாய ஒப்பந்தம்'** என்ற தலைப்புள்ள நூலில் (Du contrat Social) கி. பி. 1972-ஆம் ஆண்டில் எழுதி வெளி யிட்டார். இந்நூலில் அவர், சமுதாயத்தால் ஏற்றுக் கொள்ளப்படாத சில முடிபுகளையும் கூறுகிறார். எனினும் சுதந்திரக் கோட் பாட்டை ஆதாரமாகக் கொண்டு அமைக்கப் பட்டுள்ள தற்காலக் குடியாட்சி அரசாங்க முறைக்கு (Democratic form of government) இவருடைய நூல் ஒரு வழிகாட்டியாக இருக்கிறது. இவர் கி. பி. 1778-ஆம் ஆண்டு ஜூலை 2-ஆம் நாள், பிரான்சின் தலைநகர மாகிய பாரிசிற்கருகில் ஆய்ஸ் எர்மனன் வில் என்ற இடத்தில் இறந்தார். எனவே இவர் வாழ்ந்த காலம் பிரஞ்சுப்புரட்சிக்கு முற் பட்ட காலமான பதினெட்டாம் நூற்றாண்டு ஆகும். இவர் வாழ்ந்த காலத்தில் பல ஐரோப்பிய நாடுகளில் குறிப்பாகப் பிரான்சில் – காணப்பட்ட அரசியல், சமுதாய நிலைமைகள், சுதந்திரத்தை ஆதாரமாகக் கெண்ட பல முடிபுகளை இவர் வகுக்கும் படித் தூண்டின.

பண்டைத் தமிழ்ப்பேராசிரியராகிய திருவள்ளுவருடைய காலத்தைப்பற்றியும், வரலாற்றைப்பற்றியும் நமக்குக்கிடைக்கக் கூடிய செய்திகள் மிகவும் சுருக்கமான வையே. 'சங்க காலத்திலேயோ, சங்க காலத்தை ஒட்டியோ எழுந்த சிலப்பதி காரமும், மணிமேகலையும் திருக்குறளை எடுத்தாள்வதால், அவற்றிற் கெல்லாம் முந்தி எழுந்த இந்நூல் சங்க காலத்ததோ, சங்க காலத்தை ஒட்டியதோ ஆதல் வேண்டும் எனவும், திருவள்ளுவர் வாழ்ந்த காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாக இருத்தல் வேண்டும் எனவும் பேராசிரியர் திரு தெ. பொ. மீனட்சி சுந்தரனர் அவர்கள் கூறுகின்றார்கள். எவ்வா றயினும் தமிழகத்து வள்ளுவர், பிரான்சிய ரூஸ்ஸோவுக்கு ஏறக்குறைய 1700 ஆண்டு களுக்கு முற்பட்டவர் என்பதும், வள்ளுவர் சுதந்திர்த்தைப் பற்றிக் கூறும் கருத்துக்க ளெல்லாம், அவர் காலத்தவருடைய மரபினை ஆதாரமாகவும், நீதிக்கருத்தை ஆதாரமாகவும் கொண்டு வகுக்கப் பட்டவை என்பதும் நமக்குத் தெரிய வருகின்றன. **சமுதாய உணர்வுடன் அரசியல் கோட் பாட்டை வகுத்தவர் ரூஸ்ஸோ, சமுதாய உணர்வுக்கும் ஆதாரமாக இருக்கவேண்டுவது சமுதாய நீதி என்ற நோக்கில் அரசியலைப்பற்றிக் கோட்பாடுகளை வகுத்தவர் வள்ளுவர்.**

## 2. ரூஸ்ஸோவின் கருத்துக்குப் பின்னணியாக அமைந்தவை

ரூஸ்ஸோவினுடைய அரசியல் கருத் துக்கள் வடிவம் பெறுவதற்குத் துணையாக இருந்தவை மூன்று: (1) அவர் பிறந்த ஜெனிவாநகரத்தில் இருந்துவந்த குடியாட்சி முறை. (2) இவர்காலத்திய பிரஞ்சு நாட்டில் காணப்பட்ட சமுதாய, அரசியல், பொரு ளாதார குறைபாடுகளும், மக்களுடைய துன்பங்களும்; (3) சமுதாய ஒப்பந்தம் என்ற ஒரு கற்பனை. (1) ரூஸ்ஸோ பிறந்து வாழ்ந்த ஜெனிவா நகரமானது தற்கால சிறிய ஐரோப்பியக் கூட்டாட்சி நாடான (federation) ஸ்விட்சர்லாண்டில் உள்ள

22 மாநிலங்களில் அல்லது கான்ட்டன்களில் (cantons) ஒன்று ஆகும். கி. பி. 1848 ஆம் ஆண்டில்தான் ஸ்விட்சர்லாண்டு முழுவதும் ஒரு கூட்டாட்சி நாடாக உருவம் பெற்றது; அதற்கு ஒரு கூட்டாட்சி அரசியலமைப்பு வரையப்பட்டது; மிகச் சிறிய நாடான இதில் 22 மாநிலங்கள். மாநில அதிகாரங்கள் வரையறை செய்யப்பட்ட கூட்டாட்சி நடாகத் தோன்றுவதற்குக் காரணம், இதற்கு (1848-ஆண்டுக்கு) முன்னர் வெகுகாலமாகவே இதன் உறுப்பு மாநிலங்களில் மக்களுக்குப் பங்கு உள்ள குடியாட்சிமுறைகளும், நிறுவனங்களும் செயல்பட்டு வந்ததுதான். ஜெனிவா நகரத்திலும் ஓர் அரசியல்மன்றம் (Landsge meinde) இருந்து. இதில் ஜெனிவா அரசாங்கத்துக்கு உட்பட்ட எல்லா ஆண்குடி மக்களும் உறுப்பினர்கள். எல்லா அதிகாரங்களையும் மாநில ஆட்சியைப் பொறுத்த வரையில் இந்த மன்றமே கையாண்டது. இது மாநிலத்தைப்பற்றிய பொதுவான பிரச்சினைகளைத் தீர்த்தும், தீர்மானங்களை நிறைவேற்றியும், நிர்வாகக் குழு உறுப்பினர்களையும், மாநில நீதிபதிகளையும் தேர்ந்தெடுத்தும், வந்தது. எனவேதான் இவ்வாறு மக்களுடைய முடிவான, அல்லது தலைமையான இறைமை அதிகாரமானது மாநிலச் செயல்களின் மீது நேரடியாகக் கையாளப்படுவதற்கு நிறுவனமாக இருந்த இந்த மன்றத்தையே (Landsge meinde) உண்மையான குடியாட்சிநிறுவனமென ரூஸ்ஸோவும், மற்றும் சில அரசியல் சிந்தனையாளரும் மதிப்புக்கொடுத்தனர். அதாவது எந்தச்சமுதாயத்தில், குடிமக்களுக்கு அரசாங்கம் செய்ய வேண்டிய அலுவல்களைப் பற்றிக் கூறும் சட்டம் இயற்றுவதற்கு நேரடியாக (பிரிதிநிதிகள் மூலமாக அல்லாமல்) வாய்ப்பு இருக்கிறதோ, அதுவே உண்மையான குடியாட்சி உடைய அரசியல் சமுதாயம் என்பது, ரூஸ்ஸோ ஜெனிவாநகர ஆட்சியிலிருந்து அறிந்து கொண்ட செய்தி ஆகும். மக்கள் நேரடியாக அரசாங்கத்துக்கு அலுவல்களை அல்லது கடமைகளை வகுத்துக் கொடுக்கும் அதிகாரமே சட்டமியற்றும் அதிகாரம்; இந்த அதிகாரத்தை மக்கள் எப்போது கையாள இயலுமென்றால், அவர்கள் தாங்கள் யாவரும் சுதந்திரமும், சமத்துவமும் உடையவர்களாய் ஒரு அரசில் (state) சேர்ந்திருக்கிறோமென்று, உணர்ந்து கொள்ளும்போது, அல்லது ஒப்புக் கொள்ளும்போது தான், இயலும், என்ற முடிவுக்கு ரூஸ்ஸோ வருவதற்கு அவர் காலத்திலிருந்த மேலே கூறப்பட்ட ஜெனிவா நகரத்துக் குடியாட்சி முறையும் ஒரு காரணமாகும். வள்ளுவர் வாழ்ந்த காலத்திலும் தமிழகத்தில் ஒவ்வோர் ஊரிலும் தன்னாட்சி செலுத்திய மன்றம் அல்லது அறங்கூறு அவையம் இருந்த தென்பதைச் சங்கநூல்களின் வாயிலாக அறிகிறோம். ஊர்மன்றத்தில் ஊரிலுள்ள எல்லா ஆண்குடிமக்களும் உறுப்பினராக இருந்து, வழக்குகளை ஆய்ந்து தீர்ப்புக் கூறியும், ஊர்ப்பொதுக்காரியங்களைத் தீர்மானித்தும், அவற்றைச் செய்வதற்கு அலுவலர்களை அமர்த்தி, வேலைநடை பெறும் படியாகச் செய்தும் வந்தனர்.

2. பொதுவாகப் பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் அரசர்களுடைய எதேச்சாதிகாரம் (Monarchical abso lutisom) என்ற கோட்பாட்டினடிப்படையில் அமைந்திருந்த அரசாங்க முறைகளினால் சீர்கேடுகள் மலிந்து, சாதாரணக்குடிகள் துன்பத்தில் ஆழ்ந்திருந்தனர். இதற்கு ஒருநல்ல எடுத்துக்காட்டு, ரூஸ்ஸோவின் ஜெனிவா நகரத்தை ஒட்டி மேற்கிலிருந்த பிரான்ஸ் நாடு ஆகும். திறமையும், கல்லறிவும் மிக்க பதினான்காம் லூயி போன்றவர்கள் (கி. பி. 1642 - 1714)

ஏதேச்சாதிகார அரசர்களாக இருந்தாலும், அவர்கள் குடிகளின் நலனைச்சிறிதளவேனும் பேணிக்காத்தனர் ; மன்னரைச் சார்ந்திருந்த பிரபுக்கள் செருக்குடன் சாதாரண மக்களை நடத்தவோ, துன்புறுத்தவோ செய்யாமல் தடுத்தனர்.

ஆனால் எல்லா மன்னர்களும் திறமையுடனே, அறிவுடனே, குடிகள் நலனென்ற நோக்கிலோ ஆட்சிசெலுத்தவில்லை. தன்னல விருப்புடனிருந்த இத்தகைய தீய அரசர்களுடைய ஆட்சியிலே, பிரபுக்கள் அவ்வரசர்களுக்கு ஆதரவளித்து சாதாரணக் குடிகளுக்கு இல்லாத சலுகைகளை எல்லாம் தாங்கள் பெற்றுக்கொண்டனர் ; கிறிஸ்தவத் திருச்சபையைச் சேர்ந்த உயர்தரச் சமயக் குருமாரும் இவ்வாறு பல சலுகைகளை அடைந்தனர் ; எனவே அரசாங்கத்துக்குச் செலுத்த வேண்டிய வரிச்சுமையும் சாதாரணக் குடிகள்மீதே விழுந்தது ; உழைத்து, வறுமையில் வாடி, யாதொரு உரிமைப் பங்கும் நாட்டின் அரசாங்கத்தில் இல்லாமல், துன்பத்தில் உழன்ற, எண்ணிக்கையில் மிகப் பெரிய சாதாரணக் குடிமக்கள் கூட்டத்தையும், அதன் துன்பங்களையும் பற்றி எண்ணி ஆராய முன்வந்தனர் மாண்ட்டஸ்க்யு, ரூஸ்ஸோ முதலியோர். பிரான்சில் குடிகளுக்கு ஆட்சியில் பங்கு நேரடியாகவோ, மறைமுகமாகவோ இல்லாததை இவ்வறிஞர்கள் நன்கு உணர்ந்தனர். அரசாங்கத்தின் மூவகை அதிகாரங்களான சட்டம் இயற்றும் அதிகாரம், சட்டத்தை நிறைவேற்றும் நிர்வாக அதிகாரம் சட்டத்தைப் பின்பற்றி நீதி வழங்கும் அதிகாரம் ஆகியவை தனித் தனியாகப் பிரிக்கப்படாமல், பிரான்சில் அரசனிடத்தில் குவிக்கப்பட்டிருப்பதுபோல் குவிக்கப்பட்டிருந்தால், மக்கள் சுதந்திரமும், சமத்துவமும் இன்றித் துன்பத்தில் வீழ்வர், என்று மாண்ட்டஸ்க்யு என்ற அறிஞர் (*1748*-ல்) சுட்டிக்காட்டினர். வால்ட்டேர் என்ற வேறொரு சிந்தனையாளர் குடிமக்கள் உரிமை என்ற கருத்தை வலியுறுத்தினர். ஹெல்விஷியஸ் என்ற சிந்தனையாளர், 'மனித இயல்பு எப்பொழுதும் துன்பத்தை நீக்கவும், இன்பத்தைப்பெறவும் முயலுவதாகையால், இக் கொள்கையை ஒட்டியே சமுதாய நலனும், தனி மனிதர் நலனும் முரணின்றி இணைந்திருக்குமாறு சீர்திருத்தவாதிகள் அரசாங்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டும் என்று கூறினர். (*1758*-ல்) பிரன்சுக் குடிமக்களுடைய அவலநிலையை ஆராய்ந்த ரூஸ்ஸோ, பிரான்சில் ஏதேச்சாதிகார ஆட்சி முறைக்கு ஆதாரமாக அமைந்திருந்தவை, அரசின் தெய்விகத் தோற்றக் கோட்பாடு (The Theory of Divine Origin of State), தெய்விக அரச அதிகாரக் கோட்பாடு (The Theory of Divine Right of Kings) முதலியவைகளே என்று உணர்ந்து, அவற்றை முற்றிலும் மறுத்துத் தகர்த்தெறிந்தார். பதினரும் நூற்றாண்டில் பிரான்சில் எதேச்சாதிகார முடியாட்சி நிறுவப்பட்டபோது, "அரசு என்பது (State) இறைவனல் நிறுவப்பட்டது ; அரசனும் இறைவனல் குடிகளை ஆள அமர்த்தப்பட்டவன் ; அவன் குடிகள் மீது செலுத்துகிற அதிகாரம் இறைவனல் அவனுக்குக் கொடுக்கப்பட்டதே தவிர, மக்களிடமிருந்து வரவில்லை ; எனவே அவன் இறைவனுக்கே பொறுப்பாளியாக இருத்தல் வேண்டும் ; கொடுங்கோலரசனுடைய ஆட்சியும் குடிகளுடைய தீவினைகளுக்காக ஆண்டவனல் அளிக்கப்பட்ட தண்டனையேயாகும் ; ஆதலால் தீய அரசனுடைய தீய ஆட்சியையும் ஆண்டவன் அளிக்கும் தண்டமாக மக்கள் பொறுத்துக் கொள்ளவேண்டுமேயன்றி, அவனை நீக்குவதற்காகக் கலகம் செய்ய அவர்களுக்கு உரிமை இல்லை. அரசாங்கம் இன்றேல் மனித சமுதாயம், மனிதப் பாதுகாப்பு

முதலியவை இல்லை," என்று இத்தகைய கருத்துக்களெல்லாம் மேலே கூறப்பட்ட இரண்டு கோட்பாடுகளினின்றும் வருவிக்கப் பட்டன; வலியுறுத்தப்பட்டன. மனிதப் பாதுகாப்புக்கும், மனித சமுதாய வளர்ச்சிக்கும் அரசாங்கம் தேவையே, இன்றியமையாததுதான் என்று ரூஸ்ஸோ ஒப்புக்கொண்டாலும், அவர் மேற்கூறிய இரு கோட்பாடுகளை ஒப்புக்கொள்ளாமல், கண்டித்து ஒதுக்கினர். அரசாங்கம் என்பது (Government) அரசு என்ற (state) சமுதாயவடிவத்தின் (Social phenomenon) ஒரு உறுப்பேதவிர, அரசாங்கமே, அரசாக இல்லை என்று வேறுபடுத்தினர்; மேலும் அவர், "அரசு என்பதே சுதந்திரமான, சமத்துவமுடைய ஒரு மக்கள் கூட்டம், தங்கள் யாவருக்கும் பொதுவான நலனுக்காக ஒரு சமுதாயமாக ஒன்று சேரும்போது தோன்றுகிறதேதவிர, இறைவனது ஆணையால் தோற்றுவிக்கப்பட வில்லை" என்று சுதந்திரமான சமுதாய நோக்கிலிருந்து ஒரு புதிய கருத்தைக் கூறினர். அரசின் தெய்விகக்கோட்பாடுகளை ஆதரித்த பல சிந்தனையாளரால் ரூஸ்ஸோ எதிர்க்கப்பட்டார். அவருடைய வாழ் நாளில் அவர் வகுத்த சுதந்திர சமுதாய அரசு என்ற கோட்பாடு செயல்படவில்லை; எனினும், அவர் கருத்துக்களாக, "அரசாங்கம் மக்களுடைய வேலையாள்; மக்களுடையகருத்தே சட்டம் ஆகும்; அதனை நிறைவேற்ற அரசாங்கம் தவறினல், திறமை யற்ற வேலையாளை நீக்கி, திறமையுள்ள வேலையாளை அமர்த்துவதுபோல், மக்களுடைய சுதந்திரத்தைப் பாதுகாக்கவல்ல வேருெரு அரசாங்கத்தை மக்கள் அமர்த்த அவர்களுக்கு முழு உரிமை உண்டு" — என்றெல்லாம் அவர் கூறியவை துன்பத்தில் ஆழ்ந்திருந்த, எண்ணிக்கையில் பெரிய, சாதாரண பிரஞ்சுக் குடிகள் மனதில் ஆழமாகப் பதிந்தன; அதன் விளைவாகவே எதேச்சாதிகார ஆட்சிமுறைக்கும், பிரபுத்துவமுறையிலமைந்த, சமத்துவமற்ற சமுதாய அமைப்புக்கும் எதிராக 1789-ஆம் ஆண்டில் எழுந்தது வலிய பிரஞ்சுப் புரட்சி.

3. ரூஸ்ஸோவின் அரசியல் சிந்தனைக்குப் பின்னணியாக இருந்த மூன்ருவது கூறு, சமுதாய ஒப்பந்தம் என்ற கருத்து ஆகும். பொதுவாக சமுதாய ஒப்பந்தம் என்ற கருத்தை ரூஸ்ஸோவின்மீது ஏற்றிச் சொல்வது வழக்கம். ஆனல் இந்தக் கருத்தை முதன்முதலாக அரசியல் சிந்தனையில் கையாண்டவர் ரூஸ்ஸோ அன்று. இந்தக் கருத்து பண்டைய கிரேக்க நகரரசாகிய ஆதென்சில் கி. மு. நான்காம் நூற்ருண்டில் வாழ்ந்த பிளேட்டோ (Plato) என்ற அறிஞரால் கூறப்பட்டது. பின்னர் இந்தக் கருத்து வரலாற்றில் ஒவ்வொரு கூட்டத்தாராலும், தத்தம் நோக்கங்களுக்காகக் கையாளப்பட்டது. மனிதர்கள் அரசு அல்லது அரசியல் சமுதாய அமைப்பில் வாழத் தொடங்குமுன், அரசுக்கு முற்பட்ட நிலையில் அதாவது இயற்கை நிலையில் வாழ்ந்தனர் என்பதும் (state of nature); அதில் ஒவ்வொருவருக்கும் சுதந்திரம் இருந்ததாயினும் அது காப்பாற்றப்படாமலிருந்ததாகையால், யாவரும் தமது சுதந்திரம் பாதுகாக்கப்படும் பொருட்டு, இந்த நோக்கத்துக்காக ஓர் ஒப்பந்தத்தின் மூலம் ஒரு அரசாகச் சேர்ந்தனரென்பதும்; பின்னர் இந்த நோக்கத்தை நிறைவேற்றும் பணியை ஒரு அரசாங்கத்தை நிறுவி, அதனிடம் அரசிலுள்ள மக்கள் கொடுத்தனர் என்பதும் தான் தற்கால சமுதாய ஒப்பந்தக் கோட்பாட்டிலடங்கியுள்ள சாரமாகும். இந்த வடிவத்தில் இக்கோட்பாடு பண்டைக் காலத்தில் காணப்படாவிடினும், அரசாங்க அதிகாரம் ஓர் ஒப்பந்தத்தின் மூலம், அதாவது சில குறிப்பிட்ட நோக்கங்களுக்காக மக்களால் அதனிடம் வழங்கப்பட்டதென்ற கருத்து எடுத்துக் கூறப்பட்டது.

அரசியலதிகாரத்தின் தோற்றுவாய் ஒப்பந்த மாகுமென்ற காரணத்தைக் காட்டி, புனித ரோமானியப் பேரரசர்களுக்கும், கிறிஸ்தவ சமயநிலையத் தலைவர்களான போப்புக் களுக்கும் இடையே இடைக்காலத்தில் "அவர்களுள் யார் அதிகாரத்தில் உயர்ந்தவர்?" என்ற பூசல் தோன்றிய போது, இருபக்கத்தவரும் தத்தம் கருத்துக் களுக்கு ஆதரவு காட்டினர். "ஓர் கொடிய அரசர் தனது தீய செயலின் மூலம், தனது குடிகள் தனக்குக் கீழ்ப்பட்டிருத்தல் வேண்டுமென்ற கடமையினின்றும் அவர்களை விடுவிக்க ஒப்பந்தம் இடந்தருகின்றது" என்று மேன்கோல்ட் என்ற அறிஞர் கி. பி. 1080-ல் எழுதினர். செயின்ட் தாமஸ் அக்வினஸ் என்ற அறிஞர் கி. பி. 1256-ல், "அரசியலதிகாரத்தின் முக்கியக் கூறு இறைவனுடைய ஆணையால் ஏற்படுத்தப் பட்டது; அவ்வதிகாரம் கையாளப்படும் வகை அல்லது அரசியல் வடிவம் மக்களால் தீர்மானிக்கப் படுகிறது; அதிகாரத்தை நடைமுறையில் கையாளக்கூடிய உரிமை அரசாங்கத்துக்கு மக்களால்தான் அளிக்கப் படவும், திரும்ப எடுத்துக்கொள்ளப்படவும் கூடியதாக இருக்கிறது. எனவே அரசாங்கம் சமுதாயத்தால் ஏற்படுத்தப்படுகிறது; அது கொடுங்கோலாட்சியாகுமானுல்அதனுடைய அதிகாரத்தைத் திரும்ப எடுத்துக்கொள்ள வும், வரம்பு படுத்தவும் சமுதாயத்தால் இயலும்" என்று எழுதினர். எதேச்சதி கார கத்தோலிக்க பிரஞ்சு அரசர்களுடைய அதிகாரத்துக்கு எதிராகத் தங்களுடைய சமய சுதந்திரம் பாதுகாப்பாக இருக்கும் பொருட்டு, பிரஞ்சு பிராட்டஸ்ட்டண்டு களாகிய ஹியூகனட்டுகளால் இவ்வொப் பந்தக்கோட்பாடு 1570–ல் கையாளப் பட்டது. ஆங்கில நாட்டில் கி. பி. 1688-ஆம் ஆண்டில் எதேச்சாதிகார அரசராகிய இரண்டாம் ஜேம்சுக்கு எதிராகப் புரட்சி நடைபெற்றது; அப்போது, சிவில் உரிமை அல்லது குடிமக்கள் உரிமைக்குப் பாது காப்பாக இருப்பது, அரசனுக்குக் குடிகளால் மேற்படி நோக்கத்திற்காக, ஒப்பந்தத்தின் மூலம் கொடுக்கப்பட்ட அதிகாரமே ஆகும், 'என்ற கருத்து விக்குக் கட்சியினரால் (Whigs) வலியுறுத்தப் பட்டது. மன்னனுடைய எதேச்சாதிகா ரத்தை ஆதரிப்பதற்காக தாமஸ் ஹாப்ஸ் என்ற ஆங்கிலேயரும், குடிகளுடைய உரிமைகளை ஆதரிப்பதற்காக ஜான் லாக் என்ற ஆங்கிலேயரும் 17ஆம் நூற்றுண்டில் இக் கோட்பாட்டை விளக்கினர். ரூஸ்ஸோ, ஜான்லாக்கின் முடிபுகளை ஒத்த முடிபுகள் வரத்தக்கவாறு, சமுதாயக் கோட்பாட்டுக்கு விளக்கம் கொடுத்தார்.

## 3. ரூஸ்ஸோவின் அரசியல் கருத்துக்களின் சாரம்.

ரூஸ்ஸோ தனது நூலில் கூறியுள்ள செய்திகளில், மனித சுதந்திரம், அரசு, அரசாங்கம், சமுதாய ஒப்ந்தம், சட்டம், சமயம் முதலியவைகளைப்பற்றி மட்டுமே இங்கு சுருக்கிக் கூறலாம்.

### 1. மனித சுதந்திரம்.

மனிதன் சுதந்திரமானவனுகவே பிறக் கிருன். ஆயினும் காலச்சூழ்நிலைகளின் காரணமாக அவன் தனது சுதந்திரத்தை இழந்து அடிமையாக இருக்கும் நிலையில் உள்ளான். மனிதனுடைய இந்த இயற்கையான சுதந்திரமானது, மனித சமுதாயத்தை ஆளுவோரால் பறிக்கப் பட்டதுபோல, ஆளுவோரிடமிருந்து, வல்லந்தமான புரட்சியின்மூலம், மக்கள் தங்களுடைய சுதந்திரத்தை எடுத்துக் கொள்ள உரிமை, அல்லது நியாயம் இருக்கிறது. இதுவே வலிய புரட்சிசெய் வதற்கு மக்களுக்கு உரிமை உண்டென் பதற்கு ரூஸ்ஸோ காட்டும் காரணமாகும்.

1789ஆம் ஆண்டு தொடங்கிய பிரஞ்சுப் புரட்சியில், பிரஞ்சு தேசிய மன்றம் அவ்வாண்டு ஆகஸ்டு 12-ல் வெளியிட்ட மனித உரிமை விளம்பரத்தின் முதல் இரண்டு தொடர்கள் ரூஸ்ஸோவின் சுதந்திர, சமத்துவக் கருத்துக்களை ஆதாரமாகக் கொண்டுள்ளன: "மனிதர் சுதந்திரமாகவும், உரிமைகளைப் பொறுத்த வரையில் சமத்துவமாகவும் பிறந்து வாழ்பவராவார். சுதந்திரம், சொத்து, பாதுகாப்பு, அடக்குமுறையை எதிர்த்தல் முதலியன மனித உரிமைகள்............"

### 2. அடிமைத்தனம்

எவரொருவருக்கும், மற்றவர்மீது அதிகாரம் செலுத்துவதற்கு இயற்கையான அதிகாரம் இல்லை; எனவே நியாயமான, சட்டப்படியான அதிகாரமென்பதற்கு சமுதாயங்களிலே ஒப்பந்தம்தான் (contract) ஆதாரமாக இருக்கிறது. ஒரு எதேச்சாதிகார அரசாங்கம் (autocratic Government) நியாயமான, பொதுநல அரசாங்கமாக இருக்கவேண்டுமானால், அவ்வரசாங்கத்தை ஏற்றுக்கொள்ளவோ, மறுத்து ஒதுக்கவோ ஒவ்வொரு தலைமுறையினருக்கும் உரிமை இருக்கவேண்டும். இவ்வுரிமை இல்லாத நிலைமையே அடிமை நிலையைத் தோற்றுவிக்கிறது.

### 3. சமுதாய ஒப்பந்தம்

மனிதன் முன்னேற விரும்பி, அதற்குத் தடையாக இருக்கிற சக்திகளை அழித்துவிட முயலுகிறான். ஒவ்வொருவரும் இவ்வாறு முயலும்வரை சமுதாயம் ஏற்பட இயலாது. பலமனிதர்கள் சேர்ந்தது தான் சமுதாயம். ஒவ்வொருவருடைய சொத்து, சுதந்திரங்களைப் பிறர் தாக்காத வண்ணம் பாதுகாப்பது சமுதாயத்தின் கடமை ஆகும். இப்படிப் பாதுகாக்க வேண்டுமானால், ஒவ்வொருவரும் அந்தப்பாதுகாப்பில் பங்கு எடுத்துக்கொள்ளுதல் வேண்டும். அவ்வாறானால் எல்லாரும் ஒன்று சேர்ந்து ஆக வேண்டும். ஆனால் அப்போது எவரும் தனக்கென்றே சொந்தமாயுள்ள சுதந்திரத்தை இழந்துவிடக்கூடாது; மற்றும் தன் மனச்சாட்சிக்குத்தான் கீழ்ப்படிய வேண்டும். இப்படி தன்னுடை சுதந்திரத்தை விட்டுக்கொடுக்காமல். சமுதாய சுதந்திரத்தைப் பாதுகாப்பது பரஸ்பர உடன்பாட்டின்பேரில் நடைபெறுறது. இதனையே சமுதாய ஒப்பந்தம் என்கிறோம். சமுதாயத்தில் சேரும்போது **ஒவ்வொருவரும் தனது சொந்த உரிமைகளைச் சமுதாய நன்மைக்காக விட்டுக் கொடுத்து விடுகிறார். யாவரும்சமுதாயநன்மைக்கு உட்பட்டுத்தான் இவ்வாறு செய்வதால், எவரும் மற்றவர்கள் உரிமைகளை அழிக்கும் வகையாக, இவ்விதியை - அதாவது சமுதாய நன்மை என்ற விதியை - மீறமாட்டார்கள்.** (இப்பகுதி திரு. வெ. சாமிநாத சர்மாவின் "ரூஸ்ஸோவின் சமுதாய ஒப்பந்தம்" என்ற நூலிருந்து எடுக்கப்பட்டது) மேற்கூரிய ரூஸ்ஸோவின் கருத்துக்கள் குடியாட்சி அமைப்பில், இக்காலத்தில் எவ்வாறு பொருந்தி வருகின்றன என்பதும், இவை வள்ளுவருடைய கருத்தோடு ஒத்துள்ளவையா என்பதும் பின்னர்க் கூறப்படுகின்றன.

### 4. அரசு

சமுதாய ஒப்பந்தத்தின் மூலம் தோன்றியதே அரசு ஆகும். இந்த அரசோ, ஜனசமுதாயமோ ஒப்பந்தத்துக்கு மாறாக ஒன்றையும் செய்யக்கூடாது. தனிப்பட்டவர்களுடைய நன்மைக்கு மாறாக ஒன்றையும் செய்யக்கூடாது. தனிப்பட்டவர்களுயை நன்மைக்கு மாறாக அரசினுடைய நன்மை இருக்க இயலாது. எனவே மேற்படி அரசானது தனது குடிகளுக்கு எவ்வித

உறுதிமொழியும் கொடுக்கவேண்டியதில்லை. ஏனென்றால் பல உறுப்புக்கள் ஒன்று சேர்ந்த உடம்பு அந்த உறுப்புக்களுக்கு ஊறு செய்ய நினைக்காது. அதைப்போல் தனிப்பட்டவர்கள் என்ற முறையில் யாருக்கும் அரசு ஊறு செய்ய இயலாது.

சமுதாய ஒப்பந்தம் ஒரு சம்பிரதாய ஒப்பந்தமாக ஆகாமலிருக்க வேண்டும். **எவர் ஜனசமூகத்தின் இச்சைக்குக் கீழ்ப்படியமறுக்கிறரோ, அவர் அந்த இச்சைக்குக் கீழ்ப்படிந்து நடக்குமாறு கட்டாயப்படுத்தப்பட வேண்டும். அப்படி அவர் செய்யாவிட்டால், அவர் சுதந்திரமாக இருக்கமுடியாது.** இந்த நிபந்தனை இருந்தால்தான் ஒவ்வொருவரும் தன்தாய்நாட்டோடு ஐக்கியப்படுவார். அவருக்கு பிறருடைய தயவைநாடவேண்டிய அவசியம் ஏற்படாது. (மேற்கூறிய கருத்து சர்வாதிகார அல்லது எதேச்சாதிகார ஆட்சிக்கும் வழிவகுக்கிறது; குடியாட்சிக்கு மட்டும் வழிவகுக்கவில்லை, என்பது மதிப்பீட்டில் பின்னர்க் கூறப்படுகிறது.)

## 5. சமுதாய அரசு

மனிதன் இயற்கை நிலையைவிட்டுச் சமுதாய நிலைக்கு ஒப்பந்தத்தின் மூலம் வந்தவுடனேயே, கடமையை முன்னிட்டுக் காரியம் செய்யவும், தன் அறிவுக்கு உகந்தவாறு காரியம் செய்யவும், தன் ஒருவனை நோக்கமாக வைத்து வாழ்க்கையை நடத்தாமல் வேறு நோக்கங்களை மையமாக வைத்து நடத்தவும் முற்படுகிறன். அறியாமையோடு கூடிய ஒரு மிருகமாக இருந்த தான் அறிவுநிரம்பிய ஒரு மனிதனைப் பரிணமித்துக் கொள்ளுகிறன். இதற்குத் தன்னைத்தான் ஆசீர்வதித்துக் கொள்ளுகிறன். மனிதன் இயற்கை நிலையில் அனுபவித்து வந்த இயற்கைச் சுதந்திரம் ஒரு தனி மனிதனுடைய சுதந்திரத்தோடு நின்று விடுகிறது. சமுதாயத்தின் ஓர் பாகத்தினன் என்ற முறையில் மனிதன் அனுபவிக்கிற சுதந்திரமானது, ஜனசக்தியின் வரம்புக்கு உட்பட்டது.

## 6. அரசாங்கம்

அரசு என்பது மக்களால் தோற்றுவிக்கப்பட்டது. அந்த அரசு தனது செயல்களைச் சட்டங்கள் இயற்றுவதன் மூலமாகச் செய்கிறது. அந்தச் சட்டங்களை வழக்கில் கொண்டுவருவதுதான் அரசாங்கம். அரசாங்கத்துக்குக் கீழ்ப்படிந்து மக்கள் நடக்கிறர்கள். எனவே தங்களால் தோற்றுவிக்கப்பட்ட ஒரு நிறுவனத்திற்கே மக்கள் கீழ்ப்படிந்து நடக்கிறவர்களாகிறர்கள். அப்படி நடப்பது ஒவ்வொருவருடைய இசைவின் பேரில்தான். மக்களுடைய விருப்பத்தை எதிரொலிப்பதுதான் அரசாங்கம். இதில் வேற்றுமைகள் ஏற்படும்போது அரசு, அரசாங்கம், மக்கள் என்ற மூன்றுக்குமுள்ள தொடர்பு தளருகிறது. மக்களுடைய விருப்பத்தை அரசாங்கம் புறக்கணித்து, தன் விருப்பப்படி நடக்கத் துணிந்து விடுமானல், சமுதாயவாழ்வு சீர் குலைகிறது. இவ்வாறு நடப்பதைத் தடுக்க சபைகள், ஆலோசனை சொல்லும்கழகங்கள், பதவிகள், உரிமைகள், சலுகைகள் முதலியவை இருக்கின்றன.

## 7. நிர்வாக அலுவல் (Executive function)

சட்டம் இயற்றுபவர்களே, அந்தச் சட்டங்களை நடைமுறைப் படுத்தக் கூடாது. மக்களுடைய பிரதிநிதிகள் மக்களுடைய விருப்பத்தை அல்லது நோக்கத்தை நிறைவேற்றுபவர்களாக இருத்தல் வேண்டும். எனவே அரசாங்கம் மக்களுடைய பிரதிநிதிகளால் அமைக்கப்பட்டு இருத்தல் வேண்டும்; அதற்குச் சட்டங்களை நிறைவேற்றுகிற அலுவல்மட்டுமே இருக்க வேண்டும்; சட்டத்தைச் செய்யும் அலுவல் அரசாங்கத்துக்கு இருக்கக் கூடாது.

## 8. சட்டம் செய்தல்

மக்களே நேராகச் சட்டங்களை ஒப்புக் கொள்ளவில்லையாயின், அந்தச் சட்டங்கள் செல்லுபடியாகமாட்டா; அவை சட்டங்களு மல்ல. பிறர் நலத்தைப் பெரிதெனக் கொண்ட பெரியவர்கள்தான் சட்டங்களை வகுத்துக் கொடுக்கக் கூடியவர்களாக இருக்க வேண்டும். மக்களுக்குச் சுதந்திரத் தையும், சமத்துவத்தையும் அளிப்பது சட்டம். சட்டங்களைச் செய்ய வேண்டிய அலுவல் மக்களுக்கே உரியது.

## 9. சட்டம்

மனிதர்களுடைய அறிவிலிருந்து உலகத்துக்குப் பொதுவான ஒருநீதி உண்டாகிறது. ஆனால் அந்த நீதி மனிதர் களிடத்தில் நின்று நிலவ வேண்டுமானல் இதனை யாவரும் பின்பற்ற வேண்டும்; இதற்குச் சில சம்பிரதாயங்களும் வழக்கங் களும், (conventions), சட்டதிட்டங்களும் தேவைப்படுகின்றன. பொதுமக்கள் கருத்தின் பரிணமமே சட்டம். அரசாங் கத்தில் உயர்தர நிலையிலிருப்பவரும் நாட்டின் ஒரு உறுப்பினராயிருப்பதனல், அவரும் சட்டத்துக்கு மற்றக் குடிகளைப் போலக் கட்டுப்பட்டவரே தவிர, அதற்கு அப்பாற்பட்டவரல்ல.

## 10.

சட்டத்தைப் பற்றிய ரூஸ்ஸோவின் கருத்துக்களை நாம் இங்குக் குறிப்பிடும் போது, அவர்கூறும் **பொதுநல விருப்பம்** அல்லது **பொதுநலத் தீர்மானம் என்ற கோட்பாட்டைப் பற்றியும் (Doctrine of generalwill)** சிறிது விளக்கமாகக் குறிப்பிட வேண்டும். பிரிவு (3)ல் **சமுதாய ஒப்பந்தம்,** பிரிவு (4)ல் **அரசு** என்ற தலைப்புக்களில் ரூஸ்ஸோ கூறும் செய்திகளிலிருந்து இக் கோட்பாடு தெரியவருகிறது.

ஒரு சமுதாயத்தைச் சேர்ந்த ஒவ்வொரு வரிடமும் காணப்படுகிற உண்மையான பொதுநல விருப்பங்களின் மொத்தத் தொகுப்பே பொதுநல விருப்பம் எனப்படும். ஒவ்வொருவரிடமும், எந்தச் செயலைப் பொறுத்த வரையிலும் தன்னலவிருப்பு என் பதும், பொதுநல விருப்பு என்பதும் காணப் படுகின்றன. தன்னல விருப்பு அடிக்கடி மாறும் தன்மையதாக இருக்கிறது. பொது நல விருப்பமே நிறைவை எப்போதும் அளிப்பதாகையால், இதுவே உண்மையான விருப்பம் ஆகும். இதன் தொகுப்பே பொதுநலத் தீர்மானம் ஆகும்.

பொதுமக்கள் சமுதாயத்துக்காக ஆற்றப்படவேண்டிய பணிகள், அல்லது கடமைகள் அல்லது அலுவல்கள் யாவை என்று ஆய்ந்து முடிவு எடுப்பதற்காக மன்ற மாகக் கூடும்போது, குறிப்பிட்ட எந்த அலுவலின் மீதும் யாரும் தன்னல நோக்கில் முடிபுகூற வழி இல்லாமல் போகிறது. எவ்வாறெனில் ஒருவர் தன்னலத்தின் பொருட்டு அவ்வலுவலின்மீது முடிபு ஏதும் கூறுவாராயின், அதனை மற்றவர்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். எனவே பொது நலனுக்கு மட்டும் உகந்த முடிபினையே அவர்கள் கூற முற்படுகின்றனர். எனவே பொதுநல முடிபு என்ற கருத்து பெரும் பான்மையாளருடைய ஆதரவான வாக்கு களில் காணப்பட இடம் இருக்கிறது; சில சமயங்களில் அது ஒரு சிலருடைய கருத்தி லும் வெளிப்படுதல் கூடும். மனிதர் இயற்கை நிலையை விட்டு ஒப்பந்தத்தின் மூலம் சமுதாயமாக (civil society) அமைகிற போது, ஒவ்வொருவரும் தனது இயற்கை உரிமைகளை அதிலுள்ள (சமுதாயத்திலுள்ள) பொதுநல விருப்பத்துக்கு விட்டுவிட்டு, சமுதாயத்தினின்றும் பிரிக்கப்பட முடியாத ஓர் கூறு அல்லது உறுப்பாக இருக்கிறர். ஆகையால் பொதுநல விருப்பத்துக்குக்

கட்டுப்பட்டிருக்குமாறு ஒவ்வொருவரும் கட்டாயப்படுத்தப்பட்டால்தான், அவருக்கு உண்மையான சுதந்திரம் அல்லது உரிமை வாழ்வு கிடைக்கிறது. பொதுநலத் தீர்மானத்துக்கு அடங்காதவர் மரண தண்டனைக்கும் உரியராவர்.

பொதுநலக் கோட்பாட்டைப் பற்றிய மதிப்பீடு பின்னர் கூறப்படுகிறது.

### 11. உடைமை: (Property)

இயற்கை நிலையில் மனிதர் தனது தேவைக்கும், உழைப்புக்கும் ஏற்ற அளவில் உலகத்துப் பொருள்களைத் தனது ஆற்றலின் மூலம் பெறுகிறார். பின்னர் ஒப்பந்தத்தின் மூலம் சமுதாயமாக இணையும்போது, தனது இயற்கை உரிமைகளைச் சமுதாயத்திற்கு விட்டுக்கொடுத்து, அவர் பின்னர் அவற்றையே சமுதாய உரிமைகளாகத் திரும்பப் பெறுவதுபோல, தனது இயற்கை நிலையிலுள்ள உடைமையையும் சமுதாயத்தின் பாதுகாப்பில் வைத்து அதனை உடைமை உரிமையாகப் பெறுகிறார். இயற்கை நிலையில் சமத்துவமின்மை காணப்பட்டது; சமுதாயத்தில், ஒழுக்க வகையான, சட்ட முறையிலமைந்த சமத்துவம் காணப்படுகிறது. இதுவே சமுதாய வாழ்க்கை நிலையில் இருக்கும் ஒரு பெரிய நன்மை ஆகும்.

### 12. சமயம் அல்லது மதம்:

மனிதன் இறைவனைப் பற்றுறுதியுடன் வணங்குதல் போதும்; கோயில்கள், பலி பீடங்கள், சடங்குகள் முதலியவை தேவை இல்லை. சமயக் கருத்தும், செயலும் மனிதனைச் சமுதாயத்தில் நன்னடத்தை உள்ளவனாக ஆக்குதல் வேண்டும். குடிகளைப் பொதுநலத்துக்குப் பயனுடையவர்களாக ஆக்கும் சமுதாயசமயம் ஏற்படுதல் வேண்டும்.

ரூஸ்ஸோவின் கருத்துக்களை வள்ளுவருடையவைகளோடு ஒப்பிடுவதற்கு மேலே கூறப்பட்ட சுருக்கம் போதுமானது. இனி ரூஸ்ஸோவின் கருத்துக்களை ஒப்பிடுவோம்.

## 4. வள்ளுவருடைய கருத்துக்களோடு ஒப்பிடுதல்:

*1.* மனித சுதந்திரத்தை எதேச்சாதிகார அரசாங்கம் அழித்துவிடாதபடி, மக்கள் வலிய புரட்சி செய்ய உரிமை உடையவர்களென்ற ரூஸ்ஸோவின் கருத்து வள்ளுவரால் யாதொரு இடத்திலும் கூறப்படவில்லை. ரூஸ்ஸோ சமுதாய அரசியல் பிரச்சினைகளை அணுகிய முறை, வள்ளுவருடைய முறையினின்றும் வேறுபட்டது. ரூஸ்ஸோ உலகியல் நோக்கிலிருந்து மனித சுதந்திரத்தைப் பற்றிய பிரச்சினையை அணுகி, கடைசியில் பொதுநலக் கோட்பாடு என்ற நீதியினடிப்படையில் அரசியல், சமுதாயப் பிரச்சினைகளுக்கு முடிவுகாணுகிறார். வள்ளுவர் 'யாவரும் நலமாக வாழ்தல் வேண்டும்' என்ற பொதுநலக் கோட்பாட்டினை ஒரு நீதியாகக் கொண்டு அரசன், அமைச்சர், நாடு, படை, குடி, கூழ், நட்பு, அரண் முதலிய உறுப்புக்களின் அமைப்பையும், செயல்களையும் பற்றிக் கூறுகிறார். எனவே இருவருடைய முறைகளிலும் பொதுநலன் என்ற நீதிக் கருத்து காணப்படுகிறது.

ஆயினும் சில வேறுபாடுகளும் காணப்படுகின்றன; வலிய புரட்சி எதற்கும் வள்ளுவர் கோட்பாடு அமைத்துக் கொடுக்காமல், அமைச்சர்கள் அரசன் தவறுசெய்யும்போது, அவனை இடித்துரைத்துத் தவற்றைத் திருத்துதல் வேண்டுமெனவும், அரசனுக்கும், அமைச்சர்களுக்கும், அலுவலர்களுக்கும், தகுதிகளும், நல்ல நோக்கங்களும், திறமைகளும் இருத்தல் வேண்டுமெனவும்கூறுகிறார்.

"இடிப்பாரை இல்லா ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்" (448)

நீதிமுறை செய்து குடிமக்களைக் காப்பாற்றுதலே மன்னன் (அல்லது அரசாங்கம்) செய்யவேண்டிய கடமை; எனவே அதனைச் செய்யும் அரசாங்கமே குடிகளுடைய கீழ்ப்படிதலுக்கும், மதிப்புக்கும் உரியது. 'ஆளுவோர் நீதிமுறை கெடாதவாறு ஆட்சி செய்வாராயின் அவரை அந்த முறைமை நெறியே காப்பாற்றும்' என்னும் பொருள்பட,

"இறைகாக்கும் வையக மெல்லாம்; அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்" (547)

என்ற குறளில் கூறியிருப்பதனால், நீதிநெறிப்பட்ட ஆட்சி ஒன்றுதான் வேண்டப்படுவதென்றும், அதற்கு மாறான தீய ஆட்சிக்கு நல்ல மருந்து நீதிநெறியான ஆட்சியே எனவும், அவர் முடிபு கொள்ளுகிறாரென்றும் கூறலாம். ரூஸ்ஸோவும் ஆட்சியாளர் செய்யும் தவறுகளைச் சுட்டிக்காட்ட சபைகள், கழகங்கள் முதலியவை இருத்தல் வேண்டுமென்று கூறினாலும், வள்ளுவர் கூறாத புரட்சிமுறையை அவர் கூறுகிறார்.

2. மேலும் ஒவ்வொரு மனிதருடைய சுதந்திரத்தையும், சமுதாயத்திலுள்ள ஒவ்வொருவரும், அரசாங்கமும் மதித்தல் வேண்டுமென்பது இரு அறிஞர்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கருத்தே. இதனை ரூஸ்ஸோ அடிமைத்தனத்தைப் பற்றிக்கூறுகையில் குறிப்பிடுகிறார். வள்ளுவர் "செங்கோன்மை' என்ற அதிகாரத்தில், 'குடிகளைப் பிறர் வருத்தாமலும், தானும் வருத்தாமலும் காப்பாற்றி, தக்கதண்டனை மூலம் குற்றங்களை ஒழித்தலே செங்கோன்மை' என்று கூறுகிறார்.

"குடிபுறங் காத்தோம்பிக் குற்றம் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்" (549)

3. சமுதாய ஒப்பந்தம் என்ற கருத்து ஒரு கற்பனையே ஆகும். இயற்கை நிலை என்பதாக ஒன்றும் இல்லை; இந்த நிலையில் மனிதன் வாழ்ந்ததற்கும், ஒப்பந்தத்தின் மூலம் சமுாயத்தில் சேர்ந்ததற்கும் வரலாற்றில் சான்று இல்லை. இதனை அரசியல் நூலாசிரியர்கள் சுட்டிக் காட்டுகிறார்கள். ஆயினும் எதேச்சாதிகாரக் கொடுங்கோல் ஆட்சியை நீக்குவதற்கு இந்த சமுதாய ஒப்பந்தம் என்ற கற்பனை பயன்படுகிறது. மேலும் ரூஸ்ஸோ இதற்குக் கொடுத்த விளக்கத்தினின்றும், 'மக்களே இறைமை உடையவர்கள்; அவர் வகுக்கும் கடமைகளே சட்டம்; அவற்றை நிறைவேற்றி வைப்பதே அரசாங்கத்தின் வேலை' என்ற முடிபுகள் வருவிக்கப்பட்டு, அவற்றின் மீது குடியாட்சி அரசாங்கக் கோட்பாடு வகுக்கப்படுவதற்கு வழி உண்டாகிறது. இங்கு சர் எர்னஸ்ட் பார்க்கர் கூறுவதை மேற்கோளாகக் கூறலாம்:

'இந்தக் கோட்பாடு மனித உள்ளம் எப்பொழுதும் பற்றிக் கொண்டுள்ள இரண்டு மதிப்புக்களை (Values) வெளிப்படுத்துகிறது; அவையாவன: சுதந்திரம் (Liberty), அதாவது மனித விருப்பம் அல்லாமல், மனித ஆற்றல் அரசாங்கத்திற்கு ஆதாரமாக அமையவில்லை என்பதும்; நீதி (Justice), அதாவது நீதியே அல்லாமல், வன்மை என்பது எல்லா அரசியல் சமுதாயத்துக்கும், அரசியலமைப்புக்கும் ஆதாரமாக அமைந்திருக்கவில்லை என்பதும் ஆம்.' இதுவே அரசினுடைய தோற்றத்தைப் பற்றித் தற்காலத்தில் அறிஞர் பலரும் ஏற்றுக் கொண்ட கருத்து. சமுதாய ஒப்பந்தம் என்ற கற்பனைக் கருத்தை வள்ளுவர் தமது நூலில் எவ்விடத்தும் குறிப்பாகவும் காட்டவில்லை; அவர் அதனை ஆதாரமாக வைத்து நீதிக்கருத்தை வகுக்கவில்லை. அதற்கு மாறாக 'குடிகள் நலனே, ஆளுவோர் நோக்கம்' என்ற கொள்கையை மையமாக

வைத்து அரசாங்க அமைப்பு, அமைச்சர், அரசனுடைய ஆட்சி முதலியவைகளை வரையறை செய்கிறார். கொடை, அருள், செங்கோல்முறை (Justice), குடிகாத்தல் முதலியவை அரசர்களுடைய கடன் ஆகும்.

"கொடை, அளி, செங்கோல், குடிஓம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க்கு ஒளி (390)

குடிகளைக் காப்பாற்றுகின்ற ஆட்சியிலேயே உலகமக்கள் வாழ்வார்கள்.

"குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு" (544)

அமைச்சர் செய்யத்தக்க செயலை ஆராயவும், அதற்குரிய வழிகளை ஆராய்ந்து செய்தலும், துணிவாகக் கருத்தைச் சொல்லுதலும் வேண்டும்.

"தெரிதலும், தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்லது அமைச்சு' (634)

இக்கருத்துக்களெல்லாம், இக்காலத்தில் கொள்ளப்படும், மேலே கூறப்பட்ட **மக்கள் விருப்பம், நீதி** என்ற இரு கருத்துக்களையும் ஒத்து இருக்கின்றன. செய்யத்தக்க செயல்களே நீதியோடு மக்கள் நலனுக்காகச் செய்யப்படும் செயல்களாகும். எனவே வள்ளுவருடைய நூல் ரூஸ்ஸோவின் சமுதாய ஒப்பந்தமென்ற கற்பனைக்கு இடந்தராவிடினும், அவரும், இக்காலத்தவரும் சுட்டிக்காட்டும் மக்கள் விருப்பம், நீதி என்ற இருகருத்துக்களையும் தன்னகத்தே கொண்டு விளங்குகிறது.

4. **அரசு** என்பதைப் பற்றி ரூஸ்ஸோ கூறியுள்ள கருத்துக்களையும், வள்ளுவருடைய மேற்கூறப்பட்ட இறைமாட்சி, செங்கோன்மை, அமைச்சியல் முதலிய கருத்துக்களோடு ஒப்பிட்டுக்கூற இயலும். ஆனால், அரசு என்பது பல உறுப்புக்கள் சேர்ந்த ஒருடம்பு போன்றிருப்பதால், எவ்வாறு உடம்பு, தனது உறுப்புக்களுக்கு ஊறு செய்யாதோ, அதேபோல அரசும் தனது உறுப்பு போலிருக்கும் தனிப்பட்டவர்களுக்கு ஊறு செய்ய இயலாது, என்று ரூஸ்ஸோ கூறுவது மறுப்புக்குள்ளாவதாகும். உடம்புக்கு அரசை ஒப்பிட்டுக்கூறும் பண்டைய கிரேக்கமுறை தவறான, இடர்ப்பாடான முடிபுகளைத் தருகிறது. உடம்பிலுள்ள ஒவ்வொரு உறுப்பும் அதனோடு சேர்ந்துதான் உயிரோடிருக்கவும், உடம்பு கருதுவதைச் செயல்படுத்தவும் முடியும்; ஆனால், அரசில் ஓர்பாகமாயுள்ள அரசாங்கம் மட்டுமல்லாமல், அதில் உறுப்புகளைப் போல வாழும் ஒவ்வொரு குடிஆளும் தானே சிந்தித்துச் செயல்படவும், தனித்து இயங்கவும் தகுதியோடு இருக்கிறார். மேலும் **10 பொதுநலக் கருத்து** (General will) என்ற ஜனசமூக இச்சைக்குக் கீழ்ப்படிந்து இருத்தலே உண்மையான சுதந்திரமாகுமெனவும், எனவே அதற்குக் கீழ்ப்படிந்து நடக்குமாறு ஒவ்வொருவரும் கட்டாயப் படுத்தப்பட வேண்டுமெனவும் ரூஸ்ஸோ கூறுகிறார்; இதிலிருந்து **அரசின் எதேச்சாதிகாரம்** (State absolutism) என்ற முடிபு பெறப்படுகிறது. ஒருவன் நன்மையை அடையும் பொருட்டு அவனுடைய சுதந்திரத்தைக் கட்டுப்படுத்துதல் அரசின் கடமை என்பது ரூஸ்ஸோவின் முடிபு. இதற்கு ஒப்பாக 'குற்றங்கடிதல் வேந்தன் தொழில்' என்ற வள்ளுவருடைய கருத்து (குறள் 549) கூறப்படலாமாயினும், ரூஸ்ஸோ 'நன்மையை அடையாதவனுக்கு நன்மையை வலிந்து புகட்டுதல் சரி' என்று கூறுவதற்கும், 'பொதுநலனுக்கு இடையூறான குற்றங்களைத் தண்டனையால் ஒழித்தல் சரி' என்று வள்ளுவர் கூறுவதற்கும் வேறுபாடு இருக்கிறது. வள்ளுவர் கூறும் ஒறுப்பு அல்லது தண்டனை குற்றங் களைதற்காக. ரூஸ்ஸோ கூறும் கட்டாய அல்லது வன்செயல்முறை ஒருவனை நல்ல குடிமகனாக ஆக்குவதற்காகக் கையாளப்படுவது. இந்த வகையாகப்

பார்க்கும்போது ரூஸ்ஸோவின் சமுதாய ஒப்பந்தம் – பொதுநலன் விருப்பம் முதலியவை அரசாங்க எதேச்சாதிகார அமைப்புக்கு இடந்தருகிறது. ரூஸ்ஸோவின் முறை இக்கால அறிவியலான நோக்கிற்கு ஒத்துவரவில்லை. ஒருவனை நல்லவகை ஆக்குவதும் கட்டாயமான முறையில் அல்லாமல், நல்வாழ்வைப் பற்றி அவன் அறிந்து கொள்ளுமாறு செய்தலே செயத்தக்கது ஆகும். இம்முறையே வள்ளுவருடைய கருத்துக்கு ஒத்தது.

5. சமுதாய அரசு ஏற்படுவதற்குமுன் மனிதன் இயற்கை நிலையில் விலங்குபோல் தன்விருப்பம் ஒன்றையே கருதிவாழ்ந்தானெனவும், ஒப்பந்தத்தின் மூலம் சமுதாய அரசில் சேர்ந்ததும் அறிவுக்குகந்தவாறு செயல்பட்டானெனவும், ரூஸ்ஸோ கூறும் கற்பனைக்குச் சிறிதும் சான்று இல்லை. பண்டைக்காலத்தில் மனித வாழ்க்கை என்பது சமுதாயத்தில்தான் இருந்ததெனவும், இயற்கை நிலையில் தனியாகச் சுதந்திரத்திலிருந்ததற்குச் சான்று இல்லையெனவும் பண்டைமனிதசமுதாய வரலாறுகள் காட்டுகின்றன. வள்ளுவர் வகுத்த அரசியலிலே கற்பனைக்கே இடம் இல்லை. சமுதாயப் பாதுகாப்பு என்ற நீதிக்கருத்தே அதில் ஆதாரமாக அமைந்துள்ளது.

6. 7. **அரசாங்கம், நிர்வாகஅலுவல்** முதலியவற்றின் நோக்கம், ரூஸ்ஸோ, வள்ளுவர் ஆகிய இருவருக்கும் ஒன்றுதான். மக்கள் நலனென்பதே இவற்றின் நோக்கம். 8. ஆனால் அரசாங்கத்தின் ஒரே அலுவல் சட்டத்தை நிறைவேற்றுவது என்றும், **சட்டங்களைச் செய்வது என்பது** குடிமக்கள் யாவராலும் செய்யப்படவேண்டிய காரியம் என்றும் ரூஸ்ஸோ கூறுவது நடைமுறையில் இக்காலத்தில் கொள்ளப்படவில்லை ; வள்ளுவரும் " மக்கள் யாவரும் சட்டம் செய்ய வேண்டு" மென்றோ, அரசன் நிர்வாக அதிகாரியாக மட்டும் இருக்க வேண்டு" மென்றோ கூறவில்லை. தற்காலத்தில் பரந்த நாடுகளில் வாழும் எல்லாக் குடிமக்களாலும் நாட்டின் சட்டங்களைச் செய்தலில் பங்குகொள்ள இயலாது ; தங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் மூலம்தான் மறைமுகமாக இவ்வலுவலைச் செய்ய இயலும். எனவே ரூஸ்ஸோவின் கருத்துக்குமாறாகத் தற்காலக் குடியாட்சி அரசாங்கங்கள் சட்டம் இயற்றி நிர்வாகம் செய்கின்றன. (9) ஆனால் நாட்டின் அடிப்படைச் சட்டங்களைச் செய்தலில் (அரசியலமைப்புச் சட்டங்களைச் செய்தலில்) குடிகளுக்குப் பங்கு இருக்கிறது ; **குடிஒப்பம் (Rerendum) தன் முயற்சி** முறை (initiative) முதலிய வழிகள் மூலம் மேற்படிச் சட்டங்கள் குடிகளுடைய நேர்முகமான கருத்தை ஒட்டியே அமைக்கப்பட வேண்டுமென ஐக்கிய அமெரிக்கநாடு, ஸ்விட்சர்லண்ட், ஆஸ்திரேலியா இந்தியா முதலிய குடியாட்சி நாடுகளில் வகை செய்யப்பட்டுள்ளன. இவ்வாறு குடிகளுக்குச் சட்டம் இயற்றும் அதிகாரம் உண்டென வள்ளுவர் கூறாவிடினும், 'உலகத்து உயர்ந்தவரது நட்பு பெறத்தக்கது' எனவும் 'உலகம் எவ்வாறு நடைபெறுகிறதோ அவ்வாறு ஒவ்வொருவரும் நடப்பதே அறிவு' எனவும்,

" உலகம் தழீஇயது ஒட்பம் (425),

" எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு" (426)

எனவும் கூறியிருப்பதை நோக்குமிடத்து, "மனித சமுதாயத்தின் சட்டம் மனிதர் யாவருடைய நலனுக்கும் உகந்ததாக இருத்தல் வேண்டும்" என்ற ரூஸ்ஸோவின் கருத்துக்கு மாறுபட்டதன்று என்று தெரிகிறது. **11. உடைமையைப்** பற்றிய ரூஸ்ஸோவின் கருத்து வள்ளுவருடைய கருத்துக்கு மாறானதன்றெனினும், அது புதிய

தோர் கருத்து ஆகும்; எவ்வாறெனின் அது சமுதாய ஒப்பந்தத்தோடு இணைத்து ரூஸ்ஸோவினல் கூறப்பட்டுள்ளது. வள்ளுவர் நீதிக்கருத்தையே உடைமையைத் தேடுதலுக்கும் பயன்படுத்தலுக்கும் பொருந்துமாறு கூறுகிறுர்.

"அருளொடும், அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்" (755)

எனவும்,

"ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்" (214)

எனவும் அவர் கூறுவதிலிருந்து பொருளைத் தேடுதலிலும், செலவிடுதலிலும் சமுதாய நலன் என்ற நீதி வலியுறுத்தப் படுவது தெரிகிறது.

*12.* **சமயம்** என்பதைப் பற்றி ரூஸ்ஸோ கூறும் கருத்து வள்ளுவருடைய மெய்யுணர்வுக் கருத்துக்கு மிகவும் ஏற்புடைத்தாக இருக்கிறது. மயக்கம் நீங்கி குற்றம் இல்லாத மெய்யுணர்வை அதாவது செம்பொருளின் உண்மையை உணர்ந்து, வாழ்பவர்க்கு அறியாமை நீங்கி, இன்பம் கிடைக்கும்' என்ற கருத்துக்களை வள்ளுவர்,

"இருள் நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு" (352)

"பிறப்பென்னும் பேதைமைநீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு," (358)

என்ற குறள்களில் கூறுகிறுர். இதனைக் காணும் போது, சமுதாய நலனுக்கு மாருக இல்லாத தூய அன்புநெறியையே சமய நெறியாக அவர் வகுத்தாரென விரிந்த பொருளில் கூறலாம்.

## 5. முடிவுரை

இதுகாறும் நாம் இவ்விரு அறிஞர் களுடைய ஒரு சில கருத்துக்களைக் கூறியும், அவற்றை ஒப்பிட்டுச் சீர்தூக்கிப் பார்த்தும் வந்தோம். அரசாங்கத்தின் நோக்கம் பொதுமக்கள் நலன், முதலியவைகளையும், வேறு சில கருத்துக்களையும் பொறுத்த மட்டில் இவ்விரு அறிஞர்களுக்குமிடையே பெருமளவில் ஒற்றுமை இருக்கிறது. ரூஸ்ஸோவின் கருத்துக்குக் கற்பனையே (சமுதாய ஒப்பந்தம் என்ற ஒரு கற்பனையே) ஆதாரமாக இருப்பதால், அவருடைய நல்ல கருத்துக்களோடு, ஒருவனை வலுக்கட்டாய மாக நல்லவனுக ஆக்குதல், வன்செயல் புரட்சி முதலிய பல தவருன, இடர்ப்பாடான குறைகளும் காணப்படுகின்றன. இவற்றை நீக்கியே, ரூஸ்ஸோ கூறிய **'மக்களே இறைமை உடையவர்கள்'** என்ற கருத்து ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. இக் காலக்குடியாட்சி அரசாங்களில் குடிகள் நலனென்ற நீதிக்கருத்தை மையமாக வைத்தே வள்ளுவர் வகுத்த அரசியல் அமைந்திருப்பதால், அதில் எந்த கற்பனைக்கும் இடமே இல்லை. கற்பனை ஆதாரத்திலிருந்து ஒரு நீதிக்கருத்தை நோக்கி ரூஸ்ஸோ செல்லுகிறுர்; வள்ளுவரோ ஓர் நீதிக்கருத்தை ஆதாரமாக வைத்து உலகியலைப்பற்றிச் சரிவர நமக்கு உணர்த்துகிறுர். ரூஸ்ஸோ சுட்டிக்காட்டும் பொதுநல விருப்பம் என்ற கோட்பாடு சமுதாயத்தினிடையே ஒருமைத்தன்மையை, யாவருடைய நலனுக்கும் உகந்த வேற்றுமை களுக்கு இடங்கொடுத்து, வளர்க்கிறது; இது யாவரிடமும் நிலையாகக் காணப்படுகிற ஒரு உணர்வைக் காட்டுகிறது; பொதுமக்கள் நலன் என்பது எப்போதும் சரியான ஒன்ருகவே கொள்ளப்படுகிறது. எனவே இதனை அடைவதற்கு அரசாங்கங்கள் கையாளும் வழிகள் தவறுடையனவாக இருத்தல் கூடுமாயினும், அவைகளின் செயலுக்கான குறிக்கோளை இக்கருத்துக் காட்டுகிறது. இவ்விரு அறிஞர்களும் சமுதாய நலன் அல்லது குடிகள் நலன் என்ற கோட்பாட்டை வகுத்து, மக்களை வாழ்விக்க எண்ணினர். எனவே இவர்களை வாழ்த்தி, மனித சமுதாயத்தையும் வாழ்த்துவோம்!

வாழ்க இவ்வையகம்!

# வள்ளுவரும் - அப்பரடிகளும்

செஞ்சொற் கொண்டல்,

புலவர், திரு. சொ. சிங்காரவேலன், எம். ஏ., (டிப்., மொழியியல்)

அ. வ, அ. கல்லூரி – மாயூரம்.

[தமிழ் மண்ணில் ஐந்து அல்லது ஆறு நூற்றாண்டுகள் இடைவெளியில் வாழ்ந்திருந்த அறநூல் ஆசிரியர் வள்ளுவரோடு, அருள்நூல் ஆசிரியர் அப்பரடிகளை இணைத்துக் கருத்தொற்றுமை காட்டுவது இக்கட்டுரையின் நோக்காக அமைகிறது. அறவடிவில் ஆண்டவனைக் காணும் தன்மையிலும், அறத்திற்கு விளக்கம் தருவதிலும், மனித உடலின் நிலையாமை காட்டுவதிலும், உறுப்புக்களின் பயன்கள் பேசுவதிலும், பிறவிப் பெருங்கடலைக் கடத்தற்கு வழி கோலுவதிலும் இவ்விரு பெருமக்களும் கருத்து வளத்தால் மிக நெருங்கிச் செல்லும் பான்மையினை ஆசிரியர் அழகுற விளக்குகிறார். மேலும், திருக்குறள் தொடர்கள் பல அப்பரடிகள் வாக்கில் புதுமை பூத்து விளக்கமுற்றுச் சிறப்பதனைச் சான்று காட்டி நிறுவி, வள்ளுவர் கருத்தைத் தழுவிச் செல்லும் அப்பரடிகளின் பெருமை பேசி, சான்றாண்மை பற்றிய இப்பெருமக்களது எண்ணத்தை இனிதெடுத்து மொழிந்து, கோத்திரங்கள் போன்ற பேதங்களைச் சாடுவதிலும், புலனடக்கத்தைப் போற்றுவதிலும் அறநூலும், அருள் நூலும் முழுதும் ஒத்துச் செல்லும் தன்மை விளக்கி இக்கட்டுரை அழகுறக் கருத்தாக்கம் சேர்க்கிறது.]

## தெய்வப்புலவரும் திருநாவுக்கரசரும்:

பொதுமறை தந்த தெய்வப் புலவர் திருவள்ளுவர்; வையகம் வாழ அறநெறி வகுத்த அறிவுத் தந்தை அவர். அறத்தாறு விளக்க வந்த ஒழுக்கம் என்னும் பகலவன். திருநாவுக்கரசர் தமிழ் கூறு நல் உலகம் வாழச் சிவநெறி தந்த செந்தமிழ் ஞாயிறு; தமிழ்மொழிக் காவலர்; தமிழ் மரபு வித்தகர்; அருள்நெறி விளக்க வந்த அண்ணலார்; தொண்டு என்னும் ஒளிக்கதிர் பரப்பிச் சிவநெறிக் களத்துப் பேரொளி வெள்ளம் வழங்கிய நிலாப் போல்வார், முன்னவர் உலகிற்கு வழங்கியது அறம்; பின்னவர் வையகத்திற்கு வழங்கியது தொண்டு. பொது அறம் ஈந்தவர் செந்நாப் போதார்; சிறப்பு அறமாம் சிவநெறி ஒழுக்கம் காத்தவர் வாமூர் வள்ளலார்; வாழ்வின் மேல்வரிச் சட்ட விளக்க நூல் தந்தவித்தகர் முன்னவர்; நடைமுறை வாழ்வின் அன்பெனும் சிறப்பியல் செழிக்கப் பத்திப்பாட்டுக்களைப் பொழிந்தவர் பின்னவர். முப்பாலில் நாற்பால் மொழிந்த திறம் தெய்வப் புலவருடையது. வீட்டுப்பாலில் அறமும் இன்பமும் மொழிந்த திறம் திருநாவுக்கரசருடையது, சங்ககாலத்தில் எழுந்த சான்றோர் வள்ளுவர்; பல்லவர் காலத்தில் எழுந்த பண்பினர் அப்பரடிகள். அடிகளார்

திருமுறையில், பொதுநெறிப் புலவர் தந்த கருத்துக்கள் ஆங்காங்குச் சுடர்விடுகின்றன. அவற்றின் ஒளியிலே, கருத்தொற்றுமை காண்டலே இங்கு நம் சிந்தனை.

### கருத்தொருமை காண்டல் :

ஒத்த கருத்துடைய வித்தகர் வாக்குக் களை ஒப்பிட்டுக் காணுங்கால் விளையும் இன்பம் எல்லை யற்றது. வேற்றுமைகள் மடிந்து, ஒற்றுமை தலையெடுக்கும் கருத்து நாகரிகம் கமழ்தலை அப்போது காணலாம்; கௌடில்யரின் அர்த்தசாத்திரமும் வள்ளுவமும், கண்ணனின் கீதையும் வள்ளுவமும், ஏசுபிரானின் மலைப்பொழிவும் இன்குறளும், பாலிமொழி இலக்கியங்களும் திருக்குறளும் என்றெல்லாம் வரும் இணைப்புக்கள் அறிவுடை உலகத்தின் சிந்தனையை உயர்த் துவதுடன் ஒப்பிட்டுக் காண்டலால் உருவாகும் உயர்ந்த நாகரிக வழிப்பட்ட ஆய்வியல் வகுக்கவும் அடிநிலை ஆகும்.

### தமிழ்மொழித் தலைவர் அடிகள்

திருநாவுக்கரசர் தமிழ்ப் பேரிலக்கியங் கள் அனைத்தையும் முற்றக் கற்ற மூதறி வாளர்; சமயப் பொறை சான்ற திருவுளத் தினர். திருக்குறள் முதலிய உயர்ந்த நூற் கருத்துக்களை அடிகளார் வாக்கிற்காணலாம். இளமையிலேயே கற்பன கற்று உயர்ந்தவர் அடிகளார் என்பது சேக்கிழார் திருவாக்குக் களான் உணரப்பட்டதே. **'தமிழ் மொழித் தலைவர்'** என்று பெரியபுராணத்தின் ஆசிரியப் பெருமான் அடிகளாரைப் பாராட்டியுள்ளமை இங்கு நினைக்கத் தக்கது.[1]

### அறமும் அண்ணலும்

கடவுளை 'அற' வடிவாகவும் 'அறிவு' வடிவாகவும் தொழுவது வள்ளுவர்க்குப் பெரிதும் ஒத்த கருத்தே ஆகும். 'வாலறிவன்' என்றும், 'அறவாழி அந்தணன்' என்றும் வள்ளுவர் கடவுளைச் சுட்டுவர்.[2] இவ்வாறே அடிகளும் பல இடங்களில் வழங்குவர்.

'தயா மூல தன்மமென்னும் தத்துவம்' என்று சிவநெறிக்குப் புதுப் பெயர் ஒன்று காண்பர் அடிகள்,[3] இது வள்ளுவத்தாலும், சமண நூற் பயிற்சியாலும் விளைந்த ஒன்று கலாம், அன்பும், அறமும் ஆகிய இரண்டுமே சிவநெறி உணர்வினர்க்குரிய அடிநிலைக் கோட்பாடுகள் என்று அடிகள் கருதினராதல் வேண்டும். 'அன்பின் வழியது உயிர்நிலை,' 'அறத்தாற்றின் இல் வாழ்க்கை ஆற்றல், 'அறத்தான் வருவதே இன்பம்' முதலிய எண்ணற்ற வள்ளுவர் வாக்கமைதிகள் இங்கு நினைவில் எழுகின்றன.[4] அடிகளாரின் திரு அங்க மாலைத் திருப்பதிகமும், பழமொழிப் பதிகமும் திருக்குறட் பிழிவாக விளங்கு கின்றன.

> "கோளில் பொறியிற் குணமிலவே
> எண்குணத்தான்
> தாளை வணங்காத் தலை"

என்று செந்நாப் போதார் எதிர் மறையிற் கூறியமை,[5]

> "தலையே நீ வணங்காய்"
>
> "கைகாள் கூப்பித் தொழீர்"

முதலிய உடம்பாட்டு விதிகளாக அடிகளார் திருவாக்கில் விளக்கம் பெறுகின்றன.[6] மண்

---

1. "சண்பை நாடுடைய பிள்ளை **தமிழ்மொழித் தலைவரோடு**, மண்பயில் சீர்த்திச் செல்வ மாமறைக்காட்டு வைகி"– திருத்தொண்டர் புராணம், 2501 (சமாசப்பதிப்பு - 1950)
2. திருக்குறள் – கடவுள் வாழ்த்து – 2, 8,
3. திருநாவுக்கரசர் தேவாரம் – 2291(சமாசப் பதிப்பு – 1941).
4. திருக்குறள் – 80, 46, 39.
5. Ibid – 9.
6. திருநாவுக்கரசர் தேவாரம் – 4-9. 82-93.

னுலகில் மக்களாகப் பிறந்தவர் அனைவரும் எல்லாம் வல்ல பரம்பொருளைப் பணிந்து தம் மனமாசு நீங்கப் பெற்று விழுமியராதல் வேண்டும் என்பதும், அவ்விழுப்பமே 'வேண்டாமை அன்ன விழுச்செல்வம்' தரும் என்பதும்,[7] மெய்த்துறவுடன் கூடிய – அவா வறுத்த அவ்வுயர்நிலையே, பேராவியற்கை தரும்' என்பதும்[8] வள்ளுவர் வற்புறுத்திய கோட்பாடுகளின் சாரம் என்று கூறலாம். இதனை அடிகளார் திருவாக்குக்களில் ஆங்காங்குக் கண்டு இன்புறலாம்.

### மனமாசின்மை – அறம்

திருவாரூர்ப் பதிகம் ஒன்றில், 'அறத்தையே புரிந்த மனத்தனாய், ஆர்வச்செற்றம் குரோதம் நீக்கியுன் திறத்தனாய் ஒழித்தேன் திருவாரூர் அம்மானே' என்று அடிகளார் பாடுகின்றார்.[9]. திருவள்ளுவருடைய குற்றங்கடிதல் நினைவு இவ்விடத்து ஏழாமற் போகாது, அன்றியும் மனமாசு நீங்கப் பெறுவதே அறம் என்ற பகுதி, 'மனத்துக் கண் மாசிலனாதல் அனைத்தறன்' என்ற திருக்குறட்கருத்தை ஒட்டியெழுந்துள்ளமை உணரலாம்.[10]. திருவள்ளுவருடைய ஈகையறம் அடிகளார் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது எனலாம்.

> 'இரப்பவர்க் கீய வைத்தார்
> ஈபவர்க் கருளும் வைத்தார்
> கரப்பவர் தங்கட் கெல்லாம்
> கடுநரகங்கள் வைத்தார்'

என்று அடிகளார் பாடும் பகுதியை இதற்கு எடுத்துக்காட்டாகக் குறிக்கலாம்.[11] இரப்பவர்க் கொன்று ஈதலே அறம் என்பதும், அவ்வாறு இல்லை என்னாது ஈபவர்க்கே இறைவனுடைய பேரருள் கிட்டும் என்பதும், அடிகளார் தெளிவுறுத்தும் செய்திகள். அன்றியும், வைத்துக் கொண்டு 'இல்லை' என்று கூறிக் கரப்பவர்க்கு இறைவனின் ஒளிஉலகம் கிடைக்காது; இருள் உலகமே ஆம் என்று குறிப்பது, கரக்கும் மக்கட்குத் தக்க கருத்துரையாகவும் அமைகின்றது.

### பற்றற்றான் பற்று

உடல், இளமை, செல்வம் முதலியன நிலைக்கமாட்டா ஆதலின், இறைவனுடைய அருட்பற்றை அறிந்து பற்றிக் கொள்ள வேண்டுவதே கடன் என்று, 'நிலையாமை', 'மெய்யுணர்தல்' ஆகிய அதிகாரங்களாற் திருவள்ளுவர் அறிவுறுத்துவர், 'பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு' என்று முடிப்பர்.[12] அடிகள் உலக நிலையாமையை மிகத் தெளிவாகப் பலவிடங்களில் விளக்குவர்.

> "ஐயினால் மிடறடைப் புண்டாக்கை விட்டு
> ஆவியார் போவதுமே அகத்தார் கூடி
> மையினாற் கண்ணெழுதி மாலைசூட்டி
> மயானத்தில் இடுவதன் முன்"

என்று அழகுபட இவ்வுடல் நிலையாமையை அடிகளார் விளக்கிய இடங்கள் எண்ணற்றவை.[13]

> "நாச் செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
> மேற்சென்று செய்யப் படும்"

என்ற கருத்து விளக்கங்களாக அமைந்த பாடற் பகுதிகளும் பலவாம்.[14]

7. திருக்குறள் – 363.
8. Ibid – 9.
9. திருநாவுக்கரசர் தேவாரம் – 205
10. திருக்குறள் – 34.
11. திருநாவுக்கரசர் தேவாரம் – 383,
12. திருக்குறள் – 350.
13. திருநாவுக்கரசர் தேவாரம் – 2702, 2705, பிற
14. திருக்குறள் – 335,

### திருவருட்செல்வம்

இறைவனுடைய பேரருள் இயல்புகளை எடுத்துரைக்கும்போது, 'கண்டாய்' 'கண்டாய்' என்று கனிந்துரைக்கும் திருப் பதிகமாகிய திருமறைக்காட்டுத் திருத் தாண்டகத்தில், 'ஏரி நிறைந்தனைய' செல் வன் கண்டாய்' என்று ஆமூர் வள்ளலார் உரைப்பது, 'ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம், பேரறிவாளன் திரு' என்ற குறட் பகுதியை அடியொற்றியே எழுந்தது என்று கருதவேண்டியுள்ளது.[15]

இறைவனுடைய மெய்ம்மை சேர்ந்த புகழை விரும்பியோரை, இருள் சேர் இரு வினைகளும் சேரா என்பர் வள்ளுவர். இதனை எண்ணற்ற பாடற் பகுதிகளில் எடுத் துரைப்பர் அடிகளார்.

> "நன்று நாடொறும் நம்வினை போய்அறும்
> என்றும் இன்பம் தழைக்க இருக்கலாம்"

என்பன போன்ற பாடற் பகுதிகளில், வினை நீக்கம் விளம்பப் பட்டிருக்கின்றமையை உணரலாம்.[16]

### தலைதாழ்க

திருவங்கமாலைத் திருப்பதிகத்திற் கூறியபடியே தலையினால் இறைவனைத் தாழ வேண்டும் என்று அடிகளார் அறிவுறுத்தும் இடங்களும் பலவாகும். எதிர்மறை முகத் தான், சில மதியிலிகள் தாம் உய்யும் நெறி அறியாராய், மலரிட்டு அருச்சிக்கும் திறம் இல்லாராய், பழனம் மேவிய பரமன் திருவடிக்கண் தலையால் வணங்காராய்க் கெடுகின்றார்கள் என்று அறிவுறுத்தும் கீழ் வரும் திருப்பாட்டை இதற்கு எடுத்துக் காட்டலாம்.[17]

> "மார்க்கம் ஒன்றறியார் மதியில்லிகள்
> பூக்கரத்திற் புரிகிலர் மூடர்கள்
> பார்க்க நின்று பரவும் பழனத்தான்
> தாட்கண் நின்று தலைவணங்கார்களே."

### பிறவிக்கடலிற் பெரும்புணை

திருவையாற்றுப் பெருமான் திருவடித் திறம் பாடும் திருவிருத்தப் பதிகத்தில், 'துன்பக் கடலிடைத் தோணித் தொழில் பூண்ட தொண்டர் தம்மை, இன்பக் கரை முகந்து ஏற்றும் திறத்தன' என்று அடிகளார் பாடுதல், பிறவிக் கடலில் இறைவன் திருவடித் தலமே புணையாம் பெற்றியைத் தொண்டர்மேல் வைத்து விளக்கும் சீரிய கருத்துரை ஆகும்.

> "இருள்தரு துன்பப் படலம் மறைப்ப மெய்ஞ்
> ஞானமென்னும்
> பொருள்தரு கண்ணிழந் துன்பொருள் நாடிப்
> புகலிழந்த
> குருடரும் தம்மைப் பரவக் கொடு நர
> கக்குழி நின்று
> அருள்தரு கைகொடுத் தேற்று மையாறன்
> அடித்தலமே"

என்ற திருப்பாட்டு, அஞ்ஞானத்தால் மெய்ஞ்ஞானக் கண்ணிழந்து வாடும் குருடர்க்கும் அருள் சுரக்கும் இறைவனின் தனிப்பெருங் கருணையை விளக்குவதாகும். 'கண்ணுடைய ரென்பவர் கற்றோர்' என்ற குறள் நெறி விளக்கம் இதில் நிழலாடக் காணலாம்.[18]

### தொடர் விளக்கம் காணல்

எழுத்துக்கள் எல்லாம் அகரத்தை முதலாக உடையன; அதுபோல் உலகம் ஆதிபகவனாகிய இறைவனை முதலாக உடையது என்று கூறியே திருக்குறளைத் தொடங்கினர் தெய்வப் புலவர்.

---

15. திருநாவுக்கரசர் தேவாரம் – 2321; திருக்குறள் – 215.
16. திருக்குறள் – 5; திருநாவுக்கரசர் தேவாரம்– 1486.
17. திருநாவுக்கரசர் தேவாரம் – 1423.
18. Ibid – 886; திருக்குறள் – 393.

'ஆனைத்து முன்னெழுத்தாய் நின்றார் போலும்' என்று இக்கருத்தை இனிது புலப்படுத்தினர் ஆளுடைய அரசர்.[19] 'மலர்மிசை யேகினான்' என்னும் தொடர்ப் பொருள் அடிகளார் கருத்தை யீர்த்தமையால் தான்,

'நின்ற பூமேல் எழுந்தருளி யிருந்தானை'

'அடித்தாமரை மலர்மேல் வைத்தார்'

முதலிய தொடர்கள் அவர் திருவாக்கிற் பயிலக் காண்கின்றோம்.[20] 'வேண்டாமை வேண்டுவதும் இல்லான்' என்று அடிகளார் பாடுவது, 'வேண்டுதல் வேண்டாமை இலான்' என்ற குறள் தொடர்ப் பொருளை உள்ளுறுத்தே என்று உணரலாம்.[21]

இறைவனை 'எண் குணத்தான்' என்று போற்றிப் புகழ்ந்தார் பொதுமறைப் புலவர். திருநாவுக்கரசர் அதனைப் போற்றி எடுத்தாண்டு மகிழ்கின்றார்:[22]

'எட்டுக் கோலாம் அவர் ஈறில் பெருங்குணம்'

'கலைஞானிகள் காதல் என் குணவன் காண்'

'எட்டு வான் குணத்து ஈசன் எம்மான்'

'பரமர் போலும் என் குணத்தார்'

'தனக்குவமை இல்லாதான்' என்று இறைவனை வள்ளுவர் சுட்டியதனை அடிகளார் பின்வருமாறு விளக்கி மகிழ்வர்:[23]

'மற்று ஆரும் தன் ஒப்பார் இல்லாதான்'

இறைவனை அறவடிவாய் அடிகளார் சுட்டி மகிழ்வதுடன், 'நீதி' என்றும் எடுத்துப் பரவுகின்றார்.

'நீதியை நிறைவை மறை நான்குடன் ஓதியை'

'மறை வல்லாய் நீதியானே'

'நெஞ்சுள் நின்று நினைப்பிக்கும் நீதியை'

'நீதியை நிதியை நித்திலக் குன்றினை'

'நீதியானை நியமநெறிகள் ஓதியானை'

என்பன எடுத்துக்காட்டுக்கள்.[24]

### கருத்துத் தழுவல்

திருவள்ளுவர், இனிய சொற்கள் உளவாக ஒருவன் இன்னாத சொற்களை இயம்புதல், கனியிருப்பக் காய் கவர்ந்தற்று' என்றார். தம் வாழ்நாளிற் பெரும்பான்மையும் சமணசமயமாகிய மாற்றுச் சமயச் சூழ்நிலையிற் கழித்ததை நினைந்து பாடும் அடிகளார், இவ்வுவமையை,

'ஆரூரரைக் கையினால் தொழாதொழிந்தே
கனியிருப்பக் காய்கவர்ந்த கள்வனேனே'

என்று எடுத்தாண்டு சிறப்பித்துள்ளார்.[25] இவ்வாறே 'குடம்பை தனித் தொழியப் புட் பறந்தற்று' என்ற தெய்வப் புலவர் உவமையை அடியொற்றியதே கீழ்வரும் தேவாரப் பகுதி.'[26].

'கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப்பள்ளியுளான் கழல் சேர்மினே',

இருள் நீக்கத்திற்கு இறைவன் நல்லருளால் மருள் நீங்கப் பெறும் மாசறு காட்சியே அடிப்படையாவது என்பது வள்ளுவர் வற்புறுத்திய கருத்து,

'இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு'

'மறப்படும் என்சிந்தை மருள் நீக்கினான் காண்
வானவரும் அறியாத நெறிதந்தான்காண்'

19. திருநாவுக்கரசர் தேவாரம் – 2368.
20. Ibid – 2918, 2296.
21. Ibid – 2551.
22. Ibid – 184, 2718, 1951, 2247.
23. Ibid – 2087.
24. Ibid – 1087, 3064, 1991, 1992, 3010.
25. திருக்குறள் – 100;
திருநாவுக்கரசர் தேவாரம் – 42.
26. திருக்குறள் – 338;
திருநாவுக்கரசர் தேவாரர் – 1901.

என்று அக்கருத்தைத் தம் அநுபவம் காட்டி அறிவுறுத்துகின்ரூர் அடிகளார்.[27]

### சான்ருண்மைத்திறம்

சான்ருண்மை உடையார் செயல்களேயும் பண்பு நலங்களேயும் விரித்துப் பேசிய பொதுமறைப் புலவர்,

'ஊழிபெயரினும் தாம் பெயரார் சான்ருண்மைக்கு
ஆழியெனப் படுவார்'

என்றுரைத்தார், பெரிய கடல் கரையில்லாது பொங்கி உலகம் எல்லாம் அறிய வரும் ஊழிக்காலத்தும் தம் பண்பினின்றும் சிறிதும் திரிய மாட்டார்கள் என்பது இதன் கருத்து.

'வானம் துளங்கிலென் மண் கம்பமாகிலென் மால்வரையும்
தானம் துளங்கித் தலேதடுமாறிலென் தண்கடலும்
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலேநஞ்சுண்டு
ஊனம் ஒன்றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே'

என்ற பாட்டின் முதல் மூன்று வரிகளிலும், மண்பாதலம்புக்கு' என்ற பாட்டிலும் இவ்வியல்பு பெருமித உணர்வு ததும்ப அடிகளாரால் முழங்கப்பட்டுள்ளது.[28]

### கோத்திரம் குலம்

திருவள்ளுவர் குலவகையான் வரும் வேறுபாடுகளேக் கடிந்த கோட்பாடு உடையவர். அவர் கண்ட தமிழகத்தில் இருந்த இந்த வேறுபாடுகளேக் கண்டு மனம் வருந்திஞர் அப்பெரியார்.

'பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமையான்'

என்று இயம்பிஞர். அப்பரடிகள் இக் கோட்பாட்டின் உறுதியில் மூழ்கிஞர். சாதி, குலம், பேசித் திரியும் வீண்மக்களே வெறுத்தார். ஒரு பயனுமின்றி இவற்றைப் பற்றி வீணே பேசித்திரிவோரால் நாட்டில் புன்மைகள் பெருகுமே அன்றி நன்மைகள் பெருகமாட்டா என்பதை உணர்ந்து 'எல்லாவுயிர்க்கும் பிறப்பு ஒக்கும்' என்று உணர்த்திஞர். சடங்குகளில் ஆழ்ந்து சாதி, குல வேற்றுமை பேசித்திரிவோரை விளித்து இவ்வாறு அறை கூவிஞர்.

'சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்!
கோத்திரமும் குலமும் கொண்டென்செய்வீர்'

'நாசமாய குலநலம் சுற்றங்கள்' என்றும் பிறிதோரிடத்துப் பழித்துரைத்தார்.[29]

### புலனடக்கம் போற்றுல்

புலனடக்கத்தை வள்ளுவர் பெரிதும் வற்புறுத்தியவர். ஆமைபோல் ஐந்து புலன்களும் அடங்கி நிற்றல் வேண்டும் என்பது அவரது கருத்து. ஐந்தவித்தான் ஆற்றலே வியந்து பேசுவார்; 'பொறிவாயில் ஐந்து அவித்தான்' என்று கடவுளேக் கனிந்துரைப்பார். இவ்வொழுக்கம் அப்பரடிகளாற் பெரிதும் வியந்து பாராட்டப் பட்டுள்ளது.

அப்போது மலர்தூவி ஐம்புலனும் அகத்தடக்கி
எப்போதும் இனியானே என்மனத்தே வைத்தேனே'

(**'அப்போடு'** என்ற பாடத்தைவிட, **'அப்போது'** என்பதே திருந்திய ஒன்ரும்.) என்பன முதலிய பகுதிகள் புலனடக்கம் பற்றிய பொருள் நலம் பொதுளியவை.[30]

27. திருக்குறள் – 352; திருநாவுக்கரசர் தேவாரம் – 2359.
28. திருக்குறள் – 989; திருநாவுக்கரசர் தேவாரம் – 1057; 921.
29. திருக்குறள் – 972; திருநாவுக்கரசர் தேவாரம் – 1514, 1384.
30. திருக்குறள் – 6; திருநாவுக்கரசர் தேவாரம் – 64.

'ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல்' என்று உவமையால் வள்ளுவர் வற்புறுத்துவது இப்புலனடக்கத்தையே.[31]

### பிறவாநாள்

இனி, வீரர்களைப் பற்றிப் பேசுங்கால் விழுப்புண் பெறும் நாட்களே தாம்பிறந்து பயன்பெற்ற நாட்கள் என்றும், மற்ற நாட்கள் பிறந்தும் பயன்படாத நாட்களே என்றும் கூறுவார் வள்ளுவர். அதனைப் பின்பற்றும் அப்பரடிகள், இறைவனைப் பற்றிச் சிந்தித்துப் பேசிமகிழும் நாட்களே பிறந்து பயன் பெற்றநாட்கள் என்றும், பிற நாட்கள் பிறவா நாட்கள் என்றும் பேசி விளக்குவர்.

'பெரும்பற்றப் புலியூரானைப் பேசாதநாள்
எல்லாம் பிறவா நாளே'

'நின் திருவருளே பேசினல்லாற்
பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே'[32]

### நிறைவு

இவ்வாறு, திருவள்ளுவர் அறிவுறுத்திய பொருள்களை அப்பரடிகள் திருவருள் நலம் கனிந்த தம் திருப்பாட்டுக்களில் இனிது எடுத்து விளக்கியுள்ளமை விரிப்பிற் பெருகுவதாகும். 'விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும்' ஆதலின், அடிகளார் திருவாக்குக்களில் ஒரு சிலவே இங்கு எடுத்துக் காட்டப்பெற்றன. பொதுமறைப் புலவர் அடிகளார் திருவுளத்தை யீர்த்தவர் எனும் போது, கருத்தின் வளமும் மாட்சியும் நம் நெஞ்சில் நிறைகின்றன.

31. திருக்குறள் – 126,

32. திருக்குறள் – 776;
திருநாவுக்கரசர் தேவாரம் - 2086 - 2095; 2563.

### தமிழ் மணிமாலை

"பற்றற்றே மென்றிருக்கும் நற்றவ யோகியரும்
பற்றுவைத்தே பைந்தமிழைப் போற்றிடலால் – கற்றுவல்லோர்
பல்லோரை நல்லோரைப் பார்புகழத் தந்திட்ட
கல்லூரி வாழ்க நெடிது"

— புலவர், பால. கோவிந்தசாமி, தொட்டியம்.

# ஐம்பெருங் காப்பியங்கள்

புலவர், திரு. இரா. செல்வக்கணபதி,

ஆதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

[கடைச்சங்க காலத்திற்குப்பின் காப்பியங்களில் கிளைத்த இலக்கிய நோக்கும் யாப்பும் எங்ஙனம் செழித்தன என்பதனையும், தமிழில் காப்பியங்கள் எழக் காரணமாக அமைந்த சூழ்நிலைகளையும், காப்பியம் என்ற குறியீட்டின் உட்பொருளும், கவிஞன் என்பான் யார் என்பது பற்றிய வரையறைகளையும் விளக்கித் தொடங்கும் ஆசிரியர், ஐம்பெருங் காப்பியத் தொடரில் சிலம்பினை முன்வைத் தெண்ணும் வழக்காற்றின் அடிப்படை விளக்கி, சிலம்பின் கரு இளங்கோவின் சொல் வண்ணத்தில் வண்ண ஓவியமாகித் திகழும் அருமை காட்டி, சிலம்பின் நுண்பொருள்கள் பலவற்றின் தன்மை விளக்கி, மேகலையும் சிந்தாமணியும் எழுந்த சூழலும், சுவையும் விதந்து, இறந்தது விலக்கி எதிரது போற்ற வேண்டுமென்ற எண்ணம் பேசி இக்கட்டுரையை நிறைவிக்கிறார்.]

### அறியாப் பெரும்பொருள்

உலகம் வேடிக்கையான தென்றால், அங்கே வாழ்கின்ற மனிதனே விந்தை நிறைந்தவனாகவே இருக்கிறான். விஞ்ஞானச் செருக்கால் விண்ணையும் சாடுகின்ற ஆற்றலைப் பெற்றுவிட்டிருக்கும் மனிதன் அண்டகோளங்களையும் ஒருநாள் ஆய்ந்து கண்டு விடுவான்: ஆனால், அவன் பேராற்றலுக்கும், ஆய்வின் திறத்திற்கும் அப்பாற்பட்டதாய், எண்ணத்தால் - நுண்ணறிவால் ஆய்ந்து இயல்பறிய மாட்டாததான பொருளொன்று உண்டு என்பதை அவன் உணர்ந்தே இருக்கிறான்! ஆய்வின் எல்லைக்குக் கட்டுப்படாத விடுதலைப்பறவையாக, எண்ணச் சிறகடித்துப் பறக்கும் மனிதமனம் தான் அந்த மானிடர்களை ஆட்டிப் படைக்கும் வன்மை சான்றதாக மிளிர்கிறது! அதன் ஆற்றலை அறியவல்லார் யார்? தன்னைத்தான் அறிய வேண்டுமெனத் தத்துவ ஆய்வு நிகழ்த்திய பேரருளாளர்களுக்கே எட்டாத மனித மனத்தன்மையை என்னென்பது? அந்த ஒப்பற்ற விந்தைப் பொருளை, அதன் விழைவை - வெறுப்பை, நாட்டத்தை-நலத்தை அறிந்து கொண்டவர்களும் இல்லாமலில்லை. 'நீர்வழிப்படூஉம் புணைபோல் ஆருயிர் முறை வழிப்படூஉம்' என வாழ்வின் போக்கை வரையறுத்திருந்தாலும், மனித உள்ளம் எதிர்நீச்சலிட்டு, காலத்தை வெல்லும் கருத்துப்பெரும் பொருளைக் கண்டுமகிழ வேண்டுமென்ற எண்ணப்பாடுடையதாகவே என்றும் விளங்கி வந்திருப்பதை அறியமுடிகிறது.

### தமிழ்த்தாயின் பொன்னணிகள்!

ஆழங்காண முடியாதெனக் கைவிடப்பட்ட அந்த நுண்பொருளைக்கண்டு அதன் குறைகளைந்து-நிறைகாட்டி, தீமைஅழித்து-திண்மையூட்டி, நல்லதாய் - மிகவல்லதாய் அதன் போக்கைத் திசைதிருப்புகின்ற ஆற்றல் பெற்றிருந்த பெருமக்களே, கவிஞர்கள்

எனக் காலத்தால் போற்றிப் புகழப் பட்டனர். மனித உணர்வுகளை அறிந்து கொண்டு அவர்கள் படைத்த திஞ்சுவை இலக்கியங்களே அவர்களது பெருமையை அழியாத பொன்னெழுத்துக்களால் வர லாற்றில் தீட்டும் வன்மை பெற்றன. காணலாகா மனத்தைக் கண்டு தெளிந்து, அதன் உணர்வை நிலைப்படுத்தி, எண்ணத் தைத்தூய்தாக்கி, ஆண்டே தனக்கென இடம் பிடித்துக்கொண்ட இலக்கிய வரிசை களிலே சிறப்பிடத்தைப் பெறுவன நற் செந் தமிழ் மொழியில் ஐம்பெருங்காப்பியங்கள் என்ற பெருஞ்சொத்துக்களே எனல் சாலும். அழகும் - அருமைப்பாடும், இனிமையும் - இசையும், நலமும் - வளமுஞ் சான்ற சீரிளமைத் தமிழ்த்தாயின் மங்காத பொற் கலன்கள் காப்பியங்கள். அதன் பொற்பை எடுத்து நம் பூக்கும் திருமொழியால் கண்டு மகிழ்வோம். சில கருத்தோடு இணைந் திடுவோம்.

## இல்லது இனியது நல்லது !

கடைச்சங்க காலம் வரையிலே வளர்ந் திருந்த இலக்கியப் போக்கைச் சற்று நிதா னமாகக் காணும்போது, தனிமனிதர்களின் புறவாழ்வையும், சமுதாய மக்களின் மொத்த மான அக உணர்வினையும், இறையவர்களை யும், அறநெறிப்படுத்தும் கருத்து கருவூலங் களையும் வரையறைப்பட்ட சில நெறி களுக்கிடைப்பட்டுக் கவிஞர்கள் இயன்ற வரைச் சுருங்கிய யாப்பில் தொகுத்தியாத் தனர் எனவே அறியமுடிகிறது. எட்டுத் தொகையும், பதினெண் கீழ்க்கணக்கும் எனப் பேசப்படும் இத்தகைய தொகுப்புகள் இக்கருத்தை வலிவு பெறச் செய்வன. பத்துப் பாட்டைப் பொறுத்தவரை அங்கே ஒரு சிறிய புதுநெறி ஓரளவிற்கு முகிழ்த்த தென் னலாம். ஒரே தலைவனை முதற்பொருளாகக் கொண்டு நீண்ட பாடலை இயற்ற முயன்ற முயற்சிகள் அங்கே கிளைத்தன. அவை கூட அந்தத் தலைவனையும், அவன் வாழ் வியல் நெறிகளையும் பொய்மை கலவாது நயம்பட எடுத்துரைப்பனவாக அமைந்தன என்றே காண்கிறோம். வடநாட்டிலும், வட மொழியிலும் இதிகாசம் என்ற பெயரால் இராமாயணமும், பாரதமும் இலக்கியமாகப் பாடப்பெற்றுத் திகழ்ந்த கடைச் சங்க காலத்திலே கூட, பொய்மையைப் புனைந் துரைக்கும் கதைகளை எந்த யாப்பிலும் நந் தமிழ்ப் புலவர்கள் பாட எண்ணாதை இலக் கியச் சூழ்நிலையை நாம் புறக்கணித்து விட முடியாது. ‘இல்லது இனியது நல்லது’ என அகவாழ்வின் குறிக்கோளை எண்ண உணர்வால் ஆழக்கண்டவர்கள் அதைப் புறவாழ்வில் காண முற்படாராய்ப் பொய்மை எனப் புறக்கணித்தனர் என்பது எண்ணிப்பார்க்க வேண்டுவதொன்று.

## உள்ளத்தே தடுமாற்றம்

இதிலிருந்து நாம் அறிந்து கொள்ளத் தக்க பெருநெறி ஒன்றுண்டு. கடைச்சங்க இறுதிவரை நெடுங்கதைகளையோ, சிறு கதைகளையோ நீண்டபாடல்களால் பாடும் நெறி தமிழரிடை இருந்ததில்லை என் பதே. இராமாயணம், பாரதம் பற்றிய கடைச்சங்ககால இலக்கியக்குறிப்புகள் அக் காலக் கவிஞர்கள் இத்தகு இதிகாசக் கதை களை முற்றிலுமாக அறிந்திருந்தார்கள் என் பதை நினைவூட்டி, அறிந்திருந்தும் அத்தகு நெறிநின்று பாடவிருப்பமிலராய்த் திகழ்ந் தனர் என அறிவிக்கின்றன. ஏறத்தாழ கி. பி. இரண்டாம் நுற்றூண்டில் கடைச் சங்கம் தன்பணியை நிறைவித்துக்கொண்ட காலத்தில், தென்னாட்டில், வடநாட்டின் சமயங்களான சமணமும், பௌத்தமும் தலைதூக்கின. அந்நெறிகண்டு வந்தார் வடமொழியிலேயே தங்கள் கருத்துக்களைக் கூற முற்பட்டமை வடமொழிச் சுவடுகளையும் தமிழ்மண்ணில் ஆழப்பதிக்க லாயின. சமுதாய, மொழிவரலாறுகளை அறிந்து

விட்டிருக்கிற நாம் இந்த நிலைமையில் ஏற்பட்டிருக்கக் கூடிய சமய - மொழிக் கலப்பினை உணர்ந்துகொண்டுவிடுகின்றோம். தமிழ் மொழிவல்லாராய் - சமண பௌத்த மதங்களை உளமார ஏற்றுக் கொண்ட கவிஞர்கள் சிலர் வடமொழி நெறி நின்று இதிகாசங்களை ஒத்த கதை பொதி பாடல்களை நீளப் பாடவேண்டுமென எண்ணமிட்டகாலை இராமாயணமும், பாரதமும் அவர்கள் எதிரே பாடற் பொருட்களாக நின்றிருந்தன. இங்கேதான் அவர்கள் தடுமாற வேண்டுவதாயிற்று. ஏற்றுக் கொண்டிருக்கும் சமயக்கொள்கை எடுத்துக்கொள்ளும் கதையின் சமயத் தோடும்-அதன் நெறிகளோடும் மாறுபட்டன.

### முகிழ்த்த வரலாறு

இந்த வேடிக்கையான உள்ள எழுச்சிக்கும் தடுமாற்றத்துக்கு மிடையேதான் தமிழ்மண்ணிலே நல்ல பிடிப்புள்ள கண்ணகியின் துயரங்கலந்த ஏடுபுரட்டப்பட்டது. சமய நோக்கிற்கு அப்பாற்பட்ட ஒரு பெண்ணும் - அவள் வாழ்வியல் நிலைகளும் புத்தார்வம் படைத்துநின்ற - புதுநெறியைத் தமிழில் தரவேண்டுமென்ற எண்ணங் கொண்டுநின்ற - வடநெறியும் - தமிழ் நெறியும் கலந்த புது வழியொன்றைப் படைக்கும் வாய்ப்பினைப் புத்த - சமண நெறியினர்க்கு நல்கியது. இந்தச் சூழலைப் பயன் கொண்டு சிறக்கும் வாய்ப்பு சேரன் தம்பிக்கும் - கூலவணிகனுக்கும் கிடைத்தது. அதன் வெளிப்பாடே இரட்டைக் காப்பிய மென்று மிகப் பிற்காலத்திலே பெயரிடப் பெற்ற சிலம்பும் – மேகலையும் செழிக்க வழியாயிற்று. எனவே, இளங்கோவும், சாத்தனும் வடமொழி நெறியிலே தமிழில் கதை பொதிபாட்டை இயற்ற முற்பட்டனர். அக்காலத் தமிழில் பத்துப் பாட்டுவழியே வளர்ந்திருந்த வளர் நெடும் பாடல் நெறியில் இத்தமிழ் மண்ணில் நடந்த நிகழ்ச்சியை இலக்கியமாக, ஓரளவு கற்பனையும், சமயக் கோட்பாடுகளும் விரவியதாய் ஆக்கித் தந்தனர். எனவே வடமொழியும் - தமிழும், பழநெறியும் – புதுநெறியும் கலந்து நடைபோட ஆரம்பித்த காலமொன்றின் தொடக்கமே காப்பிய கால ஆரம்பமாக அமைந்ததெனல் பொருந்தும். அப்படித் தொடங்கியபோதும் வட சொற்களை மிகுதியாகத் தமிழில் புகுத்தும் முயற்சியை அவர்கள் மேற்கொள்ளவில்லை என்பதை நாம் நினைந்து மகிழ்கிறோம்!

### சில செய்திகள்

இனி காப்பியம் என்ற குறியீடும், தொகையும், அதற்கென அமைந்து கிடக்கும் இலக்கண வரையறையும் எந்த அளவிலே நிலைபெற்றுள்ளன என்பதை நாம் ஈண்டுச் சற்றே காணல் வேண்டுவதே. 'காப்பியம்' என்ற சொல்லைப்பற்றிய ஆராய்ச்சிகள் தமிழறிஞர்களால் விரிவாகப் பேசப்பட்டுள்ளன. அதனை ஈண்டு விரித்தல் எற்றுக்கு? ஐம்பெருங் காப்பியமென்ற குறியீடு, ஐஞ்சிறு காப்பியங்களும் தோற்றங் கொண்டதற்கும் மிகப் பிற்காலத்தே என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. ஐங்காப்பியமென்னுது, ஐம்பெருங் காப்பிய மென்ற குறியீடே இதனைச் சான்றாக்கிக் காட்டும். இத்தொகுதியில் சிலம்பும் – மேகலையும் ஒழிய ஏனைய சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகிய மூன்றும் காலத்தால் பிற்பட்டன என்பதற்குச் சான்று பல உண்டு. இவை ஐந்துமே சமண–பௌத்த காப்பியங்களாயினமையின் இவற்றைத் தொகுத்து ஐம்பெருங்காப்பிய மென்று பெயரிட்டாரும் அச்சமயத்தினரே என்பதை ஒருவாறு அறிய முடிகிறது.

### அணி இலக்கண வரலாறு

இலக்கியத்திலிருந்தே இலக்கணம் முகிழ்க்கும் என்பதை அறிந்திருக்கிறோம்.

அணி நூலும், தண்டியலங்காரமுந்தான் முதன் முதலில் தமிழ்க்காப்பியங்கள் எவ் வகைப் புனையப் பெற வேண்டுமென்பதை இலக்கணநெறியாகக் காட்டுகின்றன. அவை காட்டும் பெருங்காப்பிய இலக்கணங்கள் கூட ஐம்பெருங்காப்பியமென்ற தமிழிலக்கி யங்கள் மேற்கொண்டிருக்கின்ற நெறியினை ஆய்ந்து அதற்குத்தக அமைக்கப் பெற்றிருக் கிறது என்பதற்கில்லை. வடமொழியிலே யிருந்து 'அணி' என்ற பெயரில் அலங்காரங் களைப் பாடவந்த தண்டியாசிரியர் தமிழ்ப் பாடல்களை ஆய்ந்து இலக்கணம் செய்ய இல்லை என்பதற்கு அவர்காட்டும் இலக் கணங்களில் பெரும்பாலானவற்றிற்கு அவரே உதாரணப் பாடல்களை இயற்றவேண்டி வந்த நிலை போதிய சான்றாகும். தண்டியலங்காரம் கூறும் அணிகளில் பலவற்றிற்குத் தனித் தமிழிலக்கியங்களிலிருந்து ஒரு சான்று கூடக் காட்டமுடியாதென்பதை நாம் உடன் பட்டாகவே வேண்டும். எனவே, நாம் அறிந்துகொள்ள வேண்டுவது அணி யிலக்கணமென்பது தமிழைப் பொறுத்த வரை மிகச்சிறியது; வடமொழியில் உள்ள இலக்கியங்களில் காணப்படும் அணிகளுக்கு அவர் தம் மொழியில் இயற்றப்பட்ட இலக்கணங்களைத் தண்டி போன்றார் மொழி பெயர்த்தனர்: அது தமிழ்மொழி நெறி நோக்கி வகுக்கப்பெறவில்லை: அதனால், அணியிலக்கண நெறிகள் எல்லாம் தமிழ் இலக்கிய எள்ளைப் பிழிந்து எடுக்கப்பட்ட எண்ணெயன்று என்பது விளங்குகின்றது. இதைத்தான் ஐம்பெருங்காப்பியப் போக்கு தண்டியலங்காரம் கூறும் காப்பிய இலக்கணத்தோடு மாறுபட்டனவாய்ச் செல்வதற்குரிய காரணமாக நாம் கொள்ள வேண்டும். என்றாலும், தண்டியலங்காரத் திற்குப்பின் வந்த பல்வேறு இலக்கியங்கள், தலபுராணங்கள் போன்றன அந்நெறி வழுவாது பாடப் பெற்றிருப்பதை நம்மால் காணாமல் இருக்க முடியவில்லை.

### தமிழில் உண்டா?

தமிழில் இத்தகு கதை பொதி பாடல்களே சங்ககாலத்தில் இருந்திருக்க வில்லை என்ற நிலையில், அதற்கான இலக்கணம் இருந்திருக்கிறதெனத் தொல் காப்பியத்தைத் திரித்துக் காட்டுவதால், தொல்காப்பியத்திற்கோ, தமிழுக்கோவரத் தக்க பெருமை என்ன இருக்க முடியும்? என்றாலும், செய்யுளுறுப்புக்கள் கூற வந்த நூற்பாவின் பொருளைப் பேராசிரியர் திரித்து அங்கேயே செய்யுளிலக்கணமும் கூறப் பட்டிருக்கிறதெனச் சாதிக்க முயன்றிருக்கிற முயற்சியைக் கண்டு அவருக்குத் தமிழை உயர்வாக்கிக் காட்ட வேண்டுமென்பதிலே இருந்த உள்ளத்தைக் கண்டு அமைதி கொள்கிறோம். உறுப்புக்களின் கூட்டம் தான் மனிதன் என்றால், பேராசிரியர் கருத்துப்படி அம்மை முதலிய செய்யுள் வகைகளும் உறுப்பாகக் கருதி ஏற்றுக் கொள்ளப்படும். பிற்காலத்தே நன்னூலார் 'பல்வகைத்தாதுவின்' எனச் செய்யுள் இலக் கணம் கூறினராயினும் அதுவே காவிய இலக்கணமாகிவிடாது.

### காவிய இலக்கணம்

வடமொழியாளர்களைப் பொறுத்தவரை இதிகாசங்களைக்கூட அவர்கள் காவிய மாகவே கருதி வந்திருக்கிறார்கள் என்பது தெளிவு. நாம் இலக்கியம் எனப் பெயர் சூட்டுவதை – ஏறத்தாழ இதே கருத்தில் அவர்கள் காவ்யம் எனப் பேசுகின்றனர். வடமொழி இலக்கணங்கள் காவிய இலக் கணத்தை மிக விரிவாகப் பல கோணங் களிலே நின்று பேசுகின்றன. அவற்றுள்ளே உள்ள நுண்மையான கருத்துவேறுபாடுகளை விளக்க முற்பட்டால் அதுவே ஒரு தனிப் பொருளாகிவிடும். அலங்கார நூலாருள் முதலாமவராகக் கருதப்படும் 'பாமஹன்' என்பார், சொற்பொருள் இரண்டும் அழகாகக் கூடியது காவ்யம்; அது செய்யுள்

வசனமென இரண்டுவகைப் படுமெனக் கூறினர் எனின், வடமொழி தண்டி யாசிரியரோ, 'இஷ்டார்த்தத்தை விசேட மாகக் குறிப்பிடும் சொற் கூட்டம் காவ்யம் என்றும், அது செய்யுள், உரைநடை, இரண்டும் கலந்தது என மூவகைப்படு மென்ருர்: உரைநடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என்ற சிலப்பதிகார இலக்கியப் போக்கு ஏறத்தாழ இந்நெறி ஒட்டியதெனல் சாலும். மற்றும் வாமனன், வித்தியாநாதன் IV, ஹேமசந்திரர், மம்மடர் போன்ருேரும் காவ்ய இலக்கணங்களைச் சிறுசிறு மாற்றத் தோடு விளக்கிக் காட்டுகின்றனர். இவர்கள் அனைவரின் காவ்ய இலக்கணங்களின் பொதுவான அடிப்படை, 'குற்றம் இல்லா தனவும், குணம் அலங்காரம் உடையனவும் ஆகிய சொற்பொருள் காவியம்' என்பதாகும். இத்துறையில் விரிவான ஆய்வு கண்டவர்களான திரு. பி. கிருஷ்ணன் நாயர் திரு. வே. வேங்கடராஜுலு செட்டியார் போன்ருர் கருத்து தெளிவானது.

> காவியமாவது – கவியின் தொழில். கவியாவான்–வருணிப்பவன். கவியின் தொழில்என்றது, நடத்தல் உண்ணுதல் முதலியவற்றைக் குறிக்காமல் சொற்களை யாக்குந் தொழிலையே குறித்து நின்றது. பங்கஜம் என்பது சேற்றில் பிறப்பவற்றை எல்லாம் குறிக்காமல் தாமரை ஒன்றனையே குறித்து வழங்குவது போல ,காவியம் என்பது கவியின் தொழில் எல்லாங் குறிக்காமல் அவன் சொற்களையாக்குந் தொழில்ஒன்றையே குறித்து வழங்குகின்றது என்று கொள்க.

### வடமொழியில் 'கலைஞன்'

இனி காவியம் பாடத்தக்க கவியாவான் யாவன் எனப் பேசவந்த வெண்பாப் பாட்டியல் நற்குடிப் பிறப்பினனும், தூயனும் இலக்கணம், செய்யுள்இலக்கணம் இவை வல்லவனும், சோதிடம் முதலியன அறிந்தவனும், அமைதியான நல்லுருவினனும் ஆகியவன் கவியாவதற்குரியனுவான் எனக் கூறிக் காட்டுவதை நோக்க இளங்கோவும், சாத்தனும், திருத்தக்கதேவனும் ஒவ்வோர் நெறியில் இந்த இலக்கணங்களை வகுக்க ஆசிரியர் உள்ளத்தே உதவியிருப்பரென எண்ண முடிகிறது. அதற்கு அவர்கள் வாழ்வியல் நிகழ்ச்சிகளாக வழங்கும் செவி வழிக் கதைகள் சான்ருகலாம்.

இதுகாறுங் கூறியவற்ருல், வடமொழி இலக்கண வழிநின்று கண்டால், தமிழில் உள்ள கதைபொதிபாடல்கள் யாவுமே காப்பியமாகும் என உணர முடிகிறது. என்ருலும், குறியீட்டிற்பட்டன ஐந்து இலக்கியங்களே! இவை ஐந்தையும் ஈண்டு விரிய ஆராய இடமேது: அன்றிக் காலந் தானேது! எனவே ஒவ்வொன்றைப் பற்றியும் சில இன்றியமையாக் கருத்துக்களைக் கோர்வைப்படுத்திக்காண நாம் முயன்ருக வேண்டும்.

### முதல் எது?

இவற்றைத் தனியே எடுத்தாய்தல் தொடங்கு முன்னர் இவைபற்றிய பொது வான சில கருத்துக்களை எண்ணவேண்டி யுள்ளது. இவ்வைந்தனுள் சிந்தாமணியை முன்வைத் தெண்ணும் கருத்தொன்று உண்டு. காலக்கண் கொண்டு நோக்குவார் சிலம்பை முன்வைத் தெண்ணுவர். இவ் வைந்தனுள் சிலம்பும், சிந்தாமணியும், வளையாபதியும் ஜைன மதக் காப்பியமாகும். ஏனைய இரண்டும் பௌத்தமதச் சார்புடையன. சமணச் சார்புடைய மூன்றில் சிலம்பினும், சிந்தாமணி அச்சமயக் கொள்கையை வெளிப்படையாகவும், அழுத்தமாகவும் விரிப்பதாலும், அச்சமயக் கொள்கையைக் காதல் இலக்கிய வழியே வெளிப்படுத்து

மேண்மே சிந்தாமணி வெளிப்பாட்டுக்குக் காரணமெனக் கேட்கப் படுவதாலும் அது முன்வைத்து எண்ணப் பட்டிருக்கலாம். அன்றிச் சிந்தாமணியின் தலைவன் சீவகன் வாழ்ந்திருந்த காலம் சிலப்பதிகாரத்திற்கு முற்பட்டதென்ற கருத்துப்பற்றியதாகலாம். இலக்கியத்தோற்ற அடிப்படையில் சிலம்பே முன் வைத்தெண்ணப்படுவது; சிறப்பாலும் சிலம்பிற்கு முதலிடமுண்டு.

### மேகலையா ? சிந்தாமணியா ?

இரண்டாவதாக மேகலை வைத்தெண்ணப் படுகிறது. காவியம் என்ற நிலையில் மணிமேகலையை விடச் சிந்தாமணி உயர்ந்ததென்றே கூறவேண்டும். மதக்கருத்துக் களைத் தத்தம் நிலையில் இரண்டும் வன்மையாகப் பேசினலும், சிந்தாமணியில் கதையும்-நயமும் — சமயக்கருத்தை மறைவாக அழைத்துச் செல்கின்றது. மேகலை பல காதைகளில் நயஞ்செறிந்ததாயினும் பௌத்தமதக் கருத்துக்களை, பிற்காலச் சாத்திர நூல்களைப் போலக் கவிதை நயமின்றி வெற்றெனத் தொடுத்திருக்கிற தென்பதை மறுப்பதற்கில்லை. சிலம்பில் முடிவுறும் கதை, மணிமேகலையில் தொடங்கப் பெறுவதாலும், ஆசிரியர்களின் சம காலத்தாலும், யாப்பும், நூல் அமைப்பும் ஏறத்தாழ ஒட்டி நடையிடுவதாலும் இவை இரட்டைக் காப்பியமென பெயர் பெற்றன எனக்காண்கிறோம். நூல் நயமென எண்ணமிடும்போது சிந்தாமணி இரண்டாவ திடத்தைப் பெறத் தகுதி படைத்த தென்பதில் ஐயமே இல்லை. வளையாபதியும் குண்டலகேசியும் காலத்தின் போக்கில் அழிந்தன. அங்குமிங்குமாகக் கிடைத்த சில குறிப்புக்களின்றி வேறேதும் அவை பற்றி அறிகிலோம். குண்டலகேசி பௌத்த மதக் கருத்தையும், வளையாபதி சமண சமயக் கொள்கையையும் வலியுறுத்த வென்றே எழுந்த காப்பியங்களென அறிய முடிகிறது. அவற்றை இயற்றிய ஆசிரியர் களையும் அறிய மாட்டுகிலோம்.

### அமரகவி நோக்கு

'தன்னைமறந்த லயந்தனில் இருந்தேன்' எனக் கவிதை உள்ளத்தைப் படம்பிடித்துக் காட்டும்பாரதி, கவிதை உள்ளத்தை யாண்டும் நுழைந்துகண்டு போற்றும் இயல் பினன். நல்ல சுவைஞன்தான், நல்ல கவிஞனகவிளங்கமுடியுமென்ற கருத்துக்குப் பெருமை சேர்த்தவன்அமரகவி. சிலப்பதி காரத்தைச் சுவைத்ததிலும், அதன் பெருமையைப் பேசியதிலும், அதைப் பிறர்க்கு எடுத்துவழங்கியதிலும் அவன் ஒரு புதுநெறிகண்ட கற்பூரச் சொற்கோ ! விதியினை நோக்கி அவன் வேண்டுகோள் விடுக்கும் கவிதை தமிழ் நெஞ்சங்களிலே நெகிழ்ச்சியூட்டும் வன்மைபெற்றன. சிலம்பும், குறளும், கம்பரும் தாம் தமிழ்ச் சாதியை விதியெனும் வெள்ளத்தே கரைந்து விடாமல் காக்கும் கற்சிறைகள் என கவிதை உள்ளம் எண்ணுகிறது.

> 'சிலப்பதிகாரச் செய்யுளைக் கருதியும்
> ......................... முன்பு நான் தமிழச்
> சாதியை அமரத் தன்மை வாய்ந்தது என்று
> உறுதி கொண்டிருந்தேன்'

என திரத்தோடு முடிவெடுக்கிருன் மாகவிஞன். திருக்குறளுக்கும் முன்னே சிலம்பைவைத் தெண்ணுகிருன் கவிஞன். ஆங்கிலக்கல்வியை மட்டுமே பெறும் தமிழர்களைப் 'பேடிக்கல்வி' பயின்றுழல் பித்தர் எனச்சாடி 'சேரன்தம்பி சிலம்பை இசைத்ததை' அன்னேர் தமிழராயிருந்தும் கற்றிட வில்லையே என வெதும்புகின்ருன். யாமறிந்த புலவரிலே, எனச்சிறப்பிக்கும் போதும் இளங்கோவை அவன் மறந்திட வில்லை. இளங்கோவைப் போலே கவிதை நயம் நாடும் அமரகவியின் உள்ளம், அறம் பாடிய வள்ளுவர் உள்ளத்தை விட இளங் கோவோடு முன்னரே ஒன்றுபட்டு, முன்

வைத்தே எண்ணத்தூண்டுகிறது. இந்த இணைப்பால் புதிய ஆட்சி ஒன்றைத்தமிழகம் பெற்றது.

### புதிய ஆட்சி

'நெஞ்சையள்ளும் சிலப்பதி காரமென் றோர்மணி யாரம் படைத்த தமிழ்நாடு'

என 'நீடுதுயில் நீக்கப் பாடிவந்த நிலா' எனப்புரட்சிக் கவிஞரால் ஏத்தப்பெற்ற, பாரதியின் உள்ளம் சிலம்பாற்றில் படிகிறது.

'அவள் நினைவு என் நெஞ்சில் நிறைந்தது என்பாரைக் கண்டோம்! அவள் நிலை என் நெஞ்சை நெகிழ்த்தது என்பாரை அறிவோம்! அவள் துயர் என் நெஞ்சைத் தொட்டது என்பாரைக் கண்டதுண்டு! அவள் நினைவு என் நெஞ்சை வருடியது என்பார் காணக்கிடைப்பர். ஆனால், இதன் நினைவு என் நெஞ்சை அள்ளியது என்ற ஆட்சியினைப் பாரதிக்குமுன் தமிழகம் கண்டதில்லை: கேட்டது மில்லை! முன்னதிலெல்லாம் நெஞ்சம் தன்பாலாகப் பொருள் அதன் கண் பட்டதனைக் கண்டோம்! சிலப்பதிகாரமென்ற மென்காற்றோ பாரதியின் நெஞ்சை அள்ளிச் சென்றதாம். என்னே! பாரதியின் காவிய ஈடுபாடு! தீந்தமிழ்ச் சுவை என்கன்னெஞ்சை உருக்கிற்று: இளகிநின்ற என் நெஞ்சக் குளத்துள் உணர்வெனும் நீரைச் சிலப்பதிகாரம் தன் மென் கரங்களால் அள்ளிற்று என்கிறானே மாகவிஞன்!

### குடிமகட்கோரிடம்

இலக்கியங்களின் வகைகள் பல உண்டெனத் திறனாய்வாளர் பகுத்துக் காண்பர். காலத்தின் தேவையினையும், ஒருகால மக்கள் உணர்வினையும் மட்டுமே உளங்கொண்டு எழுந்த இலக்கியங்கள், மேலெழுந்த வாரியான உணர்விற்கு இரையிடுவதால், அந்த உணர்வுப்பசி தீர்ந்தவுடனேயே தன்னை மாய்த்துக் கொள்ளுகிறது. 'ஒரு பகல் வாழ்க்கைக்கு உலம் வருவோரே' என்று புறம்பாடுவது மனிதர்களுக்குமட்டுமின்றி இலக்கியங்களுக்கும் எத்துணை பொருந்திவருகிறது! இவை புற்றீசல் இலக்கியங்கள்! எந்த ஒரு கவிஞன் ஒருகாலநிலை, மக்கள் உள்ளப்பாங்கு, சூழ்நிலை என்பவற்றை மட்டும் எண்ணுனய்த் தீர்க்கத்துடன் நீண்டபார்வை உடையவனாய், சில நேரங்களில் தன்கால மக்களின் மனஉணர்வின் மீது கூட எதிர்நீச்சல் போடுகிறானோ அவன்தான், காலம்வென்ற கவி. அவன் நூலே சாகாத, வாழும் இலக்கியம்! பேராற்றல்மிக்க சேரர்களைப் பாடிய பதிற்றுப்பத்து வலிவிழக்க, சாதாரண ஒரு குடிமகளைப்பாடிய சிலம்பு, மக்கள் உள்ளத்தே இடம்பிடித்திருப்பதை நாம் எண்ணிப்பார்க்க வேண்டும்! எத்துணை பெரிய புரட்சியினைச் செய்திருக்கிறார் இளங்கோ! தற்காலக் கவிஞர் அதனை அழகுபட விளக்குகின்றார்;

"......................... புலவர் எல்லாம்
நானிலத்தில் மன்னரையும் செல்வம் சேர்த்த
வள்ளலையும் கடவுளையும் அல்லால் யாங்கள்
வளமான தமிழ்ப்பாட்டில் பிறரை ஏத்தி
எழுதிடவே மாட்டேமென் றிருந்த ஞான்று
குடிமகளை: கற்பிற்கோர் கொழுந்தாம் என்றே
கோடியுளம் பாடுகின்ற எங்கள் தாயாம்
கண்ணகியின் தனிவாழ்வைக் கற்பார் உள்ளம்
கனிகின்ற குடிமக்கள் காப்பி யமாய்
அளித்திட்டான் முத்தமிழில் இளங்கோச்
சேரன்!"

### உள்ளத்தின் விழைவு நிலை

இங்ஙனமாக இளங்கோ வழிவகுத்த பாதையிலே தமிழிலக்கியங்கள் வன்மை பெறலாயின. சிலப்பதிகாரம் ஏனை இலக்கியங்களிலும் செம்மாப்புப் பெறுவதும், கற்பார் உள்ளத்தே நெகிழ்வினை உண்டாக்குவதும் எதனால் என

எண்ணிப்பார்க்க வேண்டுவது நம் கடமையாகிறது. ஆழங்காணவொண்ணாதது மனித மனமெனக் கண்டோம். ஓரளவுக்கு அதன் போக்கினை ஆய்ந்த மேனாட்டுத் திறனாய்வாளர்கள் கூறியுள்ள கருத்து சிலம்பிற்குப் பொருந்துவதாக அமைந்துள்ளது. இயல்பாகவே, உள்ளம் புறவாழ்வின் நிகழ்வினை அறிந்து கொள்ள விரும்புவதைக் காட்டிலும், அகவாழ்வினை, அதுவும் தானல்லாத வேறொருவரின், ஆணும் பெண்ணுமாகக் கூடியியற்றுகின்ற இல்வாழ்வினை, அதன் இன்பதுன்பங்களை ஊடுருவி நோக்கி அறிவதிலே பெரிதும் நாட்டமுடையது. இந்நாட்டம் ஆடவர் வாழ்வினைக் காட்டிலும் பெண்டிர் வாழ்வைக் கூர்ந்து நோக்குவதிலே இருசாரார்க்கும் அதிகமென்று அறிய முடிகிறது. இந்தப் பொதுவான அடிப்படையே எம்மொழியிலக்கியங்களிலும் புற இலக்கியங்களைக் காட்டிலும் அக இலக்கியங்கள் மேலோங்கித் தோன்றுதற்குக் காரணமெனல் பொருந்துவதாகலாம். கண்ணகி என்ற சாதாரண ஒரு குடிமகளின் அகவாழ்வு சிலம்பின் கருவாக அமைந்தமை சிலப்பதிகாரத்தின் மாபெரும் வெற்றிக்கு அடிகோலிற்று. கண்ணகியின் இன்பதுன்பங்களில் கற்பார் உளம் தோய்வதும் இதனாலன்றோ?

## உலக இலக்கிய வழியில்...!

சிலப்பதிகாரம் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகத்தின் செம்மாப்பை விரிப்பதோடு, இருண்ட சங்ககால வரலாற்றாராய்ச்சியிலே ஒரு சுடர் விளக்கமாகத் திகழ்கிறது. செந்தமிழ்ச் சிலம்பில், ஷேக்ஸ்பியரின் நாடகப் புலமையும், காளிதாசனின் காவியப் புலமையும், ஹோமரின் வீரச் சுவையும், தாந்தேயின் காதற் சுவையும், கெத்தேயின் சொல்லினிமையும், விர்ஜிலின் பொருட் செறிவும் ஒன்றுதிரண்டோங்கிநிற்கக் காண்கின்றோம். அறமுதல் மூன்றைச் சிலம்பு பேச, சிந்தையும் மொழியும் செல்லா நிலையுடைய வீடு பேற்றினை மேகலை விளக்க வருகிறது.

## காப்பியப் பண்பு

'பாவிகமென்பது காப்பியப் பண்பே' என்பதற்கு ஒப்ப சிலம்பு, இலக்கியத்தில் முழுதுமாக ஆழ்ந்துகாண வேண்டுவதாய முப்பெரும் பண்பினைக் காட்டுதலைக் காண முடிகிறது.

> "அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்றாவதூஉம்
> உரைசால் பத்தினிக் குயர்ந்தோர் ஏத்தலும்
> ஊழ்வினை உருத்துவந் தூட்டும் என்பதூஉம்"

சிலம்பின் குறிக்கோள் எனப் பேசப் பெறினும், இடைநின்ற கற்பின் உயர்வினைப் பேசுதலே இலக்கியமெங்கும் செறிந்து கிடக்கிறது. இதனை அடியார்க்கு நல்லார், "கண்ணகியை முற் கூறினர்: பத்தினியை ஏத்துதல் உட்கோளாக லான்" என இனங் கண்டு பேசுதல் கருத்தை வலியூட்டுகிறது.

## நடந்ததும். இருப்பதும்

இளங்கோ கதை நடத்திச் செல்லும் போக்கில் நம்பவியலாத சில பகுதிகள் உளதாயினும், கதையின் அடிப்படை நிகழ்ச்சிகள் நடந்திருக்கக் கூடியனவே எனத் தெளியமுடிகிறது. ஷேக்ஸ்பியர் போன்றாரின் உலகப்பெரும் இலக்கியங் களிலும் நம்பமாட்டா நிகழ்ச்சிகள் உண்டல்லவா! தற்காலத்திலே திரைப்படங் களிலே காணும் மனக்காட்சி, மாயக்காட்சி போன்றன அவை எனக்கொண்டு, கற்பது நாடகப் போக்குடைய காப்பியம் என்ற உணர்வும் இருக்குமாயின் சில காட்சிகளை இளங்கோ காட்டியிருப்பதை உள்ளம் ஏற்றுக்கொள்ளும்! சிலம்பு நடந்து செல்லும் போக்கில் அதன் யாப்பமைதியைக் காணும் போது, சங்க இலக்கிய நோக்கில் அது முப்பது தனிச் செய்யுட்களேயாகும். இம்

முப்பதுள் பெரும்பாலன காதை என்றே வழங்குகின்றது. கதையையுடையது காதை என்பர் அடியார்க்கு நல்லார். 'கதா' என்பது வடமொழியில் பாட்டுக்குப் பெயர். முப்பது பெரும் பிரிவில், இருபத்திரண்டு காதை எனவே வழங்க, ஏனையவை, பாட்டு, வரி, குரவை எனப் பேசப்படுகிறது. வரி என்பது இசைப் பாட்டாகும். குரவையைக் குரவைச் செய்யுளென்பர் அரும்பத உரை காரர். இருபத்தொன்ருவது பகுதி மாலை எனப் பெயர்கொண்டது. மாலை என்ற சொல் 'தொகுத்த பூமாலை' என்ற பொருளில் கலித் தொகையில் வழங்கக் காண்கின்ரேம்! முப்பது காதையில் பத்தொன்பது காதை நிலைமண்டில ஆசிரியப்பாவாலும், ஏனைய கலியின் இனத்திலும் பாடப் பெற்றுள்ளமை அறியத் தக்கது.

**உண்மைப் புலமை**

இவ்வாறு நடையிட்டுச் செல்லும் சிலம்பினை நாடகக் காப்பியமென அடியார்க்கு நல்லார் காட்டுகிருர். இது நாடகக்காப்பியமே என மணிமேகலை ஆள்தலையும் காணலாம். (19-80) இதனை முத்தமிழ்க் காப்பியமென வழங்கலும் ஏற்புடையதே. ஆசிரியர் இளங்கோ தன் இலக்கியத்தைப்புனைந்திருக்கும் முறைகளே இலக்கியத்தின் வெற்றிக்கும், அதன் கண் உலவும் பாத்திரங்களின் ஏற்றத்திற்கும் அடிப்படையானவை. கோவலன்-கண்ணகி-மாதவி என்ற மூன்று முனைகளை அமைத்து, இவற்றினூடே கற்பார் உள்ளத்தைப் பிணித்து, எவர்மீதும் நம்மிடையே வெறுப்பினை ஊட்டா வண்ணம் நடத்திச் செல்லும் பேராற்றல் அவருக்கே உண்டு. இளங்கோ வடிகளின் நடுநிலைமையும், வாழ்க்கையை உணர்ந்து தெளிந்த தெளிவுமே மாதவியைக் கண்ணகியோடு ஒப்ப வைத்தெண்ணச் செய்தன எனல் முற்றும் பொருந்தும். வாழ்க்கையை மிகைபடப்புனைந்தும், மாசு படத்திரித்தும் கலையாக்காமல் உள்ளதை எழில்பெற வடித்துக் கலைச் செல்வமாக்கும் உண்மைப்புலமை இதுவேயாகும்.

**சமயச் சிந்தனை**

ஒரு மாபெருங் கவிஞனை ஆய்கின்ற பல்வேறு சமயத்தாரும் அவனைத் தன் சமயக்கொள்கைக்கு ஒத்தவனுக்கி மகிழ் வதிலேயும், உலகிற்குக் காட்டமுயல்வதி லேயும் நாட்டங்கொண்டே நிற்பர். வேட்டுவவரி இளங்கோவைச் சைவராக்கிக் காட்டுகிறது. ஆய்ச்சியர் குரவை வைணவக் கருத்துடையரோ என எண்ணவைக்கிறது. குன்றக் குரவை முருக வழிபாட்டோடு அவரைத் தொடர்பாக்க முயல்கிறது. இப்படி ஒவ்வொரு சமயத்தாரும் தங்கள் தங்களைச் சேர்ந்தவர் என எண்ண வைக்கும்படி, தன்னைக் காட்டிக்கொள்ளாத இலக்கியப் படைப்பில்தானே கவிஞனின் வெற்றியே அடங்கிக் கிடக்கிறது? இலக்கிய வெற்றியும் அதுவன்ரே? வள்ளுவப் பெருந்தகைக்கும்—இளங்கோவுக்குமே இந்த பேராற்றல் இருந்திருக்கிறது. என்ருலும், தேனெடுத்தவன் புறங்கை நாடுதல் போல், தன் குறிக்கோளை விட்டுவைக்காது கவிஞன் போதலில்லை. சிலம்பிலே காணப்படும் இரண்டொரு குறிப்புக்கள் இளங்கோவைச் சமணத்துறவி எனத்தெற்றெனக் காட்டாம லில்லை! வேட்டுவவரி, ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை போன்ற இடங்களில் நிகழும் பாடலும் ஆட்டமும் கதை நிகழ்ச்சியோடு ஒட்டாது தனியே நிற்பதையும், தமிழகத்தின் சிற்சில பகுதி களிலே வாழும் சில குடியினர் தங்கள் வழிபாட்டு முறையைக் கோவலன் முதலிய மூவரும் கண்டு போவதாகவுமே ஆசிரியரின் இலக்கியப் போக்கு நடையிடுகிறது. மாங்காட்டுமறையவனை மறுத்து சமணமதக் கொள்கையைக் காவுந்தி மூலம் நிலைநாட்டும் இடமும், அதற்கெனவே காவுந்தி படைத்துக்

கொள்ளப்பட்டதும், சாரணர்களின் அறவுரைகளும், இல்லற ஒழுக்கில் சமண-மதக்கருத்து மேற்கொண்டிருந்தவர்கள் போல, கண்ணகி – கோவலனைச் சாவக-நோன்பினர் எனச்சுட்டுவதும், அடைக்கலப் பொருளின் சிறப்பினை விளக்க மாதரியிடம் உரைக்கும் கதையும் தக்க சான்றுவன. வைணவக் கொள்கை மறுக்கப்படுதல் போல சமண மதக்கொள்கை யாண்டும் மறுக்கப் படாமை எண்ணவேண்டுவது. எல்லா வற்றிற்கும் மேலான மறுப்பு, வேதநெறி யொடு கூடிய தேவந்தி கண்ணகியைக் காவிரிப்பூம்பட்டினத்தின் சோம குரிய குண்டங்களிலே நீராடிக்காமனை வணங்கினால் கணவனைப் பெறல் கூடுமென்ற போது, கண்ணகி உரைத்த ‘பீடன்று' என்ற ஒரு சொல்லே வலிவுடையது. மூர்த்தி, தீர்த்தம், தலம் என்ற அடிப்படையோடு மறை வழிப்பட்ட சடங்குகளை உடையதான மதக்கருத்துக்களை (சைவ-வைணவ) ஆணித் தரமாகச் சாடிய இடமது. எனவே, எவ்வழி நோக்கினும் சிலம்பு முழுமையான சமண-மதக்கருத்துடையதே! ஆயினும்; ஏனை மதங்களின் மீது காழ்ப்புடையதன்று: அந்தப்பொது நோக்கே அதன் வாழ்வினை வெற்றியில் அமைத்தது.

### பாத்திரப்படைப்பு

சிலம்பிலே பேசும்பொற் சித்திரங் களாக நடமிடுகின்ற பாத்திரங்களை - அவர் தம் குணநலன்களைத் தொடுவது என்று நெருங்கினால் அதற்கு இடமேது? கற்பின் கனலியான கண்ணகி; தடுமாற்றத்தின் முழு உருவமான கோவலன்; சேற்றில் மலர்ந்த செந்தாமரை மாதவி; நாடகத்துக்கு வலிமை யூட்ட ஓர் காவுந்தி, அறம் பேச மாடலன்; தோழி தேவந்தி; கண்ணகி - கோவலன் பெற்றோர்கள்; இடைக்குல மூதாட்டி மாதரி-மகள் ஐயை; மாங்காட்டுமறையவன்; முடியுடை வேந்தர்கள்; வேட்டுவச்சாலினி; பாசண்டச்சாத்தன் என இங்ஙனம் தொகுதியாக நின்று கதையை நடப்பிக்கும் பாத்திரங்களுள் முழுமை பெருத பாத்திரந் தான் ஏது ? ஒரேகாட்சியிலே வந்து செல்லு கின்ற மாங்காட்டுமறையோன், சாலினி போன்ருர் கூட நிறைவாக நெஞ்சத்தில் நிற் கிருர்கள். சிலம்பின் பாத்திரப் படைப்பை மேனுட்டுத் திறனய்வாளர்கள் புகழ்ந்து பேசுவதிலே வியப்பென்ன இருக்கமுடியும்?

### பொதுச்செய்திகள்

இங்ஙனம் கருத்தால் - வளத்தால் சிறந் திருக்கும் சிலம்பு பண்டைத் தமிழ் நாட்டின் பழக்க - ஒழுக்க வரலாறுகளையும், முடியுடை வேந்தர்களையும், அவர்தம் கோநகரங்களின் வளமார் காட்சிகளையும், பல்வேறு வகைப் பட்ட மக்களின் அக்கால வாழ்வியற் கூறு பாடுகளையும், இசை – நாடகம் போன்ற நுண்கலைகளின் மாட்சியினையும், தமிழ் நாட்டின் தெய்வக் கொள்கைகளையும், வாணிகம், உடை முதலியனவற்றினையும் பேசுவதாய் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட வளர்ந்தோங்கிய தமிழ் நாக ரிகத்தை உலகுக்குப் படம் பிடித்துக் காட்டும் கருத்துக் கருவூலமாகத் திகழ்வதில் தான் நாம் பெருமைமிகக் கொள்கின்ருேம். இந்தச் சிலம்பாற்றில் திளைத்து வளங் கண்டார் எண்ணற்ருர். சிலப்பதிகாரம் என்ற பெயருக்குக் காரணமாய சிலம்பு, கண்ணகி சிலம்பா அன்றி கோப்பெருந்தேவி யதா என்பது சிலரின் ஆய்வுப் பொருளாக இருக்கிறது. சிலம்பால் அதிகரித்த கதை என்பதால் அந்த நீட்சிக்குக் கோப்பெருந் தேவியின் சிலம்பு காணமற் போனதே காரணமெனக் கொண்டு, கோப்பெருந் தேவியின் சிலம்பென நாட்டுவர். மற்றும் சிலம்பில் ‘தாலி பற்றிய குறிப்புண்டா எனவும் ஆராயப்படுகிறது. ‘மங்கல அணி' என்பது தாலிதான் என்பது சிலரது வாதம். ‘கொற்றவைவாயில் பொற்றொடி தகர்த்து'

என்பதே கணவன் மறைவுக்குப்பின் பேசப் பெறுவதால் அது பொருந்தாதென்பது எதிர்வாதம்.

இவ்வாறு சிலம்பு காண்பார் கருத்துக் கெல்லாம் இடம் தருவதாய், வடமொழிச் சொற்கலப்பில் மிகக்குறைந்ததாய், முத் தமிழின் பெருஞ்சொத்தாய் நிற்கிறது. இளங்கோவின் காலத்தைப் பின்னே மேகலே பற்றிய ஆய்வின் இறுதியிலே பேசுவோம்.

## மேகலே அறிமுகம்

அடுத்து நம் சிந்தனையைக் கவர்வதாய் நிற்பது அறச்செல்வி மணிமேகலையின் அருள்வரலாறு. மதுரைக் கூல வணிகன் சாத்தனியற்றிய இவ்வின் தமிழ் நூலுக்கு அவரிட்ட பெயர் மணிமேகலேத் துற வென்பதே. முன்னர்க் கண்டதுபோல ஐம் பெருங்காப்பியங்களுள் வாழ்ந்திருக்கும் பௌத்தமதக் காப்பியம் இஃதொன்றே! இரட்டைக் காப்பியத்துள் ஒன்ருன மேகலே சிலப்பதிகாரத்தின் தொடர்ச்சியுட்பட்டதே. இதனை,

> "மணிமே கலேமே லுரைப்பொருண் முற்றிய
> சிலப்பதி கார முற்றும்"

என்ற வஞ்சிக்காண்ட வரிகளால் அறி கிரேம்! இந்நூல் சிலப்பதிகாரக் காலத்தி லேயே இயற்றப் பெற்ற தென்பதும், இளங்கோவடிகள் முன் மேகலே அரங் கேற்றப் பட்டதென்பதும் பதிகத்தால் அறியக் கிடக்கிறது.

> "இளங்கோ வேந்தன் அருளிக் கேட்ப
> வளங்கெழு கூல வாணிகன் சாத்தன்
> மாவண் டமிழ்த்திற மணிமே கலேதுற
> வாறைம் பாட்டினு ளறியவைத் தனனென்"

என்பது காண்க. இந்நூல் முழுவதும் நீண்ட ஆசிரியப்பாவினல் நடைபெறு கின்றது. கதை பொதிபாட்டென்ற பதிகம் தவிர, விழாவறை காதைமுதல், பவத்திற மறுகெனப் பாவை நோற்ற காதை இறுதி யாக முப்பது காதைகளே யுடையது.

## சாத்தனுரைக் காண்போம்

நுண்ணியச் சமயக் கருத்துக்களேப் பேசிப் போகின்ற மணிமேகலேத் துறவினே இயற்றிய மாகவிஞர் சாத்தனர். சங்க காலத் தமிழ்நாட்டு பௌத்தப் பெரியார் களுள் தலேசிறந்தவர். புத்தருக்குரிய பெயர் களுள் 'சாஸ்த்தா' என்பது ஒன்று. இச் சொல்லே சாத்தன் என வழங்குகின்றது. சாத்தன் என்ற பெயர் சங்ககாலத்தே வழக்கில் நின்றதென்பதனே, அக்காலப் புலவர்களுள் இருபதுக்கு மேற்பட்ட புலவர்கள் பெயர் புலவர் நிரலில் காணப் பெறுவதால் உறுதிப்படும். சாத்தனரே செங்குட்டுவற்கும் – இளங்கோவிற்கும் கண்ணகியின் வரலாற்றினே விரித்துரைத் தவர் எனச் சிலப்பதிகாரத்தால் அறிகிரேம்! இவர்தம் பாடல்கள் சங்கத் தொகை நூல் களிலும் காணப்பெறுகின்றன.

## ஒரு பார்வை

மாதவி கோவலன் காதல் வாழ்வில் பழுத்த கனி மணிமேகலே. கோவலன் கொலேயின்போது பருவமெய்திநின்ற இவளேத் தாய்வழிப் பாட்டி தம் குலத் தொழிலில் ஈடுபடுத்த முயன்ற முயற்சியில் செல்லாது, தாய் எண்ணப்படி துறவுபூண்ட தமிழகத்தின் ஒரே பௌத்த பிக்குணி மணிமேகலே. இவருடைய வரலாறு சமயக் கருத்துக்களேப் புகுத்தி விரிக்கப் பெற்ற தால் ஏராளமான புனேந்துரை நிகழ்ச்சிகள் இவ்விலக்கியத்தே இடம் பெற்றன. புனேந் துரைகள் சிலம்பை விடப் பன்மடங்கு மேகலேயில் இடம் பெற்றிருப்பதற்குக் காரணம், சிலப்பதிகாரத்திற்குக் கிடைத்தது போன்ற வலிய அடிப்படை அதற்கில்லாதுபோனமையேயாம். வீறுநடை

போட்டியலும் இவ்விலக்கியமும், பெருங் கதையும் 'இயைபு' என்னும் செய்யுள் வனப்பிற்குப் பேராசிரியரால் எடுத்தாளப் பெறுகிறது. இவ்வரிய இலக்கியத்தே திளைத்த சிவப்பிரகாசர், கொந்தார் குழல்மணி மேகலை நூல் நுட்பங் கொள்வ தெங்ஙன்?' என வியக்கிறார்.

### கதையின் பிரிவு

மணிமேகலை மலர்வனம் புகுந்து மணி மேகலா தெய்வத்தின் அருளால் மணி பல்லவஞ் சென்று பழம்பிறப் புணர்ந்து, அமுதசுரபியும் - மந்திரமும் பெற்று, காவிரிப் பூம்பட்டினம் வந்து பசிப்பிணியால் வருந்தி யோர்க்கு உணவளித்தாள். அவளைக் காதலித்த அரசிளங் குமரன் காஞ்சனனால் வெட்டுண்டிறந்தான். அதனால் சிறைப் படுத்தப்பட்ட மேகலை பின் விடுவிக்கப் பெற்று ஆபுத்திரன் நாடு சென்று அவனை மணிபல்லவத்திற்குக் கொணர்ந்து அவனது பழம் பிறப்பை அறிவித்தாள். பின் வஞ்சி சென்று சமயக் கணக்கர் தம் திறங் கேட்டு காஞ்சிமாநகர்போந்து, அறவண அடிகளால் புத்த ரோதிய அறங்களைக் கேட்டுத் தெளிந் தாள். இறுதியில் 'பவத்திறம் அறுப்பேன்' எனத் தவத்திறங் கொண்டு நோற்றிருந்தாள் என்பது மணிமேகலை பேசும் கதையாகும்.

### மாபெரும் வெற்றி!

இந்நூலின் உட்புக்கு ஆராயப் புகின் அதுதரும் அறக்கருத்துக்கள் மிகப்பலவாம். நிலையாமை, மன்னர் கடமை, கொடைச் சிறப்பு, உயிர்த்துணைப் பொருள் போன்ற அருங்கருத்துக்கள் எண்ணி வியக்கத்தக்க தாக அமைந்துள்ளன. உவமைகளை எடுத் தாளுவதில் சாத்தனார் – இளங்கோவை விஞ்சுகின்றார் எனல் மிகையன்று. கதை நடத்தும் பாத்திரங்களாக மாவண்கிள்ளி, உதயகுமாரன், ஆபுத்திரன், அறவண வடிகள், காஞ்சனன், மாதவி, சுதமதி, ஆதிரை, சித்திராபதி போன்றார் முழுமை யாகப் புனையப் பெற்றுள்ளனர். அறவண அடிகள் பௌத்தமதக் கருத்திற்கு ஒரு பெரும் நிலைக்களனாகவே திகழ்கிறார். மணி மேகலையை ஒத்த ஒரு காவியத்தலைவியைச் சாத்தனுக்கு முன்னோ பின்னோ எவரும் பாடவில்லை! எளியநிகழ்ச்சிகளால் ஒரு நிலைத்த காப்பியத்தை இயற்றி வெற்றி காண்பதென்பது அத்துணை எளிதன்று. அந்த முயற்சியிலே சாத்தனார்க்கு முழு வெற்றி கிடைத்தேயிருக்கிறது. ஒரு சில காதைகள் கதை நிகழ்ச்சியே இல்லாமல் மதக்கருத்துக்களின் தொகுப்பாகவே இருக்கக் காண்கிறோம். அங்கே கற்பார்க்குச் சற்றுத் தொய்வு நிகழ்தல் இயல்பே! என்றாலும், ஒன்பான் சுவையும் – சங்ககாலச் சமயக் கருத்தும் மணிமேகலையால் தெற்றன விளங்கியே நிற்கிறது.

### நுண்பொருள்கள்

மணிமேகலை தரும் கருத்துக் கருவூலங்கள்பல. இந்திரவிழா, மூவகைப் பத்தினிகள் பற்றிய குறிப்பு, யாக்கையின் இழிநிலை: பொறிகளை அடக்கும் முறை: அரசியல் அறிவுரை: பசிப்பிணியின் கொடுமை: உணவு கொடுத்தாரின் சிறப்பு: தலயாத்திரை செய்தல்: கணிகையர் இயல்பு: அவர் பெறும் தண்டனைகள்: அறம் செய்யக் காரணம்: அரசநீதி: அவர்க்குரிய அறிவுரைகள்: பாண்டு கம்பளம்: அறச்சிறப்பு போன்ற பல் வேறு வகைப்பட்ட நிலைகளை இந்நூல் வற்றாது வழங்கக் காண்கின்றோம்; பௌத்த மதக் கருத்துக்கள் முதலில் 'பாலி' மொழியில் எழுதப்பட்டு, பிறகு வடமொழியில் எழுதப் பெற்றமையின், மேகலையில் இவ்விருவகை மொழிச் சொற்களும் மிகுதியாக எடுத்தாளப் பெறுகின்றன. பெயர்ச் சொற்கள், ஊர்ப்பெயர்கள்: விலங்குகள் பெயர்கள் போன்ற முப்பது வகைகளில்

நூற்றுக்கு மேற்பட்ட அவ்வகைச் சொற்களை ஆண்டுக் காண்கிறோம். மற்றும், உதயணன் அகலிகை, வசிட்டன், அகத்தியன் பிறப்பு, தீக்கடவுள் மனைவியின் கதை, பரசுராமன் அரசர்களை அடக்கிய கதை, திருமால் வாமனவதாரக்கதை, போன்ற பல கதை நிகழ்ச்சிகளும், புராணக் கொள்கைகளும் மேகலையில்தான் முதலில் விரிவாகப் பேசப் பெற்றன.

### காலக்கண்ணோட்டம்!

சாத்தனாரும்- இளங்கோவடிகளும் சம காலத்தவர்கள் என்ற கொள்கையை முன்னரே கண்டோம். சிலப்பதிகாரத்தால் இளங்கோவின் தமையனை சேரமன்னன் செங்குட்டுவன் சாத்தனார்மூலம் மலைவளங் காணச் சென்ற விடத்தில் கண்ணகியின் வரலாற்றைக் கேட்டறிந்தான் எனக் காண்கிறோம். சேரமாதேவி 'நம் அகன் நாடடைந்த இப்பத்தினிக் கடவுளைப் பரை சல் வேண்டு'மென்று தன் விருப்பங் கூற, குட்டுவன் வடநாட்டில் படை கொண்டு சென்று, வடவாரியரை வென்று, இமயத்தில் கல்லெடுத்து கங்கையிலே நீர்ப்படுத்து வஞ்சிக்குக்கொணர்ந்து கண்ணகிக்குச் சிலை வடித்துக் கோயில் சேர்த்து விழவெடுத்தான்; அந்தவிழாவிற்கு 'கடல்சூழ் இலங்கைக் கயவாகு' மன்னன் வந்திருந்தான் என்பதெல்லாம் வஞ்சிக்காண்ட சான்றுகள். இக்கயவாகு பத்தினித் தெய்வ வழிபாட்டை ஈழத்திலும் நாட்டினன். இன்றும் 'பத்தினித் தெய்யோ' எனக் கண்ணகியைச் சிங்களவர் கொண்டாடுகின்றனர். அவ்வழிபாடு கண்ட கஜபாகுவேந்தன் கி. பி. 171-முதல்–193 வரையில் இலங்கையை அரசாண்டான் என இலங்கை வரலாற்று மூல நூலாய மகா வமிசம் குறிப்பிடுகிறது. எனவே, இதனைக் கொண்டு கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதிக்காலத்தேதான் சிலம்பும்-மேகலையும் இயற்றப்பெற்றிருக்க வேண்டுமெனத் துணிகிறோம்.

இங்ஙனமாக மணிமேகலைத்துறவு ஒப்பற்ற காப்பியமாக நின்று தமிழன்னையை அலங்கரிக்கிறது. அதன் நாயகியான மணிமேகலை அழகும், அறிவும், பக்தியும், பண்பும், தொண்டும், துறவும் கொண்ட மாமகள்:

> "நாவலந் தீவில் இந்நங்கையை ஒப்பார்
> யாவரும் மில்லை"

என்ற அடிகளுக்கேற்ற, கருத்தைப் பிணிக்கும் காவியத்தலைவி!

### விருத்தப்பா எழுச்சி

'விருத்தமெனும் ஒண்பாவில் உயர் கம்பன்' எனவிருத்தப்பாக்களில் இலக்கியம் படைப்பதில் தனக்கெனப் புதுவழி கண்டான் அக்கவிஞன். தொடர்நிலைச் செய்யுளிலேயே கதை பொதி பாடல்கள் பாடப்பட்டுவந்த மரபினைத்தகர்த்து எளிய இனிய – ஓசையும் அழகும் ததும்பும் விருத்தப்பாக்களைக் கைக்கொள்ளும் முயற்சிக்கு வித்திட்டுக் கம்பனுக்கே வழி திறந்துட்டபெருமை சீவகசிந்தாமணி என்ற அகச்சுவைததும்பும் சமணக் காப்பியம் கண்ட திருத்தக்க தேவருடையதே யாகும். காப்பிய இலக்கணங்களை முற்றிலுமாகத் தழுவிநிற்கும் வாய்ப்பு இதற்குக்கிடைத்தது. அதற்குக்காரணம் இரட்டைக் காப்பியங் களுக்குப்பின் ஏழு நூற்றாண்டுகள் கடந்து இது கிளைத்தமையேயாகும்! அறமுதல் நான்கினைச் சமண நெறியில் தெரிய உரைக்கும் பெற்றியது சிந்தாமணி.

### பிரிவும்-உரையும்

அருகவணக்கம், சித்தவணக்கம், சரணவணக்கம் என்ற மூன்றோடும் இந்நூல் தொடங்கப்பெறுகிறது. தமிழில் முதன் முதலில் இலம்பகம் என்ற உட்பிரிவுகளைச்

சிந்தாமணியில்தான் காண்கிறோம். இலம்பகம் என்ற சொல் மாலை எனப் பொருள்பட்டு நிற்கிறது! நாமகள் இலம்பகத்திற்றொடங்கி-முத்தி இலம்பகம் ஈறாக பதின்மூன்று பிரிவில் இரண்டாயிரத்து எழுநூறு விருத்தப்பாக்களால் விறுநடையிடுகின்ற காப்பியம் சிந்தாமணி; இலம்பகங்கள் பாடற்றொகையில் தம்முள் வேற்றுமையுடையன! இந் நூலுக்கு உச்சிமேற் புலவர் கொள் நச்சினர்க்கினியர் இருபதாண்டுகள் முயன்று உரை கண்டார் என்ப. சைவ-சமயத்தவராய இவர் சமண-நூற்கு உரை கண்டாரே என்ற வெறுப்பே சிவஞான முனிவர் போன்றோர் இவரைச் சாடுவதற்கான உண்மை அடிப்படை எனத் தெளிதலில் தவறில்லை!

**தலைவன் பெயரில்...!**

'சீவகன்' என்ற ஒப்பாரும் மிக்காருமற்ற பெருமகனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டது சிந்தாமணி! சிந்தாமணி என்ற பெயர்க்காரணம் பற்றிய கருத்துக்கள் பல! சிந்திப்பனவற்றையெல்லாம் தருதலின் சிந்தாமணி என்றும், 'சிந்தாமணியே கிடத்தியால்' எனவிசையை சீவகனை முதலில் விளித்தமையின் சிந்தாமணி என்றும், சிந்தாமணி போன்ற ஓர் அறிய மணியாகையால் சிந்தாமணி என்றும் பெயர் பெற்றதெனப்பலவாறு கூறப்படுகிறது! கந்துகக்கடன் சீவகனை எடுக்கும் பொழுது ஓர் அசரீரி 'சீவ' என்று எழுந்ததால் ("சினைமறைந்தொரு குரல் சீவ என்றதால்") அவனுக்குச் சீவகனென்ற பெயருற்றதென்றும், அதனல் இந்நூல் சீவக சிந்தாமணி என வழங்குவதாயிற்றென்றும் கூறுகின்றனர்.

**அடிப்படை சில**

சீவகன் மகளிர் எண்மரோடு, கலையால் நாமகளையும், வெற்றியால் பூமகளையும், ஆட்சியால் மண்மகளையும், தவத்தால் முத்தி மகளையும் மணந்தானென்பதாலும் இந்நூல் 'மணநூல்' என வழங்கப் படுவதாயிற்று! சீவகன் பல மகளிருடன் காதல் கொண்டதும், அம்மகளிர் பலரும் இவனைக் காதலித்து மணந்து கொண்டமையும் தமிழ் அகப்பொருள் இலக்கணத்திற்குப் பொருந்தவில்லை என்பது ஔவை துரைசாமி பிள்ளை போன்றோர் கருத்தாகும். கதை தமிழ்நாட்டில் நிகழ்ந்ததன்றென்பதை எண்ணத்தில் கொண்டே இதற்குத் தெளிவு காணமுடியும். வடமொழி ஜீவக சரிதமே இதற்கு முதனூல் என்பர் அறிஞர் உ. வே. சா. அவர்கள். பிறமொழிக் கதைகளைத் தமிழில் பாடும் போது கதையின் மூலம் சிதையாமல் தமிழ்ப் பண்புக்கு ஏற்ப மாற்றிக்கொள்ள முடியுமே தவிர அடிப்படையான கருத்துக்களை மறுத்தல் எங்ஙனம் கூடும்? வடமொழி வியாச-பாரதத்தைத் தமிழ்ப்படுத்துகையில் வில்லிபுத்தூரார் திரௌபதியின் மண நிகழ்ச்சியை மாற்றிவிடக் கூடவில்லையே! சீவகன் மகளிர் பலரை மணந்தாலும் தன் தந்தையைப் போல காமவின்பத்திலேயே திளைத்திரானுய்க் கடமையாற்றிச் சிறந்தான் என இறுதியிலே காணுகின்றோம்!

**எழுச்சியின் நோக்கம்!**

தேவர் வடமொழி, சந்திர சூடாமணியையும், கத்திய சிந்தாமணியையும் முதன் நூலாகக் கொண்டே தன் இலக்கியத்தைப் படைத்தார் என்றும் அறிகிறோம். மகா புராண உத்தர பாகத்தில் இக்கதை கூறப்படுகின்றதென தஞ்சை, சீனுவாச பிள்ளை கூறுகிறார். தன் புலமையை ஆசிரியர் அறிய நரிவிருத்தத்தையும், சமணர்கட்கு அகச்சுவையொழுகப் பாடவும் வருமென நாட்டச் சீவகசிந்தாமணியையும் தேவர் இயற்றினரென்ப. இவர்க்குச் சிந்தாமணியாசிரியரென்றே ஒருபெயருண்டு.

குமரசேன ரென்பவரே இவரின் ஆசிரியர் எனக் கேட்கப்படுகிறது! அவர்பாடிய 'பொன்வரைமேல்' என்ற செய்யுளினும் சிறந்ததாக 'மூவாமுதலா' என்ற செய்யுளி யற்றித்தம் ஆசிரியரின் பாராட்டைப் பெற்றுரிவர். இது காலத்தால் இரட்டைக் காப்பியங்களுக்குப்பிற்பட்டது. வளையாபதி குண்டலகேசிகளுக்கு முற்பட்டதென் பதும் ஆராய்ச்சி முடிபாகும். சிந்தாமணி சிறப்புப் பாயிரத்தில் 'பொய்யா மொழி புகழ் மையறு காட்சித் – திருத்தகுமுனிவர் கருத்திது வென்ன' என்ற தொடர்கொண்டு பொய்யாமொழி காலத்தவர் திருத்தக்க தேவரெனக் கொண்டு, இப்பொய்யாமொழி என்ற தொடர் கங்கமன்னனுகிய சத்திய வாக்கினைக் குறிப்பதால், அவன் காலமான (கி. பி. 908 – 950) பத்தாம் நூற்ருண்டின் முற்பகுதியே சிந்தாமணியின் கால மென்பர். இக்கருத்தை திரு. உ. வே. சா. அவர்களும் வையாபுரிப்பிள்ளையும் உடன் படுகின்றனர்.

### பாராட்டுரைகள்

இனி, கம்பர் பெருமானே தமது இராமாயணத்திற்குச் சிந்தாமணியில் ஓரகப்பையும், திருக்குறளில் ஓரகப்பையும் மொண்டுகொண்டேன் என்பாரேல் சிந்தா மணியின் பெருமையை உரைக்க வேறு சான்றும் வேண்டுமோ. சிந்தாமணி தோற்றங்கொண்ட காலத்தே பெருவழக்கில் இருந்ததென்பதும், அதன் வளர்ச்சியும் பயிற்சியும் நோக்கி அச்சமுற்ற சைவர்கள், அதற்குப் போட்டியாகப் பெரியபுராணம் பாடச் சேக்கிழாரைத் தூண்டினர் எனவும் கேட்கப்படுகிறது. ஆருகத – சமயக்கருத் துக்கள் வலிமையாகப் பேசப்படுகிறது. சமணர்களது இலக்கியப் பணிகளுள் இன்பச் சுவையைச் சிந்தாமணியை ஒப்ப எடுத்துரைக்கும் நூல் வேறேதுமில்லை! என்ருலும் காமச்சுவையை எடுத்தாள் வதிலே தேவர் முழுமையான வெற்றிகண்டு விட்டார் எனல் முடியாது. ஒன்பான் சுவைகளும், மதச்சடங்குகளும், வழக்க ஒழுக்கங்களும் – வீரமும், கற்பனையும், உவமைநலமும், அணியழகும் ததும்பிநிற்கும் சிறப்பினைச் சிந்தாமணி முழுமையாகப் பெற்றிருக்கிறது! திருக்குறள் கருத்துக்கள் தேவரால் இலக்கிய மெங்கணும் பரவலாக எடுத்தாளப் பெற்றிருத்தல் எண்ணி மகிழத் தக்கது. துறவின் பெருமை, தவவலிவு முதலியனவும் ஆசிரியரால் விரித்துரைக்கப் படுகின்றன. விருத்தப்பாவில் தேவர் தம் இலக்கியப்பணியை அமைத்துக் கொண்ட மையின் துள்ளுநடைபோடும் கவிதை நலத் தைச் சிந்தாமணியில் சந்தித்து மகிழ்கிரும்! இங்ஙனமாகச் சிந்தாமணி தமிழுக்குக் கிடைத்த பெருஞ்சொத்தாக ஐம்பெருங் காப்பிய வரிசையிலே தனக்கென ஒரு வலிமையான இடத்தைப் பிடித்துக் கொண்டிருக்கிறது.

### எண்ணிக்கை ஏன்?

வளையாபதியும், குண்டலகேசியும் முழுமையாகக் கிடைக்காமல் போய்விட்ட இந்த நாளிலும் அவைபற்றி அறிந்துகொள்ள வேண்டுமென்ற எண்ணத்தை நாம் இழந்து விடவில்லை. தமிழில் உள்ள இலக்கண இலக்கியங்கள் எண்ணிலடங்கா! அவற்றுள் பலவும் முழுமை பெற்றனவாய்: அச்சேறியும் உள்ளன. என்ருலும், நன்கு கற்றவர்களில் சிலருக்குக்கூட அரிய சில தமிழ் இலக்கண - இலக்கியங்களைப் பற்றி ஒன்றுமே தெரியா திருக்கிற தென்பதை நாம் ஒப்புக்கொண்டே யாக வேண்டும். சில பெயரைக் கூட அறியாதவர்களும் உண்டு. அத்தகை யோர்க்கும் வளையாபதியும் – குண்டலகேசி யும் பெயரளவிலாவது தெரிந்திருக்கிறது! இதற்குக் காரணம் ஐம்பெருங் காப்பிய வரிசைக்குள்ளே அவை இடம்பெற்றமையே எனல் சாலும். இலக்கியங்கள் வலிவு பெற்றனவாயினும் சில தொகுதிகளாக்கிப்

பெயரிடுவதால் மக்கள் உள்ளத்தே அவற்றை ஊன்றிவிட முடியுமென்ற பண்டைத் தமிழ்ச் சான்றோரின் நுண்ணறிவை எண்ணி வியக் காதிருத்தல் கூடுமோ? எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க் கணக்கு, ஐம்பெருங் காப்பியங்கள், ஐஞ்சிறு காப்பி யங்கள், பன்னிரு திருமுறை, நாலாயிரப் பிரபந்தம், பதினன்கு சாத்திரம் போன்ற தொகுப்பின் கருத்து இதுவாதலே கூடும்.

### வளையாபதி

வளையாபதி பற்றிய முழுவரலாறு கிடைத்திலது. நவகோடி நாராயணன் செட்டி யென்பான் வாழ்வியல் நிகழ்ச்சி களே இக்காப்பியக் கருவென்பர் சிலர். இக் கதைதான் வளையாபதியின் உட்பொரு ளென்பதை நிலைநாட்டச் சான்றேதும் இல்லை. திரு. ஐயரவர்கள் இக்கருத்தை ஏற்கிருர்கள். இக்காவியத்தின் தலைவன் யாரென்பதை அறியக் கூடவில்லை. ஆயின், அறிஞர் சிலர், குண்டலகேசி என்னும் காவியத்தலைவி பெயரால் வந்த பௌத்த நூலுக்கு எதிராக, சமணர் ஒருவர் வளையாபதி என்ற ஒரு சமணசமய மகளைத் தலைவியாகக் கொண்டு இதனை இயற்றி யிருத்தல் கூடுமென்பர். இவ்வளையாபதி சமணசமயத்தவரா அன்றி பௌத்த சமயத் தவரா என்று துணிய அகச்சான்றேது மில்லை. என்ருலும் இலக்கிய வரலாற் ருசிரியர்கள் யாவரும் இந்நூலைச் சமணச் சார்புடையதாகவே காட்டுகின்றனர்.

மற்றும், இந்நூலின் அமைப்பும், செய்யுள் தொகையும் ஐயமின்றி அறிதற் கியலாது போயிற்று. புறத்திரட்டில் அறுபத்தாறு செய்யுட்களும், யாப்பருங்கல விருத்தியில் உரை மேற்கோளாக மூன்று செய்யுட்களும் கிடைத்துள்ளன. அடியார்க்கு நல்லாரின் சிலப்பதிகார உரையில் காட்டப்பட்டிருக்கும் இக் காப்பியப்பாடல்களை இரண்டே என்பர் மயிலை. சீனி வேங்கடசாமி: ஏழு என்பர் வையாபுரிப் பிள்ளை.

இதன் காலத்தைச் சிந்தாமணியை ஒட்டி முன்னும் பின்னுமாகப் பேசுகின்றனர். பத்தாம் நூற்ருண்டின் இடைப்பகுதி எனல் ஒருவாறு பொருந்தும். கிடைத்த பாடல்களை நோக்குழி அவற்றில் சொல்லும், பொருளும் ஓசையும் - அழகும் சிறந்தே மிளிர்கின்றன. சமயக் கொள்கைகளும், பீடுடைய கருத்துக் களும் இச்செய்யுட்களிலே நிரம்ப உண்டென்பதற்குக் கீழ்வரும் வரிகளை ஒரு முன் மாதிரியாகக் கொள்ளலாம்.

> "நீல நிறத்தனவாய் நெய்கனிந்து போதவிழ்ந்து
> கோலங் குயின்ற குழல்வாழி நெஞ்சே!
> கோலங் குயின்ற குழலும் கொழுஞ்சிகையும்
> காலக் கனலெரியின் வேம்வாழி நெஞ்சே!
> காலக் கனலெரியின வேவன கண்டாலும்
> சால மயங்குவ தென்வாழி நெஞ்சே!"

### குண்டலகேசி

இறுதியாக வைத்தெண்ணத் தக்க காப்பியமாய்க் குண்டலகேசி நிற்கிறது. வைசியன் ஒருவன் மகளாகிய குண்டலகேசி, காளன் என்பானை மணந்தாள். சிலகாரணங் களால் இவள் தன் கணவனை மலையுச்சியி லிருந்து தள்ளிக் கொன்றுவிட்டு சமணம் புகுந்தாள். சமணர் இவள் கூந்தலைக் களைந்தனர். தலையில் மீண்டும் முளைத்த மயிர் சுருண்டிருந்ததால் இவள் குண்டலகேசி என்னும் பெயர் பெற்ருள் எனக் கேட்கப் படுகிறது. சமணம் புக்க இவள் சமயக் கொள்கைகளில் வன்மை பெற்று – பௌத்தம் முதலிய பிறமத வாதிகளை வென்று மேம்பட்டாள். ஒருகால் அக்கால வழக்கப்படி நாவல் மரத்தை நட்டு பிற சமயத்தாரை இவள் வாதிற் கழைத்தபோது புத்தபெருமானேடு உடன் வந்த சாரிபுத்தன் குண்டலகேசியோடு வாதிட்டு அவளை

வென்றான். இந்நிகழ்ச்சியால் குண்டலகேசி பௌத்த பிக்குணியாயினள்.

**சிலசெய்திகள்**

இக் காப்பியவரலாறு, பிராகிருத மொழியில் எழுதப் பெற்ற பௌத்த நூல்களாகிய தேரி காதை, தர்மபாதா, அங்குத்தர நிகாயா முதலியவற்றிலும், நீலகேசித் தெருட்டு என்ற சமணத் தமிழ் நூலுரையிலும், கூறப்பட்டுள்ளது. யாப்பருங்கல விருத்தியுரையில் இதனைத் தருக்க நூலென்றும், விருத்தப்பாவும், கலித்துறையுமமைந்த கதைப் பாட்டென்றும் கூறப்பட்டுள்ளதால், இதற்குக் குண்டலகேசி விருத்தம் என்ற பெயரும் உண்டென அறியமுடிகிறது. இதன்கண் சொல்லும் பொருளும் விளங்காத இடங்கள் பல காணப்படுவதால் இதனை அகலக் கவி என்றும் கூறுப. புறத்திரட்டு, வீரசோழிய உரை, யாப்பருங்கல விருத்தியுரை, தொல்காப்பிய உரை முதலியவற்றில் குண்டலகேசிப் பாடல்கள் மேற்கோளாக ஆளப்பட்டுள்ளன. திரு. வையாபுரிப் பிள்ளையின் ஆராய்ச்சியின் படி, குண்டலகேசிச் செய்யுட்களாக இருபத்தைந்து செய்யுட்களும், முதலடிகளையுடையதும், விடுபட்ட அடிகளையுடையது போல் காணப்படும் நீலகேசியுரையில் காணப்படும் நூற்றெண்பது செய்யுட்களும், புறத்திரட்டில் பத்தொன்பது செய்யுட்களுமே கிடைக்கப் பெற்றுள்ளன. சமயப் பூசல்களால் அழிந்த இந்நூலால் தமிழக வரலாற்றினையும், தமிழர் பழக்க வழக்கங்களையும் அறிதற்குரிய வாய்ப்பினை இழந்து விட்டோமே என எண்ணி மாழ்க வேண்டியுள்ளது. இந்நூலை இயற்றியவர் நாகுதத்தன் என்பாரெனச் சிலரும், நாதகுப்தனாரென உ. வே. சா. அவர்களும் கூறுகின்றனர். இதன் காலம் பற்றித் தெளிவாக ஆராயக்கூடவில்லை. சிலம்பு – மேகலைக்குப் பின்னரும், சிந்தாமணி – வளையாபதிக்கு முன்னரும் இது தோற்றம் கொண்டிருக்கலாமெனக் கோடல் பொருந்தும். இந்நூலும் சொற்பொருளும்–ஓசைநயமும் சான்ற இன்தமிழ்த்திறத்ததே என்பதில் ஐயமில்லை.

**எண்ணத்தைச் சொல்வேன்**

முடிவாகச் சில சொல்லி நிறைவுக்கு வருவோம். ஐம்பெருங் காப்பியங்களில் வளையாபதி, குண்டலகேசி இரண்டும் இறந்தன என்றே கொள்ளவேண்டும். எனவே, இல்லாத காப்பியமிரண்டை பெயரளவில் கூறிக்கொண்டிருப்பதால் பயன் இல்லை. முதல் மூன்று காப்பியங்களில் சிலம்பைப் பொதுநோக்குடையதென ஒருவாறு உடன்பட்டால், மேகலை – பௌத்த சமய நூலாகவும், சிந்தாமணி சமண – சமய இலக்கியமாகவும் அமைகிறது. இத்தொடரில் மறை வழிப்பட்ட அகச் சமயமாகிய சைவ – வைணவப் பெருநூல்களில் காப்பிய அமைதி கொண்டனவற்றை இணைத்துக்கொள்வதில் தடை என்ன இருக்க முடியும். சைவ–சமயத்தில் காப்பிய அமைதியுடையதாய்க் கந்தபுராணமும் பெரிய புராணமும் நிற்கின்றன. வைணவக் கருத்தில் கம்பராமாயணம் முழுமையானதே. இவற்றுள் இரண்டை ஐம்பெருங் காப்பியத் தொடரில் இணைத்துக் கொள்வதால் வரத்தக்க இழுக்கென்னை? அகப் – புறச் சமயங்கள், கைகோத்துச் செல்லும் புதுநெறி ஒன்றை இருபதாம் நூற்றாண்டுகண்டதென்ற பெருமையை நாம் பெற்றுக்கொள்ளலாகாதா? இதை நல்லுள்ளம் படைத்த அறிஞர்கள் சிந்திக்க வேண்டுமெனக் கேட்டு; ஐம்பெருங்காப்பியத்தின் சுவை மாந்தி நலம் பேசி, வழிநடந்து – வளங்கண்டு உய்வோம் எனக் கூறி நிறைவு செய்வோம்.

# கபிலர்

## ( புலமைத் திறனாய்வு )

வித்துவான், திரு. செ. வேங்கடராமச் செட்டியார்,

*தமிழ் விரிவுரையாளர் – அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.*

[ சங்ககாலப் புலவர் பெருமக்களுள் தலைசிறந்து விளங்கியவரும், புலனழுக்கற்ற அந்தணாளருமாகிய கபிலரின் ஒப்புயர்வற்ற புலமை நலத்தை - கற்பனைவளத்தைத் திறனாய்வு செய்து விளக்குகிறது இக்கட்டுரை. இக்கட்டுரைக்கண் 'உருமுரறு கருவிய பெருமழை தலைஇ' என்று தொடங்கும் 158-வது அகநானூற்றுப் பாடலை மட்டும் எடுத்துக்கொண்டு 'ஒருபானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்பது போல, இப்பாடலின் கண் கரைபுரண்டு ஓடும் கபிலரது புலமைத் திறத்தை நுணுக்கமாக ஆசிரியர் எடுத்தியம்புகின்றார். தலைவியின் மேல் அன்னை கொண்ட ஐயப்பாட்டினைத் தீர்க்க முயலும் அன்புத் தோழியின் கூற்றில் கபிலர் ஏற்றிவைத்திருக்கும் பல் வகைச் சுவையும் இங்கே விரிந்து, கபிலரின் புலமை நலத்திற்கு வனப்பூட்டி மணஞ் சேர்க்கிறது ]

கபிலர் சங்க காலப் புலவர் பெருமக்களுள் தலைசிறந்த புலவர் ஆவர். 'கபிலரது பாட்டு' எனச் செய்யுட் கிழமைக்கு எடுத்துக்காட்டாக உரையாசிரியர்கள் காட்டுவது கொண்டு கபிலரின் பாட்டுக்குஅக்காலத்திருந்தசிறப்பும்புகழும் புலனும். பறம்பு மலைக்குரிய வள்ளல் பாரிக்கு உற்ற நண்பராயிருந்தவர் கபிலர். சங்க நூல்களில் இவர் பாடியனவாகக் கிடைத்துள்ள பாடல்கள் எட்டுத்தொகையில் 237. பத்துப் பாட்டில் ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ் அறிவுறுத்தப்பாடிய குறிஞ்சிப்பாட்டு ஒன்று. பாரியோடு பறம்பு மலையில் பல்லாண்டுகள் வாழ்ந்து பழகிக் குறிஞ்சி நிலத்தின் இயல்புகளையும் அந்நிலத்து மக்களின் வாழ்க்கை நெறிகளையும் நன்குணர்ந்தவராதலின் இவர் பாடிய அகத் துறைப் பாடல்களில் பல குறிஞ்சித்திணை பற்றியனவாகவே விளங்குகின்றன. குறிஞ்சித்திணையில் இவர்காட்டும் நுட்பங்கள் மிக்க சிறப்புடையனவாகும்.

அகநானூற்றில் கபிலர் பாடிய குறிஞ்சித்திணைப்பாடல் ஒன்றின் மூலம் அவர் தம் புலமை நலத்தை ஆராய்ந்து காண்போம்.

தலைவியைக் களவில் கலந்த தலைவன் ஒருநாள் சிறைப்புறத்தானாக- மதிற்புறத்தில் நிற்பவனாக அறிந்து கொள்கின்றாள் தோழி, தலைவன் களவு நீட்டிப்பதில் கருத்துடையவனாக இருக்கின்றானேயன்றி விரைவில் வரைந்து கொண்டு இல்லறம் பூண இசைபவனாக இல்லை. இத்தகைய மனநிலையோடு தான் அன்றும் தலைவியைக் காண வந்துளான். தோழி எத்துணை முறை சொல்லியும் அவன் மணந்து கொள்ளவில்லை.

மீண்டும் மீண்டும் களவின் பத்தையே பெரிதாக எண்ணி வருகின்ருன். களவில் கலப்பதில் தலைவிக்கு உள்ள இடையூறுகள் மிகப்பல என்பதை அவன் எண்ணியே பார்ப்பதில்லை. எப்படியேனும் இவனை விரைந்து வரைந்து கொள்ளுமாறு செய்ய வேண்டும் என்பது தோழியின் நல்லெண்ண மாகும். அத்தலைவன் மதிற்புறத்தில் வந்து நின்றிருக்கும் இந்த நேரத்தில் தன் கருத்தினை முடித்துவிட வேண்டும் என எண்ணித் தொடங்குகின்ருள். மதிற்புறத்தில் நின்றுள்ள தலைவன் காதில் விழும் வண்ணம் உரத்துப் பேசுகின்ருள். செவிலித்தாயோடு உரையாடுபவள் போல நாடகம் போடுகின்ருள். ('தலைமகன் சிறைப் புறத்தானகத் தோழி செவிலித்தாய்க்குச் சொல்லுவாளாய்த் தலைவன் கேட்பச் சொல்லியது' என்று இவ்வகப்பாட்டிற்குத் துறை கூறுவர்)

"அன்னையே வாழி! யான் சொல்வதை விரும்பிக்கேள். தலைவியை யில்லது சொல்லி அலைக்காதே. "இடியோடு கூடிய பெரு மழை பொழிந்து அடங்கியபின் இருள்மிக்க நள்ளிரவில் மின்னல் நிமிர்ந்து தோன்றினற் போலக் கனவிய குழை யென்னும் காதணி காதில் ஒளி வீசப் பின்னிய நிலையிலிருந்து நெகிழ்ந்து அவிழ்ந்த நெறிப்படக் கிளைத்த கூந்தலையுடையவளாய், மலையிலிருந்து இறங்கும் மயிலைப் போல மெல்லெனத் தளர்ந்து ஒதுங்கி இவள் மதிலில் ஏறி இறங்கக் கண்டேன், என்று இவள் செய்யாத சொல்லி வருத்தாதே."

இது தோழியின் பணிவான வேண்டு கோள். தன் தலைவியின் பொருட்டு இவ்வளவு இரக்கத்துடன் செவிலித்தாயை வேண்டிக் கொள்கின்ருள். இவள் வேண்டு கோளால் என்ன தெரிகின்றது? தலைவி, நேற்று நள்ளிரவில் எல்லோரும் உறங்கும் போது எழுந்து சென்று மதிற்புறத்தில் நின்ற தலைவனேடு கலந்துரையாடிவிட்டு அம் மதில்மேலூர்ந்து ஏறிப் பின் இறங்குகின்ற போது செவிலித்தாய் தன் கண்களால் கண்டு விட்டாள் என்பதும், அவ்வாறு கையும் களவுமாகக் கண்டமையால் தலைவியை நெருங்கி இது 'நம் குடிக்கு ஏற்ற தன்று' என்று, இன்று அந்த நிகழ்ச்சியைச் சொல்லித் தலைவியைச் சுடு சொற்களால் அலைக்கின்ருள் என்பதும் புலப்படுகின்றன. இவ்வாறு செவிலி தலைவியைச் சுடு சொல்லால் அலைக்கும்போதுதான் தோழி இடை மறித்து 'அலையல் வாழி வேண்டன்னை' என்று அன்பால் தடுத்துக் கூறுகின்ருள் என்பதை நாம் உளங் கொளல் வேண்டும்.

இப்போது, தலைவிமேல் செவிலித்தாய் கூறும் குற்றச்சார்த்து யாதெனின்? கூதிர் காலத்தில் பெருமழை பொழிந்து அடங்கிய பின் நள்ளிரவில் தலைவி தனியே எழுந்து சென்று தோட்டத்திலுள்ள மதிலைக் கடந்து சென்று மீண்டும் அம்மதில்மேல் ஊர்ந்து ஏறி இறங்கினள். அவள் தலைவியே என்பதை அந்நல்லிருளிலும் கண்டு கொள்ள, அத்தலைவி காதிலணிந்த கனங்குழை மின்னலைப்போல நெடிது ஒளி வீசியது என்பது. இந்தக் குற்றம் செவிலித்தாய் தானே நேரில் தன் கண்களே சான்ருகக் கண்ட குற்றம். பிறர் பிறர் சொல்லக் கேட்டதன்று. இருள் செறிந்த நள்ளிரவில் தலைவியின் முகத்தை நன்கு அறிந்து கொள்வதற்கு அவள் அணிந்த கனங் குழையின் மின்னெளியே யுதவிற்று என்பதையும் தெளிவாகக் குறிப்பிடுகின்ருர்.

இங்ஙனம் செவிலித்தாய் கண்ணுரக் கண்டதாகக் கூறும் தலைவியின் குற்றத்தை எப்படி மறுப்பது? தலைவியை அப்பெரும் பழியினின்றும் மீட்பதுதான் எப்படி? அறிவு சான்ற தோழிக்கு இது அரிதாகத் தோன்றவில்லை. ஒரு நொடியில் சிந்தித்துச்

சொல்கின்றாள். ஒரு குற்றத்தை நிறுவும் போது அக்குற்றம் நிகழ்ந்த இடத்தின் இயல்பும், குற்றம் சார்த்தியவரின் இயல்பும், குற்றம் சார்த்தப்பெற்றவரின் இயல்பும் குற்றம் சார்த்தப் பெற்றவர் இருந்த சூழ் நிலையும் ஆகிய நான்கினை நன்கு ஆராய்ந்து பார்த்த பின்னரே உறுதியாக நிறுவ இயலும். வழக்கினை அணுகும் முறையும் இதுதான். முதலில் குற்றம் நிகழ்ந்ததாகக் கூறப்படும் தோட்டத்தின் இயல்பை எடுத்துக் கூறிச் செவிலியின் குற்றச் சார்த்து உண்மையன்று என்பதை நிறுவு கின்றாள்.

### தோட்டத்தின் இயல்பு

நம் தோட்டத்தில், அஞ்சும் தன்மை யுடைய மலையில் பூத்த ஒளி வாய்ந்த பூவைச் சூடிக்கொண்டு தாம் விரும்பிய உருவம் தாங்கிக் கொண்டு பேய்களும் வருவதுண்டு, என்கின்றாள் தோழி. இச் சுருங்கிய சொற்களில் விரிந்த அரிய கருத்துக்கள் பொதுளியுள்ளன. தோழியின் இந்த வாதம் செவிலியின் குற்றச் சார்த்தினை அடியோடு மாற்றிவிடுகின்றது. நள்ளிரவில் பின்னல விழ்ந்த கூந்தலோடு காதிலணிந்த கனங்குழை ஒளிவீசத் தன்மகள் மதில்மிசை யேறியிறங்கியதைக் கண்ணாரக்கண்டதாகக் கூறிய செவிலியின் கூற்றை அப்படியே ஒப்புக் கொள்கின்றாள் தோழி. ஆனால், அவ்வுருவம் தலைவியின் உருவம் அன்று. நம் தலைவியின் வடிவம் தாங்கிக் கொண்டு, சுடர்பூவைச் சூடிக் கொண்டு வந்தது பேயாகத்தான் இருக்க வேண்டும். நம் தலைவியின் சுடர்மிக்க கனங்குழைபோலத் தோன்றியது, வேண்டுருவங்கொண்டு வந்த அப்பேய் சூடிய சுடர்பூவேயாகும். மலையைச் சார்ந்துள்ள நம்மூரில் இத்தகைய நிகழ்ச்சி கள் புதியனவல்ல. என்றும் இயல்பாக நிகழ்வனவேயாம். அன்னையே! நள்ளிரவில் நீ கண்ட உருவம் தலைவியின் உருவமன்று. தலைவியின் உருவம் தாங்கி வந்த பேயின் உருவமேயாம். அவ்வுருவத்தை தலைவியின் உருவமாக மயங்கி இப்படித் தலைவியை அலைக்கின்றாய்; என்கின்றாள் தோழி. 'தலைவியின் உருவத்தை நான் நன்கு பார்த்தேன்' என்று செவிலி சொல்ல இயலாதபடி, 'தாம் வேண்டுருவில் அணங்கு மார்வருமே' என்று துடும் என ஓர் ஐயத்தை யுண்டாக்கிவிட்டாள் தோழி. அப்படியும் இருக்கலாமோ? என்று செவிலி தன் குற்றச்சார்த்தினை நெகிழவிடுதல் இயல்பு தானே!

இதனால், குற்றம் நிகழ்ந்ததாகக் கூறப்படும் தோட்டம் பேய்கள் நடமாடும் இடமாதலின், செவிலி கண்டது பேயின் உருவமாகவும் இருக்கலாம் என இடத்தின் இயல்பு கூறித்தலைவியைத்தோழிகாத்தமை புலப்படும்.

### குற்றம் சார்த்தும் செவிலியின் இயல்பு

இனி, குற்றம் சார்த்தும் செவிலித்தாய் தலைவியிடம் ஐயப்பாடு கொண்டவள். ஐயம் காரணமாகக் கனவு தோன்றுதல் இயல்பு. அக்கனவுதானும் நனவில் உண்மையாகக் காண்பதுபோலவே தூங்குபவரை மருளப்பண்ணுவதும் உண்டு. அன்னையே, நீ உறக்கத்தில் கண்ட நனவு போன்ற கனவையே உண்மை நிகழ்ச்சியெனக்கருதித் தலைவியைக் குற்றம் செய்தவளாகக் கருது தலும் இயல்புதான். இத்தகைய நனவு போன்ற கனவு வருதல் மக்களுக்கு இயல்பு. நின் கனவே இக்குற்றச் சார்த்திற்குக் காரணமாயின் கனவில்கண்ட நிகழ்ச்சிக்கும் தலைவிக்கும் யாதோர் தொடர்பும் இல்லை. 'தலைவி குற்றம் அற்றவளே' எனக் கனவு நிலை கூறித்தலைவியைத் தோழி காப்பாற்று கின்றாள்.

### குற்றம் சார்த்தப்பெற்றவர் இயல்பு

இனி குற்றம் செய்தவளாகக் கருதப் படும் தலைவியின் இயல்பைக் காண்போம். தலைவி, விளக்கில்லாத இடத்தில் தனியாக இருக்க நேரும்போது நடுங்குகின்ற இயல் புடையவள். அதற்கு மேலும் மன்றத்தில் உள்ள வெண்கடம்ப மரத்திலுள்ள கோட்டான் குழறினாலும் அது கேட்டு மனம் நடுங்கி ஓடிவந்து பாதுகாவலான அறையில் நுழைந்து கொண்டு தாளிட்டுக் கொள்ளும் இயல்பினள். இவ்வளவு பயப்படுகின்ற தலைவி, வீட்டைவிட்டு, இருள் செறிந்த நள்ளிரவில் மரங்கள் செறிந்துள்ள தோட்டத்திற்குத் தனியாகச் சென்று மதிலைக் கடந்து சென்றாள் என்பதும், மதிலிலூர்ந்து ஏறி இறங்கினாள் என்பதும் எப்படிப் பொருந்தும்? எனவே, தலைவி அக் குற்றத்தைச் செய்திருக்க இயலாது எனத் தலைவியின் அச்சத் தன்மை காட்டி அத் தலைவியைக் காத்தவாறு.

### வீட்டுச்சூழல்

தலைவி அச்சமிக்கவள் என்பதோடு, நம் வளமனையில் புலிக்கூட்டம் போன்ற நாய்களைக் கட்டவிழ்த்துவிட்டுக் கொண்டு முருகனைப்போன்ற சீற்றத்தையுடைய எம் தந்தையும் வெளியில் புறப்படாது தங்கி யுள்ளபோது இவள் இந்தக் குற்றத்தைச் செய்திருப்பாளா? புலி போன்ற நாய்களைக் கண்டும், முருகனைப் போன்ற சீற்றத்தினை யுடைய தந்தையைக்கண்டும் அஞ்சுவா ளல்லளோ? எனவே, நம் வீட்டுச் சூழ்நிலை யாலும் இவள் அக்குற்றத்தைச் செய்திருக்க இயலாது எனத் தம் வீட்டுச் சூழ்நிலை கூறித் தலைவியைத் தோழி காத்தவாறு.

தலைவியின் அச்சத்தன்மையும், வீட்டின் அச்சுறுத்தும் தன்மையும் நோக்கும்போது தலைவி குற்றச்சார்த்திற்கு உரியவள் ஆக மாட்டாள். பேயின் வேடத்தைக் கண் மயங்கியோ, கனவை நனவென மயங்கியோ தலைவியைக் குற்றம் செய்தவளாக நீ எண்ணி அலைக்கின்றாய் என்பதே உண்மை யாகும். இனி அலைக்காதே. தலைவி குற்ற மற்றவள் என்று தோழி தன்னறிவின் திறத்தால் – சொல்வன்மையினால் தலைவியைக் குற்ற மற்றவளாக நிறுவி விட்டாள். செவிலியும் தோழியின் கூற்றுக்கு மாற்றுக் கூற இயலாமல் தலைவியை அலைக்காது விடுகின்றாள் என்பதைக் கபிலர் உய்த்துணர வைத் துள்ளார்.

தோழி திறம்படக் கூறிய இச்சொற்கள் யாவும் தானே படைத்து மொழிந்ததே யாகும். மதிற்புறத்தனை இருக்கும் தலைவன் தோழியின் சொற்களைக் கேட்பா னயின் யாது நினைப்பான்? 'தலைவி என் பொருட்டு எத்துணை அல்லல்களை அனுபவிக் கின்றாள்! நேற்று நிகழ்ந்த நிகழ்ச்சிக்கு இன்று செவிலித்தாயால் தண்டனை யுறுகின்றாள். தோழியின் அறிவுத்திறத்தால் தலைவி அப் பழியினின்றும் நீங்கினாள். இல்லையேல் என்னாகும்? இனி இவ்வல்லல் மிக்க களவின்பத்தை விடுத்து வரைவொடு வந்து பலர் அறியத் தலைவியை மணந்து கொண்டு பழியற்ற இல்லற இன்பம் துய்த்தலே நல்லது' என எண்ணி வரை வொடு வருவான் என்பதே இத்தோழியின் படைத்து மொழிக் கிளவியால் உளதாகும் பயனாகும்.

செவிலித்தாய் தலைவியை அலைக்கவும் இல்லை; செவிலித்தாயே அங்கில்லை. செவிலி யில்லாத இடத்தில் செவிலியைக் கற்பனை யாக வருவித்துக் கொண்டு, அச்செவிலி தலைவிபால் குற்றம் சார்த்தி அலைத்த தாகவும் படைத்துக் கொண்டு, அச் செவிலியின் குற்றச் சார்த்துக்குத் தான் பதில் சொல்லித் தலைவியைக் காப்பதாகவும் படைத்துக் கூறும் தோழியின் திறமெல்லாம்

கபிலரின் புலமைத் திறனன்றோ? கபிலர் காட்டும் தோழியின் "வாதத்தைப் பார்க்கும் போது ஓர் உயர்நீதி மன்றத்தில் ஒரு சிக்கலான வழக்கைப் பற்றி வாதிக்கும் பெரிய வழக்குரைஞரின் வாதம் போலன்றோ காணப்படுகிறது! மெய்யைப் பொய்யாகக் காட்டும் தோழியின் சொல்வன்மையை எப்படிப் பாராட்டுவது? இவ்வளவு அழகிய வாதத்தை வகைப் படுத்திக் கூறிய முறையும், அம்முறையால் தலைவி குற்றவாளியல்லள் என்று நிறுவும் முடிவும் காண்கின்றபோது தோழியின் அறிவு நுட்பத்தையா புகழ்வோம்? குறிஞ்சி பாடுதலில் வல்ல கபிலரின் புலமை நலத்தையன்றோ புகழ்வோம்! வள்ளல் பாரியின் அமைச்சராயிருந்த கபிலரின் வழக்காராயும் வன்மை இப் பாடலில் நன்கு புலப்படுவது காணலாம்.

இவ்வகப்பாடலில் குறிஞ்சித் திணைக்குரிய மலை நிலமும், கூதிர்ப் பருவமாகிய பெரும் பொழுதும் நள்ளிரவாகிய சிறு பொழுதும், மயில் முதலிய கருப்பொருள்களும், புணர்தல் நிமித்த மாகிய உரிப் பொருளும், முருகனாகிய தெய்வமும் இயல்பாக அமைந்து அழகு செய்தல் காணலாம். இத்துணைக் கருத்துக்கள் எல்லாம் செறிய விளங்கும் கபிலரது பாட்டு:

> உருமுரறு கருவிய பெருமழை தலைஇப்
> பெயலான் றவிந்த தூங்கிருள் நடுநாள்
> மின்னு நிமிர்ந்தன்ன கனங்குழை யிமைப்பப்
> பின்னுவிடு நெறியிற் கிளைஇய கூந்தலள்
> வரையிழி மயிலி னொல்குவன ளொதுங்கி
> மிடையூர் பிழியக் கண்டனெ னிவளென
> அலையல் வாழிவேண் டன்னை நம்படப்பைச்
> சூருடைச் சிலம்பிற் சுடர்ப்பூ வேய்ந்து
> தாம்வேண் டுருவி னணங்குமார் வருமே
> நனவின் வாயேபோலத் துஞ்சுநர்க்
> கனவாண்டு மருட்டலும் உண்டே யிவள்தான்
> சுடரின்று தமியளும் பனிக்கும் வெருவர
> மன்ற மராஅத்த கூகை குழறினும்
> நெஞ்சழிந்த தரணஞ் சேரு மதன்றலைப்
> புலிக்கணத் தன்ன நாய்தொடர் விட்டு
> முருக னன்ன சீற்றத்துக் கடுந்திறல்
> எந்தையும் இல்ல னாக
> அஞ்சுவள் அல்லளோ விவளிது செயலே.
>
> (அகநா – 158)

## தமிழ் மணிமாலை

> "பூவார் தமிழே புகழெல்லாம் தான்விளங்க
> நாவால் நினைநாடி நாளெல்லாம் – பாவாலே
> நின்னைப் புகழ்ந்திடுவார்; நீர்மையுடன் வாழ்ந்திடுவாய்
> அன்னைத் தமிழேயன் பே"

— புலவர், மு. சீனிவாசன், தச்சம்பட்டு.

# சிவப்பிரகாச அடிகள்

## ( புலமைத் திறனுய்வு )

திரு. தெ. ஞானசுந்தரம், எம். ஏ., டிப். (வடமொழி)
துணைத்தமிழ்ப் பேராசிரியர் – கந்தசாமி நாயுடு ஆடவர் கல்லூரி – சென்னை–40.

[ பதினேழாம் நூற்றுண்டில் தமிழ் இலக்கிய வானில் பூத்த ஒளிச்சுடர்களுள் ஒன்றெனப் போற்றத்தக்க துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளின் புலமை நலத்தை – கற்பனைவளத்தை – அடியார் பக்தியை – குருவருள் ஈடுபாட்டை அவர் தம் ஒப்புயர்வற்ற பல்வேறு இலக்கியங்களின்றும் நுண்ணிதின் திரட்டி வகைப்படுத்தித் தருவது இக்கட்டுரையின் நோக்கமாகிறது. சிவப்பிரகாச அடிகள் பெரிதெனக் கருதியது, அரிதெனச் செய்தது, உயர்வென வகுத்தது, புதுமைஎனப் படைத்தது இவை இவை எனப் பேச வரும் ஆசிரியர், பக்தி நலம் பொதுளிய அடிகளாரின் தலைசிறந்த தமிழ் இலக்கியப்பணியினைப் பலமுனை நின்று பேசி, எளிமையும் இனிமையும் தவழ இக்கட்டுரையைத் தருகிருர். சிவப்பிரகாசர் இலக்கியங்களைக் கற்க வேண்டும் என்ற எண்ண எழுச்சியைத் தோற்றும் ஆசிரியரின் நடை எண்ணத்தைக் கவருகிறது ]

### இருசுடர்த் தோற்றம்

பதினேழாம் நூற்றுண்டின் இலக்கிய வானில் ஒப்புயர்வற்ற சுடர்களாகத் திகழ்ந்தவர் இருவர். ஒருவர் குமரகுருபரர்; மற்றொருவர் துறைமங்கலம் சிவப்பிரகாசர். சிவப்பிரகாசர் 'ஞாலம் உச்சிக் கொண்ட கச்சி'ப்பதியில் பிறந்தார். அவரதுகுடும்பமே கவிதைக்குடும்பமாக விளங்கியது. அவரைப் போலவே அவர் தம்பியராகிய வேலைய சுவாமிகளும், கருணைப் பிரகாசரும் நல்ல கவிஞர்கள். சிவப்பிரகாசர் தம் வாழ்வின் பெரும்பகுதியைத் திருவண்ணமலை, திருவெங்கை, சிதம்பரம், காஞ்சி ஆகிய இடங்களில் கழித்தார். தருமையாதீனத்தைச் சார்ந்த வெள்ளியம்பலத் தம்பிரான் சுவாமிகளிடம் இலக்கணம் கற்றுர். இவ்வுலகில் முப்பத்திரண்டு ஆண்டுகளே வாழ்ந்த அடிகள் எழுதிய நூல்கள் காலத்தை வென்று தலைதூக்கி நிற்கின்றன.

### பொருட்பாகுபாடு

சிவப்பிரகாசர் ஆழ்ந்தகன்ற அறிவுடையவர். இறைவனைப் பற்றியும், சிவனடியாரைப் பற்றியும், சித்தாந்தம், வேதாந்தம், ஆகமம், தருக்கம் முதலிய பல்வேறு பொருள்களைப் பற்றியும் தேர்ந்த புலமை பெற்றவர். அவரது தெளிந்த புலமை வெள்ளம் பாய்ந்து வளப்படுத்தாத துறைகளே இல்லை என்னலாம். எனினும் அவருடைய இலக்கியங்களில் மேலோங்கி நிற்பனவாக, 1. இறைவன் பெருமை

2. சிவனடியார் சிறப்பு 3. சிவஞான பாலைய தேசிகர் உயர்வு முதலியவற்றைக் குறிக்கலாம்.

**உயர்ந்த நோக்கம்**

உலகோரை உயர்த்திப் பாட விழை யாதவர் சிவப்பிரகாசர். அவர் புன்தொழில் மனிதரைப் புகழ்ந்து பாடுவது புலமையைப் பாழ்க்கு இறைப்பதற்கு நிகர் எனக் கருதினர்.

குன்றுதோ றாடும் குமரனே எனவும்
கொடுஞ்சிலை மதனவேள் எனவும்
புன்றொழில் மனிதர் புகழ்ந்துபாழ்க் கிறைக்கும்
புலமைதீர்த்து எனக்கருள் புரியாய்
(சோணசைல மாலை 19)

என்பது அவர் அண்ணாமலை ஈசரிடம் இறைஞ்சும் வேண்டுகோள்.

இறைவனைப் பாடும் பணியே தமக்குக் கூடுதல் வேண்டுமென விழைகிறார். பெருமானை மணக்கும் தமிழ்ப்பா மலர்களால் அழகுபடுத்த வேண்டும் என்பதே அவரது தணியா ஆவல். இறைவனை நோக்கி,

.............................."மதுரம்
பெருகுறு தமிழ்சொன் மலர்நினக்கு அணியும்
பிறவியே வேண்டுவன்"
(சோண சைல மாலை 39)

என்கிறார்.

**இறைவன் பெருமை**

சிவப்பிரகாசர் நூல்களுள் முதன்மை யான இடத்தைப் பெறுவது பரம்பொருட் பெருமையே என்பது வெளிப்படை. அண்ணாமலையாரைப் பற்றிச் சோண சைல மாலையும், பழமலைநாதரைப் பற்றித் திருவெங்கைக் கோவை, திருவெங்கைக் கலம்பகம், திருவெங்கையுலா முதலிய நூல் களும் கூறுகின்றன.

அவர், ஒளியுமிழும் சடைமுடியினையும், அருள் பொழியும் விழிகளையும், அழகு பொலியும் திருமுகத்தையும், மலையொத்த திரண்ட நான்கு தோள்களையும், இருசெம் பொற்பாதங்களையும் கொண்ட இறைவன் திருவுருவைத் தம் கண்கள் கண்டு களிக்க வேண்டும் என ஏங்குகிறார்.† புறத்தே காணும் இக் காட்சிக்காக மட்டும் ஏங்கின ரல்லர்; இதே காட்சியைத் தம் அகத்தேயும் ஒழிவில்லாமல் காணத் துடியாய்த் துடிக்கிறார்.

"இந்தியம் கரணம் உடலம்வே றாக்கி
இருண்மலப் படலமும் கீறிக்
கந்தமும் மலரும் எனநினை என்னில்
காண்பறக் காணுநாள் உளதோ"
(சோண சைல மாலை 17)

சிவப்பிரகாசரது சோண சைல மாலை அண்ணாமலையாருக்குச் சூட்டப்பட்ட வாடா மாலை எனக் கூறலாம்.

திருவெங்கைக் கோவையில் சிறு சிறு தொடர்களால் பழமலைநாதரின் பல்வேறு சிறப்புக்கள் பேசப்படுகின்றன. 'மதயானை யீருரியூடே மறைந்து மழை மறைந்த உத யாதிபன் என நின்றார் (கோவை *15*) எனத் திருமேனி யழகு புனையப்படுகின்றது. சேவுந்து அழகர் (*1*), வந்தாளும் ஐயர் (*13*), ஊணுமென நஞ்சு உவந்தோன் (*46*) பாலார் மொழியுமை பங்காளர் (*48*), மூலத்தனி முதலானார் (*110*), கருவுக்கு மாமருந்தானார் வெங்கைப் பழமலைவாணர் (*125*), மறிக்கும் புலனுடையன்பர்தம் பாவமரம் முறியத் தறிக்கும் கனல்மழு வெங்கைப் புரேசர் (*195*), அறிவேயொரு உருவாம் ஈசர் (*215*) தாயிற் சிறந்த திருவெங்கைவாணர் (*309*), நினைப்போர் அகத்தில் நடமாடும் வெங்கை நிமலர் (*380*) இன்னோரன்ன கோவைச் செஞ்சொற்றொடர்கள் நெஞ்சில் இன்பத் தேன் பாய்ச்சுவன.

† சோண சைல மாலை 43

பழமலை நாதரிடத்து அடிகள் கொண் டிருந்த பேரன்பினைப் பேரிளம் பெண்ணின் நிலையை விவரிக்கும் உலாப் பகுதியில் நன்கு உணரலாம்.

"திருமாலும் நான்முகனும் தேடும் பொருளைக்
கருமா மிடற்றுஎம் கரும்பைப் - பெருமானைத்
தெள்ளமுதைத் தெய்வ சிகாமணியைத்
தன்னடியார்
உள்ளுயிரைத் தோன்று உறுதுணையைக் -
கள்ளவிழும்
கொன்றைப் பவளநெடுங் குன்றைப் பழமலையை
மன்றிற் குனிக்குமொரு மாமணியைச் -
சென்றுற்று
உளத்துப் புணர்ந்துவிடாது ஓங்குஇன்பம்
உற்றாள்"
(திருவெங்கையுலா கண்ணிகள் 413-416)

என்ற பகுதியில் பக்திப் பெருக்கம் சொற் பெருக்காய்ப் பரந்து பாய்வதைக் காணலாம்.

## சிவனடியார் சிறப்பு

பக்தியின் முதல்நிலை இறைவனை வழி படுதல் என்றும், முடிந்தநிலை இறையடியார் களை வழிபடுதல் என்றும் சான்றோர் கூறுவர். சிவப்பிரகாசர் இந்திரனுக்குத் தலைவனாகும் பேற்றினை விழைந்தார் அல்லர். இறைவனை நோக்கி அடியார்க்கு அடியராகும் வரத் தையே தருமாறு வேண்டுகிறார்.

"எழிலிகண் படுக்கும் பொழில்புடை சூழ்ந்த
வெங்கையம் பதிவாழ் எங்கள் நாயக
பழமலை நாதநிற் பரவுவன் விசும்பின்
அரையனுக்கு அரையனா கும்அந் நிலையும்
நினைக்கிலன் தமியேன் நின்னடி யவர்கட்கு
என்றும் அடியவன் ஆகும்
ஒன்றுஒரு வரமும் உதவுதி எனவே"

என்பது திருவெங்கைக் கலம்பகம்.

வெண்ணீறு புனையும் மாதவர்க்குவிருந்து செய்வதால் வரும் பெருமிடிமை தமக்கு வருதல் வேண்டுமென அண்ணாமலையாரிடம் நயந்து வேண்டுகிறார்.* இவ்வடியார்மேல் கொண்ட ஆரா அன்பே திருவெங்கைக் கலம்பகம் (16) நால்வர் நான்மணிமாலை (12), ஸ்ரீ சிவஞான பாலைய தேசிகர் நெஞ்சுவிடு தூது (145 – 165) ஆகிய நூல்களில் மீண்டும் மீண்டும் சிவனடியார் பலரின் பெருமையை நினைந்து நினைந்து நெகிழ்ந்து உருகுமாறு செய்துள்ளது எனலாம். இம் மூன்று நூல்களுள்ளும் மொத்தம் இருபத்தேழு பெரிய புராணத்தால் குறிக்கப் பெறும் அடியார்கள் கூறப் பெற்றுள்ளனர். இவற்றில் குறிக்கப் பெறாத ஆனாயனார் திருவெங்கையுலாவிலும் (330ஆம் அடி) சாக்கியர் திருவெங்கைக் கோவை, நன்னெறி ஆகியவற்றிலும் குறிக்கப்பெற்றுள்ளனர். நான்கே பாடல்களைக் கொண்ட திருப்பள்ளி யெழுச்சியில் கூடச் சுந்தரர், சாக்கியர், இயற்பகையார் ஆகியோரைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. மாணிக்கவாசகர் பெரிய புராண அடியார் வரிசையில் இடம்பெறவில்லை எனினும் அவரைச் சிவப்பிரகாசரால் எண்ணாமல் இருக்க இயலவில்லை.

அவரை,

"மாணிக்க வாசகன் செந்தமிழ் மாலை மணக்கமுடி
வேணிக் கடவுள்"
(திருவெங்கைக் கோவை 265)

என்றும்,

"அருங்கவி வாத வூரனே முதலோர்
அன்பிலேம் என்றது வேண்டி
இரங்குதல் பொய்மை அன்பிலேன் எனயான்
இயம்பலே மெய்எனக் கருளாய்"
(சோண சைல மாலை 6)

என்றும்,

"திருந்துதமிழ்க் கோவையொருநானூறும் உரைத்த
திருவாத வூரன்எனும் செழுமலர்க்கற் பகமே"
(பிள்ளைத் தமிழ் காப்பு 9)

என்றும் சுட்டுகிறார்.

* சோண சைல மாலை 20

இவர் நால்வரிடம் கொண்டிருந்த ஈடுபாடு ஒப்புயர்வற்றது. ஞானசம்பந்தர் கடைவாயினின்றும் ஒழுகிய தீம்பால் திவலையில் ஒன்று புண்ணிய வசத்தால் கிடைத்தால் தம்மால் ஐம்புலன்களை வென்று இறைவன் அடியாருள் தங்க முடியும் என்கிறார். இறைவனை நோக்கி, அத்தீம்பால் தாராவிட்டாலும் திருநாவுக்கரசருக்குத் தந்த சூலையையேனும் தந்து ஆட்கொள்ளு மாறு இறைஞ்சுகிறார். அன்று இறைவன் காரிகைபால் தூது நடந்ததற்குக் காரணம் சுந்தரரின் காதார் அமுதப்பாடல் பெற வேண்டும் என்பதே எனப்புகல்கிறார். நால்வருடைய பாடல்களின் மீது அவர்க் கிருந்த மதிப்பினை நால்வர் நான் மணி மாலையில் மட்டுமன்றிப் பிறவிடங்களிலும் காணலாம்.

"அந்தியொடு மாறுபட்டுத் திகழ்வன
அன்று தமிழ் மூவர் வைப்பச் சுமந்தன"
(திருவெங்கைக் கலம்பகம்-புயவகுப்பு)

எனவும்,

"வேத உணவு வெறுத்துப் புகழ்மூவர்
ஓது தமிழ் ஊணுக்குழல் செவியான்"
(திருவெங்கையுலா.)

எனவும்,

"நிலக்கலமும்
பொற்கலமும் அன்ன மறையும் புகழ்மூவர்
சொற்கலையும் ஒத்துத் துதிப்ப"
(திருவெங்கையுலா)

எனவும் வரும் பகுதிகளைக் காண்க.

இவற்றுள் வடமொழி மறையினும் மூவர் தமிழ் உயர்ந்ததெனக் கூறுதல் நோக்கத்தக்கது. திருக்கோவையாரைக் குறிக்கும் பொழுது மறைகளைக்கூட எழுதிக் கொள்ளாத விரிசடையோன் விழைந்து எழுதிக்கொண்ட சிறப்பு அதற்குண்டு எனப் பெருமிதம் கொள்கிறார்.† திருவாசகத்தின் கருங்கல் மனத்தையும் கரைந்துருகச்செய்யும் நீர்மையினைக் கூறி, அத்தன்மை வேதத்திற் கில்லை என்றும், வேதப் பயன் அறமேயாகத் திருவாசகப் பயன் முத்தி என்றும், வேதம் சிலர்க்கே உரியதாக எல்லார்க்கும் உரியது திருவாசகம் என்றும் கூறுவதை நோக்கின் தமிழால் இறைவனை நாடி நின்றவர் அடிகள் என்பது புலனாகும்.

### சிவஞான பாலைய தேசிகர் உயர்வு

சிவஞான பாலைய தேசிகர் அடிகளின் ஞானகுரு. சிவப்பிரகாசர் அவர்மேல் நெஞ்சு விடுதூது, தாலாட்டு, பிள்ளைத்தமிழ், கலம் பகம், திருப்பள்ளியெழுச்சி முதலிய பாடியுள்ளார். தேசிகரின் புகழைப் பேசாத நாக்கு மணியின் நான்கு, அவர் புகழைக் கேளாத காது ஊசியின் காது என்பன அடிகள் கருத்து.

"ஊனே உயிரோ உயிர்க்குயிரோ ஆனந்தத்
தேனே அமுதோ சிவஞான தேசிகனே"

என்ற தாலாட்டுக் கண்ணி அடிகளின் குரு பக்தியை விளக்கும். சாதியால் முத்தி பெறமுடியாது; சாதனத்தாலேயே அது கிட்டும் என்னும் உண்மையை நிலை நாட்டிய வராகத் தம் குருநாதரைக் கொண்டாடு கிறார். தேசிகர் ஞானக் குன்று; குணக் கடல்; பரசமய வாதிகளை வென்று சைவப்பயிர் வளர்த்த தண்முகில். அவர் சமயம் வளர்த்த திறத்தை,

"உலகா யுதனுக்கு இலகா யுதமா
அனுமதம் ஓரணு வாகத் துரந்து
விசேட மதத்தின் விசேட நீக்கிக்
காலவா திக்கோர் கால னாகிக்
குருமதம் செய்தெனக் கூறி மாற்றிப்
பஞ்ச ராத்திரிக்கு அஞ்சு பகலாய்ச்
சைவப் பயிர்க்குத் தண்முகில் ஆனேன்
நாம்தொழ அருள்சிவ ஞான தேசிகன்"

என நயமாக எடுத்தியம்புகிறார்.

---

† பிள்ளைத்தமிழ் காப்பு-9

## சிவப்பிரகாசர் புலமை

சிவப்பிரகாசர் பன்னூற் புலமை மிக்கவர். அவர் தம் நூல்களில் பிற நூற் கருத்துக்களைப் பொன்னேபோல் போற்று கிறார். அவர் திருவள்ளுவர்பால் எல்லை யில்லா மதிப்புடையவர். இதனைத் திரு வள்ளுவரைப் பற்றிப் பேசும் இடங்களால் அறியலாம்.

'இன்னா செய்தாரைப் பொறுத்திடின் நன்மை
யியற்று கெனச்
சொன்னார் **புலவர்**'
(திருவெங்கைக் கோவை)

'**என்னடிகள்** வெண் குறள்நேர் அடியி ரண்டும்
என்தலையில் இருத்தும் இறை'
(திருவெங்கைக் கலம்பகம்)

'**தெய்வப் புலமை**த் திருவள்ளுவனார்'
(நால்வர் நான்மணிமாலை)

எனவரும் பகுதிகளில் திருவள்ளுவரைப் புலவர் எனக் காரண இடுகுறிப் பெயரால் சுட்டுவதோடன்றி, என்னடிகள் என்று உரிமையோடும், தெய்வப்புலமை என அடைமொழியோடும் குறிப்பிட்டிருத்தலைக் காண்க.

திருமாலின் பத்து அவதாரங்களை விளக்கத் திருக்குறளின் அதிகார அமைப் பினையே உவமையாகக் காட்டுகிறார். திருவீதியுலாவரும் பெருமானைப் பேதைப் பெண்ணொருத்திக் கண்டு காதல் கொள் கிறாள். 'இத்தேர்மீது அமர்பவன் யார்?' என அன்னையரைக் கேட்கிறாள். அவர்கள், ஒரே கருத்தை வற்புறுத்துவதற்காக வெவ்வேறு சொற்களால் பத்து முறை திருவள்ளுவர் சொல்வதைப் போலத் தானே பரம்பொருள் என்பதை நிலைநாட்டப் பத்து அவதாரங்கள் செய்த திருமாலுக்கே தாயும் தந்தையும் உண்டு, இவனுக்குத் தந்தையும் இல்லை; இவன் யாருக்கும் தனயனும் அல்லன் என்கிறார்கள். † இங்கே திருமாலின் பத்து அவதாரங்களைத் திருக்குறளின் ஓர் அதிகாரத்தின் பத்துக் குறட்பாக்களோடு ஒப்பிடுதல் நயமாக அமைந்துள்ளது.

இனிக் கவிஞர் திருக்குறளில் கொண்டுள்ள ஈடுபாட்டினைக் காண்போம். அவர் அமுத வாக்கில் திருக்குறள் ஒன்றோ டொன்று போட்டியிட்டுக் கொண்டு இடம் பெறுவதை நோக்கின் வியப்பு மேலிடுகிறது.

ஆசைப் பெருங்கடலைப் புகட்டும் அழகுமகள் மாயை மழலைமொழி பேசியும், ஓடி விழுந்து உடலோடு மருவியும், சுவையடி சிலைச் சிறுகையால் இட்டும் தொட்டும் பெற்றோர்க்கு மோகம் தந்தாள். இச் செய்தியை விளக்கும் பாட்டில்,

"குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்"
(திருக்குறள் 66)

"மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு"
(திருக்குறள் 65)

"அமிழ்தினும் ஆற்ற இனிதே தம்மக்கள்
சிறுகை யளாவிய கூழ்" (திருக்குறள் 64)

ஆகிய மூன்று குறட்பாக்கள் இடம் பெற்றிருப்பதனைக் காணலாம்.

"குழலும் யாழும் இனியவெனக்
கூறு வண்ணம் மென்கனிவாய்
மழலை மொழிந்தும் உடற்கின்பம்
மருவ ஓடி மேல்விழுந்தும்
விழையும் அமிழ்தின் மிகஇனிமை
விளைய நுகருஞ் சுவையடிசில்
செறிய சிறுகை யாலளைந்தும்
செய்தாள் மோகம் ஈன்றோரை"
(பிரபுலிங்க லீலை 52)

என்பது அப்பாடல்.

† திருவெங்கையுலா 172—175 கண்ணிகள்.

திருவள்ளுவர் வாய்மைக்குத் தந்துள்ள விளக்கம் உலகியலை ஒட்டியது; மனிதகுல உய்வுக்கு வழிகாட்டுவது. நடந்ததைச் சொல்வது வாய்மை என்பது பொது இலக்கணம். எந்தச் சிறு தீமையும் இல்லாததனைச் சொல்வது வாய்மை என்பது வள்ளுவர் தந்த புது இலக்கணம்; சிறப்பு இலக்கணம்.

"வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்
தீமை யிலாத சொலல்" [றும்

"பொய்ம்மையும் வாய்மை இடத்த; புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்"

ஆகிய குறட்பாக்களைக் காண்க.

இவ்விளக்கத்தினை அடிப்படையாகக் கொண்டு அரிய பாடல் ஒன்று திருவெங்கைக் கோவையில் மலர்ந்து மணக்கிறது.

இன்பத்துக் கிடையூறாகக் 'குக்கூ' என்றது கோழி. அக்குரலைக் கேட்ட தலைவி கோழிகளை முன்னிலையாக்கி, "கோழிகளே! நீங்கள் வைகறையில் கூவுவது உண்மை தான்; எனினும் அக்குரல் எமது கூட்டத்தைச் சிதைத்துத் தீமை தருகிறது; ஆதலால் அதனை உண்மையன்று என்பர் அறத்தூய்மை உணர்ந்தவர்" என்கிறாள்.

"வாய்மை எனினும் புலரியைக் கூவுதல்
வாரணங்காள்
செய்மை யுறுநம் கொழுநர்தம் கூட்டம் சிதைத்
தெமக்குத்
தீமை பயந்தமையால் வெங்கை நாயகர்
செய்தஅறத்
தூய்மை உணர்ந்தவர் வாய்மையன் றுமெனச்
சொல்லுவரே"

(திருவெங்கைக் கோவை 211)

திருக்குறளின் நுண்மையான வரையறைக் கமைந்த அருமையான எடுத்துக்காட்டாக உள்ளது இப்பாடல்.

இவற்றைப் போலப் பல திருக்குறட் பாக்களைக் கையாண்டுள்ள திறத்தினைத் திருவெங்கைக் கோவையில் காணலாம். கம்பநாடருக்குப் பின் திருக்குறளைத் தம் நூலில் பெரிதும் எடுத்தமைத்துப் போற்றியவர் இவரே எனத் துணிந்து கூறக் கூடிய அளவுக்கு எண்ணற்ற குறளைச் சிவப்பிரகாசர் எடுத்தாண்டுள்ளார்.

திருக்குறளே யன்றி அதற்குப் பரிமேலழகர் யாத்த உரையிலும் அடிகளுக்குப் பயிற்சி இருந்துள்ளது. அல்லமதேவன்பால் மாயை கொண்ட காதலையும் அதன் விளைவுகளையும் கேள்வியுற்ற அவள்தாய் மோகினி கலக்கமுற்று வருத்தத்தோடு,

"மானமும் உயிரும் ஒருங்குநில் லாத
வழியுயிர் தன்னையே விடுத்துத்
தானுறு பொருளாய் மானமே
கொளும் உன் தந்தை"

என அரசனைக் குறித்துக் கூறுகிறாள். மானம் என்பதற்குப் பரிமேலழகர் தந்துள்ள, எஞ்ஞான்றும் தம்நிலையின் தாழாமையும், தாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமாம்" என்னும் விளக்கம் மோகினியின் கூற்றில் நிழலிடுவது தெரிகின்றது. அடிகளே பிறிதோரிடத்தில்,

"தமக்கு அடாதது செய்துயிர் வாழ்வது தன்னில்
சுமைக்கு அடாதமெய் விடுத்தலே நன்று"

எனக் குறித்தலும் நினைவு கூரத்தக்கது.

பரிமேலழகர் கூற்றினை மறுப்பதனையும் சிவப்பிரகாசரிடம் காணமுடிகின்றது. 'பெறுமவற்றுள் யாமறிவதில்லை' எனத் தொடங்கும் குறள் உரையில் "அறிவறிந்த" என்ற அதனன் 'மக்கள்' என்னும் பெயர் பெண்ணொழித்து நின்றது' எனக் கூறியுள்ளார். அடிகள் இக்கருத்தினைப் பெரிய நாயகியம்மை கலித்துறையில் மிக நயமாகக் கேலி செய்கிறார். மக்கட்பேறு என்னும்

சொல் பெண்ணெழித்து நின்றது என் போரும், உலகில் நன்முயற்சியுள்ள மகனைப் பெறுவாயாக' என வாழ்த்துவோரும் நாணுமாறு பெரிய நாயகியை அவள் தாய் ஈன்றெடுத்தாள் என்கிறார்.

"கற்றோர் அறிகுவர் மக்கள்தம்
பேறு எனக் கட்டுரைத்த
சொற்றுன் ஒருபெண் ஒழித்ததென்
பாரொடு தொல்லுலகில்
நற்றுள் மகன்பெறு கென்றுஆசி
சொல்பவர் நாணஉனைப்
பெற்றுன் மலையரை யன்குன்றை
வாழும் பெரியம்மையே"

என்பது காண்க.

இனித் தேவார திருவாசகக் கருத்துக்கள் சிவப்பிரகாசர், பாடல்களில் எவ்வாறு இடம் பெற்றுள்ளன என்பதனைச் சற்றுக் காண்போம்.

ஆளுடைய பிள்ளையின்,

"புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட்டு ஐம்மேல் உந்தி
அலமந்த போதாக அஞ்சேல் என்று
அருள் செய்வான் அமருங்கோயில்"
(1:130:1)

என்ற தீந்தமிழ்ப் பாடல் பலரும் அறிந்ததாகும். இதனையே சோணசைல மாலையில்,

"சிந்தனை கலங்கி இணைவிழி இருண்டு
செவிகளும் செவிடுபட்டு ஐம்மேல்
உந்திட உயிர்போம் பொழுதுநின் வடிவம்
உளங்கொளும் பரிசெனக்கு அருளுவாய்"
(78)

எனச் சிறிது மாற்றித் தருகிறார்.

பக்தியின் உயர்நிலையில் நின்று திருநாவுக்கரசர், தொழுநோயராய் ஆவினை உரித்துத் தின்று உழலும் புலையரானலும் சிவனை வணங்கும் அன்பராகில் அவரே தாம் வணங்கும் தெய்வம் எனப் பாடுகிறார்.

"அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யருய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்
அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவுளாரே"

என்பது திருநாவுக்கரசர் தேவாரம், இதே கருத்தினை,

ஆவுரித் திடினும் நீ றணியும் அன்பன்நம்
மாவுரித் தவன்என வணங்கத் தக்கவன்
பூவுரித் தவன்பதம் புனையப் போற்றுற
நாவுரித் தெனமறை நான்கு ஓதுமால்"

மேலும்,

"விறகில் தீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்"

என்னும் தேவாரமே

"எள்ளின் எண்ணெய் எனப்படர்
இந்தனத்துஎரி என்னவாய்
விள்ளு மென்மலர் மணமென
விரவி எங்கணும் நிற்பினும்"
(விமலை கதி 50)

எனச் சிவப்பிரகாசரிடம் மாற்றுருவம் பெற்றுள்ளது.

மணிவாசகப் பெருமான், "இறைவன் திருப்பெயரைக் கேட்டவுடன் உள்ளங்கால் முதல் உச்சி வரையுள்ள உடம்பின் பகுதிகள் அனைத்தும் மனத்தின் இயல்புடையனவாய் உருக வேண்டும்; ஆனல் எனக்கு அப்படி உருக்கம் ஏற்படவில்லை. உடம்பு முழுதும் கண்ணின் இயல்புடையதாய் நீர் பெருக்கி வெள்ளம் பாய வேண்டும்; ஆனல் எனக்கு அப்படிப் பாயவில்லை; எனக் கூறி அதனல் தம் நெஞ்சம் கல்லென்றும், இருகண்களும் மரத்தினல் ஆயவை என்றும் தம்மையே தாழ்த்திப் பேசுகிறார்.

"உள்ளந்தாள் நின்றுச்சி யளவும் நெஞ்சாய்
உருகாதால் உடம்பெல்லாம் கண்ணுய் அண்ண
வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சம் கல்லாம்
கண்ணிணையும் மரமாம் தீவினையி னேற்கே"

என்பது திருச்சதகம் (21), இச்செய்தியே உடன்பாட்டு முறையில்,

"உள்ளந்தான் நின்றுச்சி காறும்உள மாயுருகி
வெள்ளம்பாய் கண்ணராய் மெய் விதிர்ப்பார்"

என நெஞ்சுவிடுதூதில் கூறப்பட்டுள்ளது.

மேலும், கம்பநாடரின் கவிதையினையும் அடிகள் கற்று மகிழ்ந்துள்ளார் என்பதற்குச் சான்றுகள் உள. அவை விரிப்பின் பெருகும். அடிகளின் நூல்களில் பயின்றுவரும் பிற நூற்கருத்துக்கள் அவரை ஒரு புலமைப் பெட்டகம் என்பதை நிறுவும்.

**கற்பனைக்களஞ்சியம்**

சிவப்பிரகாசரின் கற்பனைத் திறன் பிரபுலிங்கலீலையிலேயே நன்கு விளங்குகின்றது.

விளவல நாட்டின் நாயகமணிபோல வனவசை மாநகர் விளங்குகிறது. அம் மாநகரின் மதிலோ மிக உயர்ந்து வானளாவியுள்ளது; அதனைச் சூழ்ந்து கிடக்கும் அகழியோ ஆழ்ந்து தாழ்ந்துள்ளது. இம்மதிலும் அகழியும் கவிஞரின் உள்ளத்தில் ஒப்பற்ற கற்பனையை ஊற்றெடுக்கச் செய்கின்றன. அக்கற்பனையில் ஓர் அறக்கருத்தும் கலந்து கவின் விளைக்கின்றது. மிக உயர்ந்தவர் தாழ்வர் என்பதற்கேற்ப உயர்ந்தமையால் மதிலானது மேருவை வலம்வரும் கதிரவன் காலடியில் நிற்கிறதாம், தாழ்ந்தவர் உயர்வர் என்பதை நிலைநாட்டு வதைப்போல அகழியானது தாழ்ந்த தன்மையாலே கீழேயுள்ள ஒப்பற்ற ஆதிசேடனது மணிமுடியின்மேல் நிற்கிறதாம்

"தாழ்ந்தோர் உயர்வர் என்றும்மிக
உயர்ந்தோர் தாழ்வர் என்றும் அறம்
சூழ்ந்தோர் உரைக்கும் உரைகண்டாம்
மதில்சூழ் கிடந்த தொல்லகழி
தாழ்ந்தோர் அனந்தன் மணிமுடிமேல்
நின்றன்று; உயர்ந்து தடவரையைச்
சூழ்ந்தோர் வரையின் உதிப்பவன் தாள்
கீழ்நின் றதுபோய்ச் சூழ்எயிலே"

(மாயையின் உற்பத்தி கதி 14)

காதல் நோயுற்ற பெண்களுக்குத் திங்கள் பகையாகிறது. அவர்கட்கு நிலவின் தண்கதிர் வெங்கனலாகத் துன்பஞ் செய்வதனை எத்தனையோ கவிஞர்கள் பாடலாக்கியுள்ளனர். எனினும் அவர்தம் கற்பனைகளை விஞ்சுகிறது சிவப்பிரகாசர் கற்பனை. சந்திரன் பாற்கடலில் தோன்றியவன்; எனவே அவனுக்குக் கடல் தாயாகிறது; சந்திரனோடு பாற்கடலில் தோன்றியவள் திருமகளாதலால் அவள் அவனுக்குச் சகோதரியாகிறாள்; திருமகள் வாழும் இடமாகிய தாமரை அவனுக்குச் சகோதரியின் வீடாகின்றது. சந்திரன் தோன்றியவுடன் கடல் அலையை வீசிவீசி அலைந்து ஒலிக்கிறது; தாமரைமலர் குவிகிறது. இவை இயற்கை நிகழ்ச்சிகள் இந் நிகழ்ச்சிகள் சிவப்பிரகாசரின் கற்பனையில் வேறு வகையாகக் காட்சியளிக்கின்றன. மாயை நிலவை நோக்கி, நிலவே, நீ தோன்றும் போதே உன் தாயைத் தலை மோதிக் கொண்டு அலறும்படி கோபிக்கிறாய்; உன் உடன்பிறந்தவள் வீட்டை மேலிருந்து அழிக்கிறாய்; இப்படிச் சொந்தமானவர்களையே வருத்தும் நீ தொடர்பில்லாத என்னை வருத்தாது விடுவாயா? என்று கலங்கியுரைக்கின்றாள். கலைஞரின் கற்பனையில் நிலவும் கடலும் தாமரையும் உறவுடைய பொருள்களாகின்றன.

"தாய்வாய் அடைந்து மிகுந்தலையை
மோதிமோதிச் சவித்தலறக்
காய்வாய் நிலவே உடன்பிறந்தாள்
இருந்து வாழும் கடிமனையை
நீவான் எழுந்து வந்தழிப்பாய்
என்றால் அந்தோ நிலையின்றித்
தேய்வாய் நின்னொடு இயைபில்லா
என்னை என்ன செய்யாயே"

(பிரபுதேவர் வந்தகதி 57)

இவை போன்ற கற்பனை வளஞ்சான்ற பாடல்கள் பிரபுலிங்க லீலையில் பலப் பல உள்ளன.

**கவிதைப் போக்கு**

சிவப்பிரகாசரின் பாடல்கள் எளிமை யழகும் வருணனைத் திறமும் ஆற்றொழுக்கம் வாய்ந்தவை என்பதை அவர் தம் அனைத்து நூல்களினுலும் உணரலாம். அவர் கவிதைத் துறையில் தோற்றுவித்த சில புதிய போக்கு களையும் அவர் நூல்களில் காணமுடிகின்றது. அப்போக்குகளில் ஒன்றே இலக்கணச் செய்திகளை உவமையாகக் கூறுவது. தம் கவிதைகளில் யாப்பிலக்கணம், புணர்ச்சி யிலக்கணம், மங்கல வழக்கு ஆகியவற்றை உவமைகளாக ஆக்கியுள்ளார்.

ஒரு வெண்பாவினுள் இரு குறட்பாக்கள் இடம்பெறும். முதற் குறட்பாவிற்குப் பின் தனிச்சொல் ஒன்று நிற்கும். அக் குறட்பா வினேடு தனிச்சொல் பொருந்தாமல் இடை வேறுபட்டு இசைப்பின் அக்குறட்பாவின் இறுதியில் ஒன்றும் இரண்டும் அசைகூட்டி ஒலிக்கப்படும். இவ்வாறு ஒலியொற்றுமைக் காக அசைகூட்டுதலைப் பற்ருசிடுதல் என்பர். இவ்விலக்கணச் செய்தியினைத் தலைமகன் தூது சென்றதனைத் தலைமகளுக்குத் தெரி விக்கும் தோழியின் கூற்றில் வைத்து இலக்கியம் படைக்கிருர் அடிகள். தோழி தலைவியை நோக்கி, ‘படைநின்ற கண்ணி! பற்ருசொன்று இடை நின்று குறள் வெண் பாவையும் தனிச்சொல்லையும் கூட்டுவது போல இரண்டு அரசர்களை இசைவித்தற்குத் தலைவர் நம் வேந்தருக்குத் தூதாகச் சென்ருர்’ என்கிருள்.

“சடை நின்ற கங்கையர் வெங்கையிலே யொரு
சந்து சென்ருர்
படை நின்ற கண்ணி நங் காதலர் இன்று பற்ரு
சொன்று தான்
தொடை நின்ற நேரிசைமுன் குறளுந்
தனிச்சொல்லுமுற
இடை நின்று கூட்டுதல் போல் இருவேந்தை
இசைப்பதற்கே”
(கோவை 415)

இவ்வாறே புணர்ச்சிவிதியினையும் கூட உவமையாக்கியுள்ளார். குறில் வழி லகரத்தை நந்தி எம்பெருமானுக்கும், அஃது ஆயுதமாக மாறியதை அவரே வசவண்ணராக மாறியதற்கும் உவமான மாகக் கூறும் பிரபுலிங்கலீலைப்பாடல் (அக்கமாதேவி உற்பத்தி கதி 28) சுவை யானது. இவைதவிர இன்னும் பல இலக்கண உவமைகளை இவர் நூல்களில் காணலாம். †

ஒரு பெண்ணை வருணிக்கும் பொழுது உயர்ந்த இலக்கியங்களின் பெயர்களையோ ஊர்களின் பெயர்களையோ அவ் வருணனையில் இடம்பெறச் செய்வது பிற்கால நூல்களில் காணும் பிறிதொரு கவிதைப் போக்கு. இதற்கும் காள்கோள் விழா செய்தவர் சிவப் பிரகாசர் என்றே தோன்றுகிறது. தலை மகனிடம் பாங்கி தலைமகளைக் கிழியில் சிறக்க எழுதுதல் இயலாத செயல் என்று கூறுகிருள். அவள், ‘தலைமகளின் மணி மேகலை அணிந்த நூல் இடையின் நுட்பத்தை எவ்வாறு எழுத இயலும்? அவளுடைய சிந்தாமணி போன்ற பற் களையும், திருக்கோவை போன்ற அதரத் தையும் எழுதிக் கொண்டாலும் அவளது உரையை எவ்வாறு எழுத இயலும்? எனத் தலைமகனை வினவுகிருள். அவளது பேச்சில் மணிமேகலை, சிந்தாமணி, திருக்கோவை ஆகிய நூல்களும் சிந்தாமணி, திருக்கோவை ஆகியவற்றின் உரைகளும் இடம் பெற்றிருத்தல் காணலாம்.

† மாயை பூசைகதி 36; பிரபுதேவர் வந்தகதி 59; வசவண்ணர்கதி 6; கோரக்கர்கதி 38; சோண சைலமாலை 91; ஸ்ரீ சிவஞான பாலைய தேசிகர் கலம்பகம் 25.

" மந்தாகினி யணிவேணிப் பிரான்
வெங்கை மன்னவ நீ
கொந்தார்குழல் மணிமேகலை நூல்நுட்பங்
கொள்வ தெங்ஙன்
சிந்தாமணியும் திருக்கோவையும் எழுதிக்
கொளினும்
நந்தா வுரையை எழுதல் எவ்வாறு
நவின்றருளே "

( திருவெங்கைக் கோவை 107 )

ஒருநூலின் ஒவ்வொரு பாட்டிலும் உவமைக் காட்சிகளை அமைத்து எழுதுவதும் ஒருவகை இலக்கிய அழகு. நன்னெறி நாற்பது பாடல்களிலும் உவமைக் காட்சிகள் இடம் பெற்றுள்ளன. ஒரு பாடலாவது உவமை இல்லாமல் இல்லை. தமிழில் வேறு எந்த நூலும் இம் முறையில் அமைந்ததாகத் தெரியவில்லை.

## முடிவுரை

இவ்வாறாகச் சிவப்பிரகாசர் பல்வேறு துறைகளில் நூல்யாத்த பெரும் புலவராக, செறிந்த கல்வியறிவுடையராக, கற்பனைக் களஞ்சியமாக, புதியசில இலக்கிய நெறிகளைத் தோற்றுவித்தவராகக் காட்சி தருகிறார். புலமைப் பெருக்கு, கற்பனை உயர்வு, சமயச்சார்பு ஆகியவற்றின் திரண்ட உருவத்திற்கு ஒரு பெயர் சூட்ட வேண்டுமானால் **சிவப்பிரகாசர்** எனத் தயக்கமின்றிச் சூட்டலாம்.

## தமிழ் மணிமாலை

ஈகை புளங்கொண்டே இன்செல் நிறைகண்டு
வாகை விளையாடும் வண்டமிழே – ஒகைத்தேன்
துள்ளும் மனத்தால் தொடுத்தேன் மணிமாலை
அள்ளும் அருளாளே ஆள்

— புலவர், சி. கோவிந்தசாமி, பி. ஏ., போளூர்.

என்னை வளர்த்து எழிலார்ந்த சிந்தனை
தன்னைக் கொடுத்த தமிழ்நிலையம் – மன்னுதமிழ்
ஆயிரம் நன்மலர்கள் காணும் அருமைத்தாய்த்
தாயினும் வாழ்க தழைத்து.

— புலவர். அர. இராமானுஜம், எம். ஏ., கடலூர்.

# பரிமேலழகர்

## ( புலமைத்திறனுய்வு )

பேராசிரியர் திரு. கு. சுந்தரமூர்த்தி, எம். ஏ.,
செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.

[ ஒப்புயர்வற்ற இலக்கிய உரைகாரர் என்று பாராட்டப்பெறும் ஆசிரியர் பரிமேலழகரின் செம்மை சான்ற உரைநலம் காட்டி, அவர் தம் புலமை நலத்தைப் பலமுனை நின்று திறனுய்வு செய்கிறது இக்கட்டுரை. அதிகாரங்களை இணைத்துக் காட்டும் அருமை, சொற்பொருள் விரிக்கும் நேர்த்தி, பாரம்பரியம் மிக்க வரலாற்றுச் செய்திகளை உவமைகாட்டும் அருமைப்பாடு போன்ற ஒப்புயர்வற்ற ஆழ்ந்த புலமை நலத்தை அகச் சான்றுகள் காட்டி விளக்கும் ஆசிரியர், குறிப்பிட்ட சில திறங்களை மட்டுமே இங்கு விரித்துள்ளார். பரிமேலழகரின் பல்வேறு புலமை நலங்களை ஒரு சிறு கட்டுரைக்கண் அடக்குதல் என்பது இயலாமை கருதிச் சுருங்கிய சில வற்றை மட்டும் காட்டி நிறைவெய்துகிறது இது ]

திருக்குறளுக்கு உரை எழுதிய பதின்மருரையுள் பரிமேலழகருரையே மிகச் சிறப்புடையது. அதிகார முறைவைப்புக் கூறுவதிலும், சொற்களுக்குப் பொருள் விரிப்பதிலும், அதற்குத் தக்க மேற்கோள் காட்டிச் செல்வதிலும், விளக்கவுரை தருவதிலும், சிற்சில இடங்களில் தக்க வரலாறுகளைக் காட்டிச் செல்வதிலும் ஈடுஇணையற்றவர் இவர். இதனாலேயே 'பாரில் பரித்த உரையெல்லாம் பரிமேலழகர் உரையாமோ' எனச்சான்றோர்கள் கூறுவ ராயினர். இத்தகைய பல நலன்களும் வாய்க்கப் பெற்றிருப்பினும் 'தெரியுங்கால் இன்மையரிதே வெளிறு' என்பதற்கேற்பச் சில பொருந்தா உரைக்கோளும் உள. இவ்வமைப்பில் நின்று உரை முழுவதையும் ஆராய்தல் ஈண்டு கருத்தன்று. ஒரு சில வற்றை ஈண்டுக் காண்போம்.

### அதிகார முறைவைப்பு

செய்ந்நன்றி யறிதல் என்னும் அதிகாரத்துள் ஆசிரியர் திருவள்ளுவர் அவ் வறத்தை மிகச் சிறப்பாகக் கூறுகிறுர். தினைத்துணை நன்றி செய்யினும் பனைத் துணையாகக் கொள்ள வேண்டும் என்றும், தம்கண் விழுமம் துடைத்தவர் நட்பு எழுமை எழுபிறப்பும் உள்ள வேண்டும் என்றும், செய்ந்நன்றி கொன்ற மகற்கு உய்வில்லை என்றும் கூறுகின்றுர். அதனையடுத்து நடுவு நிலைமை என்னும் அதிகாரத்தை அருளு கின்றுர். நடுவுநிலைமை என்பது பகைவர் நண்பர் என்ற வேறுபாடின்றி யாவர் மாட்டும் ஒப்பநிற்கும் நிலைமையாகும், இந் நிலையில் தனக்கு உதவி செய்த ஒருவன் சமுதாயத்திற்குத் தீங்கு செய்கிறுன் எனில் செய்ந்நன்றியறிதல் என்னும் அறம்பற்றி அவனைப் பாராட்டுவதா? நடுவு நிலைமை

என்னும் அறம்பற்றி அவனை இகழுவதா? இந்தச் சிக்கலைத் தீர்க்கும் முகமாகப் பரிமேலழகர் முறைவைப்பு விளக்கம் அமைந்துள்ளது. 'நன்றி செய்தார் மாட்டு அந்நன்றியினை நினைத்தவழிச் சிதையுமன்றே அவ்விடத்தும் சிதையலாகா தென்றற்குச் செய்ந்நன்றியறிதலின் பின் இது (நடுவு நிலைமை) வைக்கப்பட்டது' என்பது அவர் தரும் விளக்கம். எனவே தனக்கு உதவி செய்தவன் சமுதாயத்திற்கு தீங்கிழைப்பின் நடுவுநிலைமை என்னும் அறம்பற்றி அவனை ஒறுத்தலே தக்கது என்பது கருத்தாகின்றது. ஆனால் தனக்கொரு உதவி செய்தவன் தனக்கே பின் தீங்கிழைப்பின் அவன் முன்பு செய்த உதவியினை நினைந்து, பின் செய்த தீங்கினை மறப்பதே அறமாகும்.

[1]"கொன்றன்ன இன்னா செயினு மவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்"

என்பர் திருவள்ளுவர். இங்குக் கூறிய அதிகாரமுறைவைப்பின் விளக்கம் பெரிதும் பாராட்டற்குரியதாகும்.

## சொற்பொருள் விரித்தல்

வழக்கு: இச்சொல் யாவரும் அறிந்தது. இதன் பொருளும் யாவரும் அறிந்ததே. எனினும் இச்சொல்லின் முழுப் பொருள் அல்லது தக்க விளக்கத்தை யாவரும் கூறிற்றிலர். பரிமேலழகரே இதற்குத் தக்க விளக்கம் தருகின்றார். 'வழக்காவது ஒரு பொருளைத் தனித்தனியே எனதெனதென்றிருப்பார் அது காரணமாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருள் மேற்செல்வது' என்பது அவர் தரும் விளக்கமாகும். இவ்விளக்கம் உலகில் தோன்றும் எல்லா வழக்குகளையும் அகப்படுத்தி நின்று விளக்கம் தருகின்றது. இந்நுண்மை பாராட்டுதற்குரியதாகும்.

மறைத்தல்: ஒன்றைச் செய்துவிட்டு மறைத்தல் அல்லது, ஒரு பொருளைப் பிறருக்குக் காணாது மறைத்தல் என்ற அளவிலேயே இச் சொல் வழங்கக் காண்கிறோம். ஆனால் மறைத்தல் என்பது வாராமல் காத்தல் என்னும் பொருளையும் குறிக்கும்.

[2]"இடும்பைக்கே கொள்கலங்
கொல்லோ குடும்பத்தைக்
குற்ற மறைப்பா னுடம்பு"

என்னும் குறளில் மறைத்தல்–வாராமல் காத்தல் என உரைசெய்து 'உறைப் பெய லோலை போல, மறைக்குவன் பெருமநிற் குறித்து வருவேலே' என்புழியும் மறைத்தல் இப்பொருட்டாயிற்று' என மேற்கோள் காட்டி விளக்குகின்றார் இவ் விளக்கம் பிறருரையில் காணாததும் பாராட்டுதற்குரியதுமாகும்.

## தக்க வரலாறு காட்டல்

[3]"எனைவகையால் தேறியக் கண்ணும்
வினைவகையான்
வேறுரு மாந்தர் பலர்"

என்ற குறளில் கட்டியங்காரனையும்,

[4]"பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு"

என்ற குறளில் இராமனையும் காட்டியிருப்பது மிகவும் பொருந்துவதாகும்.

இங்ஙனமே, பிறர் மனம் நோகாதவாறு மறுப்புரை வழங்குவதிலும், சுருங்கச் சொல்லி விளங்கவைப்பதிலும் இவருக்கு இணை இவரே யாவர்.

அரிய கற்று ஆசற்றார் கண்ணும் சில தவறுகள் நேர்தல் இயல்பு. ஆனால் அத்தவறுகள் நினைந்து செய்யப்படுமாயின்

1 செய்ந்நன்றியறிதல் – 9.
2 குடிசெயல் வகை – 9.
3 தெரிந்து வினையாடல் – 4.
4 படைச்செருக்கு – 3.

ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. பரிமேலழகர் உரையில் காணும் பொருந்தா உரைக் கோள்கள் பலவும் எண்ணிச் செய்தனவாகக் காணப்படுகின்றன. ஆதலின் அவை விலக்கற்குரியனவாகும்.

உரைப்பாயிரத்தில் 'அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம்' என விளக்கம் தருகின்றார்.

**"மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்"**, 'முகத்தால் அமர்ந்தினிது நோக்கி அகத்தானாம் இன் சொலினதே அறம்', 'அழுக்காறு அவா வெகுளி இன்னாச் சொல் நான்கும் இழுக்கா இயன்ற தறம்', என்றெல்லாம் திருவள்ளுவரே அறமாவது இன்னது என்று கூறிச் சென்றிருக்க, மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம் எனக் கூறியிருப்பது சிறிதும் பொருந்தாததாகும். மக்கட்பேறு என்ற தலைப்பை விடுத்துப் புதல்வரைப் பெறுதல் என்று மாற்றியதும் இங்ஙனமே பொருந்தாததாகும். இத் தவற்றை மணக்குடவர், பரிதியார் முதலியவர்களும் செய்துள்ளனர். வாழ்க்கைத் துணைநலம் என்ற அதிகாரத்தினிறுதியில் 'மற்றதன் நன்கலம் நன்மக்கட்பேறு' எனத் தோற்றுவாய் செய்த திருவள்ளுவர், மக்கட்பேறு என்ற அதிகாரத்தில் ஏழு குறட்பாக்களில், 'மக்கள்', 'மக்கட்பேறு' என எடுத்தாளுகின்றார். ஆதலின் மக்கட்பேறு என்பதே பொருந்துவதாகும். அன்றியும் இவ்வதிகாரத்தின் தோற்றுவாயில் 'அஃதாவது இரு பிறப்பாளர் மூவரானும் இயல்பாக இறுக்கப்படும் கடன் மூன்றனுள் முனிவர் கடன் கேள்வியானும், தேவர் கடன் வேள்வியானும், தென்புலத்தார் கடன் புதல்வரைப் பெறுதலானுமல்லது இறுக்கப்படாமையின் அக்கடனிறுத்தற் பொருட்டு நன்மக்களைப் பெறுதல்' என விளக்கம் தந்துள்ளார். எனவே இவர் கருத்தின்படி இவ்வதிகாரத்தில் கூறப்பட்ட குறட்பாக்கள் அரசர் அந்தணர் வணிகர் ஆகிய மூவர்க்கு மட்டுமே உரியனவாகக் கொள்ள வேண்டியுள்ளது. அன்றியும் புதல்வரைப் பெறுதல் தென்புலத்தார் கடனைச் செய்வதற்கே என்றும் தெரிகிறது. மனைமாட்சியின் நன்கலம் நன்மக்கள். அவர்களின் மழலைச் சொல் குழல் யாழ் ஆகியவற்றின் ஓசையினும் இனிது, அமிழ்தினும் ஆற்ற இனிது,

[1] "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்",

[2] "தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது",

[3] "மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்"

என்றெல்லாம் திருவள்ளுவர்கூறும் இனிமையையும் பயனையும் விடுத்து, நால்வகை வருணத்தாருள் வேளாண் வருணத்தாரையும் விடுத்து இவ்வதிகாரத் தோற்றுவாயை விளக்கியிருப்பது சிறிதும் பொருந்துவதன்றாம்.

இங்ஙனம் காய்தல், உவத்தல் இன்றி ஒருவரின் கருத்தை ஆராய்வதே அறிவுடைமையாவதன்றி, ஒரே மூச்சாக ஒருவர் கருத்தனைத்தையும் ஏற்றுக் கொள்வதும், அன்றி வெறுத்து ஒதுக்குவதும் தக்கதன்றாம். அதற்கு வழிகோலுவதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

---

1 புதல்வரைப் பெறுதல் – 9.

2 புதல்வரைப் பெறுதல் – 8.

3, புதல்வரைப் பெறுதல் – 10

# குணவீர பண்டிதர்

## (புலமைத் திறனாய்வு)

திரு. செ. வைத்தியலிங்கம், எம். ஏ., எம். லிட்.,

தமிழ் விரிவுரையாளர் – அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

[தமிழ் இலக்கிய வரலாற்றில் சமண சமயத்தைச் சார்ந்த பெருமக்கள் இயற்றிய தொண்டு, நிலைபேறுடையதாகும். கி. பி. 12ஆம் நூற்றாண்டினர் என்று கருதப்படும் குணவீர பண்டிதர். நேமிநாதம் என்ற தலைசிறந்த தமிழ் இலக்கண நூலை யாத்ததோடு, வச்சணந்தி மாலை என்னும் பாட்டியல் நூலையும் வகுத்துத்தந்த பேராசான். இச்சமணப் பெரியாரின் இவ்விருநூல் களையும் நுணுக்கமாக ஆராய்ந்து, இவர்தம் ஆழ்ந்தகன்ற சமண சமய ஈடுபாட்டையும், நேமிநாதத்துள் இவர் பேரறிவு விளங்கித் தோன்றும் நுண்மையினையும், தொல்காப்பியத்தின் போக்கினைப் பல விடங்களில் தழுவிச் செல்லும் ஆசிரியர், பழையன கழித்துப் புதியன புகுத்தித் தம் இலக்கண நூலை வரையறுத்திருக்கும் அருமைப் பாட்டையும், அவர் தம் புதிய இலக்கணக் கோட்பாடுகள் சிலவற்றையும் இக்கட்டுரை நுண்மையாக விளக்கி நிற்கிறது.]

நேமிநாதம் எழுதிய குணவீர பண்டிதரின் புலமை பற்றி ஆய்தற்குமுன் இயைபுள்ள சில அடிப்படைச் செய்திகளைக் காணுதல் நன்றாம்.

சமணச் சான்றோர்களால் தமிழானது இலக்கியத்திலும் இலக்கணத்திலும் பெரிதும் வளங்கொண்டது. களந்தைப் பதியில் தோன்றிய குணவீரபண்டிதர் நேமிநாதமேயன்றி வச்சணந்திமாலையெனும் வெண்பாப் பாட்டியலையும் இயற்றியவர். வச்சணந்திமாலை உரைக்குறிப்பால் திரிபுவனதேவன் (மூன்றாம் குலோத்துங்கன்) காலத்தவர் என அறியப்பெறுதலால் இவரது காலம் 12ஆம் நூற்றாண்டெனலாம்.

### நேமிநாதம் - பெயர்ச்சிறப்பு

ஆதிநாதர் தொடங்கி எண்ணப்படும் தீர்த்தங்கரர் இருபத்துநால்வருள், இருபத்திரண்டாமவராக எண்ணப்படுபவர் நேமிநாதர். இந்தியத் துணைக்கண்டத்தில் சமணர்கள் சமயப்பணியைக் கலைத்தொண்டு வாயிலாக ஆற்றியுள்ளனர்; அங்நிலையில் கடவுளரெனப் போற்றப்பெறும் தீர்த்தங் கரரைக் கலைவடிவில் போற்றிப் பணியலானார்கள். இராஜஸ்தானத்து ஆபுமலையடிவாரத்திலே உலகப் புகழ்பெற்ற சிற்ப நுட்பங்களுடன் கூடிய சமண ஆலயங்களைத் தொடராகக் காணலாம். அவற்றுள், 'கட்டடக் கலைச் சிறப்புக்கு **ஆதிநாதர்** ஆலயமும் **நேமிநாதர்** கோயிலும் குன்றுப்

புகழ்பெற்றவை' என்பர் அறிஞர் வி. கோபாலன்.

ஆதிநாதரை ஆதிபகவன் என்றும் விருஷப தேவர் என்றும் அழைப்பர். ஆதி நாதர் 500 வில்லளவு உயரமும் 84 லட்சம் பூர்வ ஆண்டு ஆயுளுமுடையவரென்றும், நேமிநாதர் 10 வில்லளவு உயரமும் ஓராயிரம் ஆண்டு ஆயுளுமுடையவரென்றும் சமணர்கள் நம்புவர். ஒன்பது முழ உயரமும் நூறாண்டு ஆயுளுமுடைய பார்சுவநாதர் (23ஆவது தீர்த்தங்கரர்), ஏழு முழ உயரமும் எழுபத்திரண்டாண்டு ஆயுளு முடைய மகாவீரர் (24ஆவது தீர்த்தங்கரர்) நீங்கலாக, ஆதிநாதர் முதலாக நேமிநாத ருள்ளிட்டோரைக் கற்பனைப் பெரியார்க ளென வரலாற்றாய்வாளர்கள் எண்ணு கின்றனர். 'தீர்த்தங்கரரின் மிகப்பெரிய உருவத்தையும் நீண்ட வாழ்க்கையையும் சமணரின் "சமயக்கொள்கை" என்று ஒதுக்கிவிடுவோமாயின், தீர்த்தங்கரர் அனைவரும் உண்மைப்பெரியார் என்பது புலப்படும்' என்பர் அறிஞர் மயிலை. சீனி. வேங்கடசாமி. மேலும் அவர், '...கண்ணபிரான் காலத்தில் இருந்த அவர் உறவினரான நேமிநாத தீர்த்தங்கரரும் சரித்திர காலத்தவர் ஆவார்' எனக் கட்டுரைக்கின்றார்.

எவ்வாறோ, ஆதிநாதரும் நேமிநாதரும் சமணர்களால் சிறப்பாகப் போற்றப்பட் டுள்ளனர். தமிழ் நாட்டில் காணப்பெறும் சமணத் திருவுருவங்களில் மிகப்பெரிதாகக் கருதப்படுவது **நேமிநாதர்** உருவமே யென அறிகின்றபோது, குணவீர பண்டிதர் தாம் எழுதிய நூலுக்கு நேமிநாதம் எனப் பெய ரிட்டது அவருடைய சமய ஈடுபாட்டின்படி பொருத்தமாகவே தோன்றும்.

**குணவீர பண்டிதரின் சமயவுணர்வு**

நேமிநாதத்துள் பாயிரம், தற்சிறப்புப்பா யிரம் வாயிலாகச் சமணக் கடவுளுக்கு வாழ்த்தினைப்புரிகின்றார் ஆசிரியர். சிறப்பாக, நேமிநாதப் பாயிரமானது,

> "பூவின்மேல் வந்தருளும் புங்கவன்றன் பொற்பாதம்
> நாவினல் நாளும் நவின்றேத்தி – மேவுமுடி
> பெல்லா முணர எழுத்தின் இலக்கணத்தைச்
> சொல்லல் உரைப்பன் தொகுத்து"

என அமைந்துள்ளது காண்க. இதற்கு உரையெழுதிய சமணப் புலவராலும் அரிய சில விளக்கங்கள் கிடைக்கின்றன. முதலி ரண்டடிக்கும் பொருளெழுதுகையில் 'ஆயிரத்தெட்டு இதழுடைய அரவிந்த நாண்மலர்மேல் எழுந்தருளியிருக்கும் **ஆதிநாதன்** அடி துதித்து' என எழுதுதல் காண்க. 22ஆவது தீர்த்தங்கரராகிய **நேமிநாதர்** பெயரால் அமைக்கும் நூலின் பாயிரத்துள் முதல் தீர்த்தங்கரராகிய **ஆதிநாதருக்கு** வணக்கம்புரிதல் நோக்கத் தக்கது. மேலும், ஆதிநாதருடைய பரிவார தெய்வங்களில் **கோமுகயட்சர்** முதன்மை யானவர்; சிவனுக்கு நந்திதேவர் போன்ற சிறப்பினைப் பசு (அல்லது எருது) முகம் படைத்த அவரிடம் சமணர்கள் காண்பர். இந்த அடிப்படையிலே சமணர்களுள் நந்திகணம் என்னும் பிரிவும் உண்டு. அந்தப் பிரிவிலே எண்ணத்தக்கவர் **வச்சணந்திமுனிவர்.** அவரது குறிப்பிற் கேற்ப எழுதப்பட்ட நூலுக்குக் குணவீர பண்டிதர் **வச்சணந்திமாலை** எனப் பெயரிட்டது, சமய வுணர்விலும் ஆசிரி யர்க்கு ஆற்றவேண்டிய நன்றியுணர்விலும் மலர்ந்த அவர்தம் புலமையையே புலப்படுத்தும்.

**நேமிநாதத்துள் புலமைநலம்**

எழுத்து சொல் பொருள் என்ற முப் பாகுபாடுடையது தொல்காப்பியம்;

எழுத்தையும் சொல்லையும் குறிக்கொண்டு தொகுத்த நிலையில் – தொல்காப்பியக் கடலில், சுழலுள் படகென – பத்துவகை அழகுடன் வெண்பாவால் எளிய இலக்கண மாக எழுதப்பட்டது நேமிநாதம். இதனைச் சின்னூல் என்றும் வழங்குவர். நன்னூல் தோன்றும் வரையில் இந்நூல் மக்களின் கவர்ச்சியையும் பயிற்சியையும் பெற்றிருந்த தெனலாம்.

நேமிநாதத்துள் ஆசிரியரின் புலமை நலத்திற்கியையச் சில காண்போம்.

எழுத்ததிகாரத்தையும் சொல்லதி காரத்தையும் பற்றித் தனித்தனியே இயம்பும் தற்சிறப்புப் பாயிரம் ஆசிரியரது உட் கிடையை உணர்த்தும்.

எழுத்ததிகாரத்தை எண் பெயர் முறை பிறப்பு மாத்திரை வடிவு புணர்ச்சி யெனும் எழுவகையுள் அடக்கி யுணர்த்திவிட்டுச், சொல்லதிகாரத்தை ஒன்பது வகையுள் விளம்புகிறார்.

தொல்காப்பியச் சொல்லதிகாரத்துள் அமைந்த இயல்களைப் பின்பற்றியே நேமிநாத ஆசிரியரும் பெயரிடுகிறார். தொல்காப்பியம் சொல்லதிகாரத்துள் வரும் **கிளவியாக்கம்** என்பதைத் தம் நூலில் **மொழியாக்க மரபு** எனக் கொள்கிறார். கிளவியும் மொழியும் சொல்லையே உணர்த் தினும் 'மொழி' பரந்த பொருண்மையைத் தருமெனக் கொள்கிறாரோ! சிந்தித்தற் குரியது. **'விளிமரபு'** என்பது இருநூல் களிலும் அப்படியே வுள்ளது. **வேற்றுமை மயங்கியல்** என்பது பொருண் மயக்கத் துடன் சிறப்பாக வேற்றுமையுருபு மயக்கம் பற்றியது. ஆதலின் அதனை **உருபு மயங்கியல்** எனக் கொள்கிறார். ஏனைய ஆறு இயல்களும் (வேற்றுமையியல், பெயரியல், வினையியல், இடையியல், உரியியல், எச்சவியல்) **இயல்** என்பதற்குப் பதிலாக **மரபு** என (வேற்றுமை மரபு, பெயர்மரபு, வினைமரபு, இடைமரபு, உரி மரபு, எச்சமரபு) அமையக் காண்கிறார்.

இயல் என்பது பொதுவாக அதிகாரத் தின் உட்பிரிவைக் குறிக்கும்; எனினும், இலக்கணமானது மரபினால் காக்க வேண்டிய தென்பதை யெண்ணியும், தொல் காப்பியரே இயலுக்கு மரபென (விளிமரபு) வழங்கியமையைக் கருதியும் மரபு என்பதைப் பெரும்பான்மையாக நேமிநாத ஆசிரியர் கொண்டிருக்கலாம். ஆனால், அவரே எழுதியதாகக் கருதப்படும் **வெண்பாப் பாட்டியலானது மொழி யியல் செய்யுளியல் பொதுவியல்** எனும் மூன்று உட்பிரிவுகளை **இயல்** என்றே கொண்டிருப்பானேன்? காரணம், ஐவகை யிலக்கணங்களுள் அடங்காது அவற்றை முடிவு செய்யும் உறுப்பாகப் **பாட்டியல்** இருத்தலின், நூலும் அதன் உட்பிரிவுகளும் இயல் எனவே அழைக்கப் பெறலாம் என்பது.

சூத்திரம் எனப்படும் நூற்பாவானது தொல்காப்பியத்திலும் நன்னூலிலும் பெரும் பாலும் ஆசிரியப்பாவால் அமைந்துள்ளது. நேமிநாதத்தில் வெண்பாவாலும் சூத்திரம் திறம்பட அமைக்க முடியுமென்பதை ஆசிரியர் காட்டியுள்ளார். வெண்பாப் பாட்டியலில் அந்தாதியமைப்பிலே வெண்பா எழுதியுள்ளதும் அவரது புலமையைச் சுட்டும்.

தொல்காப்பியத்தைத் தொகுக்கையில் இறந்தது விலக்கியும் எதிரது போற்றியும் திட்பநுட்பத்துடன் நேமிநாதத்தை ஆசிரியர் அமைத்துச் செல்கிறார். முன் தோன்றிய தொல்காப்பியத்துடனும் பின் தோன்றிய நன்னூலுடனும் ஒப்பிட்டுப் பார்க்கையில் நேமிநாதத்திற்குரிய புலமை யிடம் தெரியும்.

கிளவியாக்கத்துள் தொல்காப்பியர் முதல் நான்கு நூற்பாக்களில் கூறுதலை நேமிநாத ஆசிரியர் மனத்துட் கொண்டு இருவெண்பாக்களில் (மொழியாக்க மரபு 3. 4) கூற முயல்கிருர். எனினும், இரு நூல்களிடையே காணப்படும் வேறுபாடுகள் ஆய்தற்குரியன.

'உயர்திணை யென்மனர் மக்கட்சுட்டே' எனக்கூறி, அவ்வுயர்திணையுள், 'ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல் பல்லோ ரறியுஞ் சொல்' (ஆண்பால் பெண்பால் பலர்பால்) என மூன்று பால்களையும் காட்டு கிருர்; இம் மூன்று பாலுள் அடங்காத அஃறிணையை 'ஒன்றறி சொல்லே பலவறி சொல்.' (ஒன்றன் பால் பலவின் பால்) என இருபால்களையும் கூறுகிருர் தொல்காப்பியர்.

பாலுளடங்காத பேடியையும் திணையு ளடங்காத தெய்வத்தையும் பாலுள்ளும் திணையுள்ளும் அடக்க வேண்டிய நிலையில்,

"பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியுந்
தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்
இவ்வென வறியுமந் தந்தமக் கிலவே
உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்"

எனவும் தொல்காப்பியர் கூறுகிருர். இவற்றையெல்லாம் கண்ட குணவீர பண்டிதர் **பேடியை மக்கள்** எனும் சொல்லில் அடக்கி அதனைக் கையாள்கிருர்; தொல்காப்பியர் கூருத **நரகர்** எனும் சொல் உயர்திணையைச் சுட்டப் பயன்படுத்துகிருர். **தெய்வஞ் சுட்டிய உயர்நிலைக் கிளவி** என்பதற்குப் பதிலாக **வானேர்** எனும் சொல்லைச் செருகுகிருர்.

தொல்காப்பியர் மக்கட் சுட்டல்லாத அஃறிணைப் பொருள்களை **அவரல பிற** என்பதால் சுட்டுகிருர்; அவ்விடத்துப் **பிற** என்ற பலவின்பாற் சொல் வருதல் காணலாம். இதனை விளக்கிக்காட்ட நேமிநாத ஆசிரியர் **உயிருள்ளனவும் உயிரில் லனவும்** எனும் சொற்களைக் கையாள்கிருர்.

ஆக, இவற்றை நேமிநாதம் இரண்டாஞ் சூத்திரம்,

"மக்கள் நரகரே வானேர் எனும்பொருள்கள்
தொக்க உயர்திணையாம் தூமொழியாய் – மிக்க
உயிருள் ளனவும் உயிரில் லனவும்
செயிரில் அஃறிணையாம் சென்று"

என மொழிந்து காட்டுதலால் அறிக.

**மக்கள்** என்பதற்கும் **வானேர்** என்ப தற்கும் இடையே **நரகர்** எனும் சொல் வருகிறது. நரகர் என்பது இழைத்த தீங்கால் எய்திய இழிபிறப்பின் பெயர். ஆனல், அஃறிணையுள் அடங்கும் உயிருள் ளனவும் உயிரில்லனவுமாய தொகுதியே குற்றமற்றதாக நேமிநாத ஆசிரியருக்குத் தோன்றுகிறது! **செயிரில் அஃறிணை** என்றே செப்பிவிடுகிருர்.

தொல்காப்பியர் உயர்திணையில் **மக்கள்** எனும் சொல்லை மட்டும் சிறப்பாகக் கொள்கிருர்; நேமிநாத ஆசிரியர் '**மக்கள் நரகரே வானேர்**' என மூன்று திறத் தாரை வரிசைப்படுத்திக் காட்டுகிருர். பின்னல் வந்த பவணந்தியார் '**மக்கள் தேவர் நகரர்**' (நன்னூல் பெயரியல் 4) எனச் சிறிது மாற்றி வரிசைப்படுத்துகிருர்.

பவணந்தியார் கூற்றிற்கமைப்பாகச் சிவஞான முனிவர், 'மக்களாகப் பிறந்து புண்ணிய பாவ மியற்றி, புண்ணிய மிகுதி யால் தேவராயும் பாவமிகுதியால் நரகராயும் பிறத்தலின், மக்கள், தேவர், நரகரெனச் சாதன சாத்திய முறையே வைத்தாரென்க' என விளக்கம் எழுதிச் செல்கிருர்.

நேமிநாத ஆசிரியரின் எண்ணத்தில் உயிர்கள் தம்மியல்பில் குற்றமற்றன என்பது தெளிவு. மக்களாகப்பிறந்தவர்கள்

தம் முயற்சியால் வைத்து வாழ்வாங்கு வாழ்தலும் வானோராதலும் எண்ணிக்கையில் சிறுபான்மையோரே; தம் முயற்சியின்றி நரகராதற்கு இழிநிலை வாழ்வு வாழ்வோர் பெரும்பான்மையோர். வானோரின் அருமையை உய்த்துணர **மக்கள் நரகர் வானோர்** எனக் கூறியிருக்கலாம்.

ஆடுஉஅறி சொல், மகடுஉஅறிசொல், பல்லோரறியும் சொல், ஒன்றறிசொல், பலவறிசொல் எனும் ஐம்பாலையும் தொல்காப்பியர் விளக்குகிறார். ஆனால், நேமிநாத ஆசிரியர் இவ்வைம்பாலையும் 'ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல' என்ற சொற்களால் சுட்டுகிறார். முதல்மூன்று சொற்களும் உயர்திணை மூன்று பால்களையும், பின்னிரண்டு சொற்களும் அஃறிணை இருபால்களையும் குறிக்குமென மொழிகிறார். இதனை,

> "ஒருவன் ஒருத்திபலர் ஒன்றுபல என்று
> மருவியபால் ஐந்து வகுப்பின் – பொருவிலா
> ஓங்கு திணைப்பால் ஒருமூன் றொழிந்தவை
> பாங்கில் அஃறிணைப்பா லாம்"
>
> (மொழியாக்க மரபு 4)

எனும் வெண்பாவில் காண்க.

அஃறிணைப் பொருள்களிலும் ஆண் பெண் உண்டு; அவ்வாறிருக்க உயர்திணையில் மட்டுமே ஆண் பெண் வேறுபாட்டை எடுத்தியம்ப வேண்டியுள்ளதைத் தொல்காப்பியரும், நேமிநாத ஆசிரியரும் சிந்திக்கின்றனர். என்றாலும், ஆண்பால் பெண்பால் எனக் குறித்திட மனமில்லை. எனவே, தொல்காப்பியர் **'ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்'** என்றார். நேமிநாத ஆசிரியர் **'ஒருவன் ஒருத்தி'** என்றார். பின்னால் வந்த நன்னூலார் துணிச்சலாக 'ஆண்பால் பெண்பால்' எனக் கூறினார். இக்கூற்று உரையாசிரியர் சங்கர நமச்சிவாயருக்கு ஒருவாறு இக்கட்டாகப் பட்டது; இருப்பினும் பவணந்தியாருக்கு ஆதரவாக 'ஒன்றே பல என்றிரு பாற் றஃறிணை' எனும் நூற்பாவிற்கு உரையெழுதுகையில், 'அஃறிணைக் கண்ணுஞ் சேவல் என்றற் றொடக்கத்து ஆண்பாலும் பெடை என்றற் றொடக்கத்துப் பெண்பாலும் உளவேனும் அவ்வாண்பாலும் பெண்பாலும் உயிருள்ளனவற்றுள் சிலவற்றிற்கும், உயிரில்லனவற்றிற்கும் இன்மையின், அப்பகுப்பு ஒழித்து, எல்லாவற்றிற்கும் பொருந்த ஒன்று எனப்பட்ட தென்க' என எழுதிச் செல்கிறார்.

தொல்காப்பியத்தால் ஐம்பால் வரையறை யுணர்ந்தும், குணவீரபண்டிதர் அஃறிணையில் வரும் ஆண் பெண்பால்களைக் குறிக்காமல் செல்ல மனமில்லை. ஆதலின், மரபு வழுவமைதியாக,

> "பெண் ஆண் ஒழிந்த பெயர் தொழில்ஆகியசொல்
> உண்மை இருதிணைமேல் உய்த்தறிக — ..."

என எழுதிச்செல்கிறார்.

சீரிதாய்ச் சிந்தித்து இலக்கணம் செய்த நேமிநாத ஆசிரியரின் புலமைத்திறத்தை,

> "உன்ன முடியாத ஒதநீர் வான்வாய்ப்பட்
> டென்ன அமுதான தில்லையோ – மண்ணின்மேல்
> நல்லாரைச் சேர்தலால் நான்சொன்ன புன்
> சொல்லும்
> எல்லாருங் கைக்கொள்வர் ஈங்கு,"

எனவரும் அவர்தம் அவையடக்கமே உலகிற்குக் காட்டலாம்.

---

பார்வை நூல்கள்: 1. தொல்காப்பியம் – எழுத்து, சொல். 2. நன்னூல் – விருத்தியுரை. 3. நேமிநாதம் – கழகப் பதிப்பு. 4. சமணமும் தமிழும் – மயிலை, சீனி. வேங்கடசாமி. 5. கல்கி, தீபாவளி மலர் – 1971.

# பவணந்தி முனிவர்

## ( புலமைத் திறனாய்வு )

தருமையாதீனப் புலவர்,
மகாவித்துவான், திரு. **சி. அருணைவடிவேல் முதலியார்,**
தருமபுரம்.

[பவணந்தி முனிவரின் நன்னூலை நுட்பமாக ஆராய்ந்து குறை நிறை காட்டி விளக்கஞ் செய்வது இக்கட்டுரையின் நோக்கமாகிறது. பவணந்தி முனிவர் தம் நன்னூலில் காட்டும் பகுபத இலக்கணங்களும், விகுதிகள் இயல்பும், முக்கால வினைச்சொற்களும், சாரியை இயல்புகளும், குற்றியலுகரப் புணரியலைச் சுருக்கி உயிரீற்றுப் புணரியலுள் அடக்கிய மாட்சியும் அவரது அளவற்ற இலக்கண அறிவிற்குப் பெருமை சேர்க்கும் திறம் விளக்கிய ஆசிரியர், இந்நூல் தொல்காப்பிய வழிப்பட்டதே என நிறுவி, சார்பெழுத்துக்களை விரித்துரைத்தலிலும், பண்புத்தொகையை விரித்துப் புணர்க்கக் கூடுமென்ற வரையறையிலும், குற்றியலிகரத்தை முப்பத்தேழு எனப் பேசுவதிலும், தன்மைச் சொற்களை இருதிணைப் பொது எனக் கூறியதிலும் வரும் பிழைகளைத் தக்க சான்றுகளுடன் விளக்கி, அங்ஙனமாயினும், தொல்காப்பியத்தை அணுக இஃதோர் வாயில் எனக் காட்டி ஆழ்ந்த புலமை நலத்தோடு இக்கட்டுரையை நிறைவிக்கிறார்.]

'இயல், இசை நாடகம்' என மூன்று வகையாகக் கூறப்படுகின்ற தமிழில் இயற்றமிழின் இயல்பிற்கு முடிந்த பெருநூலைச் செய்தவர் தொல்காப்பியனர். அவருக்குப் பல நூற்றாண்டுகட்குப் பின்னர்ச் சிறியவும், பெரியவுமான இயல் நூல்களைப் பலர் செய்தனர். அந்நூல்களுள் தொல்காப்பியம் போல ஓரளவில் சிறந்துநிற்பது, **பவணந்தி முனிவர்** செய்த நன்னூல் ஒன்றுமேயாம். இஃது 'எழுத்து சொல்' என்னும் இரண்டன் இயல்புகளையே கூறுவதாயினும், 'இஃது இல்லையேல், இன்று தமிழில் இலக்கணம் கற்பவரே இல்லை' என்ற நிலை ஏற்பட்டிருக்குமோ, என்னவோ என்று எண்ணத்தக்க வகையில் இயற்றமிழுக்குப் பெரு வழக்கமாக வழங்கி வருகின்றது.

நன்னூலின் பயிற்சி மிகுதியை நோக்கி அதற்கு எழுந்துள்ள உரைகள் மிகப் பல. அவை எல்லாவற்றுள்ளும், **சிவஞான முனிவரது** திருத்தத்தைப் பெற்ற **சங்கர நமச்சிவாயரது** விருத்தி யுரையே சிறந்து நிற்பது. சிவஞான முனிவர் திருத்திய விருத்தியுரை, யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் காண்டிகையுரை முதலிய உரைகளால் பலராலும் நன்கு பயிலப்பட்டு வருகின்ற **நன்னூல்,** பயில்வோரது எண்ணிக்கையை நோக்குமிடத்துத் தொல்காப்பியத்தினும் மிக்க பயனுடையதாகின்றது.

நன்னூலால் பெறும் பயன்களுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது **பகுபத இலக்கணம்.** இதனை **'பத முடிபு'** என்றும், **ஒரு**

மொழி முடிபிலக்கணம்' என்றும் கூறுவர் தொல்காப்பிய உரையாளர். தொல்காப்பியனர் தொடர்மொழி முடிபு இலக்கணங் கூறினரேயன்றித் தனிமொழி முடிபு இலக்கணங் கூறவில்லை. 'இயல்' என்பது தொடர்மொழியேயன்றித் தனி மொழியன்று. அதனல், இயல் நூலில் தொடர்மொழி ஆராயப்படுமேயல்லது, தனிமொழி ஆராயப்படாது. தனிமொழியை ஆராய்வது 'மொழி நூல்' என வேறாய் நிற்கும். தொல்காப்பியம் இயல் நூலேயன்றி, மொழி நூலன்று; அதனல், அதில் தனிமொழி ஆராய்ச்சி இடம்பெற வில்லை.

அண்மையில் வாழ்ந்த, 'திருமாகறல், கார்த்திகேய முதலியார்' என்பவர், தமிழில் முதல் முதலாக முயன்று, 'மொழி நூல்' ஒன்று எழுதி, கி. பி. 1913ல் வெளியிட்டார். இதுபொழுது இம் முயற்சியில் ஈடுபட்டுள்ளோர் பலர். வடமொழியில் பழமையாகவே மொழிநூல் ஓரளவில் இருந்து வருகின்றது.

'இயல் நூலில் தனிமொழி முடிவு கூறுதல் பொருந்தாது' என்பது பற்றிப் பவணந்தி முனிவர் கூறிய பகுபத இலக்கணத்தைத் தொல்காப்பிய உரையாளர் மறுப்பாராயினும், அவை போன்ற மறுப்புக்களை எதிர்நோக்கியும், பொருட்படுத்தாதும் அவர் (பவணந்தியார்)வகுத்துக்காட்டிய பகுபத இலக்கணம், சொற்களின் இயல்பை நன்குணர்த்தித் தமிழ் மக்கட்குப் பெரிதும் பயன்படுகின்றது. 'வீரசோழியம், நேமி நாதம்' என்னும் நூல்களைச் செய்த ஆசிரியர்கள் அந்நூல்களில் கூறிய வடமொழித் தத்திதப் பத முடிவும் தனிமொழி முடிபேயாயினும், அவை தமிழ் மக்கட்குப் பெரும் பயன் தருவன அல்ல.

'உயர்திணைச்சொல், அஃறிணைச்சொல் இருதிணைப்பொதுச்சொல், தன்மைச்சொல், முன்னிலைச் சொல், படர்க்கைச் சொல், ஆடூஉ வறிசொல், மகடூஉ வறிசொல், பலரறி சொல், ஒன்றறி சொல், பலவறி சொல், என்ருற்போலத் தனிமொழிகளைச் சுட்டியும், 'அம், ஆம், எம், ஏம், என், ஏன், அல், அன், ஆன், அள், ஆள், அர், ஆர், ப, மார், அ, ஆ, வ, இ, ஐ, அய், இர், ஈர்' என்ருற்போல அவற்றின் விகுதிகளைத் தனியே பிரித்துக்காட்டியும் கூறுதலால், 'தொல்காப்பியரும் தனிமொழி முடிவைத் தம் நூலுட் கூறினரோ' என ஐயுற வேண்டுவதில்லை. ஏனெனில், அவற்றை அவர் கூறியது, 'சொற்கள் தொடரும் பொழுது' 'பொருந்தும் முறை இது, பொருந்தா முறை இது' எனத் தொடர்மொழி இலக்கணம் கூறுவதற்குப் பயன்படும் அளவே கூறினரன்றி, முற்றக் கூறினரல்லராகலின்.

'வினைச்சொற்கள் மூன்று காலத்திலும் வரும்' எனப் பொதுப்படச் சுருக்கமாகக் கூறிய அவர், 'அவை, இன்ன காலத்தில் இன்னவாறு வரும்' என அவற்றை விரிவாக விளக்கிக் கூருதது, விளக்கிக் கூறின், அது தனிமொழி ஆராய்ச்சியாய், இயைபின்றிப் பெருகி நிற்கும் என்னும் கருத்தினலேயாம். 'ஆயினும், அவற்றை உரையிற் காட்டுதல் கடமை' என்னும் கருத்தால் அங்ஙனம் காட்டப் புகுந்த சேனவரையர்க்கும், அவரைப் பின்பற்றி அவ்வாறு புகுந்த தெய்வச்சிலையார், நச்சினர்க்கினியர் என்பவர்க்கும் அவை அவ்விடத்து எத்துணை விரிந்தன என்பது கூறவேண்டா. இங்ஙனம் விரிதற்பாலனவாய அவற்றைப் பவணந்தி முனிவர் மிகச்சில சூத்திரங்களால் அடங்கக் கூறினமை, அவரது நூலியற்றுந் திறனை நன்கு எடுத்துக் காட்டுகின்றது. இன்னும் பகுபத இலக்கணங் கூறிய பதவியலுள்ளே வடமொழி ஆக்கத்தை அவர் கூறியிருத்தலும், அவரது கால நிலைமையை நோக்க மிகப் பயனுடையதேயாம்.

இவ்வாறு தொல்காப்பியத்தைப் பின்பற்றாமலேயே சிலவற்றைப் **பவணந்தியார்** தம் நூலுட் கூறினராயினும், அவர் பின்பற்றியது தொல்காப்பியத்தையே என்பது பொருளால் மட்டுமன்று; சொல்லாலும் இனிது விளங்கும்; அஃதாவது, தொல்காப்பிய நூற்பாக்களைச் சில இடங்களில் பவணந்தியார் தமது நூலுள் சிறிதும் மாற்றாது அங்ஙனமே கொண்டு கூறியிருத்தலால் விளங்கும். எனவே, 'நன்னூல் தொல்காப்பியத்தின் வழிப்பட்டது' என்பது தெளிவு. இவ்வாறாகவும் இந்நூலின் **பாயிரம்**, 'தொல்காப்பியத்தின் வழியே... வகுத்தனன்' எனக் குறிப்பிட்டுக் கூறாது, **''முன்னோர் நூலின் வழியே ......... வகுத்தனன்''** என்று நன்னூல், பல நூல்களின் வழிப்பட்டது என்பதுபோலப் பொதுப்படக் கூறுகின்றது. இது, முந்து நூல் கண்டு'' என்ற தொல்காப்பியப் பாயிரத்தைப்பார்த்து அவ்வாறே கூறியது.

தொல்காப்பியர் புணர்த்துக் காட்டாத **பண்புத் தொகையைப்** பவணந்தி முனிவர் புணர்த்துக் காட்டியதைப் **பிரயோக விவேக நூலார்**, தம் வழக்கப்படி **'வாமனன், சினேந்திரன் செய்த வடமொழிச் சத்த நூல் பற்றி அவ்வாறு கூறினர்'** என்றார். எனினும் இன்னோரன்னவை பற்றி, 'நன்னூலார், பல நூல்களைப் பின்பற்றிச் சென்றார்' என்று கூறவேண்டுவதில்லை; தொல்காப்பியத்தையே தமக்கு முதல் நூலாகக் கொண்டு நூல் செய்தார் என்க.

ஒரு நூலைப் பின்பற்றி வழிநூல் செய்பவர் தம் கால நிலைமைக்கு ஏற்பச் சில மாற்றங்களையும் தம் நூலுள் கூறுதல் தகும் என்பதற்கு,

†**''கடிசொல் லில்லைக் காலத்துப் படினே''** என்னும் நூற்பாவே போதிய சான்றாம். அவ்வாற்றால், பவணந்தி முனிவர் **எழுத்ததிகாரத்துள்** 'நெட்டெழுத்தேயன்றிக் குற்றெழுத்தும் சாரியையாம்' எனக்கொண்டு, தொல்காப்பியர் கூறிய அக்குச் சாரியையை, **'அகரச் சாரியை'** என்றும், **இக்குச்** சாரியையை, **'குகரச் சாரியை'** என்றும், உகரமாகிய எழுத்தை **'சாரியை,** என்றும் கூறினர்.

இன் சாரியையது னகரம் சிலவிடத்து றகரமாய்த் திரியும் என்னாது 'இற்று' என்பதொரு புதுச் சாரியையைக் கொண்டார். வற்றுச் சாரியையை அங்ஙனமே கொண்டு, 'சிலவிடத்து, அதன் வகரமெய் கெடும்' என்னாது, அற்றுச்சாரியை என்றே கூறினர். இவற்றைச் சிவஞான முனிவரும் தமது பாயிர விருத்தியுள் எடுத்துக் காட்டினர்.

இவையேயன்றி 'மெய்யெழுத்தும் சாரியை ஆகலாம்' எனக் கொண்டு. 'ஆனை, ஆனெடு' என்றாற்போல முதலெழுத்துக் கெட்டு வரும் இன் சாரியையை **'னகரச் சாரியை'** என்றே கூறினர். ஒன் சாரியை தம்காலத்து வாராமை பற்றிக் கூறாது விடுத்தார்.

சாரியைகளில் இத்துணை மாற்றங்களைச் செய்தவர் அத்துச் சாரியையையும் அங்ஙனமே தமது போக்கிற்கு ஏற்ப அகரத்தை நீக்கி, 'துகரச் சாரியை' எனக் கூறாது, 'அத்து' என்றே கொண்டு, **'அத்தின் அகரம் அகரமுனையில்லை'** எனத் தொல்காப்பியர் கூறியவாறே கூறிய தன் காரணம் புலப்படவில்லை. இதனை அரசஞ் சண்முகனாரும் குறித்துள்ளார்.

---

† தொல். சொல் – 452

இவ்விடத்தில் இவர் (பவணந்தி முனிவர்) **'அல்'** என்பதொரு சாரியை கூறியது, 'தொடையல், வளையல்' என்றாற் போலவரும் விகுதிகளையே யன்றி வேறில்லை என்பது தெளிவு. 'இது பொருந்தாது, என்னும் கருத்தினராகிய சிவஞான முனிவர் இதனை நன்னூல் உரையில் திருத்தாமல், **இலக்கண விளக்கச் சூறாவளியில்** நன்னூலார் கொண்டவாறே கொண்ட இலக்கண விளக்க நூலாரை மறுத்து, 'நன்னூலார் அல் என்பதொரு சாரியை கொண்டிலர்; அவ்விடத்து அச்சூத்திரத்தை **நல் அற்று** எனப் பிரித்து, நல் என்பதை அற்றுக்கு அடையாக்குதல் வேண்டும்' என்று கூறினர். எனினும், நன்னூலாரும் தொல்காப்பியரைப் போலச் சாரியைகளை இடையில் அடைமொழி ஏதும் இன்றியே தொகுத்துக் கூறக் காண்கின்றோம்.

குற்றியலுகரப் புணர்ச்சிக்குத் தனியியல் கொண்டு விரித்துக் கூறாமல், உயிரீற்றுப் புணரியலுள் அடக்கி, மிகவும் சுருங்கக் கூறினர். விதி கூறப்படாத வினைத்தொகைப் புணர்ச்சிக்கும் விதி கூறினர். இவற்றாலெல்லாம் புணர்ச்சி விதிகளைத் தொல்காப்பியத்தைக் காட்டிலும் மிகக் குறைந்த சூத்திரங்களால் எளிதாகவும் இனிது விளங்கவும், விதியறியப்படாத வற்றிற்கு ஒருவாறு விதி பெற்றும் உணர்தல் கூடுவதாயிற்று.

சொல்லதிகாரத்தில் **வழக்கிலக்கணம் ஆகுபெயரிலக்கணம்,** மற்றும் தொகை நிலைத் தொடர்களுள் **வினைத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித் தொகை** என்பவற்றின் இலக்கணம் முதலியன யாவர்க்கும் இனிது விளங்குமாறு நன்னூலில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. வேற்றுமைபற்றித் தொல்காப்பியத்துள் மூன்றியல்களில் அறியத்தக்கவைகள், நன்னூலில் ஓர் இயலில் பாதிக்குள்ளே அறிய நிற்கின்றன.

இவ்வாறு பவணந்தி முனிவரது நன்னூலால் பயன் பல உளவாயினும், உண்மையை நோக்குமிடத்துக் குறைபாடுகளும் சில அதன்கண் இல்லாமற் போகவில்லை.

தொல்காப்பியர் சார்பெழுத்துக்களை **'மூன்று'** என்று கூறியிருக்க, இவர் (பவணந்தி முனிவர்) **'பத்து'** என்று கூறினர். அதனால் பெருங்குறை ஒன்று மில்லை. ஆயினும், அவற்றைப் பின்னர் **முந்நூற்றறுபத்தொன்பதாக** விரித்தார். அதனால் பெற்ற பயன் இன்னதெனத் தெரியவில்லை. அங்ஙனம் விரித்ததனால் சில இடங்களில் அக்கணக்கைக் காட்ட முடியாமல் இடர்ப்படவேண்டியுள்ளது.

சிறப்பாக, **'உயிர்மெய்யை இருநூற்றுப் பதினாறு'** என்றதில் ஙா, ஙி, ஙீ முதலிய பதினொன்றையும் எங்கே காண்பது? எழுத்தறி பள்ளியில் நெடுங்கணக்கில் மற்றவைகளோடு இவையும் உள்ளனபோல் வைத்து இளஞ்சிறார்க்கும் பயிற்சிப் பொருட்டுக் கூறக் கேட்பதன்றி, வேறிடத்தில் அவற்றைக் காணுதல் கூடுமோ? தொல்காப்பியர் இங்ஙனம் கூறினரோ? "உயிரீராறே; மெய்ம் மூவாறே அம்மூவாறும் உயிரொடுயிர்ப்ப இருநூற்றெறுபத் தாறுயிர் மெய்யே" என்னும் காரிகையுரை மேற்கோள் நூற்பா, பெயரறியப்படாத நூலது. சார்பெழுத்தின் விரியில் இன்னும் எத்துணையோ இடர்ப்பாடுகள் உள.

**தொல்காப்பியர், 'கருங் குதிரை, செந்தாமரை** என்றாற்போன்ற பண்புத் தொகையிலும், அடுகளிறு **கொல்யானை** என்றாற் போன்ற வினைத்தொகையிலும் நிலை மொழியின் உருவம் இன்னது என அறிய

வாராது ; ஆதலின், அவற்றிற்கும் புணர்ச்சி விதி கூற இயலாது' என்று விடுத்தார். ஆயினும், **பவணந்தியார்,** அவற்றிற்கு நிலை மொழி, 'கருமை, செம்மை, அடு, கொல்' என்பனவே எனக்கொண்டு, அவற்றிற்கும் புணர்ச்சி விதி கூறினர்.

தொகைச் சொற்களெல்லாம், 'அவை விரிந்த வழிப்படும் பொருளே, விரியாது நின்றவிடத்தும் படுதல் வேண்டும்' என்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது. கருங்குதிரை செந்தாமரை என்பன, விரியுமிடத்து, 'கருமையாகிய குதிரை, செம்மையாகிய தாமரை' என விரியும் என்பது பவணந்தியார் கருத்து. 'ஆகிய' என்பது வினைச் சொல்லாயின் ஆக்கம் குறித்தும், இடைச் சொல்லாயின் 'இரண்டும் ஒன்றே; வேறல்ல' என்று வேறன்மை குறித்தும் வரும். 'ஆகிய' என்பது, 'இங்கு இடைச்சொல்' என்பதே பவணந்தியார் கருத்து. அவ்வாறுயின் 'கருமையும் குதிரையும் வேறல்ல ; ஒன்றே ; செம்மையும் தாமரையும் வேறல்ல; ஒன்றே' எனப் பொருள் தரும் ; அஃது உண்மையோ ? கருமையும், செம்மையும் குணங்கள் (பண்புகள்) குதிரையும், தாமரையும் பொருள்கள். (குணிகள் – பண்பிகள்)

"பொருளிடம் காலம் சினைகுணம் தொழிலின்
வருபெயர் பொழுதுகொள் வினைபகு பதமே"

என்னும் **பதவியற் சூத்திரத்துள்,** அவர் தாமே, 'பொருளும், குணமும் ஒன்றல்ல; வேறு வேறு, எனக் கூறினர். அவ்வாறே பெயரியலுள் பண்படியாகப் பிறக்கும் பெயர்களையும், வினையியலுள் பண்படியாகப் பிறக்கும் குறிப்பு வினைகளையும் ஏனைய பெயர் வினைகட்கு வேறாகக் கூறினர். அதனல், 'கருமை, செம்மை முதலியன குதிரை, தாமரை முதலியவற்றின் வேறல்ல' என்பது அவர்க்கும் கருத்தன்று என்பது தெளிவு. ஆகவே, அவற்றை மேற்கூறியவாறு கருமையாகிய குதிரை, செம்மையாகிய தாமரை' என விரித்தல் கூடாதாயிற்று. அதனல் அவற்றின் நிலை மொழிகளை மையீருகவைத்துப் புணர்ச்சிவிதி கூறியது பொருந்தாக் கூற்றேயாம்.

இனிப் பண்புத் தொகைகளை, 'கரிதாகிய குதிரை, கரியதாகிய குதிரை, செய்யதாகிய தாமரை' என்றாற் போல்வன வற்றுள் யாதானும் ஒருவகையாக விரிப்பின் பொருந்து மாயினும், அவற்றின்கண் உள்ள புணர்ச்சிச் செய்கை தொகைநிலைக்கண் ஒரு தன்மைத்தாக, தொகா நிலைக்கண் அவற்றின் பொருள், 'கரியனுகிய சாத்தன், கரியளாகிய சாத்தி, கரியராகிய மக்கள், கரியதாகிய குதிரை, கரியனவாகிய குதிரை' என்றாற்போலப் பலபட நின்று, நிலை மொழியைப் பலவாகத் தோற்றுவிக்கு மாகலின், 'பண்புத் தொகையை எவ் வகையினும் விரித்தல் இயலாது' என்பதும் அவ்வாறுகவே, 'பண்புத் தொகையின்' நிலை மொழி இன்னதென அறிய வாராது' என்பதும் தொல்காப்பியர் கருத்து. புணர்ச்சிக்கண் ஒரு செய்கையே பெற்றுத் தொகாநிலைக்கண் நிலைமொழிப் பொருள் மூன்று காலமும் பற்றி நிற்றற்கு உரியதா கின்ற வினைத் தொகைக்கும் இங்குக் கூறியன வெல்லாம் பொருந்தும். வினைத் தொகைப் புணர்ச்சி விதி எவ்வாறுயினும், பண்புத் தொகைக்குப் பவணந்தியார் கூறிய புணர்ச்சி விதி பொருந்துவதாய் இல்லை.

முன் நூலை விட்டு மாறும்பொது விழிப்பாக இருக்க வேண்டியுள்ளது; இல்லையேல் தம்மையும் அறியாமைப் படுத்துப் பிழை வருகின்றது.

தொல்காப்பியர் கூருதிருக்க, பவணந்தி முனிவர் கூறிய புது விதிகளுள் ஒன்று, 'குற்றியலுகரம்போல முற்றிய லுகரமும் யகரம் வருமிடத்து இகரமாய்த் திரியும்'

என்பது. அவ்வாறாயின், 'அந்த இகரம் குற்றியலுகரம் திரிந்த இகரம்போலக் குற்றியலிகரமாகும், அல்லது ஆகாது' என்று ஏதாவது ஒன்றை வெளிப்படையாக எடுத்துச் சொல்லி வரையறுத்துவிட வேண்டும்; அவ்வாறு அவர் செய்ய மறந்தார். அதனால், 'வரகியாது, மரபியாது' என்பவற்றிற்போல, 'வரவியாது, செலவியாது' என்பவற்றில் வரும் இகரம் எவ்வியல்பினது என்பது விளங்கவில்லை. அவையும் குற்றிய லிகரமேயாயின், முதலில், 'குற்றியலிகரம் முப்பத்தேழு' என அவர் கூறிய கணக்குத் தவறாய்விடும்.

இவைபோல்வன நிற்க, விதிகளை எளிமையாக்க வேண்டிச் சிலவற்றை வேண்டுமென்றே திரிவுபடக் கூறினர்.

சொல்லதிகாரத்துள் தொல்காப்பியர், **'உயர்திணைச் சொல்'** என்றே தெளிவாகக் கூறிய **தன்மைச் சொற்களை** இருதிணைப் பொதுச் சொல்லாகியது, உயர்திணைச் சொற்களை 'னளர' என்னும் மூன்று புள்ளியிற்றுள் அடக்குதற் பொருட்டேயன்றி வேறில்லை. 'யான் வந்தேன், சென்றேன், போயினேன்' என்ற சொற்கள், கட்டிக் கூறும் கதைகளிலன்றி, உண்மையாக வழக்கத்தில் எங்ஙனம் அஃறிணைக்கு உரியனவாய் வருதல் கூடும்? கூடாதாகவும்,

"பேய்பூதம் மந்தி கிளிபூவை பேசுதலால்
ஆமே அஃறிணைதன் மை"

என்றாற்போல, அதற்குச்சில அமைதிகள் உரைகளில் கூறப்படுகின்றன. 'பேயும், பூதமும், மக்கள் வழியாகவன்றி, நேரே மக்களோடு உரையாடின' என்றல் கற்பனை யேயாம். உண்மையாயின், அவ்விடத்து அவற்றை அஃறிணை என்றல் பொருந்தாது. கிளியும், பூவையும் பிறர் கற்பித்த ஒலியை எழுப்புவனவன்றி, மனத்தொடுபட்டுப் பேசுவன அல்ல.

'தொகைச் சொற்கள் இவை' என்பது பற்றி உள்ள கருத்து வேறுபாடு பெரிது. அதில் பவணந்தி முனிவர் எந்த ஒரு பக்கத்தையும் துணிந்து கூறாமல், எல்லார் கருத்தையும் தொகுத்துக் கூறிவிட்டார். உரிச் சொல்லுக்கு அவர் கூறிய இலக்கணத்தை நோக்குமிடத்து அவர் எந்தஅளவு அதனைக் கூறினர் என்பது விளங்கவில்லை. மற்றும் இன்னோரன்னவை சில.

இங்ஙனமாயினும், வீரசோழியம் முதலாகப் பவணந்தி முனிவர்க்குச் சிறிது முன்னும் பின்னும் வாழ்ந்தவர் செய்த நூல்களைக் காட்டிலும் பவணந்தி முனிவர் செய்த நன்னூல் தமிழ் மரபு பிறழாமலும், தமிழினது இனிமை கெடாமலும், சுருக்கமும், விளக்கமும் — அதே சமயத்தில் — நல்ல செய்யுள் நடையும் அமைந்து சிறப்புற்று விளங்குகின்றது. ஆகவே,

"முன்னூ லொழியப் பின்னூல் பலவினுள்
நன்னூ லார்தமக் கெந்நூ லாரும்
இணையோ என்னும் துணிவே மன்னுக"

என இலக்கணக் கொத்தின் ஆசிரியர் கூறியவாறு, 'பிற்காலத்தெழுந்த நூல்களுள் **எழுத்திற்கும், சொல்லிற்கும்,** இலக்கணங் கூறுதலில் பவணந்தி முனிவரது நன்னூல் இணையற்றது என்றே சொல்லுதல் வேண்டும்.

இந்நூலை அவ்வாசிரியர் 'முடிந்த நூல்' என்று கருதிச் செய்யவில்லை. தொல்காப்பியத்தைக் கற்க மாட்டாதவர் தமிழ் இலக்கணத்தை ஓரளவில் உணர்தற்கு என்றே செய்தார். இஃது, **"அரும்பொருள் ஐந்தையும் யாவரும் உணர"** என வரும் அதன் பாயிரத் தொடராலும் நன்கு விளங்கும். ஆகவே, இயற்றமிழைச் செம்மையாகவும், முற்றாகவும் உணரவேண்டுவோர், தொல்காப்பியத்தை உணர்தல் இன்றியமையாததே. அதற்கு முதற்படியாக நன்னூல் என்னும் பயனுடைய ஒரு நூலைச் செய்து தந்த பவணந்தி முனிவரைத் தமிழுலகம் பாராட்டி வருதலும் போற்றத்தக்கதே.

# அருணந்தி சிவம்

## (புலமைத் திறனய்வு)

திரு. ந. ரா. முருகவேள், எம். ஏ., எம். ஓ. எல்.,
ஆசிரியர், 'திருக்கோயில்' சென்னை – 34.

[செந்தமிழ் மொழியில் கிளைத்த தத்துவ நூல்களுள் தலைசிறந்த ஒன்றாகிய 'சிவஞான சித்தியார்' என்ற பெருநூலை யாத்தமைத்த அருணந்தி சிவாசாரியரின் புலமை நலத்தை ஆராய முற்பட்ட ஆசிரியர் 'புத்திமற் காரியத்தால்' என்று தொடங்கும் ஒரு செய்யுளை மட்டும் எடுத்துக் கொண்டு, இதன் கண் உலகத்தை எல்லாம் தோற்றுவிப்பதற்கு நிமித்த காரணமாகிய கடவுள் ஒருவன் இருத்தல் வேண்டும் என நிறுவும் அருணந்தி சிவத்தின் பேரறிவை வியந்து, மாதவச் சிவஞான யோகிகள் இப்பாடலை உலகாயதம், பௌத்தம், சாங்கியம் என்னும் சமயக் கோட்பாடு களோடு இணைத்து உரை இயற்றிக்காட்டும் அருமையை விளக்கி, சிவஞான முனிவரின் உரைத்திறத்தால் அருணந்தி சிவத்தின் ஆழ்ந்தகன்ற புலமை நலத்தினை அளவிட்டுக் காட்டுகிறார்]

### முன்னுரை

அமிழ்தினும் இனிய நமது அருமைத் தமிழ் மொழியிலுள்ள தத்துவ நூல்களுள், சிவஞானசித்தியார் மிகவும் தலைசிறந்த ஒன்றாய்த் திகழ்கின்றது. 'சிவத்துக்கு மேல் இல்லை தெய்வம், **சிவஞான சித்தி**க்குமேல் இல்லை நூல்' என்பது பழமொழி. "பாரிலுள்ள நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே ஓர் விருத்தப் பாதி போதும்" எனக் **குருஞான சம்பந்தர்** இந்நூலைப் புகழ்ந்து போற்றியுள்ளார்.

> "பாதிவிருத் தத்தால்இப் பார்விருத்த மாகஉண்மை
> சாதித்தார் பொன்னடியைச் சாருநாள் எந்நாளோ?"

என வேதாந்த சித்தாந்த சமரச ஞான வித்தகச் சான்றோராகிய **தாயுமான சுவாமிகள்** அருளிச் செய்திருப்பதும், சிவஞான சித்தியாரின் சிறப்பைச் செவ்விதினில் உணர்த்தும்.

செர்மானிய நாட்டின் புகழ்பெற்ற மாபெரும் கவிஞராகிய, **கெத்தே** என்பவர், காளிதாசர் இயற்றிய **சாகுந்தலம்** என்னும் வடமொழி நாடகத்தின் சிறப்பினைக் குறித்து, 'இளவேனிலின் எழில்மிக்க பல மலர்களையும், முதுவேனிலின் இனிய நல்ல கனிவகைகளையும், மற்றும் ஆன்மீக உணர்வைக் கவர்ந்து களிப்பித்து அரும் பெரும் விருந்தளிக்கவல்ல பொருள்கள் அனைத்தையும், இம்மண்ணுலகையும் அவ் விண்ணுலகையும் எல்லாம், நின்னால் ஒரே ஒரு பெயரிலேயே ஒன்று சேர்த்து அடக்கி இணைத்துக் கூற இயலுமா? இவைகள் அனைத்தையும் ஒருங்கே இணைத்துக்கூறும் வகையில், **சகுந்தலை** என்று யான் நினக்குப் பெயரிடுகின்றேன்' என்று புகழ்ந்துள்ளார்.

சிறந்த நல்ல இலக்கியங்களாகத் திகழ்வன எல்லாவற்றிற்கும், இப்பாராட்டுரை பொருந்துவதொன்றாக விளங்குதலின், நாம் நம் சிவஞான சித்தியாருக்கும்கூட இதனை ஏற்றிப் போற்றி உரைத்துக் கொண்டு மகிழலாம்.

" இன்பொளிர் வேனிற் காலத்
தெழில்மலர் கனிகள் மற்றும்
மன்பெருங் கவர்ச்சி மிக்க
மகிழ்ச்சிநல் விருந்தூண் மண்விண்
என்பவை எலாம்சேர்ந்த ஒன்றைச்
**'சித்தியார்'** எனும்ஓர் பேரால்
நன்றுற நவில்வேன் ! யாவும்
நனிஅதில் அடங்கும் நன்றே ! " *

— (மொழிபெயர்ப்பு) நா. ரா. முருகவேள்.

**சித்தியார் செய்யுள்**

இத்தகைய சிறந்த பெருநலம் வாய்ந்த சிவஞான சித்தியாரின்கண் வரும் செய்யுள் ஒவ்வொன்றும், சொல்நலம், பொருளாழம், கருத்துச்சிறப்பு கவிதையினிமை என்பவன வற்றை யுடையதாகும்.

" புத்திமற் காரி யத்தாற்
பூதாதி; புருடன் தானும்
அத்தனு கரணம் பெற்றால்
அறிதலால்; அவற்றை மாயை
உய்த்திடும் அதனால்; மாயைக்கு
உணர்வொன்றும் இல்லை என்றே
வைத்திடும் அதனால்; எல்லாம்
வருவிப்பான் ஒருவன் வேண்டும் "

என்பது, சிவஞான சித்தியாரின்கண் வரும் ஒரு செய்யுள். இஃது உலகத்தையெல்லாம் தோற்றுவிப்பதற்கு நிமித்த காரணமாகிய கடவுள் ஒருவன் இருத்தல் வேண்டும் என்பதனை வலியுறுத்துகின்றது. "நாத்திகமத கண்டனம் செய்து உலகத்திற்கு நிமித்த காரணன் ஒருவன் உளன் ஆதலை நிறுத்த எழுந்தது இத்திருவிருத்தம்." அதன் பொருள் பின்வருமாறு:

---

* "Would'st thou the young year's blossoms
and the fruits of its decline,
And all by which the soul is charmed,
enraptured, feasted, fed,
Would'st thou the Earth and Heaven itself
in one sole name combine?
I name thee, O Sakunthala! and all
at once is said"

— *G. W. Goethe.*

> "குடம் குயவனல் செய்யப்படும் காரியம் ஆனற்போல, பூதம் முதலிய பிரபஞ்ச மெல்லாம், ஒரு சேதனப் பொருளால் செய்யப்படும் காரியமே ஆகலானும்; உயிரானது சேதனப் பொருளாயினும் அப்பூதம் முதலியவற்றுலாகிய தனுகரணதிகளைப் பெற்றவழியே அறிதலானும்; அவற்றிற்கு முதற்காரணமாய்ச் செலுத்திநிற்கும் மாயைக்கு உணர்வு சிறிதும் இல்லையென்று நூல்கள் தெளிவுறக் கூறுதலானும்; பாரிசேட அளவையான், இவ்வனைத் திலும் வேருய் மாயையினின்றும் பூதம் முதலிய பிரபஞ்சம் எல்லாவற்றையும் தோற்று விப்பான் ஆகிய ஒரு கடவுள் இன்றியமையாது வேண்டப்படுவன்."

என்பது சிவஞான சுவாமிகள், இச்செய்யுட்கு எழுதியுள்ள திரண்ட பொழிப்புரை.

### சிவஞான சுவாமிகள்

இங்ஙனம் பொருள் பயக்கும் தன்மையிலும், சைவசித்தாந்தத் தத்துவக் கொள்கை யினை விளக்கி நிறுவும் முறையிலும் அமைந்துள்ள இச்செய்யுளுக்கே, வேறு வகைகளிலும் வேறு கொள்கைகளுக்கு இயையப் பொருள் கொள்ளலாம் என்று கூறி, அவ்வகையில் அறிஞர் அனைவரும் வியந்து நிற்கும் வண்ணம், **உலகாயதம் பௌத்தம் சாங்கியம்** என்னும் சமயக் கொள்கைகளை ஒட்டிச் சிவஞான சுவாமிகள் ஓரிடத்தில் உரைசெய்து காட்டுகின்ருர். "வல்லான் வகுத்ததே வாய்க்கால்" எனும் பழமொழிக்கு இயைய, எதனையும் நிறுக்கவும் மறுக்கவும் வல்ல பெரும் புலமை நலத்தால், சுவாமிகள் செய்து காட்டி யிருக்கும் உரைத்திறம், அறிஞர்களின் சிந்தனைக்கு விருந்தாகத் திகழ்கின்றது.

'ஒரு நூலுக்கு உரை செய்வோர் நூலாசிரியரின் கருத்துணர்ந்து அவர்கள் வழங்கும் சொற்பொருள் இன்னது எனத்துணிதற்குரிய கருவிகளைக்கொண்டு, ஐயமும் மருட்கையும் நிகழாமல் செவ்விதின் உரை இயற்றுதல் வேண்டும். அவ்வாறின்றித் தத்தம் மனம் போனபடி யெல்லாம் பொருள் செய்தல் கூடாது' என்பதனை வற்புறுத்தி அறிவுறுத்துதற் பொருட்டே, சுவாமிகள் இங்ஙனம் சைவ சித்தாந்த தத்துவச் சார்பே உடைய இவ்வழகிய இனிய செய்யுளுக்கு, வெவ்வேறு வகையான சமயக் கொள்கைகளுக்கு இயையப் பல்வேறு வகையில் பொருள் செய்து காட்டுகின்ருர். 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்னும் பழமொழிக்கு ஏற்பத் தம்முடைய அறிவாற்றல் நலங்களெலாம் பெரிதும் விளங்கித் திகழ, அவர் எழுதிக் காட்டியுள்ள கருத்தினை, நாம் இங்குச் சொற்சொல்லாக்ப் பிரித்துத் தெளிவுற விரித்துரைத்துணர்ந்துகொண்டு, முறையே காண்போம்.

### உலகாயதம்

காணப்படுகின்ற உலகம் மட்டுமே உள்ளது. நிலம் நீர் தீ காற்று என்னும் நான்கு பூதங்களே உள்ளன. அவற்றின் சேர்க்கையால் ஓர் அறிவு நிகழும். அது பூதம் எனப்படும் இயற்கைப் பொருளின் செயலால் நிகழ்வது. கடவுள் என்ருெரு பொருள் இல்லை. உடலின் வேருக உயிர் என்பதும் இல்லை. உடம்பே கண் காது முதலிய கருவிகளைக் கொண்டு பொருள்களை அறிகின்றது. காம இன்பமே மேலான இன்பம். இதனை விளைவிக்கும் மன்மதனே கடவுள். உலகிற்கு முதற்காரணமாகக் கூறப்பெறும் மாயை என்பதொரு பொருள் உண்டு என்பதற்குச் சான்று எதுவும் இல்லை. நிலம் நீர் தீ முதலியனவே, உடல் முதலிய கருவிகளை மயக்குகின்றன. வியாழன் என்னும் பிரகஸ்பதியே, இவ்வுலகாயதக்

கொள்கையை விளக்கிய ஆசிரியன். இவ் வுலகாயதக் கொள்கைகளுக்குச் சிறிதும் பிறழாமலும், அதன் கொள்கைகளுக்கே முற்றும் பொருந்தும்படியும், சுவாமிகள் பின்வருமாறு உரைக் குறிப்புக்கள் தருகின்றார்.

| | | |
|---|---|---|
| புத்திமத் | — | அறிவையுடைய உடலானது |
| காரியத்தால் | — | நான்கு பூதங்களின் கூட்டமாகிய காரியமே ஆதலாலும் |
| புருடன்தானும் | — | பூதங்களுக்கு நிமித்தகாரணனாய் உளன்எனப்பிறர் கூறும் முதல்வனும்கூட |
| அத்தனு | — | அந்த உடலையும் |
| கரணம் | — | கண் காது முதலிய பொறிகளையும் |
| பெற்றால் | — | துணையாகப் பெற்ற வழியே |
| அறிதலால் | — | அறியும் திறனை அடைந்து இயங்குதலாலும் |
| அவற்றை | — | அவ்வுடல் கருவி முதலியவற்றை |
| மதனால் | — | மன்மத பகவானால் |
| மாயை உய்த்திடும் | — | மாயையானது காம நுகர்ச்சிகளின் மயக்கத்தின்கண் செலுத்தி நிற்கும் ஆதலாலும் : |
| மாயைக்கு | — | பிற சமயத்தவர் கூறும் மாயை என்னும் ஒரு தத்துவப் பொருள் இருத்தற்கு |
| உணர்வு ஒன்றும் இல்லை | — | உணர்தற்கு ஏதுவாகிய சான்று எதுவும் கிடையாது |
| என்றே | — | என்றுதான் |
| வைத்திடும் அதனால் | — | எங்களுடைய உலகாயத சமயத்துக்குரிய நூல்கள் வரையறுத்து வைத்துக் கூறியிருக்கின்றன ஆதலாலும் |
| எல்லாம் வருவிப்பான் | — | உடல் கருவிகள் எல்லாவற்றையும் இயக்கும் பொருட்டு |
| பூதாதி | — | அந்தப் பூதமாகிய முதற் காரணத்தையே |
| வேண்டும் | — | விரும்புவான் |
| ஒருவன் | — | ஒப்பற்ற எங்கள் வியாழ பகவான். |

உலகாயத மதச்சார்பான இவ்வுரையின்கண், பூதாதி – புத்திமத் – புருடன் – மதனால் – மாயை – உணர்வு – வைத்திடும் – வேண்டும் – ஒருவன் என்னும் சொற்களுக்கு, அம்மதக் கொள்கையிற் பிறழாதவாறு உரை கூறியிருக்கும் திறம் உணரற்பாலது.

### புத்த மதம்

புத்தனே கடவுள். ஞானமே எல்லாவற்றிற்கும் காரணம். புறப்பொருளாகிய பூதம் முதலிய உலகமும், அவற்றை அறிபவனும் ஞானத்தின் வேறல்ல. அதனுடைய ஆற்றலாலேயே யாவும் நிகழ்கின்றன. வடிவமற்ற ஞானத்தின் அனுகாரத்தாலேயே கடம் படம் முதலிய வடிவங்கள் தோன்றுகின்றன. அங்ஙனம் தோன்றும் வடிவங்கள் வெறும் மயக்கமே. அஃது அஞ்ஞானத்தின் விளைவேயாகும். உலகிற்கு முதற் காரணமாகச் சில

சமயத்தோர் கூறும் மாயை என்னும் தத்துவப் பொருளின் உண்மைக்குப் பிரமாணம் எதுவும் இல்லை. உலகப் பொருள்களின் வடிவங்கள் எல்லாம், புத்தியாகிய ஞானத்தின் செயலாலேயே தோன்றுகின்றன என்பது புத்தரில் ஒருசாரார் கொள்கை. அதற்கேற்பவும் ஒருவாறு இச் செய்யுட்குப் பொருள் கொள்ளலாம்.

| | | |
|---|---|---|
| பூதாதி | — | பூதம் முதலியனவாகிய உலகமும் |
| புருடன் தானும் | — | புருடன் எனப்படும் அறிபவனும் |
| புத்தி | — | ஞானத்தினது |
| மற்காரியத்தால் | — | பலத்த காரியத்தின் விளைவேயாதலால் |
| அத்து | — | அந்த ஞானத்தினது |
| அனுகரணம் பெற்றுல் | — | அனுகரித்தலைப் பெற்றபொழுதே |
| அறிதலால் | — | கடவடிவும் படவடிவுமாய் அறிவு நிகழ்தலால் |
| அவற்றை | — | அந்தக் கடம் படம் முதலிய வடிவங்களை |
| மாயை | — | அஞ்ஞானமாகிய மயக்கம் |
| உய்த்திடும் அதனல் | — | வடிவம் அற்ற ஞானத்திற்கு உண்டாக்குவதனல் |
| மயைக்கு | — | உலகத்திற்கு முதற்காரணம் எனப் பிறர்கூறும் மாயை என்னும் தத்துவம் உண்மைக்கு |
| உணர்வு | — | உணர்தற்கு ஏதுவாகிய சான்று |
| இல்லையென்றே | — | எதுவும் கிடையாது என்று வலியுறுத்தியே |
| வைத்திடும் அதனல் | — | எங்கள் சமய நூலாகிய பிடகாகமம் கூறிவைத் திருப்பதனல், |
| எல்லாம் வருவிப்பான் | — | உலகப் பொருள்களின் வடிவங்களையெல்லாம் தோற்றுவித்தற் பொருட்டு |
| வேண்டும் | — | அப்புத்தியாகிய ஞானத்தையே விரும்புவான் |
| ஒருவன் | — | ஒப்பற்ற எங்கள் புத்தக் கடவுள் |

புத்த சமயக் கொள்கைக்கு ஏற்பப்பொருள் கொண்ட இவ்வுரையில் 'புத்தி – மற்காரியம் – அத்து – அனுகரணம்' முதலிய தொடர்களுக்குக் கூறப்பட்டிருக்கும் பொருள், நுனித்து நோக்கி மகிழத்தக்கது.

**சாங்கிய மதம்**

இனி இச்செய்யுளுக்குச் சாங்கிய மதத்திற்கு ஏற்பவும் பொருள் கொள்ளக் கூடும். நியாயம் வைசேடிகம் சாங்கியம் யோகம் மீமாம்சை வேதாந்தம் என்பவை, அறுவகைச் சமயம் (ஷட் தரிசனம்) என வழங்கப்படும். சாங்கிய மதக் கொள்கையை விளக்கியவர் **கபிலர்** என்னும் முனிவர். உலகத்தைப் பகுத்தறிந்து 25 என்னும் சங்கியைக்குள் அடங்கியதனல், இதற்குச் **சாங்கியம்** என்னும் பெயர் அமைந்தது. ஆகாயத்தில் இருந்தே ஏனைய நான்கு பூதங்களும் தோன்றின. ஆகாயத்திற்குச் சலனமும் வேறுபாடும் இல்லை. அதுபோல விகாரமும் பற்றும் அற்று ஞானமாத்திரையாய் நிற்பது புருடன் என்னும் தத்துவம். புத்தி தத்துவம் என்பது ஒன்றன் காரியமே. புத்தியின் காரியம் ஆகிய தனுகரணங்களை, முன்னிலையில் இருத்தல் ஆகிய சம்பந்தத்தாற் பெற்றவழியே, புருடன் என்னும் தத்துவத் திற்கு அறிவு ஏற்படும். புத்தி முதலிய தத்துவங்கள் பிரகிருதிமாயையில் இருந்து தோன்று

கின்றன. பிரகிருதிமாயைக்குக் கிரியையுண்டு, ஆனால் ஞானம் இல்லை. பிரபஞ்சத்தின் தோற்றத்திற்குப் பிரகிருதிமாயை மூல காரணம். புத்தி தத்துவத்திற்கும், மூலப் பிரகிருதிக்கும் சுதந்திர அறிவு இல்லை என்பது சாங்கிய மதக் கொள்கை. இதற்கு இயையுமாறும் இச்செய்யுளுக்குப் பொருள் கொள்ளலாம்.

| | | |
|---|---|---|
| புத்தி | — | புத்தி தத்துவமானது |
| மன் | — | இடைச் சொல் |
| காரியத்தால் | — | ஒன்றன் காரியம் ஆதலினால் |
| பூதாதி | — | ஐம்பூதங்களுள் தோற்ற முறையில் முற்பட்டதாகிய ஆகாயம் (போல) |
| புருடன் தானும் | — | விகாரமின்றி ஒட்டற்று ஞானமாத்திரையாய் நிற்கும் அந்தப் புருட தத்துவமும் |
| அத் தனுகரணம் பெற்றால் | — | அந்தப் புத்தியின் காரியமாகிய தனுகரணங்களைச் சந்நிதி மாத்திரமாகிய சம்பந்தத்தாற்பெற்றவழியே |
| அறிதலால் | — | அறியும் திறனை அடையும் ஆதலால் |
| அவற்றை | — | அந்த 'மகத்' என்பன முதலாகிய தத்துவப் பிரபஞ்சங்கள் அனைத்தையும் |
| மாயை | — | மூலப்பகுதி என்னும் பிரகிருதி மாயையானது |
| உய்த்திடும் அதனால் | — | தோற்றுவிக்கும் ஆதலால், |
| மாயைக்கு | — | அந்தப் பிரகிருதி மாயைக்கு |
| உணர்வு ஒன்றும் | — | ஞானம் கிரியை என்னும் இரண்டினுள் ஞானம் ஆகிய ஒன்றுமட்டுமே |
| இல்லை | — | கிடையாது |
| என்றே | — | என்று கூறியே |
| வைத்திடும் அதனால் | — | சாங்கிய மதத்துக்குரிய நூல்கள் வரையறை செய்துவைத்திருப்பதனால் |
| எல்லாம் | — | 'மகத்' என்னும் தத்துவம் முதலிய பிரபஞ்சம் அனைத்தையும் |
| வருவிப்பான் | — | தோற்றுவித்தற் பொருட்டு |
| வேண்டும் | — | பிரகிருதி மாயையையே விரும்புவான் |
| ஒருவன் | — | ஒப்பற்ற எங்கள் கபில முனிவன் |

சாங்கிய மதக் கொள்கையின்படி செய்யப்பட்ட இவ்வுரையில் புத்தி – மன் – பூதாதி – புருடன் – மாயை – உணர்வு – ஒன்றும் என்னும் தொடர்களுக்குக் கூறப்பெற்ற பொருட்டிறம் கருதியுணரற்பாலது.

## முடிவுரை

ஆசிரியர் சிவஞான சுவாமிகள், இங்ஙனம் ஒரு செய்யுட்கே பல சமயக் கொள்கை கட்கு ஏற்ப, முறைப்படி பொருள் விரித்து விளக்கிக் காட்டியருளிய திறம், அவர்தம் அரியபெரிய நுண்மாண் நுழைபுலமை நலத்திற்குச் சிறந்த இனிய எடுத்துக்காட்டாகும். தமது புத்தி சாமர்த்தியத்தால், இங்ஙனம் சுவாமிகள் பொருளுரைத்துக் காட்டினராயினும்

"எந்நூற்கும் **உபக்கிரமம்** (தொடக்கம்), **உபசங்காரம்** (முடிவு), **அப்பியாசம்** (நூலிற் பெரிதும் பயின்று வரும் தன்மை), **அபூர்வதை** (பிற நூல்களிற் கூறப்பெருத சிறந்த பொருளாதல்), **அருத்தவாதம்** (புனைந்துரை வகையாற் சிறந்த பொருளை யுணர்த்துதல்), **உபபத்தி** (அறிவிற்கு மிகவும் பொருந்துதல்), முதலிய பலவகை நெறிமுறைக் கருவிகளைக்கொண்டு, அவற்றுக்கு விரோதம் வாரதபடியே வியாக்கியானம் பண்ணல் வேண்டும் என்பது, சகலமத சம்மதம். ஆதலின், அது செய்தலை ஒழித்துத் தாம்தாம் கருதும் பிரயோசனங்களுக்கு இணங்க வியாக்கியானம் செய்தல் கூடாது"

என்பது சிவஞான சுவாமிகள் வலியுறுத்தி அறிவுறுத்தும் சிறந்த கருத்தாகும்.

இங்ஙனம் நூல்களுக்குப் பொருள் விளக்கி உரை வரையும் திறத்தினைச் செவ்விதில் தெளிவுறுத்தி யருளிய சிவஞான சுவாமிகளின் சிறப்பினை, அறிந்து அளவிட்டுரைத்தல் நம்மனோர்க்கு இயலுமோ: **"ஆர் அறிவார் இந்த அகலமும் நீளமும்"** எனத் திருமூலர் அருளிச் செய்ததற்கு ஏற்ப, நமது அருமைத் தமிழ் மொழியின் ஆழமும் அகலமும் அறிய விரும்புவோர் அனைவரும், சீரிய நுண்மாண் நுழைபுலம் சான்ற நமது சிவஞான சுவாமிகள் போன்ற செந்தமிழ்ப் பெருஞ்சான்றோர்களின் சிறந்த நூல்களைப் பயின்றினிது பயன்கொண்டு உய்ய முற்படுவார்களாக !

## தமிழ் மணிமாலை

முந்நாள் முடிவேந்தர் முத்தமிழைத் தாம்வளர்க்க,
இந்நாளில் யார்காப்பார் என்றிருந்தோம் – அந்நிலைக்குத்
தந்திட்டீர் கல்லூரி! தங்கள் திருவடியே
எந்நாளும் வாழ்க இனிது

— புலவர், திரு. க. வேலாயுதம், கழுகுமலை.

அருமைத் தமிழைத் தருமையில் கற்றுப்
பெருமை பலபெற்றோம்; பெம்மான் – அருளால்
இகழ்வேது மின்றி இடர்ப்பாடு மின்றிப்
புகழ்பட வாழ்வோமே யாம்

— புலவர், திரு. வி. மாணிக்கவாசகம், திமிரி.

# சங்ககாலப் புலமை மகளிர்

வித்துவான், திருமதி. ப. நீலா,

தமிழ்ப் பேராசிரியை, தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி.

[முத்தமிழ் வளஞ்சான்ற வித்தக மகளிர்களாகச் சங்க காலத்தில் வாழ்ந்திருந்த இருபதுக்கு மேற்பட்ட புலமை மகளிர்களைச் சுட்டி, அவர்தம் ஒப்புயர்வற்ற புலமை நலத்தால் சங்ககால மகளிர்தம் கல்விநிலையின் மேம்பாடு காட்டப்புகும் ஆசிரியர், தலைசிறந்த கல்விநலம் பெற்றுத் திகழ்ந்த ஔவையாரின் ஆழ்ந்தகன்று நுண்ணிதான புலமைநலத்தை இக்கட்டுரைக் கண் விரிக்கின்றார். எட்டுத் தொகையுள் காணக்கிடக்கும் அருந்தமிழ் மூதாட்டியின் அழகொழுகும் பாடல் துணைகொண்டு, அதியமான் நெடுமா னஞ்சியோடு அவர்க்குளதாய இனிய நட்பினைப் புலப்படுத்தி இந்நட்பின் இடையே கிளைத்த தமிழ்ச்சுவையை விரிப்பதோடு, காக்கைப்பாடினியார் என்னும் சிறப்புப் பெயர்பெற்ற நச்செள்ளையாரின் புலமைநலத்தையும் அகச் சான்று காட்டி விளக்கி இக்கட்டுரையை அமைக்கிறார்.]

இனிமையுறும் இசையும் இயலும் நாடகமுமான முத்தமிழில் தேர்ந்த புலவோரில் சிலர் பெண்பாலராயிருந்தமையை இங்கு பெருமையோடு நினைவுறுவோம். திறமான புலமையை முன் நாமும் வணங்கிப் பின் வெளிநாட்டாரையும் வணங்கச் செய்ய வேண்டும்.

தமிழின் பெருமையையும் உயர்வையும் தமிழ்விடு தூதில்

> பஞ்சி படாநூலே பலர்நெருடாப் பாவே-கிண்டு
> எஞ்சி பழுக்கேறா வியற்கலையே - விஞ்சுநிறந்
> தோயாத செந்தமிழே சொல்லே குழவரகந்
> தீயாது சொல்விளையுஞ் செய்யுளே

என்று குறிப்பிடுகின்றார். பஞ்சில் வாராது போனாலும் இது நூல்தான். பலர் கை நெருடாத பா இது. கிழிந்து நைந்துபோகாத கலை (ஆடை) இதுவன்றோ. செம்மை நிறத்தில் தோய்க்கப் பெறாமல் செந்தமிழ் விளங்குகிறது. செய்யில் விளையும் நெல்போல் புலவரென்ற உழவரின் செய்யுளில் சொல் (நெல்) விளைகிறது. இந்நற்றமிழ்வல்ல நங்கையர் களைக்காண்போம்.

1. ஔவையார், 2. காவற்பெண்டு, 3. பாரிமகளிர், 4. குறமகள் இளவெயினி, 5. நக்கண்ணையார், 6. மாறோக்கத்துநப்ப சலையார், 7. வெண்ணிக்குயத்தியார், 8. அள்ளூர் நன்முல்லையார், 9. நெடும் பல்லியத்தையார், 10. வெண் பூதியார், 11. ஒக்கூர் மாசாத்தியார், 12. காக்கைப் பாடினியார் நச்செள்ளையார், 13. பொன் முடியார். 14. வெறிபாடிய காமக்கண்ணியார் 15. பூதப் பாண்டியன் மனைவி பெருங் கோப்பெண்டு, 16. வெள்ளிவீதியார், 17. அஞ்சியத்தை மகள் நாகையார், 18. கழார்க்கீரனெயிற்றி, 19. வருமுலை யாரித்தியார், 20. வெண்மணிப்பூதியார்,

இத்துணைப் பெண்பாற் புலவர்களையும் நாம் எட்டுத்தொகை நூல்கள் மூலம் சந்திக்கிறோம். இப்பெண்பாற் புலவர்களின் பாடல்கள் தரும் செய்திகள் எண்ணற்றவை. இவர்கள் தாமியற்றிய பாடல்களில் தம்மொடொத்த புலவர்களையும் – தம் கால அரசர்களையும், அக்கால மக்களின் பண்பு நலன்களையும் பாடியுள்ளார்கள். அச்செய்திகள் எல்லாவற்றையும் இங்கே விரிக்க முடியாதென்றாலும் அப்புலவர் பெருமாட்டிகளின் செந்தமிழ்ப் புலமையைச் சிறிதளவாவது காணத்தான் வேண்டும்.

### அஞ்சா நெஞ்சுரம்

புலமைத் திறத்தாலே புவியாண்டோரைப் பிணித்த பெண்பாற் புலவர்களில் ஔவைக்குத் தனியிடம் என்றும் உண்டு. தான்விரும்பும் பரிசிலைத்தரக் காலம்தாழ்த்த அதியமானையே இகழ்ந்து திரும்பியவள் ஔவை.

> மரங்கொல் தச்சன் கைவல் சிறார்
> மழுவுடைக் காட்டகத் தற்றே
> எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே

என்று செம்மாந்து கூறித் தன்பெருமையை ஏட்டில் எழுதியவள் ஔவை. கையில் மழுவுங்கொண்டு காட்டில் நுழையும் தச்சனின் சிறார்போல – கையில் கல்வியைக் கொண்டு நாங்கள் எத்திசைச் சென்றாலும் அத்திசையில் சோறு கிடைக்கும் – யாரையும் இரந்து வாழும் வாழ்க்கை எங்களுக்கில்லை – என்ற வரிகளை நாம் எப்படி மறப்போம்.

### பாடிய புரவலர்கள்

ஔவையார் அதியமான் நெடுமானஞ்சி, அவன் மகன் பொகுட்டெழினி, பாரி, சேரமான் மாவெண்கோ, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, கிள்ளிவளவன், தொண்டைமான் முடியன், கொண்கானத்து நன்னன் – போன்றவர்களைப் பெருமைப் படுத்தித் தானும் பெருமையுற்றிருக்கிறாள். நற்றிணையில் 7ம், குறுந்தொகையில் 15ம், அகநானூற்றில் 4ம் புறநானூற்றில் 33ம், திருவள்ளுவமாலையில் ஒன்றுமாக – ஔவை அறுபது பாடல்களைப் பாடியிருக்கிறாள்.

இன்னும் ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன், நல்வழி, வாக்குண்டாம் போன்ற பல நூல்கள் அவர் பெயரில் உள்ளனவாயினும் சங்க இலக்கியப் பாடல்கள் சிலவற்றின் பெருமையை மட்டும் இங்கு நோக்குவோம்.

### ஔவையும் அதியனும்

எத்தனையோ வள்ளல்களை ஔவை பாடியிருந்தாலும் அதியனிடம் அவர் கொண்டிருந்த நட்பு மிக மிக நெருக்கமானது. இந்தப் பற்று நெல்லிக்கனியை இவர் உண்ண அவன் கொடுத்ததால் விளைந்ததோ என்னவோ. மூப்பையும் சாவையுந் தடுக்கும் சக்திவாய்ந்த நெல்லிக்கனியைத் தானுண்பதைவிட என்றுமுளதென் தமிழ்பாடும் இச் செந்தமிழ் விறலியே உன்பது பொருத்தமென்றெண்ணி அதனை அவளுக்குக் கொடுத்தான். கனியை உண்ட பின் கனிந்த உள்ளத்தோடு வாழ்த்தினாள் அதியனை. என்றும் நிலைத்திருக்கும் நீலமணி மிடற்றான் போல் வாழ்க என்று பின்பென்ன – பழத்தால் எதையடைவானோ அதனை வாழ்த்தினால் அடைந்து விட்டானே அஞ்சி.

> பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
> நீலமணி மிடற் றொருவன் போல
> மன்னுக பெரும நீயே தொன்னிலைப்
> பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
> சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
> ஆதல் நின்னகத் தடக்கிச்
> சாதல் நீங்க வெமக்கீத் தனையே

அதியமானுக்கு நெல்லிக்கனியென்ற அமுதம் கிடைக்கவில்லையே தவிர அமிழ்தினுஞ் சிறந்த கூழ் கிடைத்தது. என்ன! அமுதினுஞ் சிறப்புடையதா கூழ் என்று வியப்புறுகிறோமல்லவா. ஆம் வள்ளுவர் அப்படித்தான் கூறுகிறார்.

> அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
> சிறுகை யளாவிய கூழ்

தெய்வப் புலவரின் வாக்கை உணர்த்த அதியனுக்கு மகன் பிறந்தான். மகன் பிறந்த சின்னாட் கெல்லாம் தந்தை போர்வீரன் உடையில் அவனைவந்து காண்பான். இது அந்நாளைய வழக்கம். அதியனும் அப்படித் தன்மகன் பொகுட்டெழினியைக் காணவந்த போது ஔவை மகிழ்ந்து பாடினாள்.

கையது வேலும் காலன புனைகழலுமாக மெய்யது வியராக மிடற்றது பசும் புண்ணை தலையில் வெட்சியும் வேங்கையும் சூடி புலியொடு பொருத யானையைப் போல வந்து நின்றான். இவனைக் கோபம்கொள்ளச் செய்தோர் இனி உய்வது கடினம். அந்தக் கோபக்குறி தன் சிறுவனைக் கண்டும் மாறவில்லையே – என்று பெருமிதச் சுவையில் பாடினாள்.

> செறுவர் நோக்கிய கண்தன்
> சிறுவனை நோக்கியும் சிவப்பா னவே

**அதியனின் ஆண்மை**

நண்பர்களிடம் காதன்மையையும் பகைவர்களிடம் மறமாண்பையும் புலப்படுத்தும் அதியனை ஒரு பாட்டில் காட்டுகிறார். ஊர்ச் சிறுவர்கள் தன் வெண்ணிறத் தந்தங்களைக் கழுவும்போது அடங்கிநிற்கும் களிறே பகைவர்கள் நெருங்கும்போது சீறிச் செல்லும். அந்தக் களிறு அதியனுக்கு உவமையாகிறது. ஊர்ச் சிறுவர்களுக்கு களிறு அடங்குமாறுபோல எனக்கு நீ இனியை. பகைவர்களுக்கு அதன் நெருங்க முடியாத மதம்பட்ட நிலைமைபோல இன்னாய் பெரும! என்று ஒளிவின்றிப் பேசுகிறாள்.

இப்படியே இன்னொரு பாட்டில் ஒரு அற்புதமான உவமை வருகிறது. தீயை உண்டாக்க அக்கால மக்கள் தீக்கடை கோலைக் கடைவார்கள். தீவேண்டாத நேரங்களில் அதனை வீட்டுக் கூறையில் செருகிவைப்பார்கள். அதியனுக்கு அத் தீக்கடைகோல் எப்படி உவமையாகிறது பாருங்கள்.

> ............நெடுமானஞ்சி
> இல்லிறைச் செரீஇய ஞெலிகோல் போலத்
> தோன்றா திருக்கவும் வல்லன் மற்றதன்
> கான்றுபடு கனையெரி போலத்
> தோன்றவும் வல்லன்தான் தோன்றுங் காலே.

இப்படி வீரருள் வீரராய் நின்ற மன்னன் விழுப்புண்பட்டு வீரசுவர்க்கமடைந்தபோது ஔவை மனமுருகிப் பாடிய பாடல் மிகப் புகழ்வாய்ந்ததாகும். அவன் சிறிய கள் பெற்றால் எனக்கே தருவான். பெரிய கள் பெற்றால் யான் பாடத் தான் மகிழ்ந் துண்பான். எலும்பொடு தடிபடுவழியெல்லாம் எனக்கீந்து அம்பொடு வேல் நுழைவழியெல்லாம் தான் நிற்பான். அவன் மார்பில் விழுந்த வேல் புலவோரின் நாவையன்றோ துளையிட்டது. இனிப் பாடுவோரும் இல்லை. பாடுவோர்க்கிரங்கி ஈவோரும் இல்லை, என்று கையறுநிலை பாடினாள்.

இன்னும் ஔவை அந்தக்கால ஆடவர் பெண்டிர் இயல்புகளை – வீரம் அவர்களின் விழியாக விளங்கிய மாண்பைப் பல பாடல்களில் காட்டியுள்ளார்.

**காக்கைப் பாடினியார் நச்செள்ளையார்**

குறுந்தொகையில் 210ம் பாட்டில் காக்கையைச் சிறப்பித்துப் பாடின இவரைக் காக்கைப்பாடினி – என்ற அடைமொழியால் சிறப்பித்தனர். இயற்பெயர் நச்செள்ளை

என்பதாகும். தலைவனது வருகையை — காக்கை கரைந்து கூறிற்று. அதனால் தலைவி மனந்தேறி நின்றாள். அக்காக்கைக்கு நள்ளியின் கானத்து ஆக்கள் தந்த நெய்யோடு — தொண்டியில் விளைந்த வெண்ணெல் அரிசிமுழுவதையும் சோறாக்கிக் கலந்து பல கலங்களில் இட்டாலும் தகுந்த கைம்மாறாக அது ஆகாது என்கிறாள் தோழி. 'விருந்து வரக்கரைந்த காக்கையின் பலியை' இப்படிச் சிறப்பித்த இவருக்கு இவ்வடைமொழி மிக்க பொருத்தம்தானே.

புறநானூற்றில் இவர் பாடிய பாடல் அக்காலத் தாய்மார்களின் உறுதிவாய்ந்த உள்ளத்தைக் காட்டுவதாக இருக்கிறது. நரம்பெழுந்துகாட்டும் வற்றிய தோள் கொண்ட மூதாட்டியொருத்தியின் மகன் களம் சென்று வீரம் விளைத்து விழுப்புண் பெற்று மாண்டான். தன்மகன் கிடக்கும் களத்திற்குவந்து அவனுடலைக் கண்டு பெருமையால் பூரித்து நின்றாள். அவ் வீரனைப் பெற்றவள் என்ற செருக்கை அவள் முகம் காட்டியது.

படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே

என்று அம்மூதாட்டியைக் காட்டினாள் நச் செள்ளையார். இப் புலவர் பெருமாட்டி ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்ற சேரமா மன்னனைப் புகழ்ந்து பத்துப் பாடல்கள் பாடியுள்ளாள். அவை பதிற்றுப் பத்தில் ஆறும் பத்தாக அமைந்துள்ளன. முப்பத்தெட்டியாண்டு அரசு வீற்றிருந்த சேரலாதன் இவ்வம்மைக்குப் பாடல்களின் பரிசாக கலனணிய ஒன்பது காபொன்னும் நூறாயிரங் காணமும் கொடுத்துத் தன்னருகே யமரும் பெருமையையும் கொடுத்தான்.

சேரலாதனின் பெருமையை செள்ளையார் காட்டும் வகைக்கு ஒருபாடலை எடுத்துக் காண்போம், ஒருசமயம் சேரலாதன் பிறபெண்களைத் தழுவித் துணங்கையாடிவிட்டு வந்தான். அதனால் ஊடல் கொண்டாள் அரசமாதேவி. தன் கையிலிருந்த சிறிய செங்குவளைப் பூவை அரசனை நோக்கியெறியத் தலைப்பட்டாள். அந்தப் பூவையும் ஊடலிலிருந்த பூவையையும் காக்க வேண்டி கொடுப்பதற் காகக் கவிழ்தலையன்றி ஒருபோதும் பிற ரிடம் யாசிக்க மலர்ந்தறியாத மன்னன்கை நீண்டது. மனமிரங்காத மன்னனின் துணைவி சற்றே சினந்தவளாக நீ யெமக்கு யாரோ — என்று கூறி அகன்றாள்.

நச்செள்ளையார் அக்காட்சியைப் படம் பிடித்துவிட்டார்.

நல்லமர்க் கடந்தநின் செல்லுறழ் தடக்கை
இரப்போர்க்குக் கவித லல்லதை யிரைஇய
மலர்பறி யாவெனக் கேட்டிகு மினியே
.......................................................
நின்
எறிய ரோக்கிய சிறுசெங் குவளை
ஈயென விரப்பவு மொல்லா ணீயெமக்
கியாரை யேர்வவெனப் பெயர்வோள்

இந்த ஆறும்பத்தில் இவர் பாடிய வடுவடு நுண்ணயிர், சிறுசெங்குவளை, குண்டுகண்ண கழி, நில்லாத்தானை, துஞ்சும்பந்தர், வேந்து மெய்ம்மறந்த வாழ்ச்சி, சில்வளைவிறலி, ஏவிளங்குதடக்கை, மாகூர்த்திங்கள், மரம் படுதீங்கனி என்ற பத்துப் பாடல்களும் மிக அற்புதமானவை. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் 'வந்தெழிலாகத்துச் சான்றோர் மெய்ம்மறை' யென்றும் 'உலகந்தாங்கிய மேம்படு கற்பின் வில்லோர் மெய்ம்மறை' — என்றும் எடுத்துப் பாராட்டுகிறார்.

இப்படியாகச் செய்ந்நன்றி பாராட்டிய இப்புலவர்களால் அப்புரவலர்கள் இன்றும் நம்மிடையே வாழ்கிறார்கள். தம்மை வாழ வைத்த வள்ளல்களை வாழவைத்த இப்புலவர் பெருமக்களை எப்படி வாழ்த்துவது.

இன்னும் எட்டுத்தொகை காட்டும் பெண்பாற் புலவர் வரிசை நீண்டுகொண்டே செல்லும். சுவைக்கும் வழியை மட்டும் காட்டினேன். இனி அச்செந்தமிழ்ப் பெரு மாட்டிகளின் பணியைச் சுவைப்பது நும் பொறுப்பே. காலத்தால் அழியாக் கவிதை களைப் படைத்த இப்பெருமாட்டிகளுக்கு நம் உள்ளமொன்றிய நன்றியைப் படைத்துப் பெருமையுறுவோம்.

## தமிழில் மறுமலர்ச்சி

# சிறுகதை

திரு. அகிலன்

[சமுதாய மாற்றங்களுக்குத்தக இலக்கியங்களும் மாற்ற முற்றுப் புது வடிவு பெறும் என்ற நியதிக்கொப்ப இலக்கியத்துறையில் சிறுகதைகள் கிளைத்த வரலாற்றை இக்கட்டுரைக்கண் பேச வரும் ஆசிரியர், சிறு கதைகளுக்கு அமையவேண்டிய வரையறைகளைச் சுட்டி, அதன் இலக் கணம் விளக்கி, சிறுகதை இலக்கணம் அறிவது மட்டுமே அவற்றைப் படைக்கப் போதுமானதாகாது என்பதை விதந்து, செய்யுட்கும் சிறு கதைக்கும் இடைப்பட்ட தொடர்பினைச் சுட்டி, தமிழில் சிறுகதை வளர்ந் தமைந்து மாறுபட்ட இனிய வரலாற்றை ஆழமாகமதிப்பிட்டு, தமிழ்ச் சிறுகதை உலகில் புதிய வண்ணங்கள் தோற்றி வரலாற்றில் இடம் பிடித்துக் கொண்ட சில பெருமக்கள் மேற்கொண்ட போக்கினைச் சான்று காட்டி விளக்கி, சிறுகதை இலக்கியத்தின் எதிர்காலம் பற்றிய தம் எண்ணம் விதந்து இக்கட்டுரையை நிறைவிக்கிறார்]

அறிவியல் துறையின் வளர்ச்சியாலும், தொழில் துறையின் முன்னேற்றத்தாலும் உலகெங்கிலும் வேகம் நிறைந்த மாறுதல்கள் ஏற்பட்டு வருகின்றன. இந்த மாறுதல்களால், கல்வியும், செல்வமும், மனித உரிமைகளும் ஒரு சிலருக்கே என்றிருந்த பழங்காலத்து நிலை போய்விட்டது. முடியாட்சி மறைந்து உலகெங்கிலும் குடியாட்சி மலர்ந்து வருகிறது. இதனால் ஏற்படும் மாற்றங்களுக்கு இலக்கியமும், உட்படுவது இயல்பல்லவா? இலக்கியப் படைப்புக்குச் செய்யுளே முதன்மையான கருவி என்ற நெடுங்காலத்து மரபிலும் மாறுதல் ஏற்பட்டுச் செய்யுளின் இடத்துக்கு உரை நடை வரத் தொடங்கியது. நமக்கு முன் இரண்டு மூன்று நூற்றாண்டுகட்கு முன்பே மேலை நாடுகளில் உரைநடை வேரூன்றி விட்டதென்றாலும், 18-ம் நூற்றாண்டிலேயே அது தமிழ் நாட்டில் புத்துயிர் பெற்றதென்று கூறலாம். ஏற்கனவே சங்ககாலம் முதல் உரைநடை இங்கு செய்யுளுக்கு விளக்கவுரை கூறவும், செய்யுளுக்கு இடையே தொடர்புக்காகவும் கல்வெட்டுகளுக்காகவும் பயன்படுத்தப்பட்டு வந்ததென்றாலும், மேலை நாடுகளின் போக்கையொட்டி அதைப் படைப்பிலக்கியத்துக்குப் (Creative writing) பயன்படுத்தியவர் வீரமாமுனிவர் ஆவார். அவர் எழுதிய 'பரமார்த்த குருகதை' என்ற அங்கதச் சுவைமிக்க கதையே, தமிழ் உரை நடையில் உருவாக்கப்பட்ட முதற்கதை என்றும் கூறலாம்.

நெடுங்காலமாகவே உலகில் கதைகள் சொல்லப்பட்டு வந்திருக்கின்றன என்போர், எடுத்துக் காட்டுக்களாக பைபிளில் வரும்

ஏசுநாதரின் வாய்மொழிக் கதைகள், புத்தரின் ஜாதகக் கதைகள், பஞ்ச தந்திரக் கதைகள் முதலியவற்றைக் குறிப்பிடு கிருர்கள். இவை அறவுரைகளைப் புகட்டு வதற்கென்றே தோன்றிய கதைகள். சிறு கதைகளுக்கு இவற்றையே நாம் முன்னேடி களாய்க் கருதலாம் என்ருல், நம் சங்க காலத்துச் சிறு செய்யுட்கள் சிலவற்றில், இவற்றினும் மேம்பட்ட கதைத் தன்மை நிறைந்த கதைக் கருவூலங்கள் மிளிர்வதைக் காணமுடியும். நேரடியான நீதி போதனை இல்லாத, வாழ்க்கையின் அடிப்படை உணர்வுகளை அற்புதமான முறையில் வெளி யிடும் கலைக் காட்சிகள் சில, அகம், புறம், கலித்தொகை போன்ற நம் செய்யுட்களில் விரவிக்கிடக்கின்றன. 'சிறுகதை' என் று நாம் இன்று அழைக்கும் உருவ அமைப்பில் அது இல்லாவிட்டாலும், சிறு கதைக்கான உருவத்தின் அடிப்படைப் பண்பு, உத்தியின் அடிப்படைப் பண்பு இரண்டும் அதில் உள்ளன.

## சிறுகதை இலக்கணம்

வழக்கமாக நாம் அறிந்த கலித் தொகைக் காட்சி யொன்றை எடுத்துக் காட்டாக இங்கு கூறுவதற்கு முன்பாக சிறு கதைக்குள்ள இலக்கணத்தைக் கவனிப் போம். 'தனியாகச் சிறுகதைக் கென் று, எந்த இலக்கணமும் கிடையாது; வரை முறை கிடையாது; பண்புகள் கிடையா' என்றெல்லாம் சிலர் சொல்வார்கள், ஆனலும், அவை நடைமுறையில் உல கெங்கும் இருக்கவே செய்கின்றன. இலக்கண வரம்புகளுக்கு உட்பட்டு எழுது வோரும் உண்டு; உட்படாமல் சொந்த வரம்புகளை மேற்கொள்வோரும் உண்டு; வரம்புகளைத் தெரிந்து கொள்ளாமல் எழுது வோரும் உண்டு; என்ருலும் சிறுகதைக் கெனத் தனிப் பண்புகளோ, இலக்கணமோ இல்லை யென்று கூறிவிட முடியாது. சிறு கதைக்கென நூற்றைம்பது ஆண்டு காலப் புதிய மரபு ஒன்று தோன்றி விட்டது.

இலக்கியத் தரமுள்ள உரைநடைச் சிறுகதைகள் 19ஆம் நூற்ருண்டின் தொடக் கத்தில், வாஷிங்டன் இர்விங், எட்கார் ஆலன்போ போன்றவர்களால், அமெரிக்கா விலும், துர்க்கனேவ், செக்காவ், முதலியோ ரால் ருஷ்யாவிலும் மாப்பஸான், போன் ருேரால் பிரான்ஸிலும் எழுதப்பட்டு விட்டன. இவ்வாறு உலக இலக்கியத் துக்குச் சிறந்த சிறு கதைகள் கிடைத்ததை யடுத்து, 19-ஆம் நூற்ருண்டின் பிற்பகுதி யிலும் 20-ஆம் நூற்ருண்டின் முற்பகுதி யிலும், சிறு கதையின் பொதுவான தன் மைகள் குறித்து, ஆய்வுக் கருத்துக்கள் வெளிவந்தன. அதுவரை வெளிவந்த சிறு கதைகளில் காணப்பட்ட பொதுவான பண்புகளை உற்று நோக்கிச் சில வரைமுறை களை ஆய்வாளர்கள் சுட்டிக்காட்டினர்கள்.

சிறு கதை என்ருல், அது அளவில் சிறிதாக இருக்கவேண்டும். தனிமனித வாழ்க்கை அல்லது சமுதாய வாழ்க்கையின் ஒரு குறிப்பிட்ட போக்கை அது சுவையோடு பிரதிபலிக்க வேண்டும். கதையின் கருப் பொருள் வாழ்க்கையோடு தொடர்பு கொண்ட எதுவாக வேண்டுமானலும் இருக் கலாம். ஒரு கதாபாத்திரத்தின் இயல்பைக் கூறுவதாகவோ, ஆழமான மனித உணர் வுகளில் ஒன்றை வெளிப்படுத்துவதாகவோ, வாழ்க்கையின் ஒரு நிகழ்ச்சியைச் சுவைபட எடுத்துரைப்பதாகவோ, வாழ்க்கையின் ஒரு சிக்கலை அழகாக அல்லது அழுத்தமாக எடுத்துக் காட்டுவதாகவோ இருக்கலாம். ஆனல் ஒரு மனிதர், அல்லது ஓர் உணர்வு, அல்லது ஒரு நிகழ்ச்சி, அல்லது ஒரு சிக்கல் தான் அதில் தலைதூக்கி நிற்கவேண்டும். நாவலின் சுருக்கம் சிறுகதை ஆகாது.

மேலும் அளவுக்கதிகமாக கதை மாந்தருக்குச் சிறு கதையில் இடமில்லை. பல நிகழ்ச்சிகளும், பல்வேறு நிலைக் களன்களும் சிறுகதைக்கு அவசியமற்றவை. விரிவான பாத்திர வர்ணனை சூழ்நிலை வர்ணனை இவற்றுக்கு நாவல் இடம் கொடுக்குமே தவிரச் சிறுகதை இடம் தராது. குறைவான சொற்களால் – ஏற்ற சொற்களால் அங்கங்கே ஒவ்வொன்றையும் சுட்டிக்காட்ட வேண்டுமே தவிர, எல்லாவற்றையும் விளக்கக்கூடாது. பாத்திரங்களின் உரையாடலிலும், சொற்செட்டு மிகமிக அவசியமானது. அளவில் கதை சிறிதாக இருந்தாலும், கட்டுக்கோப்புக் குலையாத ஒரு முழுமை அதற்கு வேண்டும். இறுக்கமான ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்புள்ள செறிவு வேண்டும் சிறு கதைக்கு. கதை நம்பக்கூடியதாக, உண்மையைப்போன்ற ஒரு தோற்றமுடையதாக அமையவேண்டும். சிறுகதையைப் பற்றி எழுதுவோர், 'சிறுகதை இலக்கணம் இது தான்' என்று வெளிப்படையாகக் கூறிவிட்டாலும், அவர்கள் கூறியுள்ள புறக்கட்டுப் பாட்டு விதிகள் இவற்றை யொட்டியே இருக்கின்றன.

### இலக்கியமும் இலக்கணமும்

இலக்கணத்தில் முழுத்தேர்ச்சி பெற்று விட்டால் மட்டிலும் எப்படி இலக்கிய நயமுள்ள கவிதையை இயற்றிவிட முடியாதோ அதேபோல்தான், சிறு கதையையும், வரம்புகளை அறிவதால் மட்டும் எழுதிவிட முடியாது. சிறு கதைக்கான புற ஒழுங்குவிதிகள் இவை. ஆனால் பிறவகை இலக்கியப் படைப்பைப் போலவே சிறுகதையும் உயிர்த் துடிப்புள்ளது. எந்த உணர்ச்சியை அல்லது கருத்தை அது தன்னகத்தே கொண்டிருக்கிறதோ அதைப் படிப்பவரின் நெஞ்சில் மின்வெட்டைப்போல் பாய்ச்சும் ஆற்றல் சிறுகதைக்கு வேண்டும். படித்து முடித்தவுடன் படித்தவர் உள்ளத்தில் எது ஊற்றுப் பெருக்கைப்போல் உணர்ச்சிகளைப் பூத்துச் சொரிகிறதோ அதுவே சிறந்த சிறுகதை என்று கொள்ளலாம். கதைக்குப் பின்னே உள்ள கதாசிரியன் கலை ஆற்றல், கற்பனைத் திறன், சொல்லாட்சி, அவர் மறைமுகமாய்க் கூறும் செய்தி இவ்வளவும் இலக்கண வரம்புகளை விடவும் மிகமிக முக்கியமானவை. சிறந்த சிறு கதாசிரியர்கள் பலரும் எந்த இலக்கண வரம்புகளையும் நினைத்துக் கொண்டு, தம் கதைகளை எழுதுவதில்லை. பெரும்பாலும் அவை தாமாகவே அமைந்து விடுகின்றன. வேறு சிலர் தெரிந்துகொண்ட வரம்புகளை மீறிச் சிறந்த படைப்புக்களை உருவாக்கி விடுகிறார்கள்.

இப்போது, மீண்டும் குறிஞ்சிக் கலியில் கபிலர் பாடியதாகக் கூறப்படும் 'கள்வன் மகன்' என்ற சிறு செய்யுளுக்கு வருவோம். தலைவி, தலைவன், தாய் ஆகிய மூன்றே பாத்திரங்கள். தலைவி நிலையில் தம்மை இருத்திக்கொண்டு, 'தோழி'; என்று படிப்போரை கூவி அழைத்துக் கதை சொல்கிறார் கபிலர். மூன்றே பாத்திரங்கள் அங்கு செயல்படுகின்றன. தாகத்துக்கு நீர்பருக வரும் சாக்கில் தலைவியை அவள் வீட்டில் காண வழிப் போக்கன்போல் வருகிறான் தலைவன். தலைவி நீர் ஊற்றும்போது, தலைவன் அவள் கரம் பற்ற முனையவே, தலைவியின் பெண்மை விழித்துக்கொள்ள அவள் கூச்சலிடுகிறாள். தாய் பதறிக்கொண்டு ஓடி வருகிறாள். வருவதைக் கண்டவுடன், தன் தலைவனைக் காட்டிக் கொடுத்துவிடக் கூடாதே என்பதற்காக 'இவனுக்கு விக்கிக்கொண்டு விட்டது' என்று தானே ஒரு பொய்யைச் சொன்னதுமல்லாமல், தலைவனைப்போய், 'கள்வன் மகன்' என்று அன்பு பொங்க ஏசுகிறாள் தலைவி. இவ்வளவும் நொடிப்பொழுதில் நடந்து விடுகின்றன. மூன்றே பாத்திரங்கள்; குறிப்பிட்ட ஒரே இடம்; ஒரே உணர்ச்சி; அதையொட்டிய நம்பக்கூடிய

சின்னஞ்சிறு நிகழ்ச்சிகள். நினைக்க நினைக்க நம் நெஞ்சில் வானவில்லாய் ஏழு வண்ணங்களில் பரந்து விரிகிறது இந்தச் சங்ககாலத்துச் சிறுகதை. எவ்வளவு இறுக்கம், எவ்வளவு சொற்செட்டு, எவ்வளவு உயிராற்றல் அந்தச் செய்யுளுக்கு! எந்த நீதி நெறியையும் அது புகட்ட வில்லை. இயற்கையான உணர்ச்சிக்கும் பெண்மையின் பண்புக்கும் மின்வெட்டும் நேரத்தில் நடக்கும் போராட்டத்தை அது சித்தரிக்கிறது. என்றென்றும் மனித வாழ்க்கையில் நிலைத்திருக்கும் ஓர் அழகான உணர்ச்சியை அமர ஓவியமாகவல்லவோ தீட்டிவிட்டார் நம் சங்க காலத்துச் சிறுகதை ஆசிரியர் கபிலர்.

### செய்யுளும் சிறுகதையும்

எனினும், இதுவரை எடுத்துக்காட்டிய ஒப்புவமைகளைக் கொண்டே, நாம் சங்கச் செய்யுளையும், இன்றையச் சிறுகதையையும் ஒன்றெனக் கூறிவிட முடியாது. கதையின் உள்ளடக்கத்திலும் உருவத்திலும், அடிப்படைப் பண்புகளில் மட்டும் ஓரளவு ஒற்றுமை இருந்தாலும், இரண்டுமே வெவ்வேறு காலங்களின் இலக்கிய வடிவங்கள். அடிப்படை வேறுபாடுகளும் உள்ளன. ஒன்று செய்யுளால் ஆக்கப்பட்டது; மற்றொன்று உரைநடையால் ஆக்கப்படுவது. ஒன்று நாம் உலகத்தோடு இந்த அளவுக்கு நெருங்கிய தொடர்பு கொள்ளாத காலத்தில் உருவானது; மற்றொன்று உலகத்தின் பிற மொழித் தொடர்பு நமக்கு ஆங்கிலத்தின் வழியே கிடைத்த போது, அதை ஒட்டி வளரத் தொடங்கியது; மன்னராட்சிக் காலத்தின் இலக்கியம் சங்கச் செய்யுள், மக்கள் எழுச்சிக் காலம் நமக்குத் தந்த இலக்கியம் இன்றைய சிறுகதை.

### தமிழில் தோற்றம்

*18*–ஆம் நூற்றாண்டில் வீரமாமுனிவர் எழுதிய 'பரமார்த்த குரு கதை' யை முதல் உரைநடைக்கதை என்று கூறலாமென்றாலும், *1910–20*–ல் வ. வே. சு. ஐயர் எழுதிய 'குளத்தங்கரை அரசமரம்', 'மங்கையர்க்கரசியின் காதல்' போன்ற சிறுகதைகளே தமிழில் இலக்கிய உணர்வோடு செய்யப்பெற்ற முதல் முயற்சிகளாகும். வ. வே. சு. ஐயர் தீவிரமான நாட்டுப்பற்றும், மொழிப்பற்றும் கொண்ட பன்மொழிக் கலைஞர். திருக்குறளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்ததோடல்லாது, கம்பரின் காவியச் சிறப்பையும் ஆங்கிலத்தில் அறிமுகம் செய்திருக்கிறார்.

தமிழ் இலக்கியத்தின் உயர்வை உலகுக்கு எடுத்துக்காட்டமுயன்ற அவர், அவ்வாறே பிற நாட்டு மொழிகளில் படைக்கப்பட்டு வந்த புத்திலக்கிய வடிவங்களின் ஒன்றான சிறு கதையையும் தமிழுக்குக் கொண்டு வந்தார். 'சிறுகதை சுவை மிக்கதாகவும், பெருநோக்கம் கொண்டதாகவும் இருக்க வேண்டும் என்ற இலட்சிய நோக்குடையவர் இவர். இவர் சிறுகதைகளில் முக்கியமானது, 'குளத்தங்கரை அரசமரம்' தமிழ் நாட்டு மண்ணின் மணம் இதில் கமழ்கிறது; தமிழ் நாட்டு மக்களின் வாழ்க்கைப் பிரச்சனையை இது கதைக் கருவாகக் கொண்டிருக்கிறது.

வ. வே. சு. ஐயருக்கு முன்னும், அவர் காலத்திலும் வேறு சிலர் கதைகள் எழுதியிருக்கின்றார்களெனினும், சிறுகதை இலக்கியத்துக்குரிய பண்புகள், இவர் கதைகளில் தாம் மிகுதியாகக் காணப்படுகின்றன. தம் காலத்தவரிடையே இவர் தனிச்சிறப்போடு விளங்குகிறார், 'விநோத ரச மஞ்சரி' எழுதிய வீராசாமிச் செட்டியார், 'குட்டிக் கதைகள்' எழுதிய மாதவையா,

இன்னும் சுப்பிரமணிய பாரதியார், போன்றவர்களும் இத்துறையில் முயற்சிகள் செய்திருக்கிறார்கள். ஆயினும் சிறுகதைக்குள்ள கலையுணர்வை வ. வே. சு ஐயரின் கதைகளே உயிர்த்துடிப்போடு வெளிப்படுத்துகின்றன. உருவத்திலும், உள்ளடக்கத்திலும் ஓர் இலக்கியப்புதுமை அவர் கதைகளில் தென்படுகிறது.

## புத்தெழுச்சி

அடுத்து 1930-ஆம் ஆண்டை ஒட்டிய காலக்கட்டத்தையும், அதை ஒட்டித் தோன்றிய முப்பெரும் சிறந்த சிறுகதை ஆசிரியர்களையும் நாம் கவனிப்போம். தமிழ்ச் சிறுகதை இலக்கியம் வீறு கொண்டு புத்தெழுச்சியோடு வளர முற்பட்ட காலம் அது. 1930-ஆம் ஆண்டிலிருந்து 45 – 50 -ஆம் ஆண்டு வரையில் தமிழ் உரைநடை இலக்கியத்தில் சிறுகதையே தனி ஆட்சி செலுத்தியதென்று கூறலாம். நாட்டு விடுதலையை முதல் இலட்சியமாகக் கொண்டு நடத்தப்பட்ட அக்காலத்துப் பத்திரிகைகளுக்குத் தமிழ் இலக்கிய வளர்ச்சியும், அடுத்த இலட்சியமாக இருந்தது. அரசியல் விடுதலையை முதல் நோக்கமாகக் கொண்டிருந்த 'ஆனந்த விகடன்' பத்திகையில், கல்கி, ரா. கிருஷ்ணமூர்த்தி சிறுகதைகள் பலவற்றை எழுதிக் குவித்தார். இலக்கிய வளர்ச்சியை முதல் நோக்கமாகக் கொண்டிருந்த 'கலைமகள்' பத்திரிகையிலும், அரசியலை விட்டு இலக்கியத்துக் கென்று சிறிதுகாலம் நடத்தப்பட்ட 'மணிக்கொடி' பத்திரிகையிலும், புதுமைப்பித்தனும், கு. ப. ராஜகோபாலனும் தம் சிறுகதைகளை எழுதி வந்தார்கள். அதே சமயத்தில் இன்னும் பத்துப் பன்னிரண்டு எழுத்தாளர்கள், ஊக்கத்துடனும், உற்சாகத்தோடும் இத்துறையில் இறங்கினார்கள். இவர்களில் சிலர் தமிழோடு ஆங்கிலத்தையும் பயின்றவர்கள். வேறு சிலர் போதிய தமிழ்ப் பயிற்சியின்றி ஆங்கிலம் கற்றவர்கள்

ஆங்கிலத்தின் வழியே அவர்கள். முதன் முதலாகப் படித்த பிறநாட்டுச் சிறுகதைகள் பல அவர்கட்குப் பெரு வியப்பூட்டியிருக்க வேண்டும். நம் தொடக்க காலத்தில் புதுமைப் பித்தன், பிரஞ்சு மொழியில் சிறந்த சிறுகதை ஆசிரியரான மாப்பஸான் கதைகள் சிலவற்றை மொழி பெயர்த்திருக்கிறார்; தழுவியும் எழுதியிருக்கிறார். பின்னர்த் தமிழிலும் அத்தகைய படைப்பு முயற்சியைச் செய்து பார்க்க வேண்டும் என்ற ஆவலால் உந்தப்பட்டு, அவர் தம் சொந்தக் கதைகளை எழுதியிருக்க வேண்டும். அவர் காலம் வரையில் மேலை நாடுகளில் சிறு கதைத் துறையில் செய்யப்பட்டு வந்த பல்வேறு சோதனைகளையும் புதுமைப்பித்தன் இங்கு தமிழில் செய்து வெற்றி பெற்றிருக்கிறார் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

## புதுமைப்பித்தன்

தமிழ் இலக்கிய மரபிலும், புதுமைப் பித்தன் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவர் என்பது அவருடைய சிறு கதைகள் பலவற்றில் புலப்படுகின்றது. உலக நாடுகள் அளித்த புற இலக்கண வரம்புகளை அவர் பின்பற்றினாரே தவிர, கதையின் உள்ளடக்கத்துக்கும் சரி, தத்துவத்துக்கும் சரி அவர் தமிழர் வாழ்க்கையையும், வரலாற்றையும், மரபையும், நெறிமுறைகளையும் பெருமளவில் பயன்படுத்திக்கொண்டார். அவருடைய சிறுகதைகள் சிலவற்றுக்குக் கருவாக நம் இலக்கியங்களும் பழங் கதைகளும் பயன்பட்டிருக்கின்றன. அவர் காலத்துத் தமிழ்நாட்டு வாழ்க்கையின் போக்கும், அதன் முரண்பாடுகளும் துன்பங்களும் விரக்தியும் அவர் கதைகளில் அழுத்தமாகப் படிந்திருக்கின்றன. இன்னும் கூறப்போனால் அவரை ஈன்றெடுத்த திருநெல்வேலி மாவட்டத்து மண்ணின்

மணம், மனிதர்கள், அவர் தம் பேச்சு வழக்கு இவற்றையும் அவர் மறக்கவில்லை. தமிழுக்கு முற்றிலும் புதிதாக இருந்த ஓர் உரைநடை இலக்கிய அமைப்பைக் கொண்டு, மிகக் குறுகிய காலத்தில் பெரும் சாதனையை அவர் புரிந்திருக்கிறார் என்பது நம்மை வியக்க வைக்கும் உண்மையாகும். அவர் சாதனைகளில் பல அவர் செய்து பார்த்த சோதனைகளாகவே அமைந்துள்ளன.

புதிய புதிய உத்திகளைக் கையாண்டு, உட்பொருளுக் கேற்றபடி, புதுப்புது நடைகளிலும், உருவங்களிலும் சிறு கதைகளைப் படைத்தவர் புதுமைப்பித்தன். பொழுது போக்குக்காக மேலோட்டமாய்க் கதை படித்துப் பழகிய பலருக்குப் புதுமைப் பித்தனின் கதைகளைப் புரிந்து கொள்வது சிரமம். 'எழுத்தாளர்களுக்கு அவர் எழுத்தாளர்' என்று கூறுவது முற்றிலும் பொருந்தும். சிற்பியின் நரகம், சாப விமோசனம், பொன்னகரம், காஞ்சனை போன்ற பல அற்புதமான கதைகளை அவர் படைத்திருக்கிறார். உலகத்தின் சிறந்த சிறுகதைகளோடு ஒப்பிடத்தக்க சில சிறு கதைகளை அவர் அப்போதே படைத்திருக்கிறார் என்பது, இந்த நூற்றாண்டுத் தமிழ் உரைநடை இலக்கியத்துக்குப் பெருமை தரும் செய்தியாகும்.

## கு. ப. ராஜகோபாலன்

புதுமைப்பித்தன் சிறுகதையின் உருவம், உள்ளடக்கம், எழுத்து நடை முதலியவற்றில் பல்வேறு சோதனைகளைச் செய்து பார்த்தவர் என்றால், கு. ப. ராஜகோபாலன் தமக்கென்று ஒரு தனிப் போக்கை வகுத்துக் கொண்டு, அந்த போக்கிலேயே கலை அழகுமிளிரும் சிறு கதைகளை எழுதியர் எனலாம். பெரும் பாலும் ஆண் – பெண் உறவுகளால் ஏற்படும் இன்ப துன்ப உணர்வுகளைப் பல்வேறு கோணங்களில் உயிர்ச் சித்திரங்களாகத் தீட்டியிருப்பவர் இவர். மனிதர்களின் நுணுக்கமான உள்ளுணர்வுகளை எழுத்தில் உயிர்த்துடிப்போடு கொண்டு வருவது என்பது, பலருக்கு எளிதில் கைவராத ஒரு கலை. அந்தக் கலையில் கைதேர்ந்த வல்லுநர் கு. ப. ராஜகோபாலன்.

படிப்போருக்கு மிகவும் எளியமுறையில் புரியும் இனிய கதைகள் கு. ப. ராஜகோபாலனின் கதைகள். ஆனால், இந்த எளிமைக்கும் இனிமைக்கும் பின்னே உள்ள ஆழத்தை அவர் காலத்திலேயே மற்றவர்களால் எட்டிவிட முடியவில்லை. தமிழக வாழ்க்கையின் அக உணர்வுப் போராட்டங்களுக்கு முதன்மை கொடுத்த கலைஞர் அவர். மருத்துவ மனையில் கணவன் ஆபத்தான நிலையில் அனுமதிக்கப்பட்டிருப்பதாக, மனைவி ஒருத்திக்கு ஒரு தந்தி வருகிறது. அவள் கணவனைச் சென்று காணும் வரையில் அவளிடம் ஏற்படும் இதயத் துடிப்புத்தான் 'விடியுமா?' என்ற சிறுகதை. படிப்போரை மெய்சிலிர்க்கச் செய்யும் ஒரு மனைவியின் இதயச் சூறாவளியை இந்த நனவோடை உத்திகொண்ட சிறுகதையில் நாம் காணுகிறோம்.

நெறி தவறியதால் பிறந்த குழந்தையிடம், தாய் ஒருத்தி கொள்ளும் பாச வெறியைச் சொல்லுகிறது, 'தாய்' என்ற மற்றொருகதை. பிறந்த குழந்தையைக் கொல்வதைவிட வாழ்நாள் முழுவதும் அதற்காகத்தான் பழிபாவத்தைப் பகிரங்கமாகச் சுமப்பதே மேல் என்கிறாள் இந்தத் தாய். புதுமைப்பித்தனிடமிருந்து முற்றிலும் மாறுபட்ட கு. ப. ராஜகோபாலனும், தமிழ்ச் சிறுகதை இலக்கியத்துக்கு அவரைப் போலவே சிறந்த பணிபுரிந்திருக்கிறார். பல வேளைகளில் சாதாரண வாசகர்களுக்கு எட்டாத உயரத்துக்குப் போய்விடுகிறார் புதுமைப்பித்தன். கு. ப. ரா. தம்மைப் படிப்போர் உள்ளத்தைக் கரைத்துவிடுகிறார்.

**கல்கி, ரா. கிருஷ்ணமூர்த்தி**

மற்ற இருவர் போக்கினின்றும் மாறுபட்டு, சிறுகதையில் கதைப் பகுதிக்கு–அதன் உள்ளடக்கத்துக்கு முதன்மை கொடுத்துச் சிறுகதைகளை எழுதியவர் கல்கி, ரா. கிருஷ்ணமூர்த்தி. சிறுகதைக்குள் ஒரு முழுக் கதை இருந்தாலும் இருக்கலாம். புதுமைப்பித்தனின் கதைகள் சிலவற்றில் கதையைக் கண்டுபிடிப்பது சிரமம்.

கு. ப. ராவின் சிறுகதைகளிலோ, மனித உணர்ச்சிகள் ஒன்றுக்கே மிகுதியான அழுத்தமிருக்கும். கல்கியின் கதைகள், தாம் சொல்லப்போகும் 'கதை' களுக்கு முதலிடம் அளிப்பவை. மனிதர்களையும், நிகழ்ச்சிகளையும் கொண்டு, தமது அழகான எளிய நடையால், சுவையோடு கதை சொல்பவர் கல்கி. உருவத்தைப்பொருத்த வரையில் மற்ற இருவரிடமுள்ள நெருக்கம் இவரிடமில்லை; நெகிழ்ச்சி இருக்கும் இவர் கதைகளில். இவருடைய பிற்காலச் சிறு கதைகள் சில நாவல்களின் சுருக்கங்கள் போலவும் தோன்றக்கூடும். கதை அம்சத் துக்கும் உள்ளடக்கத்துக்கும் இவர் ஏற்றம் கொடுத்திருந்தாலும் உருவத்தின் கலை யழகும் இவரது பல கதைகளில் பளிச்சிடு கின்றன. தங்களுக்குமட்டும் புரிந்தால் போதும் எனச் சிலர் சிறுகதை எழுதிக் கொண்டிருந்த காலத்தில், தமிழ்ப் பெரு மக்களின் கூட்டத்துக்குச் சிறுகதை வழங்கிய பெருமை இவருக்கேயுரியது. தமக்குள்ளே வேறு சில சிறுகதை எழுத் தாளர்கள் உலகத்தைக் கண்டபோது (introverts) வெளி உலகச் சமுதாய நிகழ்ச்சிகளோடு தம்மைப் பிணைத்துக் கொண்ட (extrovert) கதைக் கலைஞர் 'கல்கி.' இவர் கதைகளின் உள்ளடக்கம் மிக விரிவானது; பல வேறுபட்ட வாழ்க்கைப் பிரச்சினைகளைப்பற்றி, இவர் எழுதியுள்ளார். இவர்காலத்து அரசியல் விடுதலைப் போராட்டம், சமூகக் கொடுமை வெளி வேடம், பொருளாதார ஏற்றத்தாழ்வு, பழக்கவழக்கங்கள் போன்ற பல்வகையான வாழ்க்கைப் பிரச்சினைகளை இவர் தம் கதைகளில் வெளியிட்டிருக்கிறார். இருந்தும் கூட வெளிப்படையாகப் பிரச்சாரக் கருவி களாக இவர் கதைகள் மாறிவிடுவதில்லை. கலைக்கும், கருத்துக்கும் உள்ள உறவில், இவர் ஒன்றை ஒன்று மிஞ்சிவிடாதபடி கதைக் கலைஞராகவே இருந்திருக்கிறார். 'கல்கி' எழுதிய எல்லாக் கதைகளையுமே இலக்கியச் சிறப்புமிக்க கதைகள் என்று சொல்லமுடியாது; காலப்போக்கில் போனதுபோக காலத்தை வென்று நிற்கும் அற்புதமான படைப்புக்களையும், இவர் உருவாக்கி அளித்திருக்கிறார். பின்னர் நாவலாசிரியராக இவர் மாறிவிட்டாலும், சிறுகதை இலக்கிய வளர்ச்சிக்கு இவர் ஆற்றியிருக்கும் பணியை வரலாறு மறந்து விடாது.

*1930–50*–க்கு இடைப்பட்ட காலத்தைத் தமிழ் உரை நடை வளர்ச்சியில் சிறுகதை யின் ஆட்சிக்காலம் என்பது பொருந்தும். பத்திரிகைகளில் மட்டுமே சிறுகதைகள் வெளிவந்தன என்பதில்லை; பல்வேறு சிறு கதைத் தொகுப்புக்கள் நூல்களாகவும் அன்று வெளியிடப்பட்டன. சிறு கதைகளைச் சிறப்பாக எழுதியவர்கள் அன்று வேறு சிலர் இருந்திருக்கிறார்கள்; அவர்களில் தமி ழைவிட ஆங்கிலம் படித்தவர்களே மிகுந் திருந்தார்கள். தம் அனுபவத்தையும் உணர் வையும் கற்பனையையும் அவர்களில் பாதிப் பேர் தமிழில் ஆற்றலோடு வேளியிட முடி யாமல் குழம்பியிருப்பதையும் நம்மால் காண முடிகிறது. எனினும் சிறு கதைக் கலையைத் தமிழுக்கு வழங்கிய முன்னோடிகள் என்ற முறையில் அவர்களுக்கும் சிறுகதைக்கலை கடமைப் பட்டிருக்கிறது.

### அரசியல் சமூக இலக்கியங்களில் கதை

சிறுகதை தமிழ்நாட்டில் இருவகையான இயக்கங்கட்குச் சிலரால் பயன்படுத்தப் பட்டிருக்கிறது. அவர்களில் குறிப்பிடத் தக்கவர் இருவர். அன்னிய ஆட்சிக்கு எதிரான தேச விடுதலைப் போராட்டக் காலத்தில், இதை மதுவிலக்கு, தீண்டாமையொழிப்பு, கதர் இயக்கம், நாட்டுப்பற்று முதலிய நோக்கங்களுக்காக சி. ராஜகோபாலாச்சாரியார் பயன்படுத்தியுள்ளார். கருத்துக்களை வெளியிடுவதையே முதல் நோக்கமாகக்கொண்டு, அவரால் பல சிறு கதைகள் எழுதப்பட்டிருக்கின்றன. அவ்வாறே சமூக விடுதலை இயக்கத்துக்காக சி. என். அண்ணாதுரையும் தம் சிறுகதைகளை கருத்துக்கணைகளாக்கியிருக்கிறார். சாதி ஒழிப்பு, கைம்பெண் மறுமணம், கலப்பு மணம், சம்பிரதாயச் சடங்குகளின் மறுப்பு போன்றவை சி. என். அண்ணாதுரையின் சிறு கதைகளில் தலைதூக்கி நிற்கின்றன. சிறு கதைகளுக்குரிய உருவ அமைதியும் பிற பண்புகளும் உள்ள கதைகள் சிலவற்றையும், கருத்து வெளிப்படையாகத் தெரிவிக்கும் கதைகளை மிகுதியாகவும் இவ்விருவருமே மிகுதியாக எழுதியிருக்கிறார்கள். சமூக சீர்திருத்த இயக்கத்தோடு ஓரளவு தொடர்பு கொண்டிருந்த தனித்தமிழ் இயக்கத்தால், பொதுவான தமிழ் உரை நடையில் இந்த கால் நூற்றாண்டில் ஒரு மாற்றம் நிகழ்ந்திருக்கிறது. முப்பது நாற்பது ஆண்டுகட்கு முன்பு எழுத்தாளர்களால் எழுதப்பட்டு வந்த தமிழ் உரை நடைக்கும் இப்போது எழுதப்படும் நடைக்கும் உள்ளமாறுதலை ஒப்பிட்டுப் பார்த்தால், பல தமிழ்ச் சொற்கள் காலப் போக்கில் புத்துயிர் பெற்றுப் பழக்கத்துக்கு வந்திருப்பது நன்கு தெரியும்.

மாறுபட்ட அரசியல் சமூக இலக்கியங்களைச் சார்ந்த எழுத்தாளர்களால் தொடங்கப்பெற்ற 'கிராம ஊழியன்,' 'பொன்னி,' 'சாந்தி,' 'சரஸ்வதி,' போன்ற சிறு பத்திரிகைகளும் சிறுகதை இலக்கிய வளர்ச்சிக்குப் பெரிதும் தூண்டுதல் அளித்துள்ளன.

### காலமாறுதலில் சிறுகதை

1940-க்குப் பிறகு சிறுகதை எழுதத் தொடங்கிய இருபது இருபத்தைந்து எழுத்தாளர்கள் பல்வேறு பத்திரிகைகளில் எழுதிக்கொண்டிருந்தார்கள். இவர்களில் பலருடைய சிறுகதைகள் நூல்களாகவும் வெளியிடப்பட்டுள்ளன. சிறுகதையின் முதல் மூவரில் இருவர் 1950-க்குள் இறந்து விட்டதாலும், அவர்களிடம் ஒன்றாக எழுதி வந்தவர்களிடம் தொடக்க காலத்தில் தென்பட்ட ஊக்கமும் உழைப்பும் காணப்படாமையாலும், 'கல்கி' நாவல் எழுதுவதில் மூழ்கி விட்டதாலும்; இந்த அடுத்த தலைமுறை எழுத்தாளர்களே 40-50-ல் சிறுகதைகளை எழுதுவதில் தீவிரம் காட்டினர்.

சிறுகதைக் காலம் 1950க்குப்பின் நாவலின் காலமாக மாறியது. பத்திரிகைகள், சிறுகதைகளின் இடத்தைத் தொடர் கதைகளுக்கும், தொடர் நாவல்களுக்கும் பகிர்ந்தளிக்க முற்பட்டன. சிறுகதையில் தொடங்கிய சிலரின் கவனம் நாவலுக்குத் திரும்பியது.

அதை அடுத்து நாடெங்கிலும் தொழில் துறை வளர்ச்சியின் காரணமாக எழுந்த நன்மை தீமைகள் தமிழ்ப் பத்திரிகைகளையும் பாதிக்க முற்பட்டன. 'இண்டஸ்ட்ரி' எனப்படும், பெருந் தொழில் நிலைக்கு வாரப் பத்திரிகைகளும் தினப் பத்திரிகைகளும் வந்து விட்டன. சினிமாத் தொழிலுக்கும் பத்திரிகைத் தொழிலுக்கும் ஒரு மறைமுகமான உறவு வளர்ந்தது.

இலாப நோக்கு ஒன்றை மட்டுமே குறிக்கோளாகக் கொண்ட தொழில் கொள்கை, மக்களின் நலனைப் பெரும் அளவில் புறக்கணிக்கும் போக்கு, வாணிகப் போட்டி முதலியவை கொண்ட மாறுதல்கள் பத்திரிகை – புத்தக வெளியீட்டு உலகிலும் புகுந்தன.

இந்த மாறுதல்களால் பொதுவாக எழுத்தின் தரத்துக்கும், குறிப்பாகச் சிறு கதை வளர்ச்சிக்கும் குறிப்பிடத்தக்க அளவில் பாதிப்பு ஏற்பட்டிருக்கிறது. முன்பு சிறிய அளவில் நடத்தப்பட்டு வந்த பத்திரிகைகள் பெருந்தொழில்கள் என்ற நிலைக்கு வந்ததால். அரை குறைப்படிப்பும். அவசரக் கோலமும் கொண்ட பெருங் கூட்டமான வாசகர்களைத் தவருன முறையில் கவர்ந்து தங்கள் விற்பனையைப் பெருக்க வேண்டிய கட்டாயத்துக்கு அவை வந்துவிட்டன. ஆகவே. தரக்குறைவான கதைகள், கவர்ச்சிக் கட்டுரைகள், அட்டைப் படங்கள் முதலியனவற்றையே அவை நம்பத் தொடங்கின. பொதுமக்களின் ஒரே பொழுது போக்குச் சாதனமாக விளங்கும் சினிமாவையும், அதைப்பற்றிய பரப்பரப் பூட்டும் செய்திகளையும் போட்டுப் பக்கங்களை நிரப்பும் அளவுக்குப் பல தினசரி பத்திரிகைகளும் வந்து விட்டன. எப்படியாவது குறைந்த காலத்தில், நிறைந்த பணம் பண்ண வேண்டும் என்பதே தொழில்துறை முதல், எல்லாத் துறை யினரின் குறிக்கோளும் ஆகிவிட்டது.

### சிறுகதையின் எதிர்காலம்

இந்த நிலையில் மாதந் தோறும் சிறு கதை என்ற பெயரில் இப்போது நூற்றுக் கணக்கான கதைகள் அச்சாகி, வெளி வந்து கொண்டிருக்கின்றன. உமிப்பொதியைக் கொட்டி அதனூடே நெல் மணிகளைப் பொறுக்குவதுபோல், சிறந்த சிறுகதைகளை இன்று நாம் தேடிப் பொறுக்க வேண்டிய நெருக்கடிக்கு ஆளாகியிருக்கிறோம். நூற்றுக்கணக்கானவர்கள் இன்று சிறு கதை எழுதினாலும், அவர்களில், வழிமுறை தெரிந்து இலக்கிய உணர்வோடு எழுது வோர் மிகச்சிலர்தாம்.

என்றாலும் புதுமைப்பித்தன் காலத் தோடு சிறுகதைக் காலம் முடிந்துவிட்டது என்ற கூற்றும் உண்மைக்கு மாறுபட்ட தாகும். அன்று குட்டையில் மீன் பிடிப்பது போன்ற நிலை இருந்தது. இன்று காட் டாற்று வெள்ளம் போன்ற கட்டுப்பாடற்ற எழுத்துப் பரப்பின் வேகத்துக் கிடையே சிறந்த எழுத்தைத் தேட வேண்டி யிருக்கிறது. இன்றுள்ள சில சிறுகதை எழுத்தாளர்கள் நம் தொடக்க காலத்து எழுத்தாளர்களை விடவும், இலக்கியச் சிறப்பு மிக்கவர்களாக இருக்கிறார்கள் என் பதில் சிறிதும் ஐயமில்லை. எதிர் காலத்தில் இலக்கியச் சிகரங்களாக வளர்ந்தோங்கும் ஆற்றல் கொண்ட சில இளம் சிறுகதைக் குன்றுகளையும் என்னால் இனம் காண முடிகிறது, ஆனால் அவர்கள் இத்துறையில் நிலைத்து நிற்பதும், மேலும் வளர்ச்சி பெறு வதும் அவர்கள் தங்கள் வளர்ச்சிக்கெதிரான சூழ்நிலைகளோடு போராடி வெற்றி பெறு வதில் இருக்கிறது. எழுத்தையே வாழ்க் கையின் முழுமுதல் இலட்சியமாகக் கொண்டு; பிறவற்றை இரண்டாவதாகக் கருதும் துணிவு இத்துறையினருக்கு வேண்டும். ஆற்றல் மிக்க சிறுகதைகளைப் படைப்பது தந்தச் சிமிழில் கலைச்சித்திரம் தீட்டுவது போன்ற கடினமான பணி. இடைக்காலத்தில் ஒளிச்சுடர்கள் போல் தோன்றிய சிலர், நாட்டில் நிலவும் இலக்கிய வளர்ச்சிக்கு எதிரான சூழ்நிலைக்குப் பலி யாகி மறைந்து விட்டனர். ஆனால் கடந்த ஐந்தாறு ஆண்டுகளாக இளைஞர் சில ரிடையே மீண்டும் ஒரு புத்தெழுச்சி

ஏற்பட்டு அங்கங்கே கூடிச் சிறுகதைகளைப் படித்து ஆய்வு நடத்துகிறார்கள். மாதந் தோறும் வெளிவரும் சிறுகதைகளில் சிறந்த ஒன்றைத் தேர்ந்தெடுத்துப் பாராட்டச் சென்னையில், 'இலக்கியச் சிந்தனை' என்ற ஓர் இளைஞர் அமைப்புத் தோன்றியுள்ளது.

இந்தியாவின் பிற மொழிகளில் சிறுகதைத் துறையில் இப்போது புதுப்புது உத்திகள் கையாளப்பட்டு வருகின்றன. சிறுகதைக் கென்றே தனியாகச் சில பத்திரிகைகளும் நடத்தப் படுகின்றன. கல்லூரிகளும், பல்கலைக்கழகங்களும் இந்த நூற்றாண்டு இலக்கியங்களில் பேரார்வம் காட்டி அவற்றை இளைஞர்களுக்குக் கற்பித்து வருகின்றன. இவற்றால் இளைஞர்களிடையே புதுவிழிப்பும் இலக்கியப் பணியில் ஆர்வமும் மிகுந்துள்ளன.

நம் தமிழ்நாட்டுக் கல்லூரிகளும், பல்கலைக் கழகங்களும் உலகப் போக்கை யொட்டி, இன்று உரைநடை இலக்கியத் துக்கு ஆக்கமளிக்க முன் வந்திருப்பது வரவேற்கத்தக்க செயலாகும். தமிழ்ச் சிறுகதைக்குச் சிறந்த ஓர் எதிர்காலம் இருக்கிறது. இந்த நூற்றாண்டின் கடைசியில் நாம் கணக்கெடுத்துப் பார்த்தால், காலத்தால் வெல்ல முடியாத சிறுகதைகளைப் படைத்த பத்துப்பதினைந்து சிறுகதை எழுத்தாளர்களாவது தமிழுக்குக் கிடைப்பார்கள் என்று நம்புகிறேன். சிறந்த சிறுகதைகளைப் படைப்போர் ஐம்பது அறுபது பேர்களாவது தேறினால்தான் – அத்தகைய இலக்கிய வளர்ச்சி நாட்டில் ஏற்பட்டால் தான் – அவர்களில், அந்த பத்து பதினைந்து சிறுகதை இலக்கியச் சிகரங்களை நம்மால் காண முடியும். நாட்டிலும் அதற்கேற்றபடி குறுக்குவழி இலாப வேட்டைக்கு எதிரான நல்ல மாற்றங்கள் தோன்றத் தொடங்கியிருக்கின்றன. இந்தப் போக்கு எதிர்காலத்தில் தமிழ்ச் சிறுகதைகளின் வளர்ச்சிக்கு ஆக்கம் தரும் போக்கென்றே நம்புகிறேன்.

## தமிழ் மணிமாலை

செந்தமிழ்த்தேன் ஊறும் செழுமைச் சுனைஎன்கோ?
சிந்தனைக்கே வாய்த்த செழுநிதியோ? — சந்ததமும்
கற்பவர்தம் ஞானக் கதிரென்கோ? நம்தருமைப்
பொற்பமர்கல் லூரி புகழ்

— புலவர், திரு. சீனி. அரங்கநாதன், வந்தவாசி.

தமிழில் மறுமலர்ச்சி

# கவிதைகள்

திரு. அ. கலியபெருமாள், எம். ஏ.,
தமிழ் விரிவுரையாளர், அ. வ. அ. கல்லூரி, மாயூரம்.

[உள்ளத்தின் உணர்ச்சியதே பாடல்; அங்கே
ஒலிநயமே இதயமென ஒளிரும்; எங்கும்
வெள்ளத்தைப் போல்மிகவும் பெருக்கெ டுத்து
விதிகெட்டுச் சீர்கெட்டுத் தளையும் கெட்டே
எள்ளத்தான் நிற்பதனை இயம்ப வில்லை!
இதுபாட்டு என்றுரைக்கும் இனிமைப் பாட்டு
தெள்ளத்தன் மனங்காட்டும் கவிஞன் பாட்டு
தெளிந்தபொருள் பலஇயைந்த அமுதக் கூட்டு!]

செந்தமிழில் செழுங்கவிதை மறும லர்ச்சி
தீட்டுங்கால் ஓரச்சம்; எனது பாட்டு,
சந்தமுறு மறுமலர்ச்சிக் கவிதை யாகத்
தருமோ? யான் அறியேன்: அந் நாள்பா வாணர்
தந்தவளக் கவிதைபயில் நடையும் சொல்லும்
தருபொருளும் பின்னாளில் கூம்பி நிற்ப
இந்தநாளில் அக்கவிதை மறும லர்ச்சி
இடம்பெற்றுத் திகழ்வதுதான் அறியார் ஆரே.

பாட்டோடு பொருந்திவர இலக்க ணந்தான்,
பாடிவிட்டார் செவித்துணையா அந்த நாளில்;
ஏட்டோடு பக்கத்தில் இலக்க ணந்தான்
எடுத்துவந்து சொல்லடுக்கும் தொழிலாம் பின்னால்;
வீட்டோடு வாழ்கின்ற பெண்கள் வாயில்
வெடித்திடும்,ஒப் பாரிக்கும் உயிர்தான் ஓசை,
நாட்டோடு வளர்கின்ற சமுதா யத்தின்
நடையோடு நடந்ததன்றோ அந்நாள் பாட்டு.

சீர்கெட்டுப் போனல்சீர் கெட்டா போகும்?
செறிதனைதான் கெடில்,தலையா கெட்டுப் போகும்?
பேர்கெட்டுப் போகின்றார், இந்த வண்ணம்
பேசிவிட்டுப் பாடுவதோ மறும லர்ச்சி;
ஏர்கெட்டுப் போனல்,பூ கெட்டுப் போகும்
இசைகெட்டுப் போனல்,பா கெட்டுப் போகும்
ஊர்கெட்டுப் போகாமல் உண்மை தன்னை
ஒலிநயத்தோ டிசைப்ப தன்றோ மறுமலர்ச்சி.

ஊறிவரும் கவிபிறப்ப துதட்டில் இல்லை;
உணர்ச்சிக்குக் களமான இதயத் தன்றோ?
மாறிவரும் காலத்தின் இயற்கை யோடே
மருவிவரும், கவிதைக்குப் பொருளும் ஆங்கே,
ஏறிவரும் சொல்லெல்லாம், நாட்டு மக்கள்
இதழேறி வருகின்ற சொற்க ளாகும்;
கூறிவரும் அழகெல்லாம், இயற்கை தன்னைக்
கூடிவரும் அநுபவத்தின் விளைவே யாகும்.

விண்ணிருந்து மண்மறந்து பாடி விட்டால்
வேருகிக் கவிதானும் விட்டுப் போகும்;
மண்ணிருந்து மணக்கின்ற கவியால், இந்த
மண்ணுக்குள் விண்படைக்கும் திறந்தான் ஆகும்;
கண்ணிருந்து பார்க்கின்ற உணர்ச்சி இன்றேல்,
கண்ணாலே பயனுண்டோ? கவியும் அற்றே;
பண்ணிருந்து மணக்கின்ற புதுமைப் பூவாம்
பாரதிபோல் பூத்தமணம் கமழ்க இங்கே.

### தமிழ் மணிமாலை

பால்நிகர் பைந்தமிழைப் பண்புடன் கற்றுநாம்
ஆல்போல் தழைத்தான்ற அன்புகண்டோம் – நூல் கண்டோம்
தெள்ளுற்ற நம்தமிழின் தீஞ்சுவை தேடவின்று
வெள்ளிவிழாக் கண்டோம் விரைந்து

— புலவர். திரு. சொ. சண்முகநாதன்.

# தருமையின் எழில்

புலவர், திரு. சோ. பா. வேதாரண்யம்,

தமிழாசிரியர், அ. உ. பள்ளி, மணக்குடி.

[ தங்கத் தருமையின் பொங்கும் எழிலினை
இங்குப் பயின்றவரே — உயர்
சங்கம் வளர்தமிழ் பொங்கு மழகினில்
இங்ஙன் உரைத்தனரே — நலம்
பொங்க விரித்தனரே ]

(குருவி)

சிட்டுக்குருவிகள் வட்டக் குளத்தினில்
தொட்டுக் குளித்திடவே — பல
பொட்டுக் கடலையொத் திட்டப் புனற்றுளித்
தட்டில் மிதந்திடுமே — இலைத்
தட்டில் மிதந்திடுமே

(வண்டு)

கொக்குப் பறந்திடும் திக்குப் புலப்படச்
செக்கர் வெளிப்படவே — மலர்
புக்கு மதுத்துளி நக்கி மதுகரம்
சொக்கிப் பறந்திடுமே — மதி
சொக்கிப் பறந்திடுமே.

(நத்தை)

தத்திக் குதித்திடும் மெத்தத் தவளைகள்
கத்தும் கழனியிலே — கயல்
ஒத்த விழிச்சியர் சுற்றும் வரப்பினில்
நத்தை நகர்ந்திடுமே — பல
நத்தை நகர்ந்திடுமே.

( பசு )

கொட்டும் பனித்துளி வட்டக் கதிரொளிப்
பட்டு மறைந்திடவே — தறிக்
கட்டை அவிழ்த்திடக் குட்டிப், பசுவிடம்
முட்டிக் குடித்திடுமே — மடி
முட்டிக் குடித்திடுமே.

( குயில் )

செக்கச் சிவந்திடும் மொக்கு மலர்ந்திட
சொக்கு மணம்தரவே — மரம்
புக்கக் குயிலினம் குக்குக் குகுவென
பக்க மிசைத்திடுமே — குளப்
பக்க மிசைத்திடுமே.

( மயில் )

வெற்றித் தமிழினைக் கற்றுத் தரும்புகழ்
பெற்றத் தருமையிலே — எழில்
உற்றத் தனிமயில், நிற்கும் மதிற்புறம்,
சுற்றிக் குலவிடுமே — தினம்
சுற்றிக் குலவிடுமே.

## தமிழ் மணிமாலை

தருமையெனும் ஆதீனம் தண்ணார்பூஞ் சோலை
குருமணிகல் லூரிப்பூங் கொம்பாம் – திருவழங்கும்
நற்றமிழே பூவாம்அந் நற்றமிழின் ஞானமே
உற்றரிய தேனும் உயர்ந்து.

சீரார் தருமபுரச் செந்தமிழ்க் கல்லூரிப்
பேரார்நம் வெள்ளிவிழாப் பேசுங்கால் – ஏரார்
குருமணியின் ஞானக் கொழுந்தென்கோ? நன்மைத்
திருவளர்க்கும் பேரென்கோ தேர்ந்து.

— புலவர். திரு. சீனி. அரங்கநாதன், வந்தவாசி.

## தமிழில் மறுமலர்ச்சி

# அகராதிக்கலை

புலவர், திரு. சுந்தரசண்முகனர்,

*தமிழ்ப்பேராசிரியர், புதுச்சேரி.*

[ அகரம் முதலாகச் சொற்களை வரிசைப்படுத்திப் பொருள் கூறும் அகராதிகள் தமிழில் வளர்த்தமைந்த திறத்தை இரண்டாயிரமாண்டு தமிழ் இலக்கண – இலக்கிய வரலாற்ருேடு இணைத்து எண்ணி, தற்காலத்தே தமிழில் இத்தகு அகராதிகள் தோற்றங்கொண்ட சிறப்பினை இக்கட்டுரைக் கண் ஆசிரியர் நயம்பட எடுத்துரைக்கிருர். தொல்காப்பிய உரியியலில் கிளைத்த இம்முயற்சி படிப்படியே வளர்ந்த வரலாறும், நிகண்டுகள் இவ்வகையில் செய்த பேருதவிகளையும், பிறமொழிகளில் இக்கலை பெற்றிருந்த வளர்ச்சியும், இவற்ருேடு இணைந்து தமிழ், அகராதிகளைத் தன்னகத்தே தோற்றிக் கொண்டுள்ள திறமும், அவற்றின் பாகுபாடுகளும் இக்கட்டுரைக்கண் இனிதெடுத்து விளக்கப்படுகிறது ]

### அகராதிக் கலை (Lexicography)

ஒரு மொழியிலுள்ள சொற்களை அகர வரிசையில் நிறுத்தி அவற்றுக்குப் பொருள் கூறும் நூல் அகராதி எனப்படும் இத்தகைய அகராதிகளை அமைக்கும் வேலைப்பாடும், அகராதி வகைகளின் அமைப்புக்களைப் பற்றிய ஆராய்வும் அகராதிக் கலை எனப்படும்.

### தமிழ் அகராதிக் கலையின் தொன்மை

சொற்களின் தோற்றம், அவற்றின் வகைகள், அவை தரும் பொருள்கள், அவற்றை யாளும் முறைகள் முதலியன பற்றிக் கூறும் அமைப்பு பொதுவாகச் சொல்லிலக்கணம் (Etymology) எனப்படும். இத்தகைய சொல்லிலக்கணத்தை கி. மு. 1000-ஆம் ஆண்டுக்கு முற்பட்டதாகக் கருதப்படும் தமிழிலக்கண நூலாகிய தொல்காப்பியத்தின் "சொல்லதிகாரம்" என்னும் பகுதியில் காணலாம்.

தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் 'உரியியல்' என ஒரு பிரிவு உள்ளது. அதில் 120 உரிச்சொற்கள் பொருள் விளக்கப் பட்டுள்ளன. இதுவே ஒருவகைச் சிறிய அகராதி போன்றது. ஆனல் தொல்காப்பிய உரியியலில் சொற்களுக்குப் பொருள் கூறி யிருப்பதல்லாமல், "வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா", "பொருட்குப் பொருள் தெரியின் அது வரம்பின்றே" என்றெல்லாம் சொற்களுக்குப் பொருள் கூறும் முறைகளைப் பற்றியும் விவரித்திருப் பதால், தொல்காப்பிய உரியியல் அமைப்பை 'அகராதி' என்பதை விட 'அகராதிக் கலை' என்று கூறுவது சாலப் பொருந்தும். தொல்காப்பியத்திலுள்ள இடையியல், மரபியல் ஆகிய பிரிவுகளிலும் இந்தக் கலை ஒரு சிறிது இடம் பெற்றுள்ளது. எனவே, தமிழில் அகராதிக் கலை கி. மு. 1000-ஆம் ஆண்டுக்கு முன்பே - தொல்காப்பியக் காலத்திலேயே தோன்றியிருந்தது எனலாம்.

தொல்காப்பியக் காலத்தை கி. மு. 1000-ஆம் ஆண்டுக்கு முன்னதாகக் கொள்ளாமல், கி. மு. 500 என்பதாகக் கூறுவாரு முளர். அப்படியே வைத்துக் கொண்டாலும், தொல்காப்பியர் உரியியலின் இறுதியில், 'சொற்களுக்குப் பொருள்கொள்ளும் முறை பற்றிப் பழம்புலவர்கள் இன்னின்னவாறு கூறியுள்ளார்கள்' என்னும் கருத்தில் "என்மனர் புலவர்" என மொழிந்துள்ளார். இதைக் கொண்டு நோக்குங்கால், தொல்காப்பியருக்கு முன்பே பல புலவர்கள் சொற்களுக்குப் பொருள் கூறும் துறையில் கருத்துச் செலுத்தியிருந்தார்கள் என்பது புலனாகும். எனவே, எப்படி நோக்கினும் தமிழ் அகராதிக் கலை இன்றைக்கு மூவாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட பழமையும் பெருமையும் உடையதென்பது தெளிவு.

### உலக மொழி அகராதிகள்

தமிழ்போலவே உலக மொழிகள் பலவற்றிலும் மிகப் பழங்காலத்திலேயே அகராதிகள் தோன்றின. அசிரியாவில் கி. மு. 669 – 629ஆம் ஆண்டுக்காலத்தில் வாழ்ந்த ஆசூர்பானிபல் (Ashurbanipal) என்னும் மன்னனது ஆட்சியில் சொற்பொருள் விளக்கும் அசிரிய மொழி அகராதி, களிமண் பலகைகளில் அமைக்கப்பட்டிருந்தது. வடமொழியிலும் கி. மு. 5ஆம் நூற்றாண்டில் அகராதி அமைக்கப்பட்டதாகத் தெரிகிறது. கி. மு. 150இல் 10,000 (பத்தாயிரம்) சொற்களுக்குப் பொருள் விளக்கும் அகராதி ஒன்று சீன மொழியில் தொகுக்கப்பெற்றிருந்ததாம். ஐரோப்பாவிலும் கிரேக்கம், லத்தீன் முதலிய பழம் பெரு மொழிகளிலும் பழங்காலத்திலேயே அகராதிகள் தோன்றியிருந்தன.

### தனிக் கலை

தமிழ்மொழியைப் பற்றிய வரையில், சொல்லிலக்கணத்தின் ஓர் உறுப்பாக இருந்த அகராதித்துறை, நாளடைவில் அதிலிருந்து பிரிந்து ஒரு தனிக் கலையாகவே வளரத்தொடங்கியது.

தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்களின் உரியியல்களில் சொற்பொருள் விளக்கஞ் செய்யப்பெற்றிருந்ததைக்கண்ட புலவர்கள் சிலர், இந்தவேலையை இலக்கண நூல்களோடு இணைத்து இடர்ப்படாமல், தனித்தனி நூல்வடிவில் செய்யத் தொடங்கினர். மற்றும், பண்புகளைப் பற்றிய உரிச்சொற்களோடு நின்றுவிடாமல், பெயர்ச்சொற்கள், வினைச்சொற்கள், திசைச்சொற்கள் முதலியவற்றிற்கும் பொருள் கூறத்தொடங்கினர். ஒரு சொல்லுக்கு உரியபொருள்கள் இன்னின்னவை என்று கூறியதன்றி, ஒரு பொருளைக் குறிக்கும் பெயர்கள் இன்னின்னவை என்றும் எழுதத் தொடங்கினர். இருசுடர், முக்குணம் போன்ற தொகைப் பெயர்களுக்கும் விளக்கம் தந்தனர். எல்லாம் செய்யுளாகவே இயற்றப்பெற்றன.

இம்முறையில் தமிழில் பலநூல்கள் எழுந்தன. அவற்றுள் மறைந்தவை போக எஞ்சியிருப்பவை சிலவே. இருப்பனவற்றுள் காலத்தால் முற்பட்டவை 'சேந்தன் திவாகரம்', 'பிங்கலம்' என்னும் நூல்களாம். இவை கி. பி. 8 - ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டன என்று சொல்லப்படுகின்றது, இவற்றிற்கு அடுத்தபடியாகக் கிடைத்திருக்கும் நூல்களுள் 'சூடாமணி' முற்பட்டது. இது 16 - ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதெனக் கருதப்படுகிறது.

### உரிச்சொல் பெயர்

திவாகரம், பிங்கலம் முதலிய நூல்கள் 'உரிச்சொல்' அல்லது 'உரிச்சொல் பனுவல்' என்னும் பொதுப்பெயரால் அழைக்கப்பட்டன. 13-ஆம் நூற்றாண்டினரான பவணந்திமுனிவர் தமது நன்னூலில்,

"பிங்கல முதலா நல்லோர் உரிச்சொலின் நயந்தனர் கொளலே" என்று கூறியிருப்பதனாலும், 16 அல்லது 17-ஆம் நூற்றாண்டினதாகக் கருதப்படும் 'கயாதரம்' என்னும் அகராதித் துறை நூலில், "உரிச்சொல் பனுவல் விரித்துரைத்தான்" என்று கூறப்பட்டிருப்பதனாலும் இதனை அறியலாம். இலக்கண நூல்களின் உரியியல்களில் சொற்பொருள் விளக்கம் செய்யப் பெற்றிருந்த முறையை அடிப்படையாகக்கொண்டு இந்நூல்கள் எழுந்தனவாதலால் இவை 'உரிச்சொல்' என அழைக்கப்பட்டன.

### நிகண்டுப் பெயர்

ஆனால் சூடாமணி என்னும் நூல் 'நிகண்டு' என்னும் பெயரால் அழைக்கப்பட்டது. சூடாமணிக்குப் பின் செய்யுள் வடிவில் எழுந்த அகராதித்துறை நூல்கள் அனைத்தினுக்கும் நிகண்டு என்னும் பொதுப் பெயரே வழங்கப்பட்டது. இப்பழக்கத்தால் சூடாமணிக்கு முன் தோன்றிய நூல்களும் நாளடைவில் நிகண்டு என்றே அழைக்கப்படலாயின.

நிகண்டு என்றால் தொகுதி அல்லது கூட்டம், நீளம் என்று பொருளாம். சொற்கள் தொகுதியாக நீளமான வரிசையாகக்கொடுக்கப்பட்டிருப்பதால், அகராதித் துறை நூல்களுக்கு நிகண்டு என்ற பெயர் அளிக்கப்பட்டது எனலாம்.

### அகராதிக் கலையுணர்வு

உலகமொழிகள் பலவற்றிலும் சொற்பொருள் விளக்கும் அகராதித்துறை நூல்கள்பல தோன்றினவேனும், பதினாறும் நூற்றாண்டு வரையிலும் எந்த மொழியிலும் சொற்கள் அகர வரிசையில் நிறுத்திப் பொருள் கூறப் படவில்லை. இக்காரணத்தால் குறிப்பிட்ட ஒரு சொல்லை உடனே கண்டுபிடிக்க முடியாமல், முதலிலிருந்து இறுதிவரை சொற்களைப் படித்துப் பார்த்துத் தேடி இடர்ப்பட வேண்டியிருந்தது. இதனால் திவாகரம், பிங்கலம் போன்ற நூல்கள் ஆதியில் அகர வரிசையில் அமைக்கப்படாமல் இருந்தும், பின் வந்தவர்கள் அவற்றின் சொற்களைத் தாமாக அகர முதலாக வரிசைப்படுத்தினர். இந்த வசதியைக் கருத்திற் கொண்டு, 16-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் சூடாமணி நிகண்டை இயற்றிய மண்டல புருடர், சொற்களைக் 'ககர எதுகை' முதல் 'னகர எதுகை' ஈறாக வரிசைப்படுத்திப் பொருள் கூறியுள்ளார். எதுகை என்றால் நகம், அகம், முகம் என்பனபோல இரண்டாவது எழுத்துக்கள் ஒத்திருப்பது. இவ்வெதுகை முறையில், அடிகள் தோறும் முதற்சீரின் முதலெழுத்துக்கள் அகர வரிசையில் நிறுத்தப்படாமல், இரண்டாவது எழுத்துக்கள் அகரவரிசையில் அமைக்கப்பட்டிருக்கும். இதுவே ஒரு பெரிய அகராதிக்கலையுணர்வுதான்!

### முதல் உலக அகராதி

மண்டல புருடருக்குப்பின்னர் அகராதிக்கலையில் மேலும் ஒரு வளர்ச்சி காணப்பட்டது. கி. பி. 1594-ல் சிதம்பர இரேவண சித்தர் என்னும் தமிழ்ப்புலவர் ஒருவர், சொற்களை முதலெழுத்து வாரியாக அகர வரிசையில் அடுக்கி 'அகராதி நிகண்டு' என்ற பெயரில் தமிழில் ஓர் அகராதிநூல் இயற்றினர்.

உலகத்திலேயே சொற்களின் முதலெழுத்துக்களை அகர வரிசையில் அடுக்கி அமைக்கப்பட்ட முதல் அகராதி நூல் 'அகராதி நிகண்டு' தான். அடுத்து இரண்டாவதாக கி. பி. 1612-ஆம் ஆண்டில் இத்தாலி மொழியில் அகர வரிசையில் அமைந்த ஓர் அகராதி தோன்றியது. பின்னர் நாளடைவில் உலகமொழிகள்

பலவற்றிலும் இத்தகைய அகராதிகள் தோன்றலாயின.

**அகராதிப் பெயர்**

'அ' முதலாகச் சொற்களை வரிசைப் படுத்திப் பொருள் கூறும் நூல் என்னும் பொருளில் அகராதி என்ற பெயரை முதன் முதல் அறிமுகப்படுத்தியவர் 'அகராதி நிகண்டு' எழுதிய **சிதம்பர இரேவண சித்தரேயாவர்.** அகராதித்துறை நூல் கட்கு வேற்றுமொழிகளில் பல பொருளில் பலபெயர்கள் வழங்கப்படினும், தமிழில் உரிச்சொல், நிகண்டு என்னும் பெயர்கள் மறைந்தொழிய அகராதி என்னும் பொருத்த மான பெயர் நிலைத்துவிட்டது. இது போலவே ஆங்கில மொழியிலும் பல பெயர் கள் தோன்றி, மறைந்த பின்னர், சர் தாமஸ் எலியட் (Sir Thamas Elyot) தொகுத்த அகராதியின் 'டிக்ஷனரி' (Dictionary) என்ற பெயர் நிலைத்துவிட்டது. தமிழில், அகராதி என்னும் பெயரின் இடத்தை இப்போது 'அகரவரிசை' என்னும் பெயர் பிடிக்கத் தொடங்கியுள்ளது.

**அகராதித் துறையில் மறு மலர்ச்சி**

இந்திய மொழிகளிலும் ஐரோப்பிய மொழிகளிலும் 17-ஆம் நூற்றுண்டுவரை அருஞ்சொற்கட்குப் பொருள் விளக்கும் பணி மட்டில் அகராதித்துறையில் நடந்து வந்தது. பின்னரே பல்துறைக் கலை யகராதிகள் தோன்றின. தமிழைப்பற்றிய வரையில் அகராதிக்கலை வளர்ச்சியில் 17 – ஆம் நூற்றுண்டிலிருந்து மூன்று முன்னேற்றங்கள் தோன்றின, அவை :

1. சொற்களை அகரவரிசையில் அடுக்கிப் பொருள் கூறியது ;

2. சொற்பொருள் விளக்கம், நிகண்டு களில் உள்ளதைப்போல் செய்யுள் வடிவில் அளிக்கப்பெருமல், இக்கால அகராதிகளில் உள்ளவாறு சொற்களைத் தனித்தனியாக ஒன்றன்பின் ஒன்ருக வரிசைப்படுத்திப் பொருள் கூறுவது ;

3. அரிய சொற்களுக்குப்பொருள் கூறுவதுடன், வேறுபல துறைகளிலும் கலையகராதிகள் தோன்றினமை.

இந்த மறுமலர்ச்சியில் ஐரோப்பா விலிருந்து தமிழ் நாட்டிற்கு வந்த 'பெஸ்கி' (Beschi), போப் (G. U. போப்) முதலிய கிறித்தவப் பாதிரிமார்கள் ஏற்ற பங்கு மிகப்பெரியது. அகராதி நூல்கள் செய்யுள் வடிவில் இருந்த நிலையை மாற்றி, அகர வரிசையில் தொகுத்துத் தமிழகராதிகள் செய்தவர்கள் அவர்கள்தாம். அரிய சொற் களுடன் எளிய சொற்களையும், கிளைமொழிச் சொற்களையும் (Dialects), சேர்த்து அகராதியை விரிவுபடுத்தினர்கள். வீரமா முனிவர் என அழைக்கப்படும் பெஸ்கி யவர்கள் தொகுத்த 'சதுர் அகராதி' என்ற நூல் இங்கே குறிப்பிடத்தக்கது. பெரும் பாலும் இதனைப் பின் தொடர்ந்தே தமிழகராதிகள் பல பின்னர்த் தோன்றின.

**தமிழ் இணைந்த அகராதிகள்**

'தமிழுக்குத் தமிழ்' என ஒரு மொழி யகராதியேயன்றி, தமிழ் – போர்ச்சுகேசிய அகராதி, தமிழ் – இலத்தீன் அகராதி, இலத்தீன் – தமிழ் அகராதி, தமிழ் – பிரெஞ்சு அகராதி, பிரெஞ்சு – தமிழ் அகராதி, செர்மன் – தமிழ் அகராதி, தமிழ்– செர்மன் அகராதி, போர்ச்சுகேசிய – இலத்தீன் – தமிழ் அகராதி, இலத்தீன் – பிரெஞ்சு – தமிழ் அகராதி முதலிய இரு மொழி, மும்மொழியகராதிகளும் அவர்கள் படைத்தனர். தமிழ் – ஆங்கில அகராதி, ஆங்கிலம் – தமிழ் அகராதி ஆகியவற்றிற்கும் குறைவில்லை. இவற்றை முன்மாதிரியாகக்

கொண்டு, சம்சுகிருதம், கிரந்தம், தெலுங்கு, இந்தி, மராத்தி, சிங்களம், பர்மா, மலாய், ரஷ்யன் முதலிய மொழிகளோடு தமிழ் இணைந்த அகராதிகள் பிற்காலத்தில் தோன்றின.

## பலதுறை அகராதிகள்

இவ்விதமாக 17, 18, 19 – ஆம் நூற்றாண்டுகளில் பலமொழியகராதிகள் தோன்றின. இவையேயன்றி, 20 – ஆம் நூற்றாண்டில் மேற்கோள்களும் படங்களும் கூடிய அருஞ்சொல் விளக்க அகராதிகள், (Glossaries) – மருத்துவம், கணிதம், விஞ்ஞானம் ஆகிய தனித்துறைகளில் ஆக்கப்பட்ட அகராதிகள், ஒரு நூலில் அடங்கியுள்ள சொற்களையும் செய்திகளையும் சுட்டிக்காட்டும் சொல் தொகுதி (Concordance) அகராதிகள், பதவியல் (Etymological) அகராதிகள், ஒப்பியல் மொழி அகராதிகள், தொகையகராதி, தொடையகராதி, பலவகைக் கலைச்சொல் அகராதிகள், கலைக்களஞ்சியம், பழமொழி யகராதி, புலவர் அகராதி, இலக்கிய அகராதி முதலிய பலதுறை அகராதிகள் தோன்றின.

சுருங்கக் கூறின், – தமிழ் மொழியில் மறைந்தவை போக, இப்போது ஏறக் குறைய ஐம்பது நிகண்டுகள் உள்ளன எனலாம்; அடுத்து, தமிழுக்குத் தமிழும், தமிழுக்குப் பிறமொழிகளும், பிறமொழி களுக்குத் தமிழுமாக இப்பொழுது ஏறக் குறைய இருநூற்றுக்கும் மேற்பட்ட அகராதிகள் உள்ளன. இந்த அமைப்பு, தமிழ் அகராதிக் கலை வளர்ச்சியின் சிறப்பினை அறிவிக்கிறது. அகராதிக் கலை (Lexicography) துறையைப் பற்றிய ஆய்வு நூல்கள் ஐரோப்பிய மொழிகளில் பல உள்ளன. தமிழ்மொழியிலோ எனின், இக் கட்டுரையாசிரியனாகிய அடியேன் எழுதி யுள்ள 'தமிழ் அகராதிக்கலை' என்னும் ஆய்வு நூல், இந்தத் துறையில் முதல் பெரிய நூலாகும். தமிழ் அகராதிக் கலை வாழ்க!

### தமிழ் மணிமாலை

அஞ்சொல் அழகும்; அமைந்திருக்கும் பாநலமும்
எஞ்சாத இன்தமிழின் சொத்தாகக் — கொஞ்சுகின்ற
இன்னோசை யோடு எழில்பூத்த செந்தமிழே
என்னென்பேம் எங்கள் தவம்

— புலவர், திரு. சோ. நடராசன், சென்னை - 34.

# தமிழர் நாகரிகம்

புலவர். இல. செ. கந்தசாமி, எம். ஏ.,
துணைத் தமிழ்ப் பேராசிரியர், வேளாண்மைப் பல்கலைக் கழகம், கோயமுத்தூர் - 3.

[ நாகரிகத்தின் ஒளிச் சுடரையே காணாது உலகத்தின் பல்வேறு இனங்கள் அறியாமை இருளில் ஆழ்ந்திருந்த காலத்திலேயே, நயத்தக்க நாகரிகங்கண்டு உலக அரங்கில் ஒளிவிட்டுத் திகழ்ந்தது தமிழர் நாடு. இந்தச் சிறப்புமிக்க வரலாற்று உண்மையை உள்ளவாறு அறிந்து போற்றி, உலகுக்கும் வழங்க வேண்டுவது தமிழர் கடன் எனக்கண்டு, இக்கட்டுரைக் கண் அருஞ் செய்திகள் பலவற்றை ஈட்டித்தருகிறார் ஆசிரியர். தமிழ்க் குடிகள் தலைஎடுத்த இடம் ; அவர்தம் மொழியுட்பட்ட தன்மைகள் இவற்றை ஆராயும் முயற்சியுள், மேனாட்டார் கருத்து வளம், புதை பொருள் ஆய்வுகள், சங்க இலக்கியச் சான்றுகள் இவை தரும் செய்திகளையும் ஒருங்கிணைத்துக் கொண்டு, தொன்மை மிகு தமிழச் சாதியின் நாகரிகச் சிறப்பினைக் கோடிட்டுக் காட்டி விளக்கஞ்செய்து நிற்கிறது இவ்வரிய கட்டுரை ]

அமிழ்தினும் இனிய தமிழ்மொழி பேசும் மக்களின் நாகரிகம் தொன்மைச் சிறப்பு வாய்ந்தது; பழம்பெருமை உடையது. அவர்தம் நாகரிக நிலையை அறிய, தமிழர் தோன்றி வளர்ந்து வாழ்ந்த இடம், பேசிய மொழி ஆகியவற்றை ஆராய வேண்டுவது கடனாகும். இத்தகைய உண்மை காணும் முயற்சிக்கு மேனாட்டறிஞர்களின் கருத்துக்கள், புதையுண்ட நகரங்கள், சங்க இலக்கியங்கள் ஆகியவை துணை செய்கின்றன. இவைகளின் துணைகொண்டு செய்த முயற்சியின் வடிவமே இக்கட்டுரையாகும்.

## மண் தோன்றிய முதல் இடம்

"உலகம் ஒரு காலத்தில் அனல் பிழம்பாக இருந்தது. அது நாளடைவில் தணியத் தொடங்கியது. அங்ஙனம் தணிந்த முதல் இடம், குமரி முனைக்குத் தெற்கே உள்ள நடுகோட்டிற்கு இருமருங்கும் இருந்த நிலப்பரப்பேயாகும். அப் பகுதி தான் மக்கள் வாழ்வதற்குத் தகுந்த நிலையை முதற்கண் அடைந்தது. அங்கு மக்கள் முதற்கண் தோன்றி வளர்ந்து, நாகரிகத்திற்கு வித்திட்டனர்" என்று அறிஞர் 'ஹெக்கல் (Haickol) கூறியுள்ளார்.[1]

"தென்னிந்தியாவிலும் இலங்கையிலும் உள்ள பாறைகளே மிகவும் பழமையான காலத்தில் உண்டானவை. ஒரு பெரிய மலைத்தொடர், இந்தியாவின் மேலைக் கரையிலிருந்து தெற்கே சென்று மேற்கும் கிழக்குமாக நீண்டிருந்தது. அம்மலைத் தொடரே இலெமூரியாக் கண்டத்திற்குப் பேரரணாக இருந்தது"[2] என்பது "எலியட் ஸ்காட்" (Scott elliot) என்பாரின் கருத்தாகும்.

1, 2 - திரு, கா. சு. பிள்ளை - இலக்கிய வரலாறு (முதல் பகுதி)

சிலநூல் அறிஞர்களின் இக்கருத்துக் கொண்டு உலகில் முதன்முதல் மண் தோன்றியதும் மனித இனம் கருக் கொண்டதும் இன்றைய தமிழகத்தின் தென் பகுதியான இலெமூரியா அல்லது குமரிக் கண்டம் என்பது புலனாகிறது.

## மனித இனத்தின் தோற்றம்

"குமரி முனைக்குத் தென்பால் உள்ள பெரு நாட்டில் முதன்முதல் தோன்றி வாழ்ந்த நன்மக்களே ஒரு காலத்தில் இந்திய நாடெங்கும் பரவிய தமிழர் ஆவர். தமிழரை வட மொழியாளர் திராவிடர் என்று அழைத்தனர். குமரிக் கண்டத்தைக் கடல்கொண்டபொழுது இவருள் சில பகுதியினர் கடல் வழியாகவும், நில வழி யாகவும் பெலுசித்தான், மெசப டோமியா முதலிய வடமேற்கு ஆசிய நாடுகளிற் சென்று வாழ்ந்தனர்[3]" என்பது டாக்டர் கால்டுவெல் அவர்களின் கருத்தாகும்.

செந்தமிழ் மொழியின் இலக்கணமும் இலக்கியமும் டாக்டர் கால்டுவெல் அவர் களின் கருத்தை உறுதிப்படுத்துகின்றது.

"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு
முன் தோன்றி மூத்த குடி"
—(புறப்பொருள் வெண்பாமாலை)

என்னும் கூற்றிலிருந்து கல் தோன்றி, மண் தோற்றம் பெறாத காலத்திலேயே, மூத்த குடியினராகிய தமிழர்கள் உலகில் தோன்றி விட்டனர் என்பதை அறியலாம். அன்றியும்,

"பஃறுளி ஆற்றுடன் பன் மலையடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங் கடல்கொள்ள."
(சிலம்பு)

என்னும் அடிகளிலிருந்து பஃறுளி ஆறும் குமரி மலையும் கடலால் விழுங்கப்பட்டது என்பது தெளிவாகிறது. அங்கு வாழ்ந்த தமிழ் மக்கள் முதலில் அங்கிருந்து வெளி யேறி இந்திய நாடு முழுதும் பரவிப் பின் உலகின் பல பாகங்களிலும் சென்று வாழத் தொடங்கினர்கள் என்பது ஆராய்ச்சி வல்ல அறிஞர்களின் கருத்தாகும்.

## உலகின் தொன்மை மொழி

வட இந்தியாவில் சிந்து வெளியில் புதையுண்ட நகரங்களின் தோற்றம், திரா விடரின் (தமிழரின்) தொன்மையை அறியப் பெரிதும் உதவுகின்றது. "மொகெஞ்சொ தாரோவில் வாழ்ந்த மக்கள் திராவிட மொழியையே வழங்கினர்கள். அவர்கள் வழங்கிய சொற்கள் பெரிதும் தமிழில் காணப்படுகின்றன. இப்போது உள்ள மொழிகள் எல்லாவற்றிலும் தமிழ் மொழி மிகப் பழமையுடையது"[4] என்று ஹிராஸ் பாதிரியார் கூறுகிறார்.

"மண் தோன்றிய முதல் இடம் குமரிக் கண்டம். அங்கே தோன்றிய மக்கள் தமிழர்கள். அவர்கள் பேசிய மொழி தமிழ். அவர்களே உலக நாகரிகத்தைத் தோற்று வித்தவர்கள்[5]" என்பது பன்மொழிப் புலவர் அப்பாதுரை அவர்களின் ஆராய்ச்சி யால் போந்த பொருளாகும்.

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞராக விளங்கி மக்களுக்குத் தமிழ் உணர்வை ஊட்டிய புரட்சிக் கவிஞர் பாரதிதாசனர்,

"திங்களொடும் செழும்பரிதி தன்னோடும்
விண்ணோடும் உடுக்களோடும்
மங்குல்கடல் இவற்றோடும் பிறந்த "தமிழ்"
அவற்றுடன் பிறந்தோம் "நாங்கள்"

3. டாக்டர் கால்டுவெல் — திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்.
4. திரு. கா. சு. பிள்ளை — இலக்கிய வரலாறு (முதல் பகுதி)
5. திரு. கா. அப்பாதுரைபிள்ளை — தமிழக வரலாறு (முன்னுரை)

என்கின்ருர். விண்ணும் விண்மீன்களும், திங்களும் ஞாயிறும், கடலும் மலையும் உலகில் தோன்றியபொழுதே தமிழும் தமிழரும் தோன்றிவிட்டார்கள் என்று, தமிழின் — தமிழரின் தொன்மையை விளக்குகின்ருர்.

மேற்கூறிய கருத்துக்களைக்கொண்டு, தமிழினம்தான் மிகவும் தொன்மைவாய்ந்த இனம், அவர்கள் தோன்றிய மண்தான் உலகின் முதல் மண், அவர்கள் தோற்று வித்த மொழியே உலக முதல் மொழி, அவர்கள் நாகரிகமே உலக முதல் நாகரிகம், அவ்வினமும் மொழியும் நாகரிகமுமே இன்று உலகெங்கிலும் பல்வேறு மொழியாக, இனமாக, நாகரிகமாக வளர்ந்து மலர்ந்து கனிந்து விளங்குகின்றது என்பதை அறிய லாம். இனி அவர்கள் நாகரிக நிலையினை வகையாகக் காண்போம்.

**நாகரிகம் — ஒரு விளக்கம்**

நாகரிகம் என்னும் சொல் பல பொருள் களில் கையாளப்படுகின்றது. நாகரிகம் என்ற சொல்லுக்கு 'நகரத்தோடு ஒட்டிய பழக்கவழக்கங்கள்' என்பது அகராதிகள் கூறும் பொருளாகும்.

திருவள்ளுவர் நாகரிகம் என்னும் சொல்லை கண்ணோட்டம் என்னும் பொருளில் கையாளுகிருர்.

"பெயக்கண்டும் நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்"

என்ற குறளில் நாகரிகம் எனும் சொல்லுக்குக் கண்ணோட்டம் என்பது பொருளாகும்.

நற்றிணையிலும் கண்ணோட்டம் என்ற பொருளே கையாளப்படுகிறது.

"முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்" —
— நற்றிணை · 355

என்ற அடிகளுக்கு நட்புக்கொண்டவர்கள் தம் எதிரே இருந்து நஞ்சையே ஊற்றி 'உண்பீராக' எனத் தந்தபொழுதும் மனம் வருந்தாமல் உண்பதே நாகரிகம் என்பது பொருள்.

மனிதனைப் பிற உயிர்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டக் கூடியவைகளில் முக்கியமான பண்பே நாகரிகம் என் நாகரிகத்தை விளக்குகிருர் தமிழறிஞர் மு. வ.[6]

நாகரிகம் என்பது பிறருக்காகத் தம்மையே தியாகம் செய்வது என்பது அ. ச. ஞானசம்பந்தம் அவர்களின் விளக்க மாகும்.[7]

காலப்போக்கில் சொற்களின் பொருள் கள் மாறுபடுகின்றன. சங்ககாலத்தில் காமம் என்ற சொல் காதல் என்னும் பொருளில் வழங்கியது. ஆனல் இன்ரே காமம் என்ற சொல் இழிந்த பொருளில் வழங்குகிறது. காமுகன் என்ருல் இழிந்தவன் என்பது பொருள். இதைப் போலவே நாகரிகம் என்ற சொல்லும் மிகப் பழங்காலத்தில் உள்ளப் பண்பின் உயர்வைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டது. ஆனல் இன்ரே நாகரிகம் என்னும் சொல் புறத்தோற்றத்தைமட்டும் உணர்த்தும் மிக எளிய சொல்லாகி அது தன் தன்மையை இழந்துவிட்டது. இன்று "நாகரிக வாழ்க்கை" என்ருல் ஆடம்பரமான வாழ்க்கை, போலி வாழ்க்கை என்ற பொருளே போதருகின்றது. பண்டைக்கால மக்களின் சிறப்பியல்புகளை எடுத்து விளக்குவதற்கு நாகரிகம் என்ற சொல்

6. டாக்டர் மு, வரதராசனர் – கலைக் களஞ்சியம் (தொகுதி 5)
7. அ. ச. ஞானசம்பந்தம் – அகமும் புறமும் (புறம்)

இன்று பொருந்தாது. அவர்களின் உள்ளப் பாங்கை எடுத்து விளக்கும் தகுதிவாய்ந்த சொல் "அக நாகரிகம்" அல்லது "பண்பாடு" என்பதே ஆகும்.

**நாகரிகத்தின் வகை**

மக்கள் நாகரிகத்தை இருவகையாகப் பகுத்து அறியலாம். அவைகளுள் ஒன்று புற நாகரிகம்; மற்றொன்று அக நாகரிகம். மனிதனின் வெளித்தோற்றம், உணவு, உடை, உறையுள் ஆகிய இவற்றில் காணுகின்ற வளர்ச்சியை, திருந்திய நிலையைப் புறநாகரிகம் எனக் கணக்கிடலாம்.

மனிதனின் உள்ளத்தில் ஒளிவிட்டு விளங்கும் பண்புக் கூறுகளை, எண்ணங்களின் வளர்ச்சியை, கருத்துக்களின் சிறப்பை, மனிதப் பண்பை அக நாகரிகம் எனக் கணக்கிடலாம்.

புற நாகரிகத்தின் எடுத்துக்காட்டுக்களுக்கு எங்கும் தேடி அலைய வேண்டியதில்லை. மாட மாளிகைகளும், கூடகோபுரங்களும், ஆடை அணி மணிகளும் நம் கண்ணெதிரே காட்சி தருகின்றன. புற நாகரிகத்தில் மனிதனின் வளர்ச்சி எல்லை கடந்து செல்கிறது.

ஆனால் அக நாகரிகத்திற்கோ உலக மக்களின் நலத்திற்காக அரசு துறந்த ஒரு புத்தர் பெருமானை, பிறருக்காகவே வாழ்ந்து மடிந்த ஒரு காந்தியடிகளை 'எவ்வுயிர்க்கும் அன்பு செய்' என வாழ்ந்த ஒரு இராமலிங்க வள்ளலலை, பகைவனுக்கு அருளும் நெஞ்சுடைய ஒரு இயேசுநாதரை - இப்படி மிகச் சிலரையே நாம் காண முடிகிறது.

**சங்க காலத்திற்கு முற்பட்ட நாகரிகம்**

உலகில் மூன்று நாடுகளில்தான் நாகரிகம் தோன்றியதாகக் கருதப்படுகிறது. எகிப்தின் நைல் நதிக் கரையோரங்களிலும், மெசபொடேமியாவில் டைக்ரிஸ்-யூப்ரட்டீஸ் நதிக்கரையின் இருமருங்கிலும், இந்தியாவில் சிந்து நதிப் பள்ளத்தாக்குகளிலும், நாகரிகம் தோன்றியது. நீர் வளமும் நில வளமும் செழித்து விளங்கிய காரணத்தால் கலைகளும் தொழில்களும் தோன்றி வளர்ந்தன, மக்களின் தேவைகளுக்கு ஏற்பப் புதுமைகள் பல கண்டுபிடிக்கப்பட்டன.

தமிழர்களின் பண்டை நாகரிகத்தை அறிவதற்கு இன்று நமக்குக் கிடைத்துள்ள சான்றுகள், வட இந்தியாவில் புதையுண்ட நகரங்களாகிய மொகெஞ்சதாரோ, ஹரப்பா ஆகிய இரண்டுமேயாகும். திராவிடர்களாகிய தமிழர்களின் அகப் பண்பினை அறியப் போதிய சான்றுகள் கிடைத்தில வாயினும், புறநாகரிகத்தை அளந்து அறிந்துகொள்ளத் தேவையான சான்றுகள் காணக் கிடைக்கின்றன. திட்டமிட்டு அமைக்கப் பெற்ற அழகிய நகரங்கள், மாளிகைகள், வீடுகள், குளியல் அறைகள் முதலியவற்றைப் புதையுண்ட நகரங்களில் காண்கின்றோம். சங்க காலத்திற்கும் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே தமிழர்கள் மிகச் சிறந்த நாகரிகம் பெற்றவர்களாக விளங்கினர்கள் என்பதை இப்புதை பொருள்கள் நமக்கு அறிவிக்கின்றன.

**சங்க கால நாகரிகம்**

தமிழர்களின் பண்பட்ட நாகரிகத்தைச் சிறப்பாக அறிவதற்குப் பத்துப் பாட்டும், எட்டுத் தொகையும், பதினெண்கீழ்க் கணக்கும் போன்ற சங்க நூல்களும், சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காவியங்களும் துணைபுரிகின்றன. இந்நூல்களின் துணைகொண்டு தமிழர்களின் புறநாகரிகம் அகநாகரிகம் ஆகிய இரண்டினையும் அறியலாம். மனிதனுடைய வாழ்க்கைக்கு இன்றியமையாது தேவைப்படுவன உணவு,

உடை, உறையுள் ஆகிய மூன்றுமேயாகும். இம் மூன்றின் நிலை கண்டு தமிழரின் முழு நாகரிகத்தையும் மதிப்பீடு செய்யலாம்.

### உணவு

தமிழ் மக்கள் நிலங்களை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என ஐவகையாகப் பகுத்தனர். அவரவர்கள் இருந்த நிலத்திற்கு ஏற்ற உணவினை உண்டு வாழ்ந்தனர். உணவின் சிறப்பினைச் சங்க இலக்கியங்களில் ஒன்றாகிய பத்துப் பாட்டு தெளிவாக எடுத்துரைக்கின்றது.

வளம் நிறைந்த மக்கள் வெண்ணெல் அரிசிச் சோற்றை மனையில் வாழ்கின்ற பெட்டைக் கோழியின் பொரியலொடு உண்டு மகிழ்ந்தார்கள் என்பதை,

" வினைஞர்தந்த வெண்ணெல் வல்சி
மனைவாழ் அளகின் வாட்டோடும் பெருகுவிர் "

எனப் பெரும்பாணாற்றுப்படை எடுத்தியம்பு கின்றது.

அரசன் புலவர்களுக்கு விருந்திடுதல் அக்கால மரபுகளில் ஒன்று. பலவகையான உணவுப் பொருள்கள் விருந்தில் இடம் பெற்றன. அனைவரும் அருகில் அமரச் செய்து அவர்களோடு அரசனும் அமர்ந்து உண்டு மகிழ்ந்தான். பொன்கலத்தில் உண்ணுதல் சிறப்புக்குரியதாகப் போற்றப் பட்டது.

" ......................பல்வேறு அடிசில்
வாள்நிற விசும்பின் கோள்மீன் சூழ்ந்த
இளங் கதிர் ஞாயிறு எள்ளும் தோற்றத்து
விளங்கு பொன்கலத்தில் தான் நின்று ஊட்டி"
— சிறுபாண்.

வறுமையால் வாடி மெலிந்தவர்கள் பசியைப் போக்கிக் கொள்வதையே பெரிதாகக் கருதுவார்கள். ஆனல் வளம் பட வாழ்பவர்களோ! நாவின் உருசிக்கு அடிமைப்பட்டுப் புதிது புதிதான உணவு வகைகளைத் தேடி உண்டு மகிழ்ந்தார்கள் என்பதையும் சங்க இலக்கியங்களில் காணலாம். ஊனையும் உணவையும் உண்டு உண்டு சலித்தவர்கள், உணவில் மாற்றம் விரும்பி பாலிலும் பாகிலும் செய்த மென்மையான உணவுப் பொருள்களைப் பருகி மகிழ்ந்தார்கள் என்பதைப் புறப் பாடல்களில் காணலாம்.

" ஊனும் ஊனும் முனையின் இனிதெனப்
பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும்
அளவுபு கலந்து மெல்லியது பருகி "
(புறம் 381)

இத்தகைய சிறப்போடு உணவு வகைகளைச் சமைக்கக் கற்றுக் கொண்ட தமிழர் களிடையேயும், வறியவர்களும் வாழ்ந் தார்கள். செல்வர்கள் அவர்கட்கு வழங்கி வாழ மறந்தார்களில்லை.

### உடைச் சிறப்பு

தமிழர் நாச்சுவையோடு மட்டும் நின்ற வர்கள் அல்லர். உடையிலும் புதுமைகளைக் கண்டவர்கள். பருத்தி நூலினும், பட்டினும் நெய்த ஆடையை உடுத்தி மகிழ்ந்திருந் தார்கள். அவர்களுடைய ஆடைகள் ஆவியைப் போன்றும் புகையைப் போன்றும் மிக மென்மை வாய்ந்தவையாக இருந்தன. இழை சென்றது தெரியா வண்ணம் நுண்ணிய வேலைப்பாடமைந்த ஆடைகளும் பயன்படுத்தப்பட்டன. எலி மயிரானும் ஆடைகள் நெய்யக் கற்று இருந்தனர்.

" நூலினும் மயிரினும் நுழை நூல் பட்டினும் "
(சிலம்பு)

" ஆவியன்ன அவிர்நூல் கலிங்கம் "
(பெரும்பாண்)

" புகை விரிந்தன்ன பொங்கு துகில் " (புறம்)

" இழை மருங்கு அறியா நுழைநூல் கலிங்கம் "
(மலைபடுகடாம்)

இத்தகைய சிறப்பு வாய்ந்த ஆடைகளை இன்றுபோல் அல்லாது நாகரிகமாக உடுக்கவும் கற்றிருந்தனர். சிறந்த ஆடைகளை உடுத்துச் செல்வச் சிறப்போடு வாழ்ந்த தமிழர்களிடையேயும் (பாசியன்ன சிதர்வை—பெரும்பாண்) கந்தையை உடுத்து வாழ்ந்த மக்களும் இருந்தார்கள் என்று எண்ணும் பொழுது நெஞ்சம் கரைந்துருகுகின்றது. உடைச் சிறப்பு இவ்விதம் இருக்க இனித் தமிழர்தம் உறையுளைக் காண்போம்.

### உறையுள்

தமிழர்கள் நிலையான வாழ்க்கையைப் பெற்றவர்கள் மலை போன்ற பெரிய வீடுகளில் வாழ்ந்தார்கள். விண்ணைத் தொடுகின்றாற் போன்று உயர்ந்து விளங்கும் மாடங்கள், அம் மாடங்களின்மீது பறக்கும் பன்னிற வண்ணக் கொடிகள், வீட்டுச் சுவர்களில் தீட்டப் பெற்ற ஓவியங்கள், அவ் ஓவியங்கள் மூலம் வருங்காலப் பரம்பரையினருக்கு அறிவுறுத்தும் காதலும் வீரமும் நிறைந்த காவியங்கள், ஆறு கிடக்கின்றாற் போன்று விளங்கும் அழகிய நீண்ட தெருக்கள் ஆகிய இவைகள் எல்லாம் தமிழரின் சிறப்பு மிக்க நாகரிகத்துக்கு எடுத்துக்காட்டுக்களாகும். இதனை,

"விண் பொர நிவந்த வேயா மாடம்"
(பெரும்பாண்)

"மலையென மழையென மாடம் ஓங்கி"
(மலைபடு)

"ஆறு கிடந்தன்ன அகல் நெடுந் தெரு"
(மதுரைக் காஞ்சி)

எனச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

நெடுநல்வாடையில் பாண்டியன் நெடுஞ்செழியனது கட்டில் சிறப்பு கூறப்பட்டுள்ளது. தந்தத்தால் ஆன வேலைப்பாடமைந்த கட்டில், கட்டிலின் கால்புறமும் தலைப்புறமும் காதலும் வீரமும் விளங்கும் ஓவியங்கள், கட்டிலைச் சுற்றிலும் தொங்கவிடப்பட்டிருக்கும் முத்துக்கள், அன்னத்தின் தூவியால் அமைக்கப்பெற்ற மெத்தை, அம் மெத்தையின் மேல் விரிக்கப்பட்டுள்ள தூய்மையான விரிப்பு – இவைகள் எல்லாம் தமிழனின் கலைத்திறனால் படைக்கப்பெற்றவை. இத்தகைய அழகு ஒழுகும் கட்டிலின்மீது மன்னன் 'திருந்து துயில்' கொள்கின்றான். அம்மன்னனுக்கு ஏற்பட்ட உறக்கம் மெத்தையின் மென்மையைக் கண்டு எழுந்தது அன்று. 'இன்றைய கடமைகளைச் சரிவரச் செய்தோம்' என்ற மன நிறைவால் ஏற்பட்ட உறக்கமாகும். இத்தகைய நுண்ணுணர்வோடு இன்பத்தில் திளைத்தார்கள் எனினும் தமிழர்கள் கடமை உணர்வை மறந்தார்கள் அல்லர்.

இது போன்று தமிழர்கள் எல்லாத் துறையினும் சிறந்து விளங்கினார்கள். கடல் கடந்து வாணிகம் செய்தனர். சமயத் துறையில் சிறந்து விளங்கினர். அரசியல் நெறியையும் சமுதாய அமைப்பையும் தெளிவாக வகுத்தமைத்துக் கொண்டனர். தமிழர்கள் பிறருடைய உதவியின்றித் தனித்து இயங்கும் ஆற்றலைப் பெற்றிருந்தார்கள். இனி அவர் தம் அக நாகரிகத்தைக் காண்போம்.

### பொதுநோக்கு உடையவர்கள்

தமிழர்கள் சிறந்த குறிக்கோள் உடையவர்களாக வாழ்ந்தனர். எப்படியோ வாழ்ந்தால் போதும் என்று எண்ணாமல் இப்படித்தான் வாழவேண்டும் என்ற வரையறுத்த கொள்கை உடையவர்களாக இருந்தார்கள். வலியவர்களின் வலிமைக்குப் பயந்து வணங்கியவர்களும் அல்லர். எளியவர்களின் ஏழ்மையை எண்ணி ஏளனம் செய்தவர்களும் அல்லர். தங்களைப் பிறர் பாராட்ட வேண்டும் என்பதற்காகத் தமிழர்கள் தங்கள் கொள்கைக்கு முரணான செயல்களை ஒரு போதும் செய்திலர்.

'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்பது தமிழர்களின் மறைமொழியாகும். தமிழர்கள் பிறப்பில் உயர்வு தாழ்வு காணாத பெரு நோக்கு உடையவர்களாக இருந்தார்கள். 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்பது தமிழர் தலைமகனும் வள்ளுவனாரின் வாய்மொழி ஆகும். உலகிலுள்ள மக்களை எல்லாம் தங்கள் உடன் பிறப்பாகக் கருதி வாழ்ந்தவர் தமிழர். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்பது தமிழர்கள் உலகிற்கு அறிவுறுத்தும் பாடமாகும்.

### தனக்கென வாழாத் தகைமையாளர்

"தனக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மையானே"
(புறம்)

தமிழர்கள் தங்களுக்கு என எதையும் சேர்த்துக்கொண்டவர்கள் அல்லர். பிறர்க்காகவே வாழ்ந்து மாய்ந்தவர்கள். தனக்குக் கிடைத்த பொருள்களையும் பிறர்க்குக் கொடுத்து மகிழ்வதில் இன்பங்கண்டவர். தமிழர்களைப்போலவே தமிழ் மன்னர்களும் வாழ்ந்தார்கள். சிறிது பொருளாக இருந்தாலும் பகிர்ந்து உண்பார்கள்.

"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்" தமிழர்களின் தலையாய நாகரிகமாக இருந்தது. "செல்வத்துப் பயன் ஈதல்" என்பதை நன்கு அறிந்திருந்தார்கள். 'ஈ' என இரப்பதையும் 'ஈயேன்' என மறுப்பதையும் இழிவாகக் கருதினார்கள். 'கொள்' எனக் கொடுப்பதையும் 'கொள்ளேன்' என விடுப்பதையும் உயர்வாகப் போற்றினார்கள். உழைப்பில் நம்பிக்கையுள்ளவர்கள் தமிழர்கள். உழைப்பில் பெற்ற ஊதியத்தைத் தாங்களும் உண்டு பிறரையும் உண்பித்த பெருந்தகையாளர்.

### எண்ணியதை முடிக்கும் திண்ணியர்

தமிழர்கள் செயல் வீரர்கள். 'வினையே ஆடவர்க்கு உயிர்" என்பது அவர்கள் போற்றிவந்த கொள்கையாகும். பாண்டியன் நெடுஞ்செழியன் எண்ணியதை முடிக்கும் ஆற்றல் பெற்றவன். "என்மீது படை எடுத்த பகைவரை வென்று அடிப்படுத்தாவிடின் என் நாட்டு மக்கள் என்னைக் கொடியவன் என்று பழி தூற்றட்டும். மாங்குடி மருதனார்போன்ற தமிழ்ப் புலவர்கள் என்னைப் பாடாது ஒழியட்டும்" என்று சூளுரைத்துப் போர்புரியச் சென்றான். எப்படியோ பகைவரை வெல்ல வேண்டும் என்று கருதினான் அல்லன். போர்புரிவதிலும் அறநெறியைக் கடைப் பிடித்தவர்கள் தமிழர்.

மறைந்து நின்று அம்பு எய்தார்கள் அல்லர். இரவோடு இரவாக உறங்கும் நேரத்தில் ஊருக்குத் தீ வைத்தார்கள் அல்லர். இடமும் நாளும் குறித்து ஓலை போக்கினர். பெண்டிரும் பிணியுடையீரும் பாதுகாவலான இடத்தைத் தேடிக்கொள்ளுங்கள் என்று அவ்வோலையில் குறித்து அனுப்பினர். அத்தகைய அறநெறியாளர் தமிழர். நல்லனவே எண்ணினார்கள்; எண்ணியதை முடித்தார்கள்.

### அகம் புறம் கண்டவர்கள்

"காதல் அடைதல் உயிர் இயற்கை"

என்ற கொள்கையை உடையவர்கள் தமிழர். கண்கள் இரண்டும் ஒரு பொருளையே காண்பதுபோல, காதலனும் காதலியும் ஒருநோக்கு உடையவர்களாக இருந்தார்கள். ஒரே ஆடையைக் கிழித்து இருவரும் உடுத்துகின்ற நிலை வந்தபோதும் மனம் ஒன்றிய வாழ்க்கையையே நடத்தினார்கள். தந்தையும் தாயுமாக மகிழ்ந்து வாழ்ந்த நாட்களில் தங்க மதலையரை ஈன்றெடுத்தனர்

அம் மதலைச் செல்வங்கட்கு ஆயிரம் ஆயிரம் கருத்துக்களை ஊட்டி வளர்த்தனர்.

நாட்டிற்குள் பகைவர் நுழைந்தபோது, தாய்நாடு பிறன் கைப்பட்டபொழுது, தமிழர்கள் சகித்துக்கொண்டு இருந்தார் இல்லை. கொலை வாளினை எடுத்தார்கள். கொடியவர்கள் தலையைக் கொய்தார்கள். நாட்டு எல்லையைமட்டும் காத்தார்கள் இல்லை, நாட்டு மக்களையும் போற்றினர்கள். அறிஞர் சொற்படி ஆட்சி செலுத்தினன் மன்னன். மன்னன் வழியில் மக்கள் வாழ்ந்தார்கள். காதலும் வீரமும் தமிழர் களின் இரு கண்களாயின. அகத்தில் இன்பமும் புறத்தில் வீரமும் விளைய வாழ்ந்தார்கள் தமிழர்.

### இன்றைய நிலை

இவ்வாறு சீரும் சிறப்போடும் வாழ்ந்த தமிழர்களின் இன்றைய நிலை என்ன? நினைக்க நினைக்க நெஞ்சம் உருகுகின்றது. தமிழர்களின் புற நாகரிகம் எல்லைகடந்து சென்றுவிட்டது. உண்மையைச் சொல்ல எழுதக்கூட அஞ்சவேண்டியதாக உள்ளது. உண்மை வலியிழந்து நெடுநாட்கள் ஆகின்றன. பொய்யின் பொலிவு எங்குப் பார்த்தாலும் மலர்ந்து மணம் வீசுகின்றது. "பேய் நாகரிகம் தலைவிரித்து ஆடுகிறது" என்று திரு. வி. க. அவர்கள் எழுதுகின்றார். நாம் அன்றாடம் செய்தித்தாளில் காண்பது என்ன? கொள்ளை — கொலை — கொடுமை இவைகள் தானே?

தமிழர்கள் அறத்தில் வைத்திருந்த நம்பிக்கையை இழந்துவிட்டார்கள். போலி நாகரிகத்திற்கும் போலிப் புகழுக்கும் தங்களை அடிமைப்படுத்திக்கொண்டார்கள். தங்களுடைய நிலையை உயர்த்திக்கொள்ள தரந்தாழ்ந்த செயல்களையும் செய்ய முனை கின்றார்கள். உண்மைத் தொண்டு மதிப் பிழந்துவிட்டது. உண்மைத் தொண்டன் செல்லாக்காசாகிவிட்டான். விளம்பரங் களே பெரிதாக உள்ளன. அன்பும் அறமும் பண்பும் ஏட்டளவில் நின்று விட்டது. அறிவுரை கூறுபவர்கள் அதிக மாகிவிட்டார்களே அன்றி அதனை ஏற்று நடப்பவர்கள் குறைந்துவிட்டார்கள். இல்லை என்றும் சொல்லலாம்.

ஆடம்பரத்தையும் ஆரவாரத்தையுமே உலகம் மதிக்கின்றது. எளிமையும் அமை தியும் தூய்மையும் நிறைந்த வாழ்க்கையைப் போற்றுவாரில்லை. உழைத்து உழைத்துத் தரித்திரர் ஆகின்ற அதிசய நிலையை இங் கன்றி வேறு எங்கும் காண இயலாது. எத்தனை கோடி மக்கள் இருக்கின்றார்களோ அத்தனை கோடி கருத்து வேற்றுமைகள். இவைகள் எல்லாம் மாறவேண்டும் அல்லது மாற்றப்பட வேண்டும். அதற்கு ஒரே வழி மனித உள்ளங்கள் திருந்த வேண்டும். தமிழர்கள் தங்கள் நாகரிகத்தை, பழம் பெருமையை மீண்டும் நிலை நாட்ட வேண் டின், தங்கள் வருங்காலத்தைப்பற்றி எண்ணுவதோடு அமையாமல், வாழ்ந்த காலத்தைப்பற்றியும் சிந்திக்க வேண்டும். நம் முன்னோர்களின் அடிச்சுவட்டைப் பின் பற்ற வேண்டும்.

### கவிஞர் கண்ட கனவு

தமிழ்நாட்டு மக்கள் துன்பத்தில் உழன்று வருந்துவதாகக் கவிஞர் ஒரு கனவு கண்டார். அக் கனவில் கண்ட காட்சி அவர் உள்ளத்தை உருக்கியது. தமிழர்கள் தங்களைத் தமிழர் என்று சொல்ல, தலை நிமிர்ந்து நிற்க, தமிழ்க் கல்வி – தாய் மொழியில் கல்வி பயில வேண்டும் எனக் கூறுகின்றார். தாய் மொழிக் கல்வி துன்பத்தை நீக்கும். இன்பத்தைப் பெருக்கும். தூய்மையையும் வீரத்தையும் கொண்டு வந்து சேர்க்கும் என்பது அவர் கருத்தாகும்.

" இன்பத் தமிழ்க் கல்வி யாவரும் கற்றவர்
என்றுரைக்கும் நிலை எய்தி விட்டால்
துன்பங்கள் நீங்கும் சுகம் வரும் வாழ்வினில்
தூய்மை உண்டாகிடும் வீரம் வரும் "

மொழியை வளர்ப்பதோடு மட்டும் நமது முயற்சி நின்றுவிடுதல் கூடாது. நமது நாட்டை உலகிலேயே சிறந்த நாடக உருவாக்க வேண்டும். பகைவர்கள் நமது நாட்டை நினைக்கவும் அஞ்ச வேண்டும். இல்லாமையை நாட்டில் இல்லாமை ஆக்க வேண்டும். எதற்கெடுத்தாலும் பிறநாட்டை எதிர்பார்க்கின்ற இழிநிலை ஒழிய வேண்டும். மக்கள் மகிழ்ச்சியோடு வாழவேண்டும். தமிழர் நாகரிகம் போற்றப்பட வேண்டும். தமிழன்னை அரியணையில் அமர்ந்து ஆட்சி செலுத்த வேண்டும் என்பது அவர் அவா வாகும்.

"வேற்றுவர் படையெடுப்பு விளைந்ததே இல்லை
நாட்டில்
மாற்றுவோம் தமிழ் ஒழுக்கம் எனப் பிறர்
வந்ததில்லை
ஏற்பவர் இல்லை யாரும் இருப்பவர் ஆதலாலே,
சீற்றமே எவர்க்கு மில்லை சிரிப்பிலா
முகங்களில்லை "

" பிறர்நாட்டை எதிர்பார்க்கின்ற பிற்போக்கு
நிலைமை இல்லை
பிறர் நாட்டை தாய்நாடு என்பார் உள்நாட்டில்
பிழைப்பதில்லை
பிறமொழிகள் தமிழிற் சேர்க்கும் பேடிகள்
நுழைந்ததில்லை
அறம் முதல் நான்கு கூறும் தமிழ்மறை அலால்
பேறில்லை "

இத்தகைய சீரும் சிறப்பு மிக்க நாட்டை உருவாக்க வேண்டியது தமிழரின் தலையாய கடமையாகும்.

முடிவாக, தமிழினமே உலகில் தோன்றிய முதலினம். அவர் தம் நாடும் மொழியும் பழமை வாய்ந்தவை. அவர் தம் நாகரிகமே தொன்மையான நாகரிகம். சங்க காலத்தில் தமிழர்களின் நாகரிகம் உச்ச நிலையை அடைந்திருந்தது. புற நாகரிகத் திலும் அக நாகரிகத்திலும் சிறந்து விளங் கினர்கள். இன்றைய நிலைமையை எண்ணி, இனி அவர்கள் ஆற்ற வேண்டிய கடமையை உணர்வார்களாக !

"வீழ்ச்சியுறு தமிழகத்தில் எழுச்சி வேண்டும்
விசையொடிந்த தேகத்தில் வன்மை வேண்டும்
சூழ்ச்சிதனை வஞ்சகத்தைப் பொறுமை தன்னை
தொகையாக எதிர் நிறுத்தித் தூள்
தூளாக்கும்
காழ்ச்சிந்தை மறச் செயல்கள் மிகவும் வேண்டும்
கடல் போலச் செந்தமிழைப் பெருக்க
வேண்டும்".

— புரட்சிக்கவி பாரதிதாசன்

## தமிழ் மணிமாலை

தித்திக்கும் செந்தமிழே ; தேன்ஊற்றே ; கண்மணியே ;
எத்திக்கும் ஓங்குகின்ற இன்னமுதே — முத்திக்கும்
வித்தான பாலத்தால் வேர்விட்டுச் சிறந்தவளே
முத்தமிழே வாழ்க முனைந்து.

— புலவர், திரு. தி. இராமதாசு, அதிராம்பட்டினம்.

# முத்தமிழ்

புலவர், திரு. பால. கோவிந்தசாமி
தொட்டியம்.

[ இயல் இசை நாடகம் என்ற முப்பெரும் கூறுபாடுகளை உடையதாய் முத்தமிழ் எனப் போற்றிச்சிறப்பிக்கப்படுவது நமதருமைத் தமிழ்மொழி. மொழியின் தோற்றத்தைப் பல்வேறு காலத்தில் பல்வேறு பெருமக்கள் ஆய்ந்து முடிபுகள் சிலவற்றை விளக்கியுள்ளனர். என்றாலும், மொழித் தோற்றத்திற்கான உண்மையான அடிப்படையை ஆராயும் முயற்சி முற்றுப்பெற்றுவிடவில்லை. இந்நிலையில், இக்கட்டுரை யாசிரியர் புத்தாய்வு ஒன்றை நிகழ்த்திச் சுவையான முடிபொன்றைப் பேசுகிறார். முதலில் நாடகக் கூறுகள் கிளைத்த பிறகே, அதற்குத் துணையாக ஒலிக்கூறுகளாகிய இசை தோன்றியிருக்க வேண்டும் - அவ்வொலிகளை வரையறுத்து அமைத்த காலத்தேதான் இயல் என்பது அமையமுடியும் என நுண்ணிதின் ஆய்ந்து, நாடகம், இசை, இயல் என்பதே முறை எனநிறுவி, ஆயினும் அம்முறை நிறுத்தின் மூன்று கூறுபாடுகள் தெள்ளிதின் விளங்காது என்பதற்கே இதனை இங்ஙனம் தலைதடுமாற்றமாக உரைத்துள்ளனர் என்பதற்கு 'அவ்வழி வேற்றுமை' போன்ற இலக்கண வரம்பு காட்டி அழகுற இக்கட்டுரையை யாத்துள்ளார் ]

இவ்வுலகின் தோற்றத்தில் மக்கள் முதலில் விலங்கொடு விலங்காய் வாழ்ந்து வந்தனர். அவ்வாறு வாழ்ந்துவந்த காலத்தில் தங்கள் உணவினுக்கு விலங்குகளையே கொன்று பயன்படுத்தினர். அதுபோழ்து அவைகளைத் துண்டு செய்வதற்குக் கத்திபோன்றகருவிகள் தேவையாயிருந்தன. ஆயினும் அவர்கள் அக்காலத்தில் இரும்பு போன்ற உலோகங்களை அறியமாட்டார்கள். கற்களையே பயன்படுத்தினர். எனவே கத்தி போன்ற கருவிகளையெல்லாம் கல்லிலேயே செதுக்கிக்கொண்டனர் கற்கால மக்கள்.

முதலிலே அவர்கட்குப் பேசவுந் தெரிந்திராது. இஃது மொழி நூல் வல்லுநர்கள் கண்ட உண்மையாகும். எவ்வாறெனில் மொழியானது எடுத்ததுமே மக்களிடம் உண்டாவதில்லை. முதலில் சைகையாய் இருந்துப் பின் அச் சைகையின் அடியாகப் பிறப்பதே மொழியாகும். எனவே அக் கற்கால மக்கள் கத்திபோன்ற கருவிகள் தேவையாய் இருந்தால் அவற்றால் செய்யப்படும் தொழிலாகிய வெட்டுதல் முதலிய தொழில்களைச் சைகையின்மூலம் காட்டினர். மிருகங்களை வேட்டையாட வில், அம்பு போன்றவைகள் தேவையாய் இருந்தால் 'வில் எய்வது' போன்ற நிலையில் சைகை செய்து காட்டினர்.

மனிதர்கள் ஆதியில் மிருகங்களின் தோல், தழைபோன்றவைகளை ஆடையாக உடுத்திவந்தனர். ஆடை தேவைப்படும் போது உடுத்துவதுபோன்ற சைகை செய்து காட்டி அவற்றைப் பெற்றனர். மற்றும்

நெருப்பைச் சிக்கிமுக்கிக் கற்களாலேயே உண்டாக்கினர். நெருப்பு தேவையாயிருந் தால் அக் கற்களைத் தேய்ப்பதுபோன்ற சைகைசெய்துகாட்டினர். கிழங்கு முதலிய வைகளை உணவாகக்கொண்டனர். எனவே அது தேவைப்படும்போது தோண்டுதற்குரிய கருவியினுக்குத் தோண்டுதல் போன்ற சைகை செய்து அக் கருவியினைப் பெற்றனர். ஆகவே முதன்முதலாக மக்களிடை எந்த ஒன்றினைப் பெறுவதாய் இருந்தாலும், அவர்கட்கு தெரியாமையால், அதனல் ஆகும் தொழிலைச் சைகை செய்து காட்டிப் பெற்றனர். இவ்வாறு மக்களின் கூட்டு வாழ்க்கையில் முதலில் சைகை பிறந்தது.

இவ்வாறு தோன்றிய சைகைக்குப் பின்னர் மொழி தோன்றியது. அஃது மொழியன்று. மொழிக்கு அடிப்படையாய் அமைந்த ஒலிக்கூட்டங்கள். இசையின் முதல்நிலையான ஒலிக்கூட்டங்கள். நாம் விரும்பும் ஒரு செயல் முடிவடைய ஒரே வழி இருப்பதைக்காட்டிலும், இரு வழிகள் இருக்குமேயானல் மிகவும் எளிதாக இருக்கும். தேங்கியுள்ள நீர்வெளியே செல்ல ஒரு வாய்க்கால் இருப்பதைவிட இரண்டிருந்தால் விரைவில் வெளிச் செல்லும். அதைப்போன்றதே முற்கூறிய கருத்துமாகும்.

ஒருவரை அழைக்க விரும்பும்போது சைகையால் மாத்திரம் அழைப்பதைவிட அச் சைகையொடு 'வா' என்ற ஒலியையும் எழுப்பி அழைத்தால் அவர் எளிதில் புரிந்துகொண்டு வருவார். வெட்டுதற்றொழி லுக்கு வாள் தேவைப்படின் அதனலாகும் தொழிலைச் சைகை செய்து கேட்பதைவிட, அச் சைகையொடு 'வாள்' என்ற ஒலியையும் எழுப்பிக் கேட்டால் மிக எளிதில் அறியலாம். எனவே சைகையும் ஒலிக்கூட்டமும் சேர்ந்து ஒன்றனை விளங்கச் செய்தன. நாளடைவில் ஒலி தனித்துச் சைகையின்றியே அக்கருத்தினை விளக்கவே சைகை விலகுவதாயிற்று. ஆயினும் நாகரிகம் வளர்ந்துள்ள இன்றைய நிலையிற் கூட, நாம் இரண்டினையும் சேர்த்தே வழக்கில் வைத்திருக்கின்றோம். எடுத்துக் காட்டாக, நாம் ஒருவரை அழைக்கும்போது அதற்குரிய கைச் சைகையையும் செய்கின் றோம்; 'வா' என்றும் விளிக்கின்றோம். இவ்வாறு இசைக்கு முதற் படியான ஒலி — ஓசை உண்டாயிற்று.

இந் நிலையில் மக்கள் பன்னூறாண்டுகள் வாழ்ந்தபிறகே மொழி தோன்றியது. மக்கள் கூட்டமும் பெருகிற்று. நாளடைவில் நாகரிகமும் வளர்வதாயிற்று. மக்களும் ஒருவரோடொருவர் மிகவும் நெருங்கிப்பழக வேண்டியவராயினர். அவ்வாறு பழகும் போது அவர்களிடையே சொற்கள் எண்ணற்றனவாய் உண்டாயின. இவை இம்முறையில் வழங்கிச் சென்றால், சில நூற்றாண்டுகட்குள் மொழியானது பல்வகை மாறுபாடுகளைப் பெற்றுச் சிதைந்தேபோகும் என்று கண்டனர். எனவே அச்சொற்களின் ஒலிகட்கேற்ற வரி வடிவங்களை உண்டாக் கினர். பேச்சு வழக்கில் இருந்த மொழி யானது எழுத்து வடிவம் பெற்றது. இம் முறையில்தான் இயற்றமிழுக்குக் காரண மான எழுத்து தோன்றியது.

மேற்கூறிய இக்கருத்துக்களை மனத்தில் இருத்திப் பார்ப்போமாயின் கீழ்க் காணும் முடிவைத்தான் கொள்ள முடியுமே யன்றி இதற்கு மாறான வேறொரு கருத்தை எவ்வகையிலும் கொள்ள முடியாது. அஃதாவது, முதலில் நாடகம் தோன்றியது; அடுத்து முறையே இசையும் இயலும் தோன்றின. இவ்வாறன்றி, ஒரு சில அறிஞர்கள் வழக்கில் உள்ள இயல், இசை, நாடகம் என்ற முறை வைப்பினாலேயே

இயற்றமிழ் முதலில் தோன்றிற்று. அதற் கடுத்தே இசையும் நாடகமும் தோன்றின என்று கூறுகின்றனர். அஃது பொருத்த முடையதன்று. அதற்கு மேற் கூறிய வைகளே யன்றி இன்னுஞ்சில காரணங்கள் காட்டமுடியும்.

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்"
(தொல் – பொருள் – அகத் – டுந)

என்ற விடத்துத் தொல்காப்பியர் கூட நாடக வழக்கினையே முதற்கண் குறிக் கின்றார். பவணந்தியார் புணர்ச்சி இன்ன தென்பதைக் குறிக்குமிடத்து,

"மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்களும்
தன்னொடும் பிறிதொடும் அல்வழி வேற்றுமைப்
பொருளிற் பொருந்துழி நிலைவரு மொழிகள்
இயல்பொடு விகாரத் தியைவது புணர்பே"

என்று கூறியுள்ளார். முதலில் உள்ளது உயிர். அடுத்தது மெய். அம்முறையில் கூறாது 'மெய்யுயிர்' எனக் கூறியுள்ளார். காரணம் என்னை எனின் அவர் கூற விரும் பியது உயிரெழுத்தும், மெய்யெழுத்தும் என்று. மெய்யுயிர் என்றால், மெய்யும் உயிரும் என்று விரும்பியவாறு அமைக்க முடிகிறது. 'உயிர் மெய்' என்று மாற்றிக் கூறியிருந்தால் அது இரண்டினைக் குறிக்காது 'உயிர்மெய்' ஆகிய ஒன்றனையே குறிக்கும்.

மற்றும் இதே நூற்பாவில் "அல்வழி வேற்றுமை" என்றும் கூறியுள்ளார். இதையும் இவ்வாறு கூறாது மாற்றிக் கூறி யிருந்தால் அல்வழி, வேற்றுமை என்ற ஈரிடங்களையும் குறிக்காது, வேற்றுமை யல்லாத வழி என்ற ஓர் இடத்தினையே குறிக்கும். இக்காரணம் பற்றியே மாற்றிக் கூறியுள்ளார்.

இம்முறையிலேயே இயல், இசை, நாடகம் என்ற இம்மூன்றும் அமைக்கப் பட்டுள்ளதாகக் கொள்ள வேண்டும். இம் முறையினை மாற்றிவைத்தால் இசையியல், நாடகம் என்று அமையும். தொல்காப்பியர் பிறப்பியல், புணரியல் என்று பாகுபாடு செய்யுமிடத்து எழுத்துக்களின் பிறப்பு, அவை புணர்ந்தியங்கும் முறை ஆகிய தன்மைகளைத் தொகுத்துக் கூறியுள்ளார். அவ்வாறே இசையியல் என்றால் இசையைப் பற்றித் தொகுத்துக் கூறுமிடம் என்றுதான் அமையும். அவ்வாறன்றி நாடகவியலிசை என்று கூறினும் நாடகத்தைப் பற்றிக் கூறு மிடம் என்றே அமையும். இவ்வகையில் எவ்வாறு முறைமாற்றி அமைப்பினும் இயல், இசை, நாடகம் என்னும் மூன்றுந் தோன்றாமல் இரண்டே தோன்றும். எனவே தான், இவைகளையெல்லாம் நன்கு ஊன்றி உய்த்துணர்ந்த நம் முன்னோர்கள் இவ்வாறு அமைத்துள்ளனர். இதனாலேயே இயல், இசை, நாடகம் என்பன முறையே தோன்ற வில்லை என்பது மேற்கூறியுள்ள காரணங் களால் வலியுறும்.

சைகையினடியாகப் பிறப்பது நாடகம் என்பது முன்னரே கூறப்பட்டுள்ளது. தொல்காப்பியரே நாடக வழக்கினைக் கூறி யுள்ளார். எனவே நாடகமானது அவர் காலத்திற்கு முன்பே திருந்திய இலக்கண முடையதாக இருந்திருக்கிறது. நாடகத் தமிழானது கற்றவராலும், மற்றவராலும் போற்றிப் புகழப் படுவதொன்று. கல்லா மாக்கட்கு நல்லறிவு புகட்ட வேண்டின், நூலாக வெளியிட்டால் அவர்களால் நுகர்ந்தின்புற முடியாது. அவர்கள் படித் தறியாதவர்கள் தானே! எனவே அக்கருத் தினையே நாடகமாக அமைத்து நடிக்கச் செய்தால் நன்குணர்ந்து போற்றுவர். கற்ற வர்களைப் பற்றியோ கூற வேண்டுவதில்லை. எனவேதான் நாடகத் தமிழானது எல்லோ ரையுமே தன்வயப்படுத்தும் வன்மை உடைய தாகின்றது.

ஒலியினடியாகப் பிறப்பதே இசை என்பதையும் கண்டோம். எழுத்துக்கள் அவைகளுக்குரிய கால அளவைக் கடந்து ஒலித்தலும் உண்டு. அவை அவ்வாறு அளவு கடக்கும் நிலை இசையொடு கூடிய யாழ்நூலிடத்ததாகும்.

> ''அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
> உளவென மொழிப; இசையொடு சிவணிய
> நரம்பின் மறைய என்மனர் புலவர் ''
>
> (தொல் – எழுத் – ங௩)

என்றும் தொல்காப்பியர் கூறியுள்ளார். அவர்காலத்திற்கு முன்பே 'இசைத்தமிழும்' சிறந்த இலக்கண அமைப்பை உடையதாய் இருந்ததென்பதும் பெறப்படுகிறது. இசையானது செவிக்கு இன்பம் பயப்பது: கவலையில் ஆழ்ந்துள்ள மக்கட்குக் களிப்பை அளிக்கவல்லது. ஆறறிவு பெற்ற மக்களென்ன, அதற்குக்குறைந்த அறிவு படைத்த கொடிய விலங்குகளையும் மயக்க வல்லது. எனவே இசையும் எல்லோராலும் விரும்பப் படுவதொன்று.

இயற்றமிழானது ஏட்டிலுள்ள உரை நடையும் செய்யுளுமாகும். கற்றறிந்தோர் கூட்டத்திடையே மட்டிலும் பழகி வருவது. வாழ்க்கை, மொழி, செய்யுள் ஆகிய வற்றிற்கு வரம் பமைத்த இலக்கணம், அது அமையப் பெற்ற இலக்கியம் ஆகிய இவைகள் அனைத்தும் இயற்றமிழின் பாற் படும். இயலிசை நாடகம் என்றவிம் மூன்றும் ஒன்றோடொன்று கலந்தியங்கு மாறல் ஒவ்வொன்றும் சிறப்படையும்.

நாடகத் தமிழானது கண்ணிற்குக் காட்சியின்பமும், செவிக்குக் கேள்வியின் பமும் பயக்கின்றது. இசையும் இயலும் கேள்வியின்பம் மட்டிலும் பயந்து செல்கின்றன. இம் மூன்றும் தமிழின் கண்ணே சிறந்து மல்கிக் கிடக்கின்றன. எடுத்துக் காட்டாகச் 'சிலப்பதிகாரம்' ஒரு முத்தமிழ்க் காப்பியம். தேவாரம் போன்றவைகள் பக்திச் சுவையைப் பயப்பதோடு இசையொடு பாடவும் ஏற்றனவாயமைந்தன. தொல்காப்பியம், சங்க நூல்கள், மற்றும் தற்கால நூல்கள் முதலியன இயற்றமிழ் வகையின. இன்ன பிற காரணங்களால் இயலாற் சிறந்தது தமிழ்! இசையாற் சிறந்தது தமிழ்!! நாடகத்தாற் சிறந்தது தமிழ்!!! என்று துணிந்து கூற முடியும். வளர்க தமிழ்! வாழ்க தமிழ் நெறி!!

## தமிழ் மணிமாலை

> நெஞ்ச நினைவெல்லாம் நீயானய்; பிள்ளைமையின்
> கொஞ்சும் மழலையிலே கூத்திடுவாய் – தஞ்சமென
> உன்னை அடைந்தார் உயர்ந்திட்டார் செந்தமிழே
> என்னே இயல்பிருந்த வாறு
>
> — புலவர், திரு. சிவ. ஆறுமுகம், ஆலத்தம்பாடி.

# சிலம்புதந்த சேயிழை

டாக்டர். திரு. ச. அகத்தியலிங்கம், எம். ஏ., பி. எச். டி., ( U. S. A. ) பி. எச். டி. ( கேரளா )

*மொழியியற் பேராசிரியர், அண்ணுமலைப் பல்கலைக்கழகம்*

[ நெஞ்சையள்ளும் சிலம்பென்ற மணியாரத்தில், ஒருமா மணியாய்த் திகழும் கற்பின் கொழுந்தாம் கண்ணகியை, இளங்கோவடிகள் மனையறம் படுத்த காதை தொடங்கி, வழக்குரை காதை ஈருக மெள்ள மெள்ள வளர்த்துச் சென்று, கனலும் புனலுமாகக் காட்டி, அப்பெருமாட்டியின் பண்பு நலன்களை நம் நெஞ்சங்களில் ஊன்றித் தான் படைத்த பாத்திரத்தின் நிலை பேற்றில் தன்னையும் வாழ்வித்துக்கொள்ளும் அருமைப்பாட்டினை அகச் சான்றுகள் காட்டி அழகுற அமைக்கிறது இக்கட்டுரை. இளங்கோவின் கைவண்ணத்தால் தீட்டப்பட்ட அமர ஓவியமாகிய கண்ணகியின் வாழ்க்கை யோட்டத்தின் முடிவில், பெண்மையின் தண்மையும் – சீற்றமும் இத்தகையது என இனங்கண்டு, சிலம்புதந்த சேயிழையின் வாழ்வில், தமிழ்ப் பெண்களின் இயல்பு நலன்கள் இணைந்து நிற்கும் அருமைப்பாடு காட்டி இக்கட்டுரையை எண்ணத்திற்கு விருந்தாக்குகிருர் கட்டுரை ஆசிரியர் ]

கிறிஸ்து பிறப்பதற்குப் பல நூற்றுண்டு களுக்கு முன்பே சிறந்ததொரு இலக்கியப் பாரம்பரியத்தைப் படைத்திருந்த பெருமை உடையது தமிழ் மொழி. அக்காலத்தி லேயே பலவேறு இலக்கிய வகைகளைப் பெற்றிருந்தது இம் மொழி. இத்தகைய இலக்கிய வகைகளில் காப்பியமும் ஒன்று. இன்று தமிழர்களிடையே வாழும் காப்பி யங்களில் தலைசிறந்து விளங்குவது சிலப்பதிகாரம். காலத்தால்மட்டுமின்றிக் கதையிலும் காப்பியத்திறனிலும் தனித் தன்மை பெற்று விளங்குவது இத் தமிழ்க் காப்பியம்.

சிந்தையை அள்ளும் இச் சிலப்பதி காரம் பண்டைத் தமிழ் மக்களின் நயத்தக்க நாகரிகத்தையும் வளத்தக்க வாழ்வு முறை யினையும் காட்டும் காலக் கண்ணுடியாய் நம் கண்முன்னே காட்சிதந்து நிற்கின்றது. வரலாற்றுக் காப்பியமாய் விளங்கும் இந் நூல் தமிழ் மக்களின் சமுதாயத்தைப் படம் பிடித்துக்காட்டும் ஓவியமாகவும், குறிப் பாகக் கற்பெனும் திண்மை உண்டாகப் பெற்ற பெண்களின் பெருமை பேசும் காவிய மாகவும் ஒளிபெற்று, காலதேவனையும் கடந்துநிற்கும் ஆற்றல்பெற்று விளங்குகிறது.

பெண்மை நலன்களைப் பெருமைபடப் பேசும் இக்காப்பியத்தின்கண் எத்தனையோ மகளிர்களைக் காணுகிறோம். கற்புக்கரசி எனக் கருதப்படும் கண்ணகி, குணக் குன்றென விளங்கும் கோப்பெருந்தேவி, மாதவி, மாதரி போன்ற எத்தனையோ மகளிர் வாயிலாக அவர்களின் நலன்களை யெல்லாம் காட்டுவார் இளங்கோவடிகள். எனினும், கண்ணகி நலன்பலபடப் பாராட் டப்படுவதைக் காணலாம். கண்ணகியின்

பாத்திரப் படைப்பில் இளங்கோவடிகள் பெண்களின் சிறப்புக்கள் பலவற்றை ஆங்காங்கே காட்டிச் செல்லுதல் காணலாம். எனினும் அவர்களிடையே காணப்படும் பண்புகளில் விஞ்சி நிற்கும் மாண்பொன்றையே கண்ணகியின் பண்பின் கருவாக அமைத்துக் கதையை நடத்திச் செல்லும் இளங்கோவடிகளின் திறன்தான் என்ன எனக் காண்போம்.

பெண்களின் நலன்களெல்லாம் சிறக்கப் பெற்றவள் கண்ணகி. இத்தகைய காப்பியத் தலைவியை முதல் காதையிலேயே அறிமுகம் செய்துவைக்கிறார் இளங்கோவடிகள். அவள் உடல் அழகையும், உள்ள அழகையும் தெரிந்தெடுத்த இரு உவமைகளால் நம் உள்ளங்களில் பதியவைக்கிறார் அவர். பெண்களுக்கு இன்றியமையாத இந்த இரு நலன்களையும் நம் கண்முன்னே நிறுத்தி அவள் பல்வேறு நலன்களைக் காட்டிச் செல்லும் அவருடைய திறம் போற்றி மகிழ்வதற்குரியது.

அழகே உருக்கொண்டு வாழும் இலக்குமியின் அழகினைத் தனதாக்கி விளங்குகிறாள் கண்ணகி என்று கூறும் இளங்கோ, அதே மூச்சில் அவள் கற்பில் அருந்ததி எனவும் கூறுவார். இலக்கிய வாழ்வில் இணையற்று விளங்கும் அருந்ததியைக் கொண்டு கண்ணகியின் கற்பை மாசு மறுவற்றதாகக் காட்டுவார் அவர். அருந்ததி என்றதும் நம் கண் முன்னே பல நிகழ்ச்சிகள் வந்து நிற்கும் என்பதை இளங்கோவடிகள் நன்கு உணர்வார்.

தன்னுடைய கணவனுக்கல்லாது பிற எவருக்கும் காண முடியாத அழகினைக் கொண்டு விளங்கியவள் அருந்ததி என்பதை நாம் அறிவோம். தீக் கடவுள் சில பத்தினிப் பெண்டிர்களைத் துய்க்கத் துணிந்ததும் இதை உணர்ந்த அவன் மனைவி சுவாகள தேவி இக்கொடுமையை எண்ணிப் பத்தினியர்களின் சாபம் தன் கணவனுக்கு வரலாகாது எனப் பயந்து தன் கற்பின் திறத்தால் அப்பெண்களின் வேடம் தாங்கித் தன் கணவனுக்கு இன்பம் அளித்து மகிழ்ந்ததும் ஆனால் அருந்ததியின் வடிவத்தை அடைய முடியாத நிலையில் நாணிக் கோணி நின்றதும் நாம் அறிந்த செய்திகள்.

இத்தகைய சிறந்த அருந்ததியைப் போன்ற உள்ள அழகினைக் கொண்டு விளங்கியவள் கண்ணகி என்பதையும், பிறர் நெஞ்சு புகாமல் பெண்கள் குலமெல்லாம் ஏத்திப் புகழும் பெற்றி பொருந்தியவள் அப்பத்தினித் தெய்வம் என்பதையும் இளங்கோ,

"போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்
தீதிலா வடமீனின் திறமிவள் திறமென்றும்
மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் பெயர் மன்னும் கண்ணகியென் பாள்மன்னோ"

என்று கூறி நிற்பார்.

இத்தகைய உடலழகும் உள்ளவழகும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற கண்ணகி தமிழ் நாட்டுப் பெண்களின் நலன்களெல்லாம் ஒருசேரப் பெற்றவளாக வாழ்ந்து வந்தமை காணலாம். தன்னுடைய அழகையெல்லாம் உண்டு உயிர்த்து உற்று நின்ற கோவலன்,

"மாசறு பொன்னே வலம்புரிமுத்தே
காசறு விரையே கரும்பே தேனே
அரும்பெறற் பாவா யாருயிர் மருந்தே
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே
மலையிடைப் பிறவா மணியே யென்கோ
அலையிடைப் பிறவா வமிழ்தே யென்கோ
யாழிடைப் பிறவா இசையே யென்கோ
தாழிருங் கூந்தற் றையால்"

எனத் தன் உள்ளத்துத் தோன்றும் உணர்ச்சிகள் அனைத்தையும் உலவாக் கட்டுரைக் யாக்கிப் பாராட்டுகின்ற நிலையிலும் பதில்

ஏதும் பேசாது நின்ற காட்சி தமிழ்ப் பெண் மணிகளின் பண்பினைக் காட்டும் பெற்றிய தாக அமைந்துள்ளது. தன்னுடைய அழகினையோ அல்லது தன்னுடைய பெருமையினையோ கணவன் போற்றினும் கூடப் பெருமை கொள்ளாது தன் நிலை தவறாது வாழ்ந்த கண்ணகி தெய்வத் தன்மை பெற்றதில் வியப்பு ஏதும் இல்லை.

பலவாண்டுகள் வாழ்விழந்து வருந்திய நிலையிலும் கணவனே தன் தெய்வம் என வாழ்ந்து நின்றாள் அம்மங்கை நல்லாள். வாடிக் கலங்கிய நிலையிலும் உள்ளத்தில் எந்த விதக் கலக்கமுமின்றி வாழ்ந்தாள் கண்ணகி. அவளுடன் வாழ்ந்த தேவந்தி சோம கண்டம், சூரிய குண்டம் என்ற பொய்கைகளில் நீராடினால் கணவனோடு வாழும் பேறு பெறுவாய் என்று கூறிய நிலையிலும் கூடப் 'பீடன்று' எனப் பெருமையுடன் இருந்த நிலையைக் காணுகிறோம். தன்னுடைய கணவனை அடைவதற்குக் கூட வேறு ஒரு தெய்வத்தை வணங்க நினையாத பெற்றி பெற்றவள் கண்ணகி.

> "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யு மழை"

என்று கூறிய வள்ளுவன் வழியில் வந்தவளல்லவா அவள்?

தன்னை விட்டுப் பிரிந்த நிலையிலும் மாற்றாள் ஒருத்தியின் கணவனாகக் கோவலன் வாழ்ந்த நிலையிலும் கணவனின் இன்பமே தன் இன்பம் என வாழ்ந்தாள். கண்ணகி கணவனின் வாழ்வே தன் வாழ்வு என எண்ணினாள். சிறுகுணம் படைத்தோர் சிறுகின்ற நிலையில் பெருங்குணம் கொண்டவளாகக் குன்றேறி நின்றாள் அப் பத்தினித் தேவி. மாதவியின் நட்பில் குன்றென இருந்த செல்வம் அனைத்தையும் இழந்த கோவலன் கானல் வரியினால் மாதவியை விட்டுக் கண்ணகியின் வீடு வருகிறான். அவன் சிந்தனையில் பெரியதொரு தேக்கம். குன்றென இருந்த நிலை மாறி இல்லை இல்லை என்ற ஏக்கம். அதனால் ஏற்பட்ட நாணம், இந்நிலையில் கண்ணகியின் வாடிய மேனியைக் காணுகிறான். வருந்திய உள்ளத்தைப் பார்க்கிறான். என்ன செய்துவிட்டோம் என்ற கழிவிரக்கம் அவனை வாட்டுகிறது; வருத்திப் பிழிகிறது. தன் சிந்தனையில் தான் செய்துவிட்ட சிறுமையை நிறுத்தி,

> "சலம்புணர் கொள்கைச் சலதியொ டாடிக்
> குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைத்த
> இலம்பா டு நாணுத் தரு மெனக்கு"

எனக் கூறிக் குறையிரக்கிறான். பொருள் இல்லையே என நாணுகிறேன் என்று கூறிய கணவனுக்கு ஆறுதல் தருகிறாள் கண்ணகி. புன்முறுவல் பூத்துப் புதுப் பெண்ணாகக் காட்சி தருகிறாள். மெல்ல நகைத்து இன்முகம் காட்டி இதோ என் சிலம்பு எனக் கூறுகிறாள் கண்ணகி. எத்தனை பண்பு! எத்தனை பெருந்தன்மை! எத்தனையோ ஆண்டுகள் தனக்கு வாழ்வு இல்லை; அழகிருந்தும் அனுபவம் இல்லை. செல்வமிருந்தும் செயலில்லை. கணவன் இருந்தும் கைம்பெண்ணான நிலை. இத்தனை கொடுமைக்கும் காரணம் கோவலன் என்பதை அவள் அறிவாள். எனினும் கணவனின் இன்பமே தன் இன்பமென நினைத்தாள். இதனால்தான் இலம்பாடு நாணுத்தரும் எனக்கு என்ற நிலையில் "சிலம்புள கொண்ம்" எனக் கூறி நிற்கும் குணக்குன்றை, கற்புக்கரசியை நம்மால் காண முடிகிறது. இத்தகைய நலம்பெற்ற கண்ணகி, காப்பியத்தின் தன்னிகரில்லாத தலைவியாகத் திகழ்கிறாள். மாடலன் முதல் மாதரி ஈறாக உள்ளவர்கள் அனைவரும் பாராட்டும் பண்பு பெற்றவளாக விளங்குகிறாள். மனையறம்படுத்த காதைக்குப் பின்னர்க் கனாத்திற முரைத்த காதையில் தான், கண்ணகியைக் காண்கிறோம். இதன்

பின்னர் மனிதப் பண்பு கொண்ட அவள் தெய்வப் பண்பு கொண்டவளாக மாறி நிற்கின்ற காட்சியைப் படிப்படியாக வளர்த்துச் செல்கிறுர் இளங்கோவடிகள்.

மதுரை செல்லும்பொழுது கண்ணகியும் கவுந்தியடிகளும் வேட்டுவரைக் காணு கின்றனர். கொற்றவைக்கு விழவு அயரும் வேட்டுவர் விழாவிலே தெய்வமுற்று ஆடும் சாலினி கண்ணகியைக் காணுகிருள். மலர்கள் போன்ற சிறிய அடிகள் நொந்து வருந்தக் கணவனுடன் காடுகள் பல கடந்து வந்த கண்ணகி, தெய்வமாகக் காட்சி தருகிருள். இக்காட்சியை இளங்கோ வடிகள் சாலினியின் வாயிலாக,

> " இவளோ கொங்கச்செல்வி குடமலையாட்டி
> தென்றமிழ்ப் பாவை செய்ததவக்கொழுந்து
> ஒருமா மணியா யுலகிற் கோங்கிய
> திருமா மணி "

எனக் கூறுகிருர். கண்ணகி கொங்க நாட்டுச் செல்வி; குடமலை நாட்டின் கொழுந்து, தமிழ் நாட்டுப் பாவை என் றெல்லாம் கூறியும் அமையாத கவிஞர் உலகிற்கு ஒரு மாமணியெனத் தோன்றிய பாவை எனக் கூறிக் கூறி மகிழ்கிருர். 'தமிழ் நாட்டின் சிறிய பகுதியின் செல்வி மட்டும் அல்லள்; அனைத்துத் தமிழ் நாட்டுச் செல்வியாகக் காண விரும்புகிருன் கவிஞன். அதனேடும் அமையவில்லை கவிஞனின் உள்ளம். புகார் பெற்றெடுத்த பெண்ணரசியைத் தமிழ் நாட்டுப் பாவை யாகக் கண்ட கவிஞன், உலகத்தின் மாமணியாகக் காணுகிருன்; படிப்படியாக வளர்ந்து செல்கிருள் அப் பத்தினிதேவி. தமிழ் இலக்கியத்தில் காணப்படும் கற்புடை மகளிர்க்கெல்லாம் கலங்கரை விளக்கமாக மிளிர்கிருள் கண்ணகி.

கவுந்தியடிகளைக் கண்டபொழுது உள்ளத்தால் வணங்கி நிற்கிருள் கண்ணகி. அத்தனை அளவிற்குப் பெருமை பெற்ற கவுந்தியடிகள், கண்ணகியின் பண்பு பல வற்றைக் காணும் வாய்ப்பு பெறுகிருர். சாலினி உரைத்தன கேட்டு, 'பேதுறவு மொழிந்தனள் மூதறிவாட்டி' என்று கூறி அரும்பெறற் கணவனும் கோவலனின் புறத்தே ஒடுங்கி நின்ற பெண்மையைக் கண்டாள் கவுந்தியடிகள். கண்ணகியின் பெருமையைக் கண்டாள் 'வம்பப் பரத்தையும் வறுமொழியாளனும் உடன் வயிற்ருேர்கள் ஒருங்குடன் வாழ்க்கைக் கடவதும் உண்டோ? கற்றறிந்தீர்' எனக் கூறியதும் தன் சின்னஞ்சிறு கைகளால் செவிகளைப் பொத்தி நாணி நடுங்கிக் கோணி நின்ற நிலையில் கண்ணகியின் நாணத்தைக் கண்டாள். இத்தகைய பண்புகளைக் கண்ட நிலையில்தான் கவுந்தி அடிகளும் கண்ணகியைத் தெய்வமாகக் காணுகிருள். கவிஞன் இதனை,

"கற்புக்கடம் பூண்ட வித்தெய்வ மல்லது, பொற்புடைத் தெய்வம் யாங் கண்டிலமால்" என வணங்கி நிற்கின்ற நிலையைக் காணுகிருேம். கவுந்தியடிகள் அப்பழுக்கற்ற ஒரு துறவி; அதிலும் எல்லோராலும் மதிக்கப்பெறுகின்ற மாண்பு பெற்றவர். இத்தகைய கவுந்தியடிகளே கண்ணகியைக் கற்பின் கொழுந்து என்றும் "காணவியலா பொற்புடைத் தெய்வம்" என்றும் புகழ்கின்ற ஒரு பெரு நிலையைக் கொண்டு விளங்குகிருள் பத்தினித்தேவி கண்ணகி.

இத்தகைய பண்பு நலன்கள் இருந்த காரணத்தால்தான் தன் மென்மையையும் துன்பத்தையும் எண்ணுது கணவனேடு மதுரை செல்ல விழைகிருள். கணவன் வருக எனக் கூறியவுடன் மதுரை எத்தனை தூரம் என அவள் எண்ணவில்லை. அவளுடைய சிந்தனையில் எந்தவிதத் தேக்கமும் இல்லை; தன் சின்னஞ்சிறு கால்களால் செல்லுதற்

கரிய வழியில் செல்லமுடியுமா என்ற சிந்தனையே அவளுக்கு எழவில்லை. மெல்லியளாக வாழ்ந்தவள் கண்ணகி. சிவந்த மென்மையான பாதங்களைக்கொண்ட அவள் நடந்து அறியாதவள். அவளது பாதங்களின் செம்மையையும், பாதையின் வன்மையையும் இளங்கோவடிகள் பல இடங்களில் கூறுவது நயம்மிக்குத் தோன்று வதாகும். அடைக்கலக் காதையில் மாதரி யிடம் கண்ணகியின் பண்பு நலன்களைப் பாராட்டிப் பேசும்போது,

"என்னொடு போந்த விளங் கொடி நங்கை தன்
வண்ணச் சீறடி மண்மக ளறித்திலள்
கடுங்கதிர் வெம்மையிற் காதலன் றனக்கு
நடுங்கு துயரெய்தி நாப்புலர வாடித்
தன்றுயர் காணாத் தகைசால் பூங்கொடி"

என்றும், நாடு காண் காதையில்

"பாடகச் சீறடி பரற்பகை யுழவா
வாரிடை யிட்ட நாடு நீர் கழிதற்கு
அரிதிவள் செவ்வி அறிகுநர் யாரோ"

என்றும் கூறுதல் கண்ணகியின் மென்மை யைக் காட்டும்.

காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து ஒரு காத தூரம் நடக்குமுன்பே தன்னுடைய அடிகள் வருந்த ஆருத் துயர் உழன்ற நிலையில்

"முதிராக் கிளவியின் முள்ளெயி றிலங்க
மதுரை மூதூர் யாதென"

வினவும் கண்ணகியைக் காணுகிறோம். துன்பநிலையிலும் இன்பமான முறுவல். அது அன்பின் எல்லையில் பூத்தது.

சிலம்பில் வரும் ஒவ்வொரு பாத்திரமும் கண்ணகியின் பண்பினைப் பாராட்டுதல் காண்கிறோம். கொடுமைகள் பலபுரிந்த கோவலனும் கூடக் கொலைக்களக் காதை யில் பலபடப் பாராட்டுகிறான்; தன்னுடைய குறைகள் எல்லாம் கூறி இத்தனை செய்தும் நடு இரவில் என்னுடன் மதுரை வா வெனக் கூறியவுடனே குறையெதுவும் இன்றி எழுந்துவிட்டாயே கண்ணகி? என் செய் தாய்? என்று இரங்கிக் கூறும் நிலையில், கோவலனின் திருந்திய நிலையை விட கண்ணகியின் மாண்புநிலையே மிகுந்து நிற் கிறது எனக் கூறலாம். இதைக்கேட்ட கண்ணகியோ தமிழ்ப் பெண்களுக்கே உரிய நிலையில் அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும் இழந்தேனேயன்றி வேறு எதுவும் இல்லை என்று கூறித் தன் துன்பத்தை மறைத்து நின்றாள். இந்நிலையில் தான் கோவலன்,

"குடிமுதற் சுற்றமும் குற்றிளை யோரும்
அடியோர் பாங்கு மாயமு நீங்கி
நாணமு மடனு நல்லோ ரேத்தும்
பேணிய கற்பும் பெருந்துணை யாக
என்னொடு போந்தீங் கென்றுயர் களைந்த
பொன்னே கொடியே புனைபூங் கோதாய்
நாணின் பாவாய் நீணில விளக்கே
கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வி"

என்று கூறி நிற்பதும் படித்துப் படித்து மகிழ்வதற்குரியது. மனையறம் படுத்த காதையில் கோவலன் கண்ணகியின் புற நலன்களையெல்லாம் உலவாக் கட்டுரை யாகக் கூறுவதும் இங்கே அவள் அக நலன்களையெல்லாம் கூறிக்கூறி இரங்கு வதும் காப்பிய ஓட்டத்தில் நாம் காணும் வளர்ச்சியைக் காட்டுவனவாக உள்ளன.

மென்மையும் நாணமும் கொண்டு வாழும் அதே கண்ணகி, கணவன் கொலை செய்யப்பட்டான் என்ற செய்தியைக் கேட்டதும் புதியதொரு பண்பினைக் கொண்டு பொங்கி எழுகின்ற நிலையைக் காணலாம். தன் கணவன் கொல்லப் பட்டான் என்ற செய்தியைக் கேட்ட கண்ணகி, பொங்கி எழுந்தாள்; அழுதாள், அவலம் மிகக் கொண்டு அரற்றினாள்; இறுதியில் விழுந்தாள். முழு நிலவு

முகிலோடு தரையில் விழுந்ததைப்போன்ற காட்சியைத் தன் கற்பனைக் கண்களில் காணுகிருர் இளங்கோ.

பொங்கி யெழுந்தாள் விழுந்தாள் பொழிகதிர்த்
திங்கன் முகிலோடுஞ் சேணிலங் கொண்டெனச்
செங்கண் சிவப்ப வழுதாடன் கேள்வனை
எங்கணு அ வென்றே யினைந்தேங்கி மாழ்குவாள்

எனக் கூறி நிற்கிருர் சிலம்புதந்த அந்தச் செம்மல்.

இதுவரையிலும் நாணத்தின் சாயலாக விருந்த கண்ணகி, மென்மையின் கொழுந்தாக விளங்கிய மாநாய்கன் மகள், சீறி நிற்கிற நிலையைக் காணுகிருேம். சாலினி பாராட்டியபொழுது கோவலனின் புறத்தே ஒதுங்கிநின்றவள் ஆய மகளிரை அழைத்துக் கேளுங்கள், கேளுங்கள் என்று கூறி நிற்கக் காணுகிருேம். காய்கதிர்ச் செல்வனை அழைத்து 'என் கணவன் கள்வனு?' எனக் கேட்குமளவிற்குத் திறம்பெற்றுவிடுகிருள். கணவனின்றித் தனியே சோமகுண்டம் செல்லத் தயங்கிய கண்ணகி தன்னந்தனியே அரண்மனை செல்கிருள். வாயிலைக் காக்கும் காவலன் அவளுடைய கண்களுக்குச் சிறுமையுடையவனுகத் தோன்றுகிருன். அவனை வினை கொள்ளும் வேகத்தில்

"வாயி லோயே! வாயி லோயே!!
அறிவறை போகிய பொறியறு நெஞ்சத்
திறைமுறை பிழைத்தோன் வாயி லோயே!!!"

என்று கூறி அரசனின் திறம் பிழைத்த தன்மையை இடித்துக் கூறும் அளவுக்கு வன்மைபெற்ற நிலையைக் காணுகிருேம். மன்னனையே "தேரா மன்னு" என எடுத்த எடுப்பிலேயே அழைத்துவிட்ட அஞ்சா நெஞ்சினைக் காணுகிருேம். தன்குடிப் பெருமையையும் அரசர் குலப் பெருமை யையும் காட்டி அவனை இடித்துரைக்கிருள். அவள் சொல் ஒவ்வொன்றிலும் திண்மை யைக் காணுகிருேம்; திறத்தினைக் காணு கிருேம். வம்பப் பரத்தரின் கூற்றினைக் கேட்டு நாணி நின்ற கண்ணகியா இவள் என எண்ணி வியக்கிருேம். கணவனின் பின்னே ஒதுங்கி பேதுறவு மொழிந்தனள் மூதறிவாட்டி என்று நின்ற நாணத்தின் சாயலா, இவ்வாறு வெதும்பிப் பேசுகிறது என்ற உணர்வினை உள்ளம் கொள்ளக் காண்கிருேம். அவள் பேச்சில்தான் எத்தனை வேகம்! எத்தனை வன்மை! அவள் சிந்தையில் வீரம்; செயலில் தீரம்; இத்தனைக்கும் காரணம் தன் கணவனுக்கு ஏற்பட்ட பழிச்சொல்தான். தற்காத்துத் தற்கொண்டான் பேணி என வள்ளுவன் வகுத்துச் சென்றுனே அவ் வழியையே கண்ணகி இடத்தில் காணுகிருேம்.

இதுதான் தமிழ்ப் பெண்மணிகளின் தனிப்பண்பு. அஞ்சுவது அவர்களது இயல், நெஞ்சில் நாணுவது அவர்களது பொது நிலை. மடமும் பயிர்ப்பும் பரம்பரை பரம் பரையாக அவர்களிடம் காணப்படும் பண்பு. அஞ்சுவதற்கு அஞ்சுவர். நாணுவதற்கு நாணுவர். ஆனல், தம் கற்புக்கோ கடமைக்கோ இழுக்குவரின் பொங்கி யெழுவர். வீரத்தின் இருப்பிடமாகவும் தீரத்தின் நிலைக்களனுகவும் நிற்பர். வேண்டு மானுலும் உயிரையும் ஈவர். அன்ன நடை யாகவிருக்கும் அவர்களது நடை நிமிர்ந்த நன்னடையாக மாறும். குனிந்த பார்வை நேர்கொண்டு நிற்கும். அஞ்சா நெஞ்சும், வஞ்சின மொழியும் அவர்களை நடத்திச் செல்லும். இப்பண்பைத்தான் கருவாக அமைத்துத் தன் காப்பியத்தை நடத்திச் செல்கிருர். முற்பகுதியில் கண்ணகியின் மென்மையைக் காணுகிருேம். பிற்பகுதியில் அவள் தன் திண்மையைக் காணுகிருேம். மனையறம் படுத்த காதையில் அவள் உடல முகைக் காணுகிருன் கோவலன்; கொலைக் களக் காதையில் அவள் உள்ளப் பாங்கினைக் காண்கிருன். இதுதான் கோவலனிடமும் கண்ணகியிடமும் நாம் காணும் வளர்ச்சி. காப்பிய ஓட்டத்தில் இத்தகைய உணர்ச்சி களை வளர்த்துச் செல்கிருன் இளங்கோ. அதில் சிறந்ததொரு வெற்றியும் அடைந்து விட்டான். அதனல்தான் அவன் நம் மிடையே வாழ்கிருன். அவன் ஆக்கிய சிலம்பும் வாழ்கிறது,

# சிலம்பின் முதன்மொழி - 'திங்கள்'

பேராசிரியர், திரு. ஆ. சிவலிங்கனார்,
முதல்வர், சுப்பிரமணியம் தமிழ்க் கல்லூரி, மோகனூர்.

[ 'திங்களைப் போற்றுதும் – திங்களைப் போற்றுதும்' எனத் தொடங்கி ஏறுநடையிடும் சிலப்பதிகாரத்தின் முதன் மொழியாகத் 'திங்கள்' என்ற சொல்லை இளங்கோவடிகள் அமைத்தமை எதனால் என்ற ஆய்வினை உட்கொண்டு, சில காரணங்களை இக்கட்டுரையாசிரியர் இங்கே வரிசைப் படுத்திக் காட்டுகிறார். திங்கள் என்ற சொல்லே முதன்மையாதற்குச் சிறந்தது என்று கருதி முன்வைத்தார் என உரை வரைந்து சென்ற அடியார்க்கு நல்லாரின் கருத்துக்கு வெளிப்படையான நோக்கம் இன்னது என உணரக்கூடாவிடினும், பல்வேறு கோணங்களில் சிந்திப்பது புதிய ஆய்வுகளுக்கு வழிகோலும் என்ற நம்பிக்கையில் இக்கட்டுரை வடிக்கப் பட்டிருப்பதாக அறியமுடிகிறது ]

சிலப்பதிகாரம் என்னும் பெயரால் பாட்டுடைச் செய்யுள் நாட்டத் தொடங்கிய இளங்கோவடிகள், முதலில் மங்கல வாழ்த்துப் பாடல் தொடங்கியபோது, நூலின் தொடக்கத்தில் மங்கல மொழி அமைக்க வேண்டுமாதலின், 'திங்கள்' என்ற மங்கல மொழியை அமைத்துத் 'திங்களைப் போற்றுதும்' எனத் தொடங்கினர்.

நூலுக்கு உரையெழுதிய அடியார்க்கு நல்லார், திங்களை முதல் மொழியாக வைத்துத் தொடங்கியதற்குக் காரணம் கூறுவார், "திங்களை முற்கூறினர்; இத் தொடர்நிலைச் செய்யுட்குச் சிறந்த முதல் மொழி அதுவாதலின்" என்றெழுதினர். ஞாயிறு கூறிய பின்னர்த் திங்களைக் கூறியிருக்கலாம். ஞாயிறு வெப்பமானது; திங்கள் தண்ணியது; ஆதலின் திங்களைக் கூறினர் போலும். மங்கல மொழியாதற்கு ஞாயிற்றினும் திங்களே சிறந்ததாதலினாலும் திங்களை முற் கூறினர். திங்கள், ஞாயிறு, மாமழை என்ற மூன்றினையும் போற்றுதும் எனக் கூறவந்த இளங்கோவடிகள், தாம் பாடும் நூலுக்குத் திங்களே முதல்மொழி யாவதற்குச் சிறக்கும் எனக் கருதியே அதனை முதலில் அமைத்தார் எனக்கருதினர் அடியார்க்கு நல்லார். இப்படி அவர் கருதக் காரணம் யாதாம் என நாம் கருத வேண்டுவதே. அறிஞர் ஆய்வுக்குரியது என்ற அடிப்படையில் எனக்கு எட்டிய சில கருத்துக்களை இங்கு எழுதுகின்றேன்.

1. சிலம்பின் சிறந்த உறுப்பினர்கள் கோவலன், கண்ணகி, மாதவி ஆகிய மூவராவர். மற்றையார் கதை நிகழ்ச்சிக்குரிய உறுப்பினர்கள். அவருள் மாதவி புகார்க் காண்டத்திலும், கோவலன் மதுரைக் காண்டத்திலும் முடியக் கண்ணகியே

வஞ்சிக் காண்டம் வரையிலும் வரும் உறுப் பினளாக இருத்தலின், சிலம்புக் கதை கண்ணகிக் கதையாக ஆகும். மங்கல வாழ்த் துப் பாடல் அறிமுகத்தில் கண்ணகியை முன்னதாக அறிமுகப் படுத்தியதற்குக் காரணம், 'கதைக்கு நாயகியாதலின் முற் கூறினர்' என அரும்பதவுரைகாரர் எழுதி யிருப்பதும் காணலாம். திங்களைப் பெண் ணுகவும் ஞாயிற்றை ஆணுகவும் கூறுவ துண்டு. எனவே கதைக்கு நாயகியாகிய கண்ணகிக்கு ஏற்பப் பெண்ணுகக் கூறக் கூடிய திங்களை முற்கூறினர் இளங்கோ வடிகள் என்னலாம்.

2. திங்கள் ஞாயிற்றுடன் சேர்ந் திருந்து பின்னர்ப் பிரிவது; பிரிந்து பலநாள் தனித்துப் பின்னர்க் கூடுவது. அந்நிலையில் கண்ணகி கோவலனுடன் மணம் புணர்க்கப் பட்டுச் சிலநாள் கூடியிருந்து பின்னர்ப் பிரிந்து துன்புற்றுப் பின் சேர்ந்தவள். இந் நிலையில் கதை செல்லுதலின் திங்கள் முதல் மொழியாவதற் கேற்றதேயாம்.

மனையறம் படுத்த காதையில், கோவலனும் கண்ணகியும் நிரைநிலை மாடத்து அரமியம் ஏறியிருந்த போது,

> "முதிர்கடல் ஞாலம் முழுவதும் விளக்கும்
> கதிர்ஒருங்கு இருந்த காட்சி போல"
> (சில, 2. 30 - 31)

இருந்ததாக அடிகள் கூறியதும் கண்ணகிக் குத் திங்கள் பொருந்தும் என அறியலாம்.

'ஒருங்கிருத்தல் இல்பொருள் உவமை' என அடியார்க்கு நல்லார் எழுதியுள்ளார். ஞாயிறும் திங்களும் ஒருங்கிருத்தலை நம் கண்ணுல் காணமுடியாது. அதனல் இல் பொருள் உவமை யென்றூர். இப்படிக் கூறியதால் அடியார்க்கு நல்லார், கோவலனும் கண்ணகியும் இனிப் பிரிவர் ஆதலின் இப்படியே ஒருங்கிருத்தல் இயலாது என்ற கருத்தையும் நமக்கு உணர வைத்தார். எனவே திங்களின் நிலை கண்ணகிக்கு உண்டாதலின் திங்கள் முதல் மொழியாதற்குச் சிறந்ததே.

3. கோவலன் மாதவியைப் பிரிதற்குக் காரணமான கானல் வரிப் பாடலின் முதற் பாடலின் முதற் சொல்லே 'திங்கள்' என்பது தான். "திங்கள் மாலை வெண்குடையான்" எனத் தொடங்குகிறது. சிலம்பின் கதைக் குரிய பெரிய திருப்பம் இவ்விடந்தானே.

4. மதுரை நோக்கிக் கவுந்தியடி களுடன் கோவலனும் கண்ணகியும் சென்ற போது இடைவழியில் வெய்யிலில் செல்ல இயலாமல் இரவிடைச் செல்லுதற்கு உறு துணையாய் அமைந்தது திங்களே.

5. கோவலன் கள்வன் எனப்பட்டுக் கொலைப்பட்டான் என்பது கேட்டுக் கண்ணகி புலம்பித் துன்புற்று யாவரும் கேட்க ஞாயிற்றினை நோக்கிக் 'கள்வனு என்கணவன்?' எனக் கேட்க, ஞாயிறு வான் ஒலியாகக் 'கள்வன் அல்லன்' என உரைத் ததும் கண்ணகி திங்கள் நிலையினள் என்பதை உணர்த்தும்.

6. திங்கள் ஒளியுடையது; என்ருலும் களங்கமும் உடையது. கதைக்குரிய கோவலன், மாதவி, கண்ணகி ஆகிய மூவரும் புகழ்ப்பாட்டுக்குரியவரே யெனினும் களங்கமும் உடையவராவர்.

கோவலன், கருணை மறவன் (சில : *15 : 53.*) இல்லோர் செம்மல் (சில: *15 : 90.*) செல்லாச் செல்வன் (சில : *15 : 75.*) எனப் பலவாறு மாடலனுல் புகழப்படும் புகழ்ப் பாடுடையவனுக இருந்தாலும், கண்ணகி யைப் பிரிந்து மாதவிபால் சென்றதும், சென்று அவளை (கானல்வரியில்) ஐயுற்று நீங்கியதும் பெருங் குற்றமாகும். இவை அவனுக்குள்ள களங்கமாவன.

மாதவி, கோவலனுக்கு ஊடலும் கூடலும் அளித்து மகிழ்ச்சியூட்டி அவனை அன்றிப் பிறன் ஒருவனை நினையாமல் குல மகளுக்குரிய குணங்களோடு இருந்து யாவராலும் புகழற்பாட்டுக்குரியவளாக இருந்தாலும், கானல் வரியில் தானும் பிறன் ஒருவனை மனதில் நினைத்திருப்பது போல் கோவலனுக்குப் படும்படியாகப் பாடிக் கோவலனை ஏமாற்றிக் குலமகளுக் குரிய நற்குணம் இழந்து விலைமகளுக்குரிய குணத்தைக் கொண்டது அவளுக்குரிய களங்கமாகும்.

கண்ணகி செங்குட்டுவனால் தெய்வ மாக்கப்பட்ட புகழ்ப்பாடுடையவள். என்ற லும், பாண்டிய நாட்டை எரியூட்டிய மறக் கற்பால், செங்குட்டுவனின் தேவி இளங்கோ வேண்மாளின், கற்புச் சிறப்பால் கண்ணகி யானவள் பாண்டியன் தேவிக்குப் பிற்பட்டவளே என்னும்படிக் களங்கம் உடையவளானாள். இவ் வகையில் சிறப்புடைக் கதைத் தலைவர்களின் தன்மை களைக் கொண்டு பார்க்கையில் திங்கள் இந் நூலுக்குச் சிறந்த முதல் மொழியே என்னலாம்.

7. சோழனை உட்கொண்ட புகார்க் காண்டம், கோவலன் கண்ணகியைப் பிரிந்தது, மாதவி கோவலனிடம் தவருகப் பாடிக் குணம் குறைந்தது ஆகிய குறை பாடுகள் (களங்கம்) உடையதாதலாலும், பாண்டியனை உட்கொண்ட மதுரைக் காண்டம் கோவலனைக் கள்வன் எனக் கொலைப்படுத்திய குறைபாடு (களங்கம்) உடையதாதலாலும், புகார்க் காண்டத் திலும், மதுரைக் காண்டமே களங்கச் சிறப்புடையதாதலாலும் களங்கத்தைக் காட்டிக்கொண்டே ஒளிவிடும் திங்கள், நூலின் முதல்மொழியாகச் சிறப்பதில் நயமும் உண்டு.

சிலப்பதிகாரத் தொடர்நிலைச் செய்யு ளுக்கு முதல்மொழியாவதற்குச் சிறந்தது 'திங்கள்' என அடியார்க்கு நல்லார் எழுதியதற்குக் காட்டிய காரணங்கள் அறிஞர்க்கு எவ்வாறாயினும் சிந்தனையைத் தூண்டின் அதுவே சாலும்.

**தமிழ் மணிமாலை**

வள்ளுவர்க்கும் பின்வந்த வற்ருத கற்பனையின்
தெள்ளுதமிழ்க் கம்பனுக்கும் திக்கெட்டும் – அள்ளுறித்
தித்திக்கப் பாட்டிசைத்த தேவார மூவருக்கும்
முத்தமிழே நியலவோ மூச்சு

— புலவர், திரு. சி. பரஞ்சோதி, சென்னை.

# கல்வெட்டுக்களில் சங்கச் செய்திகள்

வித்துவான், திரு. வே. மகாதேவன்,
திருப்பனந்தாள்.

[ ஒரு நாட்டின் முழுமையான வரலாற்றை உணர்தற்கு இலக்கண இலக்கியங்களோடு, கல்வெட்டுச் செய்திகளும் மிகத் துணை புரியக்கூடும் என்பதை இக்கட்டுரைக்கண் ஆசிரியர் விளக்க வருகிறார். கடைச்சங்கக் காலத்ததென எண்ணப்படும் சில கல்வெட்டுக்கள் துணைக்கொண்டு, புதிய வரலாற்று ஒளிச்சுடர்களை ஏற்றமுடியுமென்பதனை விளக்குவதோடு, இலக்கியச் செய்திகளின் உண்மையினை ஒப்புநோக்கியறியவும், உறுதிப் படுத்தி மகிழவும் கல்வெட்டாராய்ச்சி பயன்படும் வண்ணம் காட்டுகிறது இக்கட்டுரை. கல்வெட்டுக்களைப் பற்றிய முழு அறிவும் எய்தப்பெறும்போது எண்ணற்ற வரலாற்று உண்மைகளைத் தமிழர்கள் பெற்றே தீருவர் என்ற நம்பிக்கை ஒளி ஊட்டும் இக்கட்டுரை ஒரு அரிய முயற்சியாகவே திகழ்கிறது ]

சங்க காலச் செய்திகளை இலக்கண இலக்கிய நூல்கள் பல கூறுகின்றன. கல்வெட்டுக்களோடு இலக்கியச் செய்திகள் பல ஒத்துக் காணப்பெறுகின்றன. இலக் கியங்களுட் கூறப்படாத சங்ககாலச் செய்தி களும் சில கல்வெட்டுக்களுட் கூறப்படு கின்றன. 'தற்காலத்தே படித்து முடிக்கப் பெற்றுள்ள தமிழ்க் கல்வெட்டுக்கள் சில சங்ககாலத்தின' என அறிஞர் பெருமக்கள் உறுதியாக உரைக்கின்றனர். கல்வெட் டுக்கள், செப்பேடுகள் முதலியவற்றுள் சங்க கால வேந்தர்கள், புலவர்கள் பற்றிக் காணப் பெறும் செய்திகளனைத்தையும் தொகுத்தல் இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## அரசர் வரலாறு

### வடிம்பலம்ப நின்ற பாண்டியன்

கடைச் சங்ககாலத்துக்கு முற்பட்ட வனாக இப்பாண்டியன் திரு. சதாசிவ பண்டாரத்தாரால் குறிக்கப் பெறுபவன். "நிலம் தந்த பேருதவிப் பொலந்தார் மார்பின் நெடியோன்" என மதுரைக் காஞ்சி (வரி 60-61) குறிப்பது இவனையே ஆகும்.

செல்விநகர்ப் பெரும்பற்றப் புலியூர் நம்பி எழுதியருளிய திருவாலவாயுடையார் திருவிளையாடல், "மதுரையை அழிக்கவந்த கடல் வற்றும்படிப் பாண்டியன் ஒருவன் வேலை எறிந்தான்; கடல் வற்றியது; அவன் கால்களைக் கழுவியது. எனவே இவன் வடிம்பலம்ப நின்ற பாண்டியன் எனப் பட்டான்" என்று குறிப்பிடுகிறது;

" மாலைமுடி யோன்வேலை வடிம்பலம்ப நின்றதனல்
வேலைவடிம் பலம்பநின்றான் என்றெங்கும்
விளங்கியதால் "

என்பது நம்பியின் திருவாக்கு.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடுங்கால்,

"முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"

எனக் குறிக்கிறார். வடிம்பலம்ப நின்ற பாண்டியன் கடல் தெய்வத்துக்கு விழா எடுத்ததனையும், பஃறுளி யாற்றினை வெட்டியமையையும், வடிம்பலம்ப நின்றதனையும் இப்பாடலும் இதன் பழைய குறிப்புரையும் காட்டுகின்றன.

"அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி
வடிவேல் எறிந்த வான் பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக்கோடும் கொடுங் கடல் கொள்ள"

(காடுகாண் காதை. 17 – 20)

என்ற சிலப்படிகளிலும், கல்லாடம் 78-வது பாடலிலும் இவ்வரலாறு குறிக்கப் பெறுகிறது.

வேள்விக்குடிச் செப்பேடு, 'எல்லா அரசரும் அழிந்த பின்னரும் ஒரே ஒரு வேந்தன் – பாண்டிய மன்னன் உயிர்வாழ்ந்ததாக' வடமொழிப் பகுதியில் கூறுகிறது.

"மிசையொடு விண்மிஞெடுபோர் மிக்கெழுந்த
கடற்றிரைகள்
சென்றுதன் சேவடிபணிய அன்றுநின்ற ஒருவன்"

எனச் சடையவர்மன் பராந்தகனின் செப்பேட்டிலும்,

"செம்மணிப் பூணெடும் தோன்றித் தென்தமிழின்
கரைகண்டும்
வெம்முனைவேல் ஒன்றுவிட்டும் விரைவரவிற்
கடல்மிட்டும்"

என மூன்றும் இராசசிம்மனுடைய சின்னமனூர்ச் செப்பேட்டிலும்,

"மன்னர்பிரான் வழுதியர்கோன் வடிம்பலம்ப
மாக்கடலை எறிந்தருளி" [நின்றருளி

எனப் பராந்தக பாண்டியன் மெய்க் கீர்த்தியுள்ளும் குறிக்கப் பெறும் வரலாற்று நிகழ்ச்சி இப் பாண்டியனைப் பற்றியதே என்று கூறலாம்.

## பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி

பல்யாகசாலை முதுகுடுமியைப் பற்றிப் புறநானூற்றில் ஐந்து பாடல்கள் உள்ளன. நெடுஞ்சடையன் பராந்தகனின் வேள்விக் குடிச்செப்பேடு 'சங்ககால அரசன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி வேள்விக்குடி என்னும் ஊரினை ஏற்படுத்திக் 'கொற்கை கிழான் 'நற்கொற்றன்' என்ற அந்தணனுக்குத் தந்தான்" என்ற – இலக்கியத்தே காட்டப் பெறாத – ஒரு செய்தியினைக் கூறுகிறது. இதனைக்

"கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர்
குழாம்தவிர்த்த
பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி எனும்
பாண்டியாதி ராசனால்
நாகமா மலர்ச்சோலை நளிர்மிசை வண்டலம்பு
பாகனூர்க் கூற்றமெனும் பழனக்கிடக்கை
நன்னாட்டுச்
சொற்கனளர் சொலப்பட்ட சுருதிமார்க்கம்
பிழையாத
கொற்கைகிழா னற்கொற்றன் கொண்டவேள்வி
முற்றுவிக்கக்
கேள்வியந்த ணாளர்முன்பு கேட்கவென்
றெடுத்துரைத்து
வேள்விச்சாலை முன்புநின்று வேள்விக்குடியென்
றப்பதியை
......நீரோட்டிக் கொடுத்தமையின்......"

என்னும் செப்பேட்டுப் பகுதியால் அறியலாம்.

## தலையாலங்கானப் போரும், நெடுஞ்செழியனும்

சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும், சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறையும், வேளிர் ஐவரும் ஒன்றுகூடி மதுரையைச் சூழ்ந்தனர். பாண்டியன் நெடுஞ்செழியன் 'நகுதக்கனரே' எனத் துவங்கும் புறப்பாடலைப் பாடி வஞ்சினம் மொழிந்தான்; எழுவரையும் புறங்கண்டான். பகைவரைக் கொன்று பகைநாடு கைப்பற்றினான். இச்செய்தி

யினைப் புறநானூறு நெடுநல் வாடை முதலிய சங்க இலக்கியங்கள் காட்டு கின்றன.

தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் என்பது தலையாலங்கானம் என்ற இடத்தில் இப்போருடற்றி வென்றதனையே காரணமாகக் கொண்டு அமைந்த பெயராகும். இவ் வேந்தன் தனக்குச் சமமான சேரன், சோழன் என்னும் இருவேந்தரையும் கொன்றதனைத்

"தலையாலங் கானத்தில் தன்னெக்கும் இருவேந்தரைக்
கொலைவாளில் தலைதுமித்தும் குறைத்தலையின் கூத்தொழித்தும்"

என மூன்றும் இராசசிம்மனின் சின்ன மனூர்ச் செப்பேடு குறிக்கிறது. சடைய வர்மன் பராந்தகனின் தளவாய்புரச் செப் பேட்டில், 'ஆலங்கானத் தமர் வென்று ஞாலங்காவல் நன் கெய்தியும்' என்ற வரியில் இப்போர் குறிக்கப் பட்டுள்ளது.

திருநெல்வேலி மாவட்டத்தில் மீனட்சி புரம் என்னும் சிற்றூரில் உள்ள மலைக் குகையில் உள்ள கல்வெட்டுக்கள் இரண்டு, பாண்டியன் நெடுஞ்செழியன் பற்றிக் குறிக் கின்றன. இக்கல்வெட் டொன்றில் நெடுஞ்செழியன் 'பணவன்' 'கடலன்' என்ற பாண்டியர் குலப்பெயர்களோடு கூறப் பெறுகிறுன். மற்ருென்று 'நெடுஞ் செழியனின் சகளன் (ஸாலகன்) இளஞ் செழியன் தந்தை செழியன்' என்று கூறுகிறது.

திரு. ஐ. மகாதேவன் அவர்கள் இக் கல்வெட்டு, கிறித்துவிற்குக் காலத்தால் முற்பட்டது. எனவே பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனையோ அல்லது ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியனையோ குறிக்காதென்பர். ஆரியப் படை கடந்தவன் சிலப்பதிகாரக் காலத்தவன். தலையானங் கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் கி. பி. யில் ஆண்டான் என்று உறுதியாகக் கூறவியலாது. இக் கல்வெட்டிற் கண்டவன் இவனேயாதல்கூடும்.

### சங்ககாலச் சேரர்

திருச்சிக் கருவூரினின்று பத்துக் கல் தொலைவில் புகளூர் என்னும் ஊர் உள்ளது. அங்குள்ள ஆறுநாட்டார் மலையில் வேலா யுதம்பாளையம் மலைக்கோவிலுக்குத் தென் புறம் உள்ளது கல்வெட்டு; சங்கச் சேரர் மரபினைக் கூறுகிறது. தென்புறக் குகையில் இரண்டு பழந் தமிழ் எழுத்துக் கல்வெட்டுக் கள் உள. சேரன் இளங்கடுங்கோ இளங் கோவாகிய ஞான்று யாற்றூரினன் செங் காயபனுக்குப் பாழி அமைத்தளித்ததனை இக் கல்வெட்டுக் கூறுகின்றனது. பதிற்றுப் பத்து ஏழாம்பத்தின் தலைவனுகிய செல்வக் கடுங்கோ வாழியாதன் கோ ஆதன் செல் லிரும்பொறை எனவும், இளங்கடுங்கோ, பெருங்கடுங்கோ எனக் குறிக்கப்படுவோர் 8, 9 பத்துகட்குரிய பெருஞ்சேரல் இளம் பொறை, இளஞ்சேரல் இரும்பொறை ஆவர் எனவும் ஐ. மகாதேவன் கூறுகிருர். இவர் பாலை பாடிய பெருங்கடுங்கோ என வும், மருதம் பாடிய இளங்கடுங்கோ எனவும் கூறப்படும் வழிவழிக் கருத்தினை ஆதார மாகக் காட்டுகிருர். கல்வெட்டு, கோ ஆதன் செல்லிரும்பொறைமகன் பெருங்கடுங் கோன் மகன் ளங்கடுங்கோ ளங்கோ ஆகி' என இம் மரபைக் கூறுகிறது.

## இலக்கிய வரலாறு

### குறள் செய்யும் அழகு

'நூலெல்லாம் வள்ளுவர் செய் நூலாமோ' என்று போற்றிப் பழந்தமிழர் இலக்கியங்களில் குறட் கருத்துக்களை வழங்கினர். புதுக்கோட்டைத் திருமையம்

தாலுகா நெய்வாசல் அகத்தீசுவரர் கோவிலில் உள்ள கி. பி. 1220க்குரிய சோணாடுகொண்டருளிய சுந்தரபாண்டியன் கல்வெட்டு குறளின் மேன்மை கூறுகிறது. கண்டன் ஆவுடையானை கல்வாயில் நாடாழ்வான் குறள் செய்யும் அழகுகண்ட பல்லவ தரையனிடம் இருந்து நிலம் விலை கொண்டதாகக் கூறுகிறது. "சிங்கனதி வயக்கல் வரையில் இரண்டும் குறள் செய்யும் அழகு கண்ட பல்லவ தரையன் பால்லே நான் விலைகொண்ட தோட்டமும்" என்பது கல்வெட்டுப் பகுதி. [புதுக் கோட்டை கல்வெட்டுக்கள். எண். 252]. இக் கல்வெட்டுச் சான்று திருக்குறளின் இனிமை அழகுபற்றி மக்கள் அறிந்து ஈடுபட்டமையைக் காட்டும்.

### மலைபடுகடாம்

இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பல்குன்றக் கோட் டத்துச் செங்கண் மாத்துவேள் நன்னன் மகன் நன்னனைப் பாடிய நூலாகக் குறிக்கப் படும் மலைபடுகடாம் பத்துப்பாட்டு நூல் களில் ஒன்று. குன்று சூழியற்கை நாடாக அமைந்தது பல்குன்றக் கோட்டம். பேரிசை நவிரம் எனப் புகழப்படும் மலை இக்காலத்து ஸ்ரீ பர்வதம், திரிசூலகிரி என்று கூறப்பெறும் திருவண்ணாமலைக்கு வடமேற்கிலுள்ள மலையாகும். செங்கண்மா எனக் கூறப் படுவது இன்றைய செங்கம் ஆகும். இச் செங்கம் வட்டாரத்தில் பல கல்வெட்டுக் களையும், நடுகற்களையும் கண்டுபிடித்த தமிழ் நாடு தொல்லியல் துறையினர், செங்கம் சிவன் கோவிலில் ஒரு கல்வெட்டினைப் படி எடுத்துள்ளனர். முற்பகுதி தமிழ் வெண்பாவாகவும் பிற்பகுதி கிரந்த எழுத் திலும் அமைந்த அக் கல்வெட்டு மலைபடு கடாம்பற்றிக் கூறுகிறது.

முவண்டறை தார்மன்னர் மலைபடைத்
தெந்மன்னரை
வென்கண்ட திறற்காங்கேமன் கண்சிவப்பப் –
பண்டே
மலைகடாம் பாட்டுண்ட மாலவரை செஞ்சோரி
அலைகடாம் பாட்டுண்டது.

என்பது அப்பாடல் [கல்வெட்டியல் பக். 103 – 4]

### பட்டினப் பாலை

பட்டினப் பாலை என்ற பத்துப்பாட்டுள் உள்ளதொரு நூல் கரிகாற் பெருவளத்தான் மீது கண்ணனார் என்ற புலவர் பாடிய நூலாகும். கலிங்கத்துப் பரணி இராச பாரம்பரியம் இருபத்தொன்றும் பாடல் கரிகாற் பெருவளத்தான் கடியலூர் உருத்திரங் கண்ணற்குப் பட்டினப் பாலை பாடியதற்குப் பரிசாகப் பதினாறு நூறாயிரம் பொன் தந்ததாகக் கூறுகிறது.

திருவெள்ளறையில் உள்ள கல்வெட்டுக் கலித்துறைப்பா, (செந்தமிழ் தொகுதி 41 பக் 215) முதல்மாறவர்மன் சுந்தரபாண்டியன், தஞ்சை, உறந்தை, பழையாறை நகரங்களைப் பாழ்படுத்திய போதும், "கண்ணனின் பட்டினப் பாலைக்குப் பரிசாகத் தரப்பெற்ற பதினாறுகால் மண்டபத்தை மட்டும் விடுத் தான்" என்று கூறிப் பாண்டியனின் தமிழ்ப் பற்றைப் பகர்கிறது.

வெறியார் தவளத் தொடை செய மாறன்
வெகுண்ட தொன்றும்
அறியாத செம்பியன் காவிரி
நாட்டில் அரமியத்துப்
பறியாத தூணில்லை; கண்ணன்
செய்பட்டினப் பாலைக் கன்று
நெறியால் விடும்தூண் பதினாறுமே
அங்கு நின்றனவே.

என்பது கல்வெட்டுப்பகுதி.

முற்காலத்தார் தந்தை பெயரொடு தம் பெயரையும் சேர்த்து வழங்குவர். 'கண்ணன் செய்பட்டினப் பாலை' எனக் கூறியுள்ள

மையின் உருத்திரன் என்பார் பட்டினப் பாலை ஆசானின் தந்தை என்பது புலனும். 'புறவுப்புறத் தன்ன' என்னும் குறுந் தொகைப் பாடலைப் பாடியுள்ள உருத்திர னாரின் மகன் பட்டினப் பாலை யாசான் என்ற கருத்து இக் கல்வெட்டால் வலி வடைகிறது.

### சங்கம் இருந்தமை

நெடுஞ்சடையன் பராந்தகனின் செப்பேடு "........... தென்மதுரா புரஞ் செய்து அங்கதனில் அருந் தமிழ் நற்சங்கம் இரீஇத் தமிழ் வளர்த்தும்" எனக் குறிப்பிடுகிறது. சின்னமனூர்ச் செப்பேடு, மதுராபுரிச் சங்கம் வைத்து மாபாரதம் தமிழ்ப் படுத்ததாகக் கூறுகிறது. இங்குக் குறிக்கப்பெறும் பாரதம் பெருந்தேவனாரால் செய்யப்பெற்றதோ என ஆய்தல் வேண்டும். இச் செப்பேட்டுச் சான்றுகள் சங்கமிருந்த தனைச் சாற்றுகின்ற சான்றுகளேயாம்.

## சங்கப்புலவர் வரலாறு

### கபிலக்கல்

பொய்யா வாய்மொழிக் கபிலன் எனப் புகழ்ந் துரைக்கப்படும் கபிலன் பாரியின் காலத்தவன். 'பாரி இறந்தபின் பாரி மகளிரை விச்சிக்கோ, இருங்கோவேள் ஆகியோரிடம் அழைத்துச் சென்று மணம் புரிந்து கொள்ளுமாறு வேண்டினர். அவர் மறுத்தனர். பின் பாரி மகளிரைப் பார்ப் பார்ப் படுத்துமாய்ந்தார்' என்று புறம் 200, 202, 239 ஆம் பாடல்களால் அறியலாம்.

கபிலர் பாரிமகளிருள் ஒருத்தியை மலையமானுக்கு மணம் செய்து கொடுத்து அனல்புக்கு மாய்ந்ததாக இராசராசன் காலக் கல்வெட்டு (S. I. I. VII No. 863) கூறுகிறது. திருக்கோவிலூரில் கபிலர் கனல்புக்க இடம் கபிலக்கல் என இராசராசன் காலத்தும் வழங்கப் பெற்றமை அறியலுறும்.

"மொய்வைத் தியலும் முத்தமிழ் நான்மைத்
தெய்வக் கவிதைச் செஞ்சொற் கபிலன்
மூரிவண் தடக்கைப் பாரிதன் அடைக்கலப்
பெண்ணை மலையற் குதவிப் பெண்ணை
அலைபுனல் அழுவத் தந்திரிகூழ் செல
மினல்புகும் விசும்பின் வீடுபே றெண்ணி
கனல்புகும் கபிலக் கல்லது"

என்பது கல்வெட்டுப் பகுதி.

### அந்துவன்

ஆசிரியர் நல்லந்துவனார் பரிபாடலில் 6, 8, 11, 20 ஆகிய நான்கு பாடல்களைப் பாடியுள்ளார். 'நல்லந்துவன்நெய்தல்' பாடியவர். மதுரையாசிரியர் நல்லந்துவ னார் எனப் பெறுவர். பரிபாடல் எட்டனுள் திருமால் முதலியோர் வந்து தொழுதலின் 'பரங்குன்று இமயக்குன்றம் நிகர்க்கும்' எனவும், சரவணப் பொய்கையைப் பரங் குன்றின் சுனை ஒக்கும் எனவும் பாடி யுள்ளார். மதுரை மருதனிளநாகனார்,

"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்
சீர்மிகு முருகன் தண்பரங் குன்றத்து
அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை
இன்தீம் பைஞ்சுனை"

என இச் செய்தியினை அகநானூற்றில் குறிப்பர்.

மதுரை மாவட்டம் திருப்பரங் குன்றத் தில் மூன்று பழங்காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் உள. (140 – 142 of 1951–52) இக் கல்வெட்டுக்களில் ஒன்று 'அந்துவன் கொடுபிதவன்' என்பது. இக் கல்வெட்டுத் திருப்பரங்குன்றம் சுனை யருகாக உள்ள குகையில் மேற்பகுதியில் உள்ளது. இது நல்லந்துவனையே குறிப்பது எனலாம். இது கி.மு. 2 முதல் 1 வரை அமைந்த காலத்தில் வெட்டப் பெற்றது. ஆகும்.

### சங்கப் புலவர் மரபினர்

இராமநாதபுரம் சீமாறன் சீவல்லவன் கல்வெட்டகவல் ஒன்றில் (M. E. R. No *334* of *1929 – 30*) 'இருப்பைகுடி கிழவன் எட்டிச் சாத்தன்' என்பவனைக் குறிக்கிறது. இவன் தமிழ்கெழுகூடற் சங்கப் பலகையில் வீற்றிருந்ததாகக் குறிக்கிறது. செங்கை மாவட்டத் திருக்கச்சூர்க் கச்சபேசுவரர் கோவிற் கல்வெட்டு பெருநம்பி முத்தமிழ் ஆசான் என்பவர் சாத்தனார்வம்சத்தவராகக் குறிக்கப்பெறுகிறார். (M. E. R. *377* of *1906*, *3280* of *1903*) இவர்கள் மணிமேகலை ஆசான் தண்டமிழ்ச் சாத்தன் மரபினர் எனச் சாசனத் தமிழ்க்கவி சரித்திரத்தில் குறிக்கப் பட்டுள்ளனர்.

### தொகுப்புரை

சங்ககால அரசர், சேரவேந்தர் மூவர், பாண்டியன் நெடுஞ்செழியன் காலக் கல் வெட்டுக்கள் கிடைத்துள்ளன. இலக்கியங் களுட் கூறப் பெறாத பல கருத்துக்கள் கல்வெட்டு, செப்பேடுகளில் காணப் பெறு கின்றன. தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையினரால் பரவலாக ஏற்படுத்தப் பட்டுள்ள கல்வெட்டுணர்வு காரணமாகப் பல புதுக் கல்வெட்டுக்கள் கண்டு பிடிக்கப்படும். அப்போது சங்ககாலச் செய்திகள் பல கிடைத்தல் வெள்ளிடைமலை.

### வைத்தியநாத வெண்பா

*தீராநோய் தீர்க்கும் திருநெறியே கொண்டொளிரும்*
*ஆரா அமுதாய் அமர்வோனே! — வாராத*
*செல்வமெலாம் சேர்க்குஞ்சீர் வேளூரா! எவ்வினையும்*
*வல்லவனே வைத்தியநா தா.*

*மூவர் தமிழ்கேட்ட மொய்ம்பார் திருச்செவியில்*
*பாவந் நலைக்கொள்வேன் பாட்டெல்லாம் — மேவிடுமோ?*
*என்றயர்வேன் நாயேன் இணையிலருள் வேளூரா!*
*நன்றருள்வை வைத்தியநா தா.*

# அன்பும் - ஆற்றலும்

வித்துவான், திரு. மு. ஆறுமுக தேசிகர்,
வடமட்டம்.

['உயிர்க்குணங்களுள் ஒன்று தோன்ற ஏனையது ஒடுங்கிநிற்கும்' என்ற நியதிக்கொப்ப அன்பு – ஆற்றல் என்கின்ற குண வேறுபாடுகளையும், அவற்றின் இணைப்பையும் நுணுக்கமாக ஆராய்கின்ற ஆசிரியர் 'அன்பாவது, உடலோடு பொருந்திய உயிர்க்குணம் என்றும், ஆற்றலாவது உயிரோடு பொருந்திய உடற்குணம் எனவும்' வேறுபடுத்திக் காட்டித் தொடங்கும் இக் கட்டுரைக்கண், இவ்விரண்டன் இயல்புகளை எல்லாம் பல்வேறு இலக்கியங்களுள் வரும் நெஞ்சம் நீங்கா நிகழ்ச்சிகளோடு இணைத்து அருமைப்பட விளக்குகிறார். போர்முனையில் நிற்கும் அருச்சுனன் மனநிலை ; கண்ணனைக் கட்டிய சகாதேவனின் அன்பு : பனந்தாள் இறைவனைத் தலைசாய்க்கவைத்த அரக்கர்குலப் பெண்ணின் அன்பாற்றல் போன்ற நெகிழ்ச்சியூட்டும் நிகழ்ச்சிகள் ஆசிரியரின் கட்டுரைப் பொருளுக்குக் கருத்தாக்கம் சேர்க்கிறது]

அகரமும் ஆகாரமும் ஒன்றனைச் சார்ந்து ஒன்று நிற்பதுபோல, அன்பும் ஆற்றலும் ஒருங்கிணைந்து நிற்கும் குணங்களாகும். அன்பு, உடலோடு பொருந்திய உயிரின் குணம். ஆற்றல், உயிரோடு பொருந்திய உடலின் குணமாக வெளிப்படுவது. 'அன்பிலதனை அறம்' என்ற குறட்பகுதிக்கு உரையாசிரியர் 'அன்பிலது-அன்பில்லாத உயிர்' எனப் பொருளுரைத்து 'அன்பிலது என்றதனால் உயிரென்பது பெற்றும்' என்று விளக்கம் தந்திருப்பதும் அறிதற்குரியது. ஆன்றமைந்த கல்வியால் மேலும்மேலும் வளருவது அன்பு. மனைவி மக்கள் வீடு வாசல் நிலம் பொலன் முதலிய பல்வகைச் செல்வ வளத்தினாலும் சத்துணவாலும் வளர்வது ஆற்றல். உடலும் உயிரும் ஒன்றை ஒன்று பிரிந்து நில்லா; அது போலவே அன்பும் ஆற்றலும். ஆயினும் இவ்விரண்டும் ஒரே சமயத்தில் வெளிப்படுவன அல்ல. அறிவு, அருள், ஆசை, அச்சம், மானம் என்றெல்லாம் சொல்லப்பட்ட உடல்கொள் உயிர்க்குணங்கள் பலவாயினும் அவ்வப்போது ஒவ்வொன்று தலைதூக்கி நிற்க, மற்றவை தலைசாய்ந்து மடங்கிக் கிடக்கும். அதனாற்றான் திருவள்ளுவரும் நெஞ்சம் இருந்தது முகம் காட்டும் என்னாது 'நெஞ்சம் **கடுத்தது** காட்டும் முகம்' என்று கூறுவாராயினர். (கடுத்தது - மிக்கிருப்பது). ஆகவே, அன்பு முனைந்து நிற்கும்போது ஆற்றல் அழுந்தி நிற்கும். ஆற்றல் முனைந்து நிற்கும் போது அன்பு அழுந்தி நிற்கும். ஒன்று மறைந்துநிற்க மற்றொன்று வெளிப்படும். மரத்தாலாகிய யானையைப் பார்க்கின்ற குழந்தைக்கு மரம் என்ற உணர்வு மறைகிறது ; யானை என்ற உணர்வு வந்து

அஞ்சுகிறது. அதுபோலத்தான் அன்பும் ஆற்றலும்.

பாரத யுத்தம் நிகழப்போகிறது. முதல் நாள் தொடக்கம். இருதிறத்தாரும் அணி வகுத்து நிற்கின்றனர். வில்லாற்றலில் வல்லவனாகிய அருச்சுனன் தேரேறி நிற்கிறான். கண்ணபிரானும் தேரோட்டு தற்கு ஆயத்தமாகிறான். அந்நிலையில் கையில் வில்லேந்தித் தேர்மீது நிற்கும் அருச்சுனன் பகைப் படையைப் பார்க்கிறான். குரவரையும் கிளைஞரையும் குலத்துக்குரிய துணைவரையும் கொன்று குவிப்பது அறநெறியாகுமா? இவர்களையெல்லாம் கொன்றுவிட்டு நாம் நாடாளவேண்டுமா? என்ற எண்ண அலைகள் அவன் மனத்தில் வந்து மோதுகின்றன. அவன் ஆற்றல் அழுந்தி அடங்குகிறது; அடக்கி வைத்திருந்த அன்புப் பாசம் தானாகவே மேலெழுகிறது. தலை சுழல்கிறது. தேர்மீது சாய்கிறான்; கண்ட கண்ணபிரான் கீதோபதேசம் செய்கிறார். மாயை விலகுகிறது. அழுந்திய ஆற்றல் மீண்டும் முனைந்து மேலே எழுகிறது. போர் தொடங்கி நடைபெறுகிறது.

அன்பு என்பது குடத்துள் விளக்குப் போலக் காட்டலாகாப் பொருளதாயினும் மனைவி மக்களை — அயலார்களை — ஊர் மக்களை — தன் நாட்டு மக்களை இப்படிப் படிப்படியாக உயர்ந்து பரவி, எல்லோரிடத்தும் உள் நுழைந்து, பிணித்து நிற்கின்ற ஒரு வலிய கயிறாக அமைந்துள்ளது. இது உலகியல் அன்பு. இதன் பெருமையை அறிவிக்க வந்த கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர் 'அன்பென்ப தொன்றின் தன்மை அமரரும் அறிந்ததன்றால்' என்று சொல்லி அமைகிறார். இத்தகைய சீரிய அன்பு இறையன்பாக முறுகி வளருமானால் தன் வயத்தனாகிய இறைவனையும் நம் வயத்தனாக ஆக்கிவிடும். அப்படி ஆக்கிக் கொண்டவர்களே அருளாளர்கள். அவர்கள் தம் செயலற்றுத் தாமற்று எல்லாம் நாதன் செயலாகவே செய்பவர்கள்; ஏகனாகி இறை பணி நிற்பவர்கள். அன்பே சிவமாய் அறிந்தவர்கள். அந்த அன்பினாலே இன்பத்தில் திளைப்பவர்கள். வழி வழி ஆளாய் மணஞ்செய் குடிப்பிறந்த பழவடியார்கள். 'அன்பினால் இன்பம் ஆர்வார்' 'சால என்பால் அன்புடையான்' என்றெல்லாம் இறைவன் திருவாக்கிலே வைத்து அன்பின் அழுத்தத்தைத் திருத்தொண்டர் புராணம் அறிவிப்பது, உயர்ந்தபொருளை உயர்ந்தோர் வாயிலாக அறிவிக்கும் முறைமை பற்றியதாம்.

துரியோதனனிடம் தூது செல்ல விரும்பிய கிருட்டினன் பாண்டவர்களை அழைத்து அவரவர்களின் மனக்கருத்தை அறிய எண்ணுகிறான். அப்போது சகதேவன் 'கர்ணன்' அரசாளவேண்டும்; அருச்சுனனைக் கொல்லவேண்டும்; திரௌபதியின் கூந்தலைக் களையவேண்டும்; அதற்குமேல் உன் கால்களில் விலங்கைப் பூட்டி உன்னை நான் கட்டவேண்டும்; இப்படிச் செய்தால் பாரதப் போர் நிகழாது' என்றான். கேட்ட கிருட்டினன் முற்கூறிய செயல்களைச் செய்தாலும் பிற் கூறிய என் கைகளைக் கட்டுதலாகிய செயலை உன்னால் செய்ய முடியுமா? செய்பார்க்கலாம் என்று சொல்லிப் பதினாறாயிரம் திருவடிவங்கள் கொண்டு விளங்கினான். கண்ட சகாதேவன் தன் ஞானத்தால் மூல வடிவத்தைக் கண்டறிந்தான்; உள்ளக் கமலத்தில் அடக்கினான்; அன்புக்கயிற்றால் இறுகக்கட்டினான். கட்டுண்ட கண்ணன் 'பாரதப் போரில் உங்கள் ஐவரையும் பாதுகாப்பேன்' என்று உறுதிமொழி கூறிய பின்னரே கட்டவிழ்க்கப் பெற்றான். அன்பின் வலிமைக்கு இஃது ஓர் எடுத்துக் காட்டாகும்.

சேற்றில் செந்தாமரை பூத்ததுபோல இரக்க மென்ருெரு பொருள் இலாத நெஞ்சினராகிய அரக்கர்குலத்திலே அருங் குணங்களோடு ஒரு மகள் விளங்கினுள். அவள் பெருமானைப் பூசனைபுரியாது ஒரு நாளும் உண்ணுத விரத முடையவள். ஒரு நாள் வழக்கம்போல் பூசனைப் பொருள்களைச் சேகரித்துக் கொண்டாள்; அழகிய மலர் மாலை ஒன்றையும் நன்ருகத் தொடுத்து வைத்துக் கொண்டாள். பூசிக்கத் தொடங் கினுள். அபிடேகங்களை முறையாகச் செய்தாள்; ஆயிரம் நாமங்களைக் கொண்டு அருச்சித்தாள். தொடுத்த மாலையைக் கையி லெடுத்தாள்; இறைவன் கழுத்தில் அணிய வேண்டிக் கைகளை உயரத் தூக்கினுள். அந் நிலையில் தொண்டரை விளக்கங்காணத் தூயோன் திருவுள்ளங் கொண்டான் போலும். மேலாடை சிறிது நழுவிற்று. மானங்காப்பது ஆடையல்லவா! 'உடுக்கை இழந்தவன் கைபோல' என்று ஒப்பில்லாத உவமையைச் சொல்லி வைத்தாரே திருவள்ளுவர். ஆகவே மானமும் காப்பாற்றப்பட வேண்டும். எடுத்த மாலை யையும் கீழே வைக்காமல் அணிவிக்க வேண்டும். இரண்டில் எதைச் செய்வது? இருகைகளாலும் மேலாடை நழுவாதபடி இடுக்கி அணைத்துக் கொண்டாள்; ஒரு நெறிய மனத்தோடு உள்ளத்தில் உடை யானை எண்ணினுள்; தன்னை மறந்தாள்; தலைவன் தாளைத் தலைப்பட்டாள். இந்த நிலையில் இருந்தபோது தானே அன்று திரௌபதியின் மானம் காப்பாற்றப்பட்டது.

கருத்தறிந்து முடிக்கும் கடவுள் திருவுள்ள மிரங்கினுன். வணங்காமுடியைச் சிறிது வணங்கினுன். அரக்கியும் ஆண்டவன் கழுத்தில் ஆர்வத்தோடு மாலையை அணிவித் தாள். மனம்நிறைவு கொண்டாள். குனிந்த பெருமானே நிமிராமல் அன்று முதல் அந் நிலையிலேயே அமர்ந்திருந்திருந்தார். நாட்கள் ஓடின. அற்புதத் தெய்வத்தின் அதிசயச் செயல் அவனியெங்கும் பரவியது. அறிந்த சேரமன்னன் ஆண்டவனை நிமிரச் செய்ய எண்ணினுன். தன் ஆற்றலையே பெரிதாக மதித்தான். படைகளோடு பனந்தாள் வந்தான். இருப்புச் சங்கிலிகளைப் பிணைத்து யானைகளைப் பூட்டி இழுக்கச் செய்தான். அன்புக்கு இரங்கும் பெருமான் ஆற்றலுக்கு இரங்குவாரோ? சங்கிலிகள் அறுந்தன. யானைகள் உருண்டு ஓடின. மன்னன் ஆற்றல் தோற்றது. பத்திவலையில் படுபவன் பரமன் என்பதை மன்னன் மறந்தான்.

கடவூரில் வாழ்ந்துவந்த அடியவர் இச் செய்தி அறிந்தார். விரைந்து வந்தார். மன்னன் சோர்வைக் கண்டார். இறைவன் திருமேனி சங்கிலிப் பிணைப்பால் கன்றி யிருக்குமே என்று கவன்ருர். மெல்லிய மலர்போன்ற கயிற்றின் ஒரு பக்கத்தைத் திருமேனியில் தொடுத்து, மற்றொரு பக்கத்தைத் தன் கழுத்தில் மாட்டியிழுத்தார். ஆற்றலுக்கு அசையாத பெருமான் அன்புக் கயிற்றுக்கு அசைந்தார். நிமிர்ந்தார். கண்ட மன்னன், ஆற்றல், அன்புக்குமுன் அடங்கிநிற்கும் என்பதை உணர்ந்தான். அடியவர் அடியிணைகளைப் பணிந்து சென்ருன். அன்பிற் சிறந்த அடியவர் நாடோறும் இறைவனுக்குக் குங்குலியத் தூபப்பணி செய்துவந்தமையால் குங்குலியக் கலயர் என்ற பெயரால் அழைக்கப்படுவா ராயினர். அன்பிற் சிறந்த அரக்கர் குலத் தாடகை பூசித்த காரணத்தால் அந்த ஆலயம் தாடகையீச்சரம் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது,

சூழ்தரு வல்வினையும் உடல் தோன்றிய
பல்பிணியும்
பாழ்பட வேண்டுதிரேல் மிக ஏத்துமின்
பாய்புனலும்
போழிள வெண்மதியும் அனல் பொங்கர
வும்புனைந்த
தாழ்சடை யான்பனந்தாள் திருத் தாடகை
யீச்சரமே.

# கரும்புத் தோட்டத்தில் ஒருநாள்!

புலவர், திரு. ம. சிவசம்பு,
முன்னாள் மாணவர் : பேராசிரியர், தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி.

[நினைவார் நெஞ்சத்தே தேன்பாய்ச்சும், செந்தமிழ் பண்ணை சிங்காரத் தருமை; அங்கே கற்கண்டுத் தமிழ்பயின்ற காலத்தே — கல்லூரி கண்ட எங்கள் கயிலைக் குருமணி கரும்புத் தோட்டத்தே — கன்னல் சாறு நல்கி, எப்படிச்சுவை என்றார்க்கு, இனிமை இனிமை என — ஈதென்ன இனிமை, என்று இடைமறித்து — கரும்பினும் இனிய கண்ணுதற் பெருமானின், அருள் ஈயும் பெருஞ்சுவையை — தெய்வீகத் திருமுறையில் தேர்ந்திட்ட ஞானத்தால், தித்திக்க எடுத்தியம்பி, செவியிற் சுவையீத்த சிறப்பெல்லாம் — கயிலைக் குருமணியின் அருட் பரப்பெல்லாம் சிந்தனையில் நிழலாடும் செய்திகளைத் தருகின்றார்! கரும்புத் தோட்டம்; கசக்கவா செய்யும்]

## இனிக்கும் தருமை

தருமபுரம் ஞான பூமி. தருமபுர ஆதீனம் பக்திப்பயிர் வளர்க்கும் ஞானப் பண்ணை. தருமபுரம் என்று சொன்னால் நாவினிக்கும். கேட்டால் காதினிக்கும். எற்புத்துளைதோறும் இன்பம் பெருக்கெடுத் தோடும். நான் அங்கு மாணவனாகப் படித்த நாட்களையும், கல்லூரிப் பேராசிரியனாகப் பணி செய்த நாட்களையும் என்றும் மறக்க முடியாது. எத்தனை இன்பம்! எத்தனை இன்பம் !!

## "சொக்கலிங்கம்" — "தர்மலிங்கம்"

மாலை நேரம்; மஞ்சள் வெயில்; கதிரவன் தன் தங்கக் கதிர்களை முந்திரித் தோப்புக்குள்ளும், சவுக்கைத் தோப்புக் குள்ளும், பரப்பியவண்ணம் இருந்தான். முந்திரித் தோப்புக்குள் நாங்கள் படித்துக் கொண்டிருந்தோம். "சொக்கலிங்கம்" — "தர்மலிங்கம்" என்ற மந்திர ஒலி காற்றில் மிதந்துவந்தது, தோப்புக்குள் ஒரே பர பரப்பு. சில மாணவர்கள் ஓடி ஒளிந்தார்கள் சிலர் எழுந்து கைகட்டி நின்றார்கள். அதற்குள் சவாரி (நாற்காலி பல்லக்கு) எங்கள் அருகில் வந்துவிட்டது. நான் கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்களை வணங்கி நின்றேன். பல்லக்குச் சுமப்போர் கூறும் "சொக்கலிங்கம்" — "தர்மலிங்கம்" என்ற மந்திர ஒலி காதில் பாய்ந்து உள்ளத்தில் நிறைந்தது. சந்நிதானத்தில் உடன் வரச்சொல்லி உத்திரவாயிற்று. நான் நாற்காலிப் பல்லக்கின் பின் சென்றேன். பல்லக்கு மணக்குடி அருகில் உள்ள கரும்புத் தோட்டத்திற்குச் சென்றது. அங்குக் கரும்பாலை ஓடிக்கொண்டிருந்தது. ஒருபுறம் கரும்புச் சாறைக் காய்ச்சி (சர்க்கரை) வெல்லம் தயாரித்துகொண்டிருந் தார்கள். பல்லக்கில் இருந்து ஸ்ரீ ல ஸ்ரீ அவர்கள் இறங்கினார்கள் ஆலையைப் பார்வையிட்டார்கள். அதற்குள் பணியாள்

கரும்பஞ் சாற்றை வெள்ளிக் குவளையில் கொண்டுவந்து கொடுத்தான். அருந்தச் சொல்லி உத்திரவாயிற்று. தாயினும் சாலப் பரிந்தூட்டும் கருணையை எண்ணி மகிழ்ந்து அருந்தினேன். "எப்படி இருக்கிறது?" என்ருன் பணியாள். இனிமையாக இருக்கிறது என்றேன்.

### இன்சுவைக் கரும்பு

ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் இறைவன் இதைவிட இனிமையானவன் என்றும், இறைவனே முக்கட் செங்கரும்பு என்றும் கூறி பல திருமுறைப் பாடல்களை நினைவுபடுத்தினர்கள் அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய கருத்துக்கள் இன்றும் என் நெஞ்சில் நீங்காத நினைவாக இருக்கின்றன. அவற்றைத் தருகிறேன்.

இறைவனை, 'கண் மூன்று படைத்த தொரு கரும்பு' என்கிருர் திருநாவுக்கரசர் திருவாரூர் திருத்தாண்டகத்தில்.

தேவர்கள் எல்லாம் இறைவனை வந்து தொழுகிருர்கள். அவர்கள் தலைபட்டு செம்மேனி அம்மான் திருவடி சிவந்து விட்டது. சிவந்த திருவடியையும், சிவந்த மேனியையும் கண்டார் தாயுமானவர். செங் கரும்பு நினைவுக்கு வருகிறது.

"தேவரெலாம் தொழச் சிவந்த செந்தாள் முக்கட் செங்கரும்பே" என்று பாடுகிருர். (அதற்குள் அருட்பார்வை ஆலையில் விழுகிறது. கரும்பு இரும்பு உருளைக்குள் பட்டு நொறுங்குகிறது. சாறு நிறைய வருகிறது. இதைக் கண்டார்கள்)

"ஆலைப்படு கரும்பின் சாறுபோல
அண்ணிக்கும் அஞ்செழுத்தின் நாமத்தான் காண்"

என்ற திருவீழிமிழலைத் திருத்தாண்ட கத்தைத் திருவாய் மலர்ந்தார்கள்.

பார்த்தாலும், நினைத்தாலும், படித் தாலும், படிக்கப்பக்க நின்று கேட்டாலும், பரிந்து உள் உணர்ந்தாலும், ஈர்த்தாலும், பிடித்தாலும், கட்டியணைத்தாலும் இத் தனைக்கும் தித்திக்கும், இன்சுவைக் கரும் பாகிய இறைவனை எண்ணிக் கொண்டே மடம் வந்து சேர்ந்தோம்.

### நெஞ்சிருக்குவரை

இதைப் போல் எத்தனையோ நினைவுகள் வருகின்றன. அந்த நாள் இனி எப்படி வரும்? நாயேனையும் வளர்த்து, படிக்கவைத்து, ஆசிரியன் ஆக்கி உரு வாக்கிய கயிலைக் குருமகா சந்நிதானத் தையும், தருமை ஆதீனத்தையும் எப்படி மறக்க முடியும்? எனக்குக் கல்வி அறிவூட்டிய பேராசிரியர்கள் ய. மாலிங்க சாஸ்திரி, மகாவித்துவான், ச. தண்டபாணி தேசிகர், கி. இராமலிங்கனுர், முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் (காஞ்சிபுரம் தொண்டை மண்டல மடம் மகாசந்நிதானம்) வி. சா. குருசாமி தேசிகர், சொ. சிங்கார வேலனுர், எனது அருமை நண்பர் வி. சபேசனுர் இவர்களை எல்லாம் மறக்க முடியுமா? நெஞ்சிருக்கும் வரை நினை விருக்கும்.

### தொழும் பாய்ப்பணி செய்வோம்

தருமபுர ஆதீனம் தமிழ்க் கல்லூரி வெள்ளி விழா, மாணவர்கள் விழா. தவத்திரு. குன்றக்குடி அடிகளார், ஸ்ரீமத் முத்துக்குமரசாமித் தம்பிரான் சுவாமிகள், சொ. சிங்காரவேலன், கீரன், அறிவுடை நம்பி, (எம். எல். சி) முதலியோர் இக் கல்லூரியின் பழைய மாணவர்கள். இதன் பெருமைக்கு வேறு சான்று வேண்டுமோ?

இவ்விழாவிற்கு மூல காரணமாய் இருக்கும் மூர்த்தி ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள். அவர்களைப் பிராஞகப்பெற்ற நாம் அவர்கள் தாள் பணிவோம். அவர் உகந்து சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணி செய்வோம். வாழ்க குருமகாசந்நிதானம்! வளர்க தமிழ்க் கல்லூரி!

# தன்னைத் தரல்

*சீலத்திரு. ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்*
*காஞ்சிபுரம்.*

[ உலகில் ஒவ்வொருவரும் இயற்றும் உதவிகள் கைம்மாறு நோக்கியன. எல்லாம் வல்ல சிவபெருமானே, உயிர்கள் இயற்றிய வினையின் அளபறிந்து அவ்வினைக்குரிய பயனைச் சேர்ப்பிக்கும் முழுமுதலாக விளங்குபவன் என்ற கருத்தை விளக்கப் புகுந்து, சைவத் திருமுறைகளுள்ளும், தருமையாதீன முதற் குரவர் ஸ்ரீ குருஞான சம்பந்தர் திருவாக்கிலும் அமைந்திருக்கும் இறைவனின் பெருங்கருணைத் திறத்தையும், வேண்டுவார்க்கு வேண்டுவன ஈயும் பெருமான், அன்பால் நினைந்து வழிபடுவார்க்குத் தன்னையே தந்தருளும் திறத்தையும் இனிதெடுத்து விளக்கிச் சாத்திர மணமும் தோத்திரச் சுவையும் பொதுள அமைகிறது இவ்வரிய கட்டுரை ]

உலகில் ஒருவர்க்கு ஒருவர் உதவி செய்தல் என்பது தொன்றுதொட்டு இன்றும் உள்ளது. எல்லாருஞ் செய்கின்றனரோ? எங்கும் உள்ளதோ? என்றும் உள்ளதோ? எவ்வுதவியும் ஒரேவண்ணம் இயலுவதோ? இவ்வாறு வினவுதல் கூடும். அவ் வினக்களுக்கு விடையிறுத்தல் இயலாது. ஒன்று உறுதியாகச் சொல்ல இயலும். எல்லா உதவியும் கைம்மாறு கருதிச் செய்யப் படுவதும், தன்னைத் தாராமல் மற்றைய பொருள்களை உதவுவதும், அவற்றுள்ளும் அவரவர்க்கு வேண்டும் பொருளைத் தருவது மாகத்தான் பெரிதும் இருக்கும் என்று கூறலாம். கூறினும் சிவனே அவர் அவர் வினையை அறிந்து அவ்வினைக்குரிய பயனை உதவுகின்றான் என்ற ஒன்றே அழியாத உறுதி முடிபு. செய்வான் செய்யும் வினையின் பயனைச் சேர்ப்பான் சிவனே என்பது சைவநெறிக்கேயன்றிப் பிறநெறிக்கு இல்லை என்றது பெரியபுராணம். சிவ தருமோத்தரம், கந்தபுராணம், திருவருட் பயன், விநாயக புராணம், திருத்தணிகைப் புராணம் என்னும் ஐந்தும் அதனைக் கூறும். ஒருவர் ஒருவர்க்கு உதவினர் எனின், உதவிய உயிரும் உதவியுள்ள உயிரும் என ஈருயிர் உண்டு. எவ்வுயிர்க்குச் சுதந்திரம் இல்லை. உதவியதும் அவ்வுதவியையுற்றதும் உயிரோ? ஒவ்வோருயிருள் இருந்தும் உதவுவது சிவமே. உதவுவோர் இவர் உதவாதோர் இவர் என்ன இடம் இல்லை. இதனைக் குருஞானசம்பந்தர், "எவர் எவர்க்கு உதவினர்? எவர் எவர்க்கு உதவிலர்? என்று வினவியருளியதால் உணரலாம்.

"எல்லாம் உனது செயல் என்றறிந்தும் எனதுளத்திற் பொல்லாத சங்கற்பம் ஏன் வருமோ?" என்றதும் அவர் திருவாக்கே 'எல்லாம் சிவன் செயல்' (73) உயிர்கள் கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்

நிலையிலுறுஞ் செயலும் அந்நிலை ஒன்று மில்லாச் சிவன் செயலே (80). குருவருளைப் பிரியாதார் தீவினைப்பயனை நுகர்கின்ற காலத்தும் சிவன் செயலே என்று சிந்தை யற்றிருப்பர். (102) கூட்டல் பிரித்தல் ஆட்டல் அடக்கல் காட்டல் மறைத்தல் முதலிய எல்லாம் சிவன் செயலே. (103). பற்றும் வீடும் பரன் செயலே (133)

> "ஏற்ரு தவையா யிருப்பதுவும் உள்மயக்கம்
> ஆற்ருது தீர்என் றரற்றுவதும் – தோற்ருது
> தோற்றுவதும் உன்னைச் சுகபூரணன் என்று
> தேற்றுவதும் ஈசன் செயல்." (139)

உள்ளங்கவர் கள்ளனே தன் பெருங் கருணை யால் என் அறிவில் உள்ள சுகமெல்லாம் தந்துவிடலாம், தந்துவிடாது மெள்ள வருத்துகின்ருன். தீவினையிற் கூட்டி வாட்டுகின்ருன். அவ்வகை வருத்தமும் வாட்டமும் தீர்த்துத் திருவடி ஞானம் அருள்கின்ருன். இச் செயலெல்லாம் ஏன் அவன் செய்கின்ருன்? (99) அமைத்த வினைக்கு ஈடா அநுதினமும் செய்வது. இமைப்பொழுதும் வீண் செயல் ஒன்றும் இல்லை. உமைக்கு உரிய சிவன் எல்லாம் அறிந்தும் எங்கும் இயற்றியும் தன் அடிமை களாய திறத்தில் வல்லவர்களுக்கு மெய் யுணர்வை விளைத்தற் பொருட்டே (98).

பாசம் ஜடம். உயிரோ தனக்கெனச் சுதந்திரம் இல்லாதது. தானுக எதையும் மாற்ற அறியாது. அப் பாசத்தையும் பசுக்களையும் இணைத்து ஆட்டி என்றும் பூசல் செய்பவன் ஈசனேயாவன். ஆதலின் அவனே திரும்பி அருள் செய்யாமற் கைவிடு வானேல் உயிர்கள் உய்யும் நெறியில்லை (81) உயிர்கள் எல்லாம் பேரின்பத்துள் முழுகுவதும் சிற்றின்பத்துள் அழுந்துவதும் சிவன் செயலே (82) உள்ளம், உரை, உடல், உயிர்களை அமைப்பதும், உணவு முதலிய நுகர்ச்சியை இசைவிப்பதும் ஐந்து நிலையிலும் (நனவு கனவு முதலிய அவத்தை யைந்திலும்) கூட்டுவதும், அழியாதபேரின்ப வீட்டிற் கூட்டி இக் கூட்டில் வரும் பிறப்பை அறுப்பதும் அச் சிவன் செயலே (86).

> முன்னை வினைக்கீடா முதல்வன் அருள்நமைக்
> கொண்டு
> என்னவினை செய்ய இயற்றுமோ – இன்னவினை
> செய்வோம் தவிர்வோம் திரிவோம்
> இருப்போம்இங்
> குய்வோம் எனும்வகை ஏது? (87)

சிவபோகசாரம் இப்படி எல்லாம் சிவன் செயலே, உயிர்க்குச் செயல் சுதந்திரமா யில்லை என்றது. "என்செயலாவது யாதொன்றும் இல்லை" என்ருர் முற்றுந் துறந்த பட்டினத்து முனிவர், எல்லாம் சிவன் செயலே என்றுணர்ந்தவர்க்கு வினையும் இல்லை. அதன் பயனுமில்லை. பிறப்புமில்லை; இறப்புமில்லை.

நாம், நம் செயல் என முறையே முதலும் வினையும் இருக்கும்வரை (யான் எனது என்ற இருவகைப் பற்றும் உள்ள வரை) நல்வினைப்பயனையோ தீவினைப் பயனையோ நுகரவேண்டும்.

'நாம்' என்பது அற்ருல் அதுமுதல் சிவம் ஒன்றே விளங்கும். நம்மை நாம் அறியோம், சிவமே ஆவோம். இது கைவரப் பெறவேண்டின், நம் செயல் இல்லாமையை நன்குணர்தல்வேண்டும். நம் செயல் யாதும் இல்லை என்னும் உண்மையை உண்மையில் உணர்ந்தால், நாம் இல்லாமல் ஒழிவோம். அப்போது சிவம் ஆய்விடுவோம்.

> "அவமாய தேவ கதியில் அழுந்தாமே
> பவமாயங் காத்தென்னை யாண்டு கொண்ட
> பரஞ்சோதி
> நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாம் ஒழிந்து
> சிவமானவா பாடித் தெள்ளேனம்
> கொட்டாமோ?'.

நம் செயலற்ருல் சிவன் செயலேயாகும். நாம் அற்ருல் சிவமேயாவோம். நம் செயல்

(நமது, எனது) நாம் (யாம், யான்) என்ற இருவகைப் பற்றும் அறுதலே முறையே நம் செயலறுதல் நாமறுதல் ஆகும். நம் செயலற்றால் நாதன் செயல் ஆகும். நாமற்றால் நாதன் ஆவோம்.

எல்லாவற்றையும் சிவபிரானர் கூடி நின்று கூட்டி நமக்கு உணர்த்தும் முறைமையை அறியாமல், நம்மாலே செய்யப் பட்டது என்று கருதுவது உயிரியல்பு. அஃதாவது நம் இயல்பு. அவ்வியல்பு முதலில் அறல் வேண்டும். அஃது அறுவதும் அருளால்தான். நாம் அவ்வியல் பின் நீங்கினோம் என்ற அதையும் அவ் வருளிலே அடக்கி, நீங்கினோம் என்ற நம்மையும் அருளிலே தந்து, நாமும் அருளே யாகி விட்டால், அப்பொழுதே அச்சிவன் நம்மை விழுங்கிக் கொண்டு, நம் செய லெல்லாம் தன் செயலாகி, நம்மையும் தானுக்கித் தானும் தன் செயலுமா நிற்பான்.

இங்கு முதலில் குறித்ததை நினைக்க வேண்டும். எல்லாப் பொருளையும் பிறர்க்கு உதவுகின்றான் ஆயினும் தன்னை உதவ மாட்டான். தான் உதவும் பொருள் களுள்ளும் பிறர்க்கு வேண்டும் பொருள் களையே உதவுவான். அவ்வுதவியும் கைம்மாறு செய்யும்படி கருதும் உதவி யாகவே இருக்கும்.

'தமக்கு நீர் உதவுகின்ற மேகங்க ளிடத்து உயிர்கள் என்ன கைம்மாறு செய்யா நின்றன? ஆதலான், அம்மேகங்கள் போல்வார் செய்யும் ஒப்புரவுகளும் கைம்மாறு நோக்குவன அல்ல.' ஒப்புரவு செய்வார் கைம்மாறு வேண்டார்.

"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ உலகு."

இதிற் கைம்மாறு எழுவாய், வேண்டா பயனிலே, கடப்பாடு செயப்படுபொருள். முறைமையறிந்து செய்யும் உபகாரம் கடப்பாடு. அதைச் செய்வார்க்கு உவமை (மேகம்) மாரி. கை - கடப்பாடு பெற்றவர்கை. அவர்க்கு உவமை உலகு. உலகின் கைம்மாறு மேகத்திற்கு வேண்டா. கடப் பாடு பெற்றவர் கைம்மாறு கடப்பாடு செய்தார்க்கு வேண்டா.

நம் செயலையும் நம்மையும் சிவனுக்குத் தந்தோம். அச் சிவனும் நாம் அல்லாத பிற பொருளைக் கொடாது நம்மையே கொடுத்த நமக்குச் சிவனும் தன் பதங்களைத் தராமல் தன்னையே தந்தான். இங்கு

"நம்செயல் அற்றுஇந்த நாம்அற்றபின் நாதன்
நன்செயல் தானேஎன் றுந்தீபற
தன்னையே தந்தான் என்றுந்தீபற."

என்னும் உண்மையுணர்த்தும் நூற் செய்யுளை உணர்ந்து கொள்ளல் **ஆன்மலாபம்** ஆகும். இதனையே திருவாசகத்தில் உணர்தல் வேண்டும்.

தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆநந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன்றென் பால்
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா உடலிடம் கொண்டாய்
யான்இதற் கிலன் ஓர்கைம் மாறே,

திருக் கயிலைக் குருமாமணியருளே வடிவாய இத் தமிழ்க் கல்லூரியை அம் முழுமுதற் பொருள் தன்னைத் தந்ததாகப் பாவித்து,

இதிற் கற்கின்ற மாணுக்கர்களும் முன்னர்க் கற்ற ஆசிரியர்களும் பிறரும் அப்பொருட்டுத் தங்களையே கொடுத்துப் பேரின்பம் ஒன்றே பெரும்பேறு பெரும்பேறு எனக்கொண்டு வாழ்தல் கடன். இப்பொழுது ஞானச் செங்கோல் செலுத்தியாளும் சீலத்திரு மகாசந்நிதானம் அவர்களும் இக்கல்லூரியிற் கற்றவர்கள் ஆதலின், இதனை முன்னைய நிலையினும் பன்மடங்கு சீரிய நிலையுறக் காத்துதவுதல் திண்ணம் ஆதலின் ஆசிரியர்களும் மாணவர்களும் மிகச் சிறந்து வாழ்வார்கள். ஒவ்வொருவரும் இக் கல்லூரியின் ஏற்றமும் ஆக்கமும் கருதித் தம்மைத் தரக் கடவர்.

வாழ்க தருமைக் குருமாமணிகள்
வளர்க தருமைக் கல்லூரிநலம்!

அருளி விளங்குக எங்களை ஆட்கொண்ட ஆறுமாமுகக் கடவுள்.

## வைத்தியநாத வெண்பா

சுற்றுஞ் சரவிளக்குத் தொங்கலிட அன்பருளம்
முற்றுங் கனிந்துகவி முன்பாடப் — பற்றும்
பரம்பொருள்தன் சந்நிதியைப் பார்த்திருக்க நெஞ்சன்
வரமருள்வை வைத்தியநா தா.

எங்கே விழுவேனே எங்கே எழுவேனே
எங்கே தொழுவேனே என்னவனே — எங்கே
மறப்பேனே என்றே மறுகிடுவேன் அப்பா!
அறவோனே! வைத்தியநா தா.

# கல்வெட்டுக்கள் கூறும் சமயநிலை

திரு. இரா. நாகசாமி, எம். ஏ.,
இயக்குநர், தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை – 4.

[நாட்டு வரலாறு, மக்களின் பண்பட்ட வாழ்க்கைமுறை, இலக்கியங்களில் காணப்படும் செய்திகளுக்கு ஒளியூட்டும் அரிய செய்திகள் போன்ற பலவும் கல்வெட்டு ஆராய்ச்சியால் பெறப்படும் பயன்கள் என்ற உண்மையைப் பலமுனை நின்று விளக்கப் புகும் ஆசிரியர், கல்வெட்டுச் செய்திகளை, இலக்கியங்களோடு பொருத்திக்காட்டி பல்வேறு நுணுக்கமான செய்திகளை இங்கே ஆழமாக விவரிக்கிறார். கல்வெட்டாராய்ச்சியின் வளர்ச்சியில் எத்தனையோ மறைபொருள் நமக்கு விளக்கமுறும் என்ற நம்பிக்கை ஒளி ஊட்டுவது இக்கட்டுரையின் சிறப்பாகும்.]

தமிழகத்தில் இதுகாறும் கிடைத்துள்ள கல்வெட்டுக்களில் மிகவும் தொன்மையானவை, பல்வேறு குன்றுகளில் இயற்கையாக அமைந்த குகைத்தளங்களில் காணப்படுபவையாகும். சமணப் பெரியோர்களுக்கு வணிகர்களும் அரசர்களும், பள்ளி (படுக்கை) அமைத்ததை இக்கல்வெட்டுகள் குறிக்கின்றன. தமிழகத்தின் வடபகுதியில் காஞ்சிக்கு அருகிலிருந்து, தென்குமரி வரை இவை காணப்படுகின்றன. இவற்றில் பெரும்பாலானவை, மதுரைக்கு அருகில் உள்ள குன்றுகளில் உள்ளன. மதுரையை ஆண்ட பாண்டிய மன்னர்கள், சமண சமயத்துக்கு ஆதரவு அளித்திருக்கின்றனர் என்பது இதிலிருந்து தெளிவாகிறது.

மதுரைக்கு அருகிலுள்ள பல கல்வெட்டுகளில் மீனாட்சிபுரம் என்ற ஊருக்கு அருகிலுள்ள மலைத்தொடரில் காணப்படும் கல்வெட்டு, மிகவும் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தது. இது சமண சமயத்தைச் சார்ந்த "கணிநந்தன் சிரியகுவன்" என்பவருக்கு, நெடுஞ்செழியன் பணவன் கடலன் வழுதி என்பவன் பள்ளி அமைத்ததைக் குறிக்கிறது. கடலன் வழுதி பணவன் செழியன் என்ற பெயர்கள், பாண்டியர்களுடைய பெயர்கள் என்பதை அனைவரும் அறிவர். இக்கல்வெட்டுகள் கி. மு. 3-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. இங்கேயே திருவெள்ளறை நிகமம் என்பது நகரத்தையும் வணிகக் குழுவையும் குறிக்கும். மணிவாசகப் பெருமான் பிறந்த புகழ்பெற்ற திருவாதவூரிலும், அண்மையிற் சமணப் பெரியார்கள் வாழ்ந்த தடயங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. மதுரைக்கு அருகில் உள்ள கொங்கர் புளியன் குளம், அரிட்டாபட்டி, அழகர்மலை, மேட்டுப்பட்டி, முத்துப்பட்டி, விக்கிரமங்கலம், கருங்காலக்குடி முதலிய பல குன்றுகளில் சமணப் பெரியார்கள் வாழ்ந்த பாழிகளும், கல்வெட்டுகளும் கிடைத்துள்ளன.

ஞானசம்பந்தப்பெருமானால் ஆனைமாமலை என்று புகழப்பெற்ற குன்றில்

கிறித்துவின் சம காலத்திய கல்வெட்டு ஒன்று உள்ளது. அங்குச் சில படுக்கை களும் உள்ளன. அக்கல்வெட்டில் அம்மலை 'இவகுன்றம்' என்று குறிக்கப்படுகிறது. 'இவம்' என்பது யானையைக் குறிக்கும். 'இவமாகி' என்று விநாயகப்பெருமானை அருணகிரிநாதர் திருப்புகழில் பாடியுள்ளது அனைவரும் அறிந்ததே. ஆக கிறித்துவின் சற்றேறக்குறைய சமகாலத்திலேயே இக் குன்றை ஆனைக்குன்று என்று மக்கள் அழைத்துள்ளனர் என்று அறிகிறோம். அக்காலத்திலிருந்து ஞானசம்பந்தர் காலமான கி. பி. 7-ஆம் நூற்றாண்டு வரை இக்குன்று சமணப் பெரியார்கள் வாழ்ந்த புண்ணியத் தலமாகத் திகழ்ந்தது என்று அறியலாம்.

இவ்வாறு பாண்டிய மன்னர்களின் ஆதரவைப் பெற்றதுபோல, சமண சமயம் சங்ககாலச் சேர மன்னர்களுடைய ஆதரவையும் பெற்றுத் திகழ்ந்தது என்று கருவூருக்கு அருகிலுள்ள வேலாயுதம் பாளையத்து ஆறுநாட்டார் மலைக் கல் வெட்டால் அறியலாம். இங்கு இயற்கையாக அமைந்த இரு குகைத்தளங்கள் தெற்கிலும் வடக்கிலுமாக உள்ளன. இங்கு தென் புறத்தே உள்ள குகைத்தளத்தில் சேர மன்னன் ஒருவன் ஆற்றூரைச் சேர்ந்த செங்காயபன் என்ற பெரியாருக்குப் பள்ளி அமைத்ததை இங்குள்ள கல்வெட்டு குறிக்கிறது. ஆற்றூர் என்பது இவ்வூருக்கு அருகில் உள்ள ஓர் ஊரின் பெயராக இன்றும் வழங்குகின்றது. ஆற்றூர் நாட்டார் மலையே, ஆறுநாட்டார்மலை என்று இப்பொழுது திரிந்து வழங்குகிறது போலும்! இந்தப் பள்ளியை அமைத்தவன் கோ ஆதன் சேரன் இரும்பொறை மகன் பெருங்கடுங்கோன் என்று குறிக்கப் படுகிறான். இரும்பொறை என்பது, சேர மன்னர்களுடைய குலப்பெயர் என்பதை அறிவோம். ஆதலின் இங்கே குறிக்கப் பட்டுள்ளவர்கள், சேரர் வழியில் வந்த மூன்று அரசர்கள் என்பது தெளிவு. இதனால் இளங்கடுங்கோன் என்பவன், இளங்கோவன் காலத்து இப் பள்ளியை அமைத்துக் கொடுத்தான் என்று இக் கல்வெட்டிலிருந்து அறிகிறோம். வேலாயுதம் பாளையத்திலிருந்து 10 கல் தொலைவில் கருவூர் இருக்கிறது. இக் கருவூர் சங்க காலச் சேரர்களின் ஒரு தலைநகராய் இருந்தது என்று சங்க இலக்கியங்களி லிருந்து அறிகிறோம். ஆதலின் இங்கு ஆண்ட சேரமன்னர்களும், மதுரையை ஆண்ட பாண்டியர்களைப்போலவே, சமண சமயத்திற்கு ஆதரவு அளித்திருக்கின்றனர் என்று தெளிவாக அறியலாம். சேர மன்னர்கள் சிறந்த சைவர்களாகத் திகழ்ந்தனர் என்று பதிற்றுப்பத்தால் அறியலாம்; சைவர்களாயினும் சமண சமயத்தை இவர்கள் போற்றியிருப்பது, அக்காலத் தமிழ் மன்னர்கள் பிற சமயங் களையும் எவ்வாறு போற்றினார்கள் என் பதற்கு இவை எடுத்துக்காட்டுக்களாகும்.

காஞ்சிக்கு அருகில் மாமண்டூர் என்ற இடத்தில், இயற்கையாக அமைந்த குகைத் தளம் ஒன்று உண்டு. அங்கும் சமணப் பெரியார்கள் வாழ்ந்த தடயங்கள் இருக் கின்றன. கல்வெட்டுகளும் உள்ளன. இக் கல்வெட்டுகளும் கிறித்துவுக்குக் காலத்தால் முற்பட்டவை ஆதலின் காஞ்சியைத் தலை நகராகக் கொண்டு ஆண்ட மன்னர்களும், அக்காலத்தில் திரையர்கள் என்பாரும் இப்பகுதியை ஆண்டுள்ளனர்; சமண சமயத்தைப் போற்றியுள்ளனர் என்று அறியலாம். திருச்சி மாநகரின் ஒரு பகுதியே உறையூர் என்பது அனைவரும் அறிந்த விஷயம். திருச்சிராப்பள்ளி மலையில் இயற் கையாக அமைந்த குகைத்தளம் ஒன்றில் சமயப் பெரியார்கள் வாழ்ந்த படுக்கைகள்

உள்ளன. சித்தன்னவாசல் குகைகள்கூட அக்காலத்தே சோழர் ஆட்சிக்கு உட்பட்டிருக்கக்கூடும். ஆதலின் சேரரையும், பாண்டியரையும்போலச் சங்ககாலச்சோழப் பெரு மன்னர்களும் சமண சமயத்துக்கு ஆதரவு அளித்துள்ளனர் என்று அறியலாம்.

இதற்குப் பிறகு காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட பல்லவர்களில் 6-ஆம் நூற்றாண்டில் ஆண்ட சிம்மவர்மன் என்ற மன்னனின் செப்பேடு ஒன்று கிடைத்துள்ளது. அது வச்சிரநந்தி என்ற சமணப் பெரியாருக்குப் பள்ளிச் சந்தம் அளித்ததைக் குறிக்கிறது. பல்லவ அரசன் சிம்மவிஷ்ணுவின் தாய், தன் கணவரின் குலச் சீர்த்திக்கும் தன் நன்மைக்குமாக அறம் பெருக அருக தேவ ஆலயத்திற்கும், யாவனிக சங்கத்திற்கும் நிலம் தானம் அளித்தாள் என்று ஹோசாக்கோட்டைச் செப்பேடுகள் கூறுகின்றன.

7-ஆம் நூற்றாண்டில் ஞானசம்பந்தப் பெருமானுடைய முயற்சியாலும், அப்பர் பெருமானுடைய தொண்டாலும், சமண சமயம் சற்றுத் தளர்வு கண்டது என்று பெரும்பாலானோர் கருதுகின்றனர். ஆனால் 7-ஆம் நூற்றாண்டின் இறுதியிலும், 8-ஆம் நூற்றாண்டிலும் பல்லவர் ஆட்சியின் கீழ் இருந்த பகுதிகளிலும், பாண்டியர் ஆட்சியின் கீழ் இருந்தபகுதிகளிலும்சமண சமயம் மிகச் சிறந்த நிலையில் இருந்திருக்கிறது என்று அங்குள்ள சிற்பங்களாலும் கல்வெட்டுக்களாலும் அறிய முடிகிறது. மதுரைக்கு அருகில் உள்ள பல்வேறு குன்றுகளிலும் சமணப் பெரியார்கள் வாழ்ந்திருக்கின்றார்கள் என்பதற்குச் சான்றாக அங்கு சமண தீர்த்தங்கரர்களின் சிற்பங்களும், வட்டெழுத்துக் கல்வெட்டுகளும் பரவலாகக் காணப்படுகின்றன. நெல்லை மாவட்டம் கழுகுமலை என்ற இடத்தில் வெட்டுவான் கோயில் என்று சிவபெருமானுக்கு எடுக்கப்பட்ட புகழ்பெற்ற கோயிலுக்கு அருகில் ஏராளமான சமண சிற்பங்கள் காணக் கிடக்கின்றன. நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வந்த சமணச் சார்பு உடையவர்கள் அங்குச் சிற்பங்களையும், கல்வெட்டுகளையும் விட்டு வைத்துள்ளனர். பல்லவர் நாட்டின் திருமலை, சாத்தமங்கலம் முதலிய இடங்களில் சமணப் பெரியார்களுக்கு அளிக்கப்பட்ட இடங்களும் சிற்பங்களும் உள்ளன. இவை சற்றேறக்குறைய 8-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. இவற்றிலிருந்து தமிழகத்தை ஆண்ட மன்னர்கள் தாங்கள் ஒரு குறிப்பிட்ட சமயத்தைப் பின்பற்றிய போதிலும், தம் நாட்டில் வாழ்ந்த சமண சமயத்தாரது கோட்பாடுகளுக்கும் பேராதரவு அளித்திருக்கின்றனர் என்பதற்கு இவ்வரலாற்றுச் சின்னங்கள் சான்று பகர்வனவாக இன்றும் உள்ளன எனலாம்.

### தமிழ் மணிமாலை

தெய்வ நலம் பெருக்கும் தீந்தமிழே! நின்பணிகள்
செய்வதே யன்றிச் செயலறியேன் — பெய்யும்
திருநலமே! என்னுள் திகழொளியே! என்றே
உருகிடவே என்னை உயர்த்து.

புலவர், திரு. சொ. சிங்காரவேலன், தருமபுரம், மாயூரம்.

# ஆலய அமைப்புக்கள்

திரு. பெ. திருஞானசம்பந்தம், எம். ஏ., எல். டி.,
பதிவாளர், சென்னைப் பல்கலைக் கழகம்

[ 'அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாய்' விளங்கும் இறைவனைத் திருக்கோயிலுள் வைத்து வழிபடுவது எதனுல் என்பதனைச் சுவைபட விளக்கித் தொடங்கும் ஆசிரியர், சாத்திர-தோத்திரங்கள், வேத-ஆகமங்கள் இவற்றின் துணைக்கொண்டு, திருக்கோயில் அமைப்பு முறைகளை, இவை இவை இன்னின்னவாறு அமையவேண்டுமென்பதனை நுண்ணிதின் இக் கட்டுரைக்கண் விளக்குகின்ருர். இதற்குமேலும், திருக்கோயிலின் அமைப்பு முறை தத்துவ அடிப்படையில் அமைந்துள்ள நுண்மைகளையும், திருவுருவங் களின் அமைப்பில் பொதிந்து கிடக்கும் உண்மைகளையும் இனிதெடுத்து விளக்கி இக்கட்டுரை நிறைவெய்துகிறது ]

'ஆலயம்தானும் அரன் எனத்தொழுமே' என்று சிவஞானபோதம் செப்புகிறது. உயிர் சார்ந்ததன் வண்ணமாகும் தன்மை யைப் பெற்றிருப்பதால் உலகியலில் உழலும் உயிர். அதில் சிக்குண்டு வினைகளைப் புரிந்து மயக்குற்றுக் குறிக்கோளை மறந்து மீண்டும் மீண்டும் பிறவித்தளையில் கட்டுண்டு கிடக்காமல் இருக்கவே, கோவில் கட்டு வித்து இறைவனின் திருமேனிகளை அங்கே பிரதிட்டைசெய்து, பூசை, திருவிழா முதலிய வற்றை ஏற்படுத்தி நம் உள்ளம் இறை வழிபாட்டில் ஈடுபடுவதன் மூலம் அவனைச் சார்ந்து அவன் வண்ணமே ஆகும் நிலையை ஏற்படுத்தித் தந்திருக்கின்றனர் நம் முன்னோர்கள்.

வெளியெல்லாம் பரந்து கிடக்கும் மின் சக்தியை இயந்திரங்களின் வாயிலாக வாங்கி மின் பெட்டிகளில் சேமித்துக் கம்பி களின் மூலம் வேண்டிய இடத்திற்குக் கொண்டுபோய் ஒளியைப் பெறுகிறோம். அதுபோலக் கும்பாபிஷேகத்தில் நடை பெறுகின்ற மந்திரம் ஓதுதல் முதலான கிரியைகளால் அங்கிங்கெனுதபடி எங்கும் பரந்து கிடக்கும் இறை சக்தியை லயிக்கச் செய்துவைக்கிற காரணத்தால் அப்படி லயிக்கும் இடம் 'ஆலயம்' எனப்படுகிறது. முறையாக வழிபாடாற்றும் மக்கள் ஆங் குள்ள செம்பொற்சோதியின் ஒரு பொறியை அவரவர் பக்குவ நிலைக்கேற்பத் தம் உள்ளத்தில் ஏற்றிக் கொள்ளுகிருர்கள். ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கிய அடியார்கள் வரலாறு கோவிலில் சென்று வழிபடுவதனல் பெறும் பயனை நமக்கு உணர்த்துகிறது.

திருக்கோயில்களால் சிறப்புற்றது தெய்வத் தமிழ்நாடு. திருக்கோயிலைக் கலை விளக்கமாகவும், தத்துவ விளக்கமாகவும், அருள் விளக்கமாகவும் காணலாம். சமய வாழ்வில் கோயிலும் இறைவன் திருவுருவங் களும், எத்தகைய நடுநாயகமான இடத்தைப்

பெற்றிருக்கின்றன என்பதை அகத்திய முனிவரின் கீழ்க்கண்ட வெண்பாவில் பார்க்கிறோம்.

குருவருளும் வெண்ணீ
றெழுத்தஞ்சம் கோயில்
அருவுருவு மென்றலைமேல்
ஆக்கும்—திருவடியும்
சிட்டான அர்ச்சனையும்
தொண்டும் சிவாலயர்க்கென்று
இட்டார் அகத்தியனார் எட்டு.

தேவகிருகம், தேவாகாரம், தேவாலய தனம், தேவாலயம், தேவகுலம், மந்திரம், பவனம், பிரசாதம், ஸ்தானம் முதலான சொற்கள் திருக்கோயில்களைக் குறிப்பனவே. இவை அனைத்தும் இறைவன் உறைவிடம் என்னும் பொருளைக் குறிப்பன. கோயில் என்ற சொல்லும் கோ - இறைவன், இல் - உறைவிடம் என்று அதே பொருளை உணர்த்துகிறது.

இறைவன் நாதாதி தத்துவங்களாலாய உலகைப் படைத்தான், எண்ணிலடங்கா உயிர் வகைகளையும் உணர்வற்ற பொருள் களையும் படைத்தும் காத்தும் கரந்தும் வருகின்றான். அவற்றுள் இயங்கியும் அவற்றிற் கப்பாற்பட்டும் வருகின்றான்.

இறைவன் பேரறிவும் பேராற்றலும் உடையவனாதலின் சிற்றறிவும் சிறு ஆற்றலும் கொண்ட மனிதன் அவ்விறைவனை அவன் படைப்புக்களிடையே காண முயல்கிறான். அம்முயற்சியின் விளைவாகவே கோவில் எழுகிறது. அங்கே கோபுரங்களில், விமானங்களில், சுவர்களில், தூண்களில், மண்டபங்களில், தேவர்களையும், மனிதர் களையும், யக்ஷர்களையும், கின்னரர்களையும், விலங்குகளையும், புட்களையும், மரங்களையும், செடிகளையும் அனைத்துமே செதுக்கப்பட்ட உருவங்களாக, வார்க்கப்பட்ட பிரதிமை களாக, தீட்டப்பட்ட சித்திரங்களாகக் காண்கிறோம். அனைத்தையும் இயக்கும் இறைவனை அருவுருவாய்த் திருக்கோயிலின் கருவறையிலுள்ள சிவலிங்கத் திருமேனி யாகக் காண்கிறோம். ஈசானசிவகுரு தேவபத்ததி என்ற நூல். "திருக்கோயி லானது சிவன், சக்தி, நாதம் பிந்து முதலாகக் கலாதி தத்துவங்களின் புறத் தோற்றமாதலின் அதைச் சிவத்தோடு தொடர்புடைய மூர்த்தியாகப் பாவித்து வழிபட வேண்டும்" என்று கூறுகிறது.

கோயிலின் முக்கிய பகுதி கருவறையின் மேலுள்ள விமானம். அது சதுரமாக இருந்தால் **'நாகரம்'** என்றும் வட்டமாக இருந்தால் **'வேசரம்'** என்றும், ஆறு அல்லது எட்டு பட்டை இருந்தால் **'திராவிடம்'** என்றும் 'சில்பரத்னம்' போன்ற சிற்ப நூல்கள் வகைப்படுத்தி யுள்ளன. 'நாகரம் நாட்டின் வடபகுதியிலும், 'திராவிடம்' தென்பகுதியிலும். 'வேசரம்' இடைப்பகுதியிலும் காணப்படுவனவாகச் சாத்திரங்கள் கூறியபோதிலும், தென்னகத் திலேயே மூன்று வகைகளையும் காணலாம். நெல்லைப் பகுதியிலுள்ள ஒரு கோயிலில் நாகர அமைப்பையும், கங்கைகொண்ட சோளேச்சரத்தில் வேசர அமைப்பையும், தஞ்சைப் பெரியகோயிலில் திராவிட அமைப்பையும் பார்க்கின்றோம்.

விசுவகர்மப்பிரகாசம் முதலான சிற்ப நூல்களில், இருபதுவகைக் கோயில்கள் (பிரசாதங்கள்) ஒன்று முதல் பதினாறு உப்பரிகை கொண்டவை குறிப்பிடப் படுகின்றன. அவை மேரு, மந்தரம் கைலாசம், விமானச்சந்தம், நந்தனம், சமுத்ரம், பத்மம், காருடம், நந்திவர்த்தனம், குஞ்சரம், கிருகராஜம், விருஷம், அம்சம், கும்பம், சர்வதோபத்ரம், மிருகராஜம் வர்துலம், சதுரச்ரம், ஷோடசாச்ரம், அஷ்டாச்ரம் ஆகியவை.

திருக்கோயிலின் கருவறையில் உல குக்கே உயிரான இறைவனை ஓருருவில் இருக்கச் செய்து, திருக்கோயில் முழுதுமே நமது உடலோடு ஒத்த முறையில் அமைக்கப் பட்டுள்ளது. கோயிலின் பல்வேறு உறுப்பு களுக்கு உடலுறுப்புக்களின் சில பெயர்களே அமைக்கப்பட்டு உள்ளன. உடலுக்குக் கால் எப்படியோ அப்படி கோவிற்றூண்கள் 'பாதம்' என்று குறிப்பிடப்படுகின்றன. பாதத்திற்கு 'பாதுகை' தேவைப்படுவது போலத் தூணின் அடிப்பகுதி 'பாதுகை' என அழைக்கப்படுகிறது. தூணுக்கு மேல் சிகரத்திற்குக் கீழுள்ள பகுதி 'களம்' (கழுத்து) என்று வழங்கப்படுகிறது. அதற்குச் சற்று மேல் வளைந்த ஒரு பகுதிக்கு 'நர்சிகா' (மூக்கு) என்று பெயர். மனித உடலுக்குத் தலை எப்படிச் சிறப்புடையதோ அப்படிக் கருவறைக்கு மேலுள்ள 'சிகரம்' (சிகையை உடைய தலை) சிறப்புடைத்து. ஒருவரின் முகத்தைக்கொண்டே இன்னு ரென்று தெரிந்து கொள்வதைப்போல, சிகரத்தின் அமைப்பைக் கொண்டுதான் நாகர, வேசர, திராவிட வகைகளைப் பிரித் தறிய இயலும். கருவறையைச் சுற்றியுள்ள ஐந்து பிரகாரங்களும் மனிதனுக்குள்ள ஐந்து கோசங்களை ஒத்தன. அவை அன்னமய கோசம், பிரயாண மயகோசம், மனேமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் ஆகியவை; திருக்கோவிலின் ஐந்து பிராகாரங்களையும் முறையே சுற்றி இறுதி யில் கருவறைக்குச் செல்கின்ற ஒருவன் படிப்படியாகப் பருப்பொருளான புறப் பொருளை விட்டுக் கருப்பொருளான சூக்கும நிலையில் காணப்படும் இறைவனை நெருங்கு கிருன் என்பது பொருள்.

யாத்திரிகர்கள் தங்குவதற்கெனப் பிராகார மண்டபங்களும், இசை, நாட்டியம், புராணம் படித்தல், சமயவாதம் செய்தல் ஆகியவற்றிற்கான தனி மண்டபங்களும் சில கோயில்களில் உண்டு. கோவிலில் உள்ள நான்கு வாயில்களும் நிவிருத்திகலை, பிர திஷ்டாகலை, வித்யாகலை, சாந்திகலை ஆகிய வற்றிற்கு ஒப்பிடப்பட்டுள்ளன. கோவிலின் அகன்று விரிந்த அடித்தளம் மேலே செல்லச் செல்லக் குவிந்து தூபியில் முடிவது பருப் பொருள் சூக்கும நிலையை அடைவதைக் குறிக்கும். சிகரத்தின் மீதுள்ள அமிருத கலசம் பிறப்பற்ற பெருநெறியை உணர்த்து கிறது.

கருவறையில் உள்ள சிவலிங்கத்தை அருவமாயும் உருவமாயும் இருந்து அருட் டொழில் புரியும் இறைவனின் குறி என்று சேக்கிழார் காட்டுவதை நாம் காணலாம். 'காணுத அருவினுக்கும், உருவினுக்கும் காரணமாய், நீள்நாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்' என்பது சேக் கிழார் வாக்கு.

திருக்கோயில் அமைப்பு முப்பொருள் உண்மையை உணர்த்துவதாகும். கருவறை யில் வீற்றிருக்கும் இறைவன், பதி. அவனை நோக்கிக் கிடக்கும் நந்தி பசு. நந்தியின் பின்புறம் அமைந்துள்ள பலிபீடம் பாச நீக்கத்தை உணர்த்தும். இதைத் திருமூலர் கூறுகிருர்.

"ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்
ஆய பசுவும் அடலேறென நிற்கும்
ஆய பலிபீட மாகுநற் பாசமாம்
ஆய அரனிலை ஆய்ந்து கொள்வார்கட்கே"

திருக்கோயிலிலுள்ள உருவங்கள், அவற்றில் காணப்படும் அங்க முத்திரைகள், அணிகள், ஆயுதங்கள், வாகனங்கள் ஒவ் வொன்றும் ஒரு தத்துவத்தைப் பின்னணி யாகக் கொண்டவை. விரிவஞ்சி அவற்றை விளக்கப் புகவில்லை. எடுத்துக்காட்டாக சோமாஸ்கந்தர் போன்ற போகமூர்த்திகளும் தட்சிணமூர்த்தி போன்ற யோகமூர்த்தி களும், காலசம்மாரமூர்த்தி போன்ற வேக மூர்த்திகளும், முறையே காத்தல், தோற்றம், அழித்தல் ஆகிய முத்தொழில்களைக் குறிப்பன. நடராசத்திருமேனி இறைவனின் பஞ்சகிருத்தியங்களைக் குறிப்பன என்பதை யாவரும் அறிவர்.

# திருவள்ளுவரும் இமானுவேல் காண்ட்டும்

*பேராசிரியர், திரு.* **வை. இரத்தினசபாபதி,** *எம். ஏ., பி. ஓ. எல்.,*

*தத்துவத்துறை, அண்ணமலைப் பல்கலைக் கழகம்.*

[தெய்வப் புலமைத் திருவள்ளுவனரின் ஒப்புயர்வற்ற கருத்துக் களோடு, கி. பி. 18ஆம் நூற்றுண்டின் இறுதியில் ஐரோப்பிய நாட்டுத் தத்துவ வரலாற்றில் புதுமரபு படைத்த ஜெர்மானிய நாட்டுத் தத்துவ மேதை இமானுவேல் காண்ட் என்பாரின் கோட்டுபாடுகளை ஒப்பிட்டுப் புதிய சிந்தனைகள் பலவற்றை, ஆசிரியர் நீண்ட இவ்வரிய கட்டுரைக்கண் படைக்கிருர். காண்ட் வகுக்கும் அறக் கோட்பாடுகள் தமிழ் மக்களின் சிந்தனை ஓட்டத்தில் அடிக்கடி எடுத்துப் பேசப்பெருத ஒன்றென்பதனுல், அவர் தம் கொள்கைக் குவியல்களை முற்றிலுமாகப் பல பட விரித்து, அதன் பின்னர்த் திருவள்ளுவர் கொள்கைகளை ஒட்டிவரும் சிந்தனைகளையும், வள்ளுவத்தோடு மாறுபடும் எண்ணங்களையும் பல முனை நின்று ஒப்பிட்டு, புதிய ஒப்புமை ஆராய்ச்சி ஒன்றை நம் எண்ணத்திற்குத் தருகிறது இக்கட்டுரை. காலத்தால் வேறுபட்ட இவ்விருபெரும் சிந்தனையாளர் தம் அறக் கோட்பாடு களுள் காணப்படும் பொதுமை, எக்காலத்தும் அறச்சிந்தனை மாற்றமுறுவ தில்லை என்பதை ஆழ நிலைநாட்டுதல் சிந்தனைக்குரியதாகிறது.]

### முன்னுரை

தமிழ்ப் பெருங்குடி மகனராகத் தோன்றிக் கி. மு. முதல் நூற்றுண்டளவில் தமிழகத்தில் வாழ்ந்து, உலகமக்களைப் பொதுமையிற் கண்டு அறமுரைத்த பேராசானுகக் கருதப்பெறும் திருவள்ளுவனர் தம் திருக்குறட் கருத்தினேடு, கி. பி. 18-ஆம் நூற்றுண்டின் இறுதிப் பகுதியில் ஜெர்மானிய நாட்டில் ஏழைக் குடிமகனுகத் தோன்றி ஐரோப்பிய நாட்டுத் தத்துவ வரலாற்றில் ஒரு புதிய மரபை உண்டாக்கிய இமானுவேல் காண்ட் (22-4-1724 to 28-2-1804) என்ற சிந்தனையாளர் வகுத்துச் சென்ற அறவியற் கருத்தினையும் இணைத்துக் காண்பது சிந்தனைக்கோர் இனிய விருந்து. வாழ்ந்த இடத்தாலும் காலத்தாலும் நாகரிகத்தாலும் முற்றிலும் வேறுபட்ட இருபெருஞ் சிந்தனையாளர்கள் அறவியற் கருத்துக்களை எவ்வாறு அணுகியிருக்கிருர்கள் என்பதையும் நாம் அறியலாம். உலக அரங்கில் திருவள்ளுவர் தம் ஒழுக்கவியற் கருத்துக்கள் எத்தகைய இடத்தைப் பெறுவதற்குத் தகுதியுடையன வாய்த் திகழ்கின்றன என்பதையும் காணலாம். சற்றேறக் குறைய 1900 ஆண்டுகள் இடைப்பட்டுப் போன நிலையில் இருபெருஞ் சிந்தனையாளர்களை நாம் இவ் வகையில் இணைக்கிறேம் என்ற அளவில் நின்று, சிந்தனையை இயக்குவோமாக.

### வாழ்க்கை வரலாறு

திருவள்ளுவரின் வாழ்க்கை வரலாறு பற்றித் தெளிவாகக் கூற இயலாத நிலை நமக்கு உண்டு என்பது எவ்வளவு

உண்மையோ அவ்வளவு உண்மையான ஒன்று இமானுவேல் காண்ட் என்பவருடைய, தெளிவாகக் கூற முடிந்த வாழ்க்கை வரலாறு.

ஜெர்மனிய நாட்டில் கிழக்குப் பிரஷ்யாவில் (East Prussia) கொயினிக்ஸ்பர்க் (Koinigsberg) என்னும் ஊரில் ஏழைக் குடும்பத்தில் பிறந்தார். வறுமையின் சின்னமாக வாழ்ந்தவர். காண்ட் (Kant) என்ற குடும்பப் பெயரே தன் இயற்பெயராக நிலைத்திருக்குமாறு தத்துவ வாழ்க்கை வாழ்ந்த பெரியவர். காலந்தவறாத தத்துவச் சிந்தனையாளர்' என்ற புகழோடு வாழ்ந்தவரே இமானுவேல் காண்ட் என்ற பெருமகனார். அவர் மாலையில் உலாவச் செல்லும் பாதை 'தத்துவ ஞானியின் பாதை' என வழங்கப் பெற்றது என்று கூறலாம். அவர் வெளியே உலாவப் புறப்பட்டால் மாலை மணி 4–30 என எல்லாரும் சரிசெய்து வைத்துக் கொள்ளும் அளவுக்குக் காலவரையறையை உணர்ந்து வாழ்ந்த அவர் காலத்தை வென்ற புகழுடைய தத்துவச் சிந்தனையாளராகத் தம்மை நிலைநிறுத்திக் கொண்டவர். வெளியில் உலாவப் புறப்பட்டு வரும் இவர் குனிந்த தலை நிமிராமற் செல்வார். இவரைக் கண்டவுடன் 'தத்துவ மேதை' என்று பலரும் கைகூப்பித் தொழுது நிற்கும் நிலையைத் தம் வாழ்நாளிலேயே கண்டவர். தமிழகத்தில் தொண்டுநெறிக்கும் புதிய பல புரட்சிக் கருத்துக்களுக்கும் திலகம் என வாழ்ந்த அப்பரடிகளைப் போல 81 ஆண்டுகள் ஒரு தலைமைக் குடிமகனாராக வாழ்ந்த காண்ட் பெருமகனார் தத்துவ உலகில் புரட்சிச் சிந்தனை மரபைத் தோற்றுவித்து மரத்திலிருந்து ஓர் இலை உதிர்வது போல இயற்கையாகவும் அமைதியாகவும் இவ்வுலக வாழ்க்கையை நீத்தார். மணமாகாத வாழ்க்கையை அமைத்து வாழ்ந்தார்.

கி. பி. 1788ல் வெளியிட்ட செயல்நிலை அறிவாய்வு (The Critique of Practical Reason) என்னும் நூலில் அறவியற் கருத்துக்களைத் தெளிவுபடுத்தினார்.

**காண்ட் வகுக்கும் அறக் கொள்கை**

காண்ட் பெருமகனாரின் அறக்கொள்கையானது விரிவான சிந்தனைக் குரியது. தமிழக மக்களின் பொதுமைச் சிந்தனையில் அது அடிக்கடி எடுத்துப் பேசப் பெறாத ஒன்று. எனவே காண்ட் அவர்களின் அறக் கொள்கையைத் தெளிய விளங்கிக் கொள்ளுதல் வேண்டும். பின்னரே காண்ட் பெருமகனாரின் கருத்துக்கள் திருவள்ளுவப் பெருமகனாரின் கருத்துக்கள் இணையும் அல்லது மாறுபடும் இடங்களை நாம் சிந்தித்தல் இயலுவதாகும்.

**இருவகைக் குறிக்கோள்கள்**

'குறிக்கோள் இல்லாது கெட்டேன்' என்பார் அப்பரடிகள். மனித வாழ்க்கையை மூன்னிருந்து இழுத்து, மேல் நிலைக்குக் கொண்டு செல்லக் காரணமாக நிற்பது குறிக்கோள். எந்த ஒன்றை அடைய வேண்டும் என வரையறைப் படுத்திக் கொண்டு வாழ்க்கையை நடத்துகிறோமோ அந்த ஒன்று குறிக்கோள். மானிதவாழ்வின் குறிக்கோள்கள் இரண்டு வகையாகப் பிரிக்கப் பெறுகின்றன; சார்பு உற்ற குறிக்கோள்கள், சார்பு அற்ற குறிக்கோள்கள் என. இவைகளைப் பாகுபடுத்தி அறிவதற்கு மூன்று இலக்கணங்கள் உள்ளன.

**1. பொதுமை:** தனிமனித வாழ்க்கையை அல்லது ஒரு சிலருடைய வாழ்க்கையைச் சார்ந்து நிழ்கும் குறிக்கோள்கள் சார்பு உற்றவை. எந்த ஒரு தனி மனித வாழ்க்கையையும் சாராமல் பொதுமையானதாக இருப்பதால் சில குறிக்கோள்கள் சார்பு அற்ற குறிக்கோள்கள் எனப் பெறுகின்றன.

"நான் மருந்து உண்ணவேண்டும். ஏனெனில் நோய் நீங்கிய வாழ்வை நான் பெறுவதற்காக". இது சார்பு உற்ற குறிக்கோள். இது நோயுடைய வாழ்க்கையைக் கொண்டிருக்கிற எனக்கு மட்டுமே உரியது. இன்னும் சற்று நீட்டிக்க விரும்பினால் நோய் வாழ்வையுடையது பலருக்கும் சென்று பொருந்துவதாகலாம். ஆனால் இது அனைத்துயிர்க்கும் பொதுவான குறிக்கோளாக அமையாது.

**2. வழியும் பயனும் ஒன்றுதல்:** நான் மருந்து உண்ணவேண்டும் ஏனெனில் நோய் நீங்கிய வாழ்வைப் பெற வேண்டும் என்ற சார்புக் குறிக்கோளில் வழியும் பயனும் வெவ்வேறானவை. மருந்து உண்ணுதல் வழி; நோய் நீங்கிய வாழ்வைப் பெறுதல் பயன். முன்னுள்ள வழியில் நடந்தால் பின்னுள்ள பயனை அடையலாம். "நான் பண்பாளனாக இருக்க வேண்டும்"; ,,நான் வாய்மையாளனாக இருக்க வேண்டும்,, என்பன போன்றவை சார்பற்ற குறிக்கோள்கள். இக் குறிக்கோள்கள் அனைவர்க்கும் பொது. இவைகளில் வழியும் பயனும் ஒன்றே. பண்பாளனாக இருக்க வேண்டும் என்பதைப் பயன் என்றோ வழி என்றோ கூற முடியாது. பண்பாளனாக இருப்பது வழி அன்று. பண்பாளனாக இருத்தல் என்பதை வழியாக அமைத்துக் கொண்டு அடையக் கூடிய வேறு பயன் யாது? ஒன்றும் இல்லை. வேறு ஒரு பயனை எதிர்பார்த்துப் பண்பாளனாக இருக்க வேண்டும் என்று எண்ணுவது இல்லை. பண்பாளனாக இருக்க வேண்டும் என்பதற்காகப் பண்பாளனாக இருக்கிறோம். எனவே இப்படிப்பட்ட குறிக்கோள்களில் வழியும் பயனும் ஒன்றே

**3. கட்டாயத்தன்மை:** விதி விலக்குக்கு இடம் தராத குறிக்கோள் எதுவோ அது கட்டாயத்தன்மை உடையதாகக் கருதப்பெறுகிறது. நோய் நீங்கிய நல்வாழ்வைப் பெறுவதற்கு மருந்து உண்ண வேண்டும் என்ற குறிக்கோளில் எனக்கு நோய் இருந்தபோதிலும், நான் நோய் நீங்கி வாழ வேண்டும் என்பதைக் குறிக்கோளாகக் கொள்ளாமலும் இருக்கலாம். சில வேளைகளில், மருந்தின் கடுமையை எண்ணி, நோயின் கடுமையை ஏற்றுக் கொள்ளக் கூடத் துணியலாம். இவ்வாறு விதி விலக்குக்கு இடம் தராததே கட்டாயத் தன்மை. விதிவிலக்கு உட்புகுவதற்குக் காரணம் விருப்பு வெறுப்புக்களே. நான் பண்பாளனாக இருக்க வேண்டும் என்பது விதிவிலக்குக்கு இடந்தராத கட்டாயத் தன்மை வாய்ந்தது. நான் பண்பாளனாக இருக்க வேண்டும் என்பது வேறு எந்த ஒரு பயனையும் எதிர்பார்த்து நம்மால் விரும்பப் படுவது அன்று. பண்பாளனாக இருப்பது தான் வாழ்க்கை. பண்பாளனாக இருப்பவன் தான் மனிதன். அது அவன் இயற்கை. பண்பாளனாக இருப்பது ஒருவனின் விருப்பச் செயல் அன்று. அது அவன் கடமை.

அறக் குறிக்கோள்கள் [Moral ends] பொதுமை உடையவை; வேறு பயன் நோக்காதவை (ends in themselves); விதிவிலக்குக்கு இடந்தராதவைகளாய்க் கட்டாயத் தன்மையைக் கொண்டவை. மேற்கூறிய காரணங்களால் அறக்குறிக்கோள்கள் சார்பு அற்ற குறிக்கோள்கள் என்று காண்ட் முடிவு செய்தார்.

### சார்பற்ற அறநியதிகளை அறியும் முறை

சாற்பற்ற கடப்பாடு அல்லது அறக் குறிக்கோள்களை அறிவதற்கு மூன்று வகையான வாய்பாடுகளைக் (maximum) கூறுகிறார்.

1. எந்த ஒரு அடிப்படைச் சட்டமானது எல்லோரும் மேற்கொண்டு நடக்கக்

கூடிய பொதுமைத் தன்மை வாய்ந்த இயற்கைச் சட்டமாக இருக்க வேண்டும் என்று நீ முடிவு செய்கின்ருயோ அந்த அடிப்படைச் சட்டத்தின் மீது மட்டுமே நீ நடத்தல் வேண்டும். "Act solely on that principle which you would be willing might become a universal law of nature on which every other person would also always act."[1] இவ்வாய்பாட்டினை நான்கு எடுத்துக் காட்டுக்கள் மூலம் அவர் விளக்குகிருர்.

அ. தற்கொலை செய்துகொள்ள எண்ணுதல். இது சரியானதா தவருனதா என ஆராயப்பட வேண்டுமானல் காண்ட் அவர்களின் கருத்துப்படி இதை ஒரு பொதுமை அறமாக அமைத்துப் பார்க்க வேண்டும். முரண்பாடுகள் எவையும் இல்லாமல் இது எல்லாருக்கும் பொருந்துவதாக அமையும் எனில் சரியானதே. தற்கொலை செய்வதை அனைவரும் மேற்கொண்டால் தற்கொலை செய்துகொள்ள மனிதர்களே இல்லாத நிலைமை வெகு விரைவில் உண்டாகிவிடும். இதை அறம் என்று கொண்டால் மிகக் குறுகிய காலத்திலேயே இந்த அறம் இல்லாமலேயே போய்விடுகிறது. இது தன்னைத் தானே கொன்று கொள்வது. எனவே இது அறமாகாது.

ஆ. பண நெருக்கடி உடைய ஒருவன் குறிப்பிடப்பெற்ற ஒரு காலக் கெடுவுக்குள் திருப்பிக் கொடுக்க முடியாது என்பதைத் தெரிந்திருந்தும் திருப்பித் தருவதாகப் பொய்யான முறையில் உறுதிமொழி கூறிக் கடன் வாங்குகிருன். இதைப் பொது விதியாக ஆக்கினல் ஒவ்வொருவரும் இவ்வாறே பொய்யான உறுதிமொழியைக் கூறிக் கடன் பெறலாம் என்பதாகும். முடிவு என்ன? கடன் கொடுப்பவரே இருக்க மாட்டார். இது தவறு. ஏனெனில் அறம் என மேற்கொண்ட ஒன்றை இறுதிவரையில் செய்து முடிக்க எந்த ஒருவனலும் முடியாது.

இ. ஒருவன் சோம்பல் வாழ்க்கையை மேற்கொள்ளுதலும், தன்னிடத்திலுள்ள திறமைகளை வளர்த்துக் கொள்ளாதிருத்தலும் ஆகியவை. இவை தவருனவை. ஏனெனில் இத்தகைய வாழ்க்கையைப் பொதுமையானதாக்க முடியாது. மற்றவர்கள் சோம்பேறியாக இருக்கும் போது அதை நல்லது என ஏற்றுக் கொள்ளாத ஒருவன் அதே சோம்பலைத் தானே மேற்கொள்ள மாட்டான்.

ஈ. உதவி செய்ய முடிந்த நிலையில் இருக்கும்போதும் ஒருவன் மற்றவர்களுக்கு உதவி செய்ய மறுப்பது, இது தவறு. ஏனெனில் அவனுக்கே சில சமயங்களில் உதவி தேவைப்படக்கூடும், ஆதலால் மற்றவர்களின் உதவியை நாடுவான். எனவே மற்றவர்களுக்கு உதவலாகாது என்பதைப் பொது நியதியாக்க அவன் விரும்பமாட்டான்.

மேலே குறிப்பிட்ட நான்கு எடுத்துக் காட்டுக்கள் மூலமாக முதல் வாய்பாட்டைக் காண்ட் பெருமகனர் விளக்குகிருர்.

2. எந்த ஒருமனிதனையும், ஏன் உன்னையும் சேர்த்துத்தான் அடுத்தவர் நன்மையை முடித்துவைக்கக்கூடிய கருவி என நினையாதே; ஒவ்வொருவரையும் தன்னளவில் முடிந்த நிலையாக நின்று எதனையும் முடித்துக்கொள்ளக் கூடிய ஆற்றல் பெற்றவர்கள் என மதிப்பாயாக. சுருங்கக்கூறின் உன்னை மதித்துக் கொள்வதுடன் மற்றவர்களையும் நடுவுநிலையில்

1. W. K. WRIGHT; A History of Modern Philosophy - Page 282.

நின்று மதிக்க வேண்டும். எந்த ஒருவரையும் உன் நன்மைக்குரிய கருவியாகப் பயன் படுத்தாதே. "Treat every human being including yourself as an end in himself and not as a means to the advantage of anyone else".[1]

இந்த இரண்டாவது வாய்பாட்டை விளக்குவதற்கு மேலே குறிப்பிடப் பெற்ற நான்கு எடுத்துக்காட்டுகளையே மீண்டும் அமைக்கின்றார்.

தன்னளவில் முடிந்த நிலையாகத் தன்னை நினைத்தல், தன்னைக் கருவியாக நினைத்தல் ஆகிய இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டை நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். தன்னளவில் முடிந்த நிலையாகத் தன்னை நினைத்தல் என்பது ஒவ்வொருவரும் தத்தம் தனிநிலைகளில் எந்த ஒன்றற்கும் அடங்கி நடத்தல் இல்லாமல், அறிவின் தனி வழியில் தற்சுதந்திரமாக நின்று தன்னுரிமையோடு, கட்டுப்பாடற்ற அறநியதிக் கொள்கைகளை அறிந்து நடக்கும் நிலைமை. கருவியாக நிற்றல் என்பது தன்னிடத்தில் இருக்கும் உயர் பண்புகளை வெளிப்படுத்தித் தன்னைத் தனிநிலையுடையவனாகச் செய்து கொள்ளாமல் பிறவற்றிற்கு அடிமையாக நிற்றல். பிறருடைய கருத்தை, குறிக்கோளை ஏற்று, அவைகளை முடித்து வைக்கத்தான் ஒரு கருவியாக நிற்பது. சுருங்கக் கூறின் அறிவின் வழி நிற்றலே தன்வழி நிற்றல்; ஆசை காரணமாகப் புலன்வழி நிற்றலே பிறவழிநிற்றல். இக்கருத்துக்களை முறையே காண்ட் பெருமகனார் 'Law of Autonomy' என்றும் 'Heteronomous' என்றும் விளக்குகிறார். மனிதன் அறிவினால் உயர்வு பெற்றவன். மனிதன் அறிவுநிலையில் நின்று நடப்பதைத்தான் தற்சுதந்திரமாய் அடிமையின்றி நிற்றல் என்று காண்ட் கருதுகிறார். ஒருவன் உணர்ச்சிகளுக்கும் போக்குகளுக்கும் அடிமையாகும் போது அவன் அறநியதிக்கு மாறாக நடக்க முற்படுகிறான். இதுவே பிறவழிநிற்றல்.

தற்கொலை செய்து கொள்பவனும் சோம்பேறியும் இவ்விரண்டாவது நியதியின் படி, தங்கள் தங்களுக்குக் கிடைத்துள்ள மிக நல்ல வாய்ப்புக்களைப் பயன்படுத்தத் தவறியவர்கள் ஆகிறார்கள். இவர்கள் தங்கள் தங்கள் அறிவின் அடிப்படையில் செயலாற்றாமல் உணர்ச்சிக்கு அடிமையாகி விடுகிறார்கள். காண்ட் அவர்கள் குறிப்பிட்ட எடுத்துக் காட்டுக்களில் அமைந்த இவ்விரு வாழ்க்கையினரும் தம்மை முடிந்த பயனாகக் கருதும் நிலையை மேற்கொள்ளாமல் உணர்ச்சிகளுக்குக் கருவிகளாக அமைத்துக் கொண்ட குறையுடையவர்கள். இனி, அடுத்த இரு வகை வாழ்க்கையினர்– பொய்ச் சத்தியம் செய்பவர். பிறருக்கு உதவி செய்ய மறுப்பவர், மற்றவர்களை முழுப்பயன் உடையவர்களாக– முடிந்தநிலை பெற்றவர்களாக நினையாமல் அவர்களைக் கருவியாக நினைத்தவர்கள். தாம் பொய்யாகச் சத்தியம் செய்வதன் காரணம் அடுத்தவர்களை எளிமையுடையவர்களாக நினைத்து, அவர்களைத் தம் இன்பத்துக்குப் பயன்படுத்திக் கொள்வதேயாகும் என்பதும் முடிந்தபோது பிறருக்கு உதவி செய்ய மறுப்பது பிறரை முடிந்த பயன் உள்ளவர்களாக மதிக்காத தன்மை என்பதும் காண்ட் அவர்களின் கருத்து.

3. மூன்றாம் வாய்பாடு தனிமனிதனின் உண்மைநிலையைப் படம் பிடித்துக் காட்டுவதாகும். குறிக்கோள் அரசு அல்லது கொள்கை அரசு என்ற ஒன்றை மனத்தில் அமைத்துக் கொள்ளச் சொல்கிறார்.

1. W. K. WRIGT; *A History of Modern Philosophy* — 283

இத்தகைய அரசில் எந்த ஒரு தனிமனிதனும் தானே ஆள்பவனும் ஆளப்படுபவனும் ஆக உள்ளான். கட்டுப்பாடற்ற அறிவு நிலை அனைவர்க்கும் பொது. அதுவே கட்டுப் பாடற்ற அறநியதிகளை அனைவர்க்கும் வழங் கும் ஆற்றலுடையது. எனவே இந்நியதி கள் அனைவர்க்கும் பொதுவாகவே இருக் கும். இந்நிலையில் உணர்ச்சிகளுக்குக் கட்டுப்படாத எந்த ஒரு தனிமனிதனும் தானே தனக்குரிய அறநியதியை வகுத்துக் கொள்கிறான் என்பதே உண்மை. ஒருவன் அறிவொடுபட்ட நிலையில் தனக்குத்தானே வகுத்துக்கொள்ளும் அறநியதிகள் பிறருக் கும் பொருந்தக் கூடியவைகளாகவே இருக் கும்; ஏனெனில் அனைவரும் அறிவின் வழி யிலேயே செயற்படுகிறார்கள். ஆகையால் முடிவாக நோக்கினால் ஒவ்வொருவனும் தானே தனக்குரிய அறநியதியை வகுத்துக் கொள்கிறான்; தானேதன் அறநியதிச் சட்டப் படி வாழ்கிறான்; ஒவ்வொருவனும் ஆள்பவ னாக ஆணை பிறப்பிப்பதும், ஆளப்படுபவனாக ஆணைக்குக் கீழ்ப்படிவதும் இருக்கும்.

**அற நியதிகளின் இயல்பு**

அற நியதிகள் எனப்படுபவை மனிதனின் கட்டற்ற நிலையின் செயல்கள். காண்ட் அவர்களின் கருத்துப்படி, கட்டற்ற நிலை என்பது அறிவினால் ஆளப்படுவது என்பதே. அறிவின் நியதியே அறத்தின் நியதி. அறம் என்பது அறிவின் நியதியைப் பின்பற்றி நடப்பதே. உண்மை யான கட்டற்ற நிலையின் செயல்கள் என்று அடிக்கடி காண்ட் அவர்களால் குறிப்பிடப் பெறுபவை வேறொன்றுமன்று; அறிவின் நியதிகளே. ஏனெனில் அவைகளே வேறு எந்தக் காரணத்திற்காகவும் அல்லாமல் அறத்திற்காகவே அறிவினால் அளிக்கப் பெற்றவை.

அறநியதிகள் கட்டாயமானவை; பொதுமையானவை. (இவற்றை முன்னே 'சார்பற்ற குறிக்கோள்' என்ற தலைப்பிற் கண்டுகொள்க.) அறநியதிகள் தனிப்பட்ட மனிதனின் வேட்கைகள் விருப்பங்கள் என்ப வற்றின் நிழல் படாதவை. அவைகளை நாம் பின்பற்றக் காரணம் அவை அறிவினால் நமக்குத் தரப்பெற்றவை; நம்முடைய புலன் கள் அல்லது விருப்பங்கள் வழியாகப் பெற முடியாதவை என்பதற்காகத்தான். அவை களை நாம் நம்முடைய வெளிப்புற நோக்கில், நுகர்ச்சி நிலையில், அனுபவநோக்கில் எளிமையாகப் புரிந்துகொள்ள முடியாது. ஆயினும் உண்மை நோக்கில் அவைகள் நம்மாற் புரிந்துகொள்ளக் கூடியவைகளே. உண்மையில் அறம் என்பது மனிதனின் தன்னியல்பு முறை எனப்பெறும் அறிவின் செயற்பாட்டு நிலையே. சுருங்கக் கூறின் அறிவு தானாகவே ஏற்படுத்துகின்ற குறிக் கோள்களே அறம்.

**மூன்று ஆதார உண்மைகள்** (Three Postulates).

அறநியதிகளை ஆராய முற்படும் நாம் மூன்று அடிப்படை உண்மைகளை ஒத்துக் கொண்டுதான் ஆகவேண்டும் என்பது காண்ட் அவர்களின் கருத்து.

1. **கட்டற்றநிலை** : சார்பற்ற அற நியதிகளை ஒருவன் அறியலாம். அறிந்த அவன் தான் அறிந்தவைகளைச் செயற் படுத்தக்கூடிய ஆற்றல் அற்றவனாக இருப் பானேயானால் அறிவதனால் மட்டும் பயன் என்ன? எனவே எந்த ஒரு மனிதனுக்கும் சார்பற்ற அறநியதிகளை அறியவும் அறிந்த வாறே செயற்படுத்தவும் வேண்டிய கட்டற்ற நிலை (Freedom) உண்டு. கட்டற்றநிலையில் செயலாற்றக் கூடிய ஆற்றலும் (Freewill) அவனிடம் அமைந்தே இருக்கவேண்டும். [Thou oughtest therefore thou canst.]

கட்டற்றநிலை இல்லாதவர்களுக்கு அறக் குறிக்கோள்களே இருக்கமுடியாது என்பது காண்ட் அவர்களின் கருத்து.

**2. உயிரின் அழியாமை:** உயிர் தன்னுடைய குறிக்கோளை – முழுமையான அறத்தை – சார்பற்ற அறக்குறிக்கோள்களை அடைதற்கு ஒரே ஒரு பிறவி போதாது. முழுமையான அறம் இந்த வாழ்க்கையிலேயே மிகப் புனிதமானவர்களாலும் முழுமையாக அடையப் பெறுவதில்லை என்று காண்ட் குறிப்பிடுகிறார். எனவே உயிர் நீண்ட காலப் பயிற்சியை மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. ஆகையால் அது அழியக்கூடாததாக, இறவாததாக இருக்க வேண்டும்.

**3. கடவுள்:** அறநோக்கம் உடையதாக இந்த உலகம் உண்டாக்கப் பெற்றிருக்கின்றது. மக்கள் செய்யும் சார்பற்ற அறக் குறிக்கோள்களை ஏற்று நீதியை நிலை நாட்டக்கூடிய வன்மையுடையதாகவும், நீதியுடையதாகவும் ஒரு பொருள் இருக்கவேண்டும். அப்பொருள் அறநியதிகளின் வழியாகத்தான் தன்னுடைய இருப்பைப் புலப்படுத்துகிறது என்று காண்ட் கருதுகிறார். அறத்தையும் இன்பத்தையும் இணைக்கும் பாலமாகக் கடவுள் அமைத்திருக்கிறார் என்பது காண்ட் அவர்களின் கருத்து.

### முரண்பாடு

அறிவின் நியதியே அறக்கொள்கைகள். ஆனால் இவைகளை இன்றுள்ள நாம் காணும் புறவுலகத்தோடு ஒத்திட்டுப் பார்த்துச் சரிசெய்து காணமுடியுமா எனில் முடியாது. புறவுலகம் நம்முடைய புலன்களால் உணரப்பெறும் தன்மையுடையதேயன்றி, அறிவின் வழியால் உணரப்பெறுவது அன்று. இத்தகைய முரண்பாட்டைத் தனி மனிதனிடத்தும் காணலாம். உயிர்கள் அறிவுடையவை என்பது உண்மையே. ஆயினும் அவை புலன்களோடு சார்புள்ளவை ஆகையால் இன்பத்தை விரும்புபவைகளே. புலனால் அறியப் பெறும் உலகில் அறமும் இன்பமும் நேரடித் தொடர்பு கொண்டவைகளாக இல்லை. இன்பத்தைப் பற்றிய ஊக்கம் அறத்தை உயர்வுடையதாக ஆக்கிச் செயற்படுத்தாது. அவ்வாறே அறத்தைப் பற்றிய ஊக்கம் இன்பத்துக்குக் காரணமாக அமையாது. சுருங்கக்கூறினால் அறம் தன்னளவில் நன்மையுடையதன்று. இன்பமும் அவ்வாறே தன்னளவில் நன்மையுடையதும் அன்று. மேற்போக்கில் நோக்கும்போது — இப் புறவுலக அனுபவத்தை ஒட்டி நோக்கும்போது அறமும் இன்பமும் இணைந்தவை அல்ல; முரண் ஆனவைகளே.

### முழுமையான நன்மை

அறிவின் சார்பில் எழுகின்ற அறம் தன்னளவில் நிறைவுடைய நன்மையாக உயிர்களுக்கு அமைகிறது. அறத்தை உயிர்களின் மேலான நன்மை (Supreme Good) என்று சொல்லலாம். ஆனால் அதையே முழுமையான நன்மை (Complete Good) என்று சொல்ல முடியாது. முழுமையான நன்மையாக இருந்தால் இன்பத்தையும் அது உயிர்களுக்குக் கொடுக்கவேண்டும். நிறைவான – முழுமையான நன்மையில் (Complete Good) அறமும் இன்பமும் இணைகின்றன. அறமும் இன்பமும் காரண காரியத் தொடர்புள்ளவைகளாக நடைமுறையில் நம்மால் காணப் பெற முடியவில்லை. ஏனெனில் புலன்களால் அறியப்பெறும் புறவுலகில் அறமும் இன்பமும் தொடர்பு கொண்டிருக்கவில்லை. அறிவுள்ள உயிர்கள் புலனுணர்ச்சிக்கு அடிமையாகாத உயர்ந்த உலகக் குடிமக்களாக ஆகும்போதுதான் அறத்திற்கும் இன்பத்திற்கும் உள்ள காரண காரியத்

தொடர்பு விளங்கும். ஆனல் இப்புற வுலகுக்கு அடிப்படையாக விளங்கும் அகவுலகில் அறத்திற்கும் இன்பத்திற்கும் முரண் இல்லை. அறத்திற்கு ஏற்ப இன்பம் உண்டு. **இன்பத்தோடு இணைந்த அறமே உயிர்களின் முழுமையான நன்மை.**

மேலே குறிப்பிடப் பெற்றவைகளால் காண்ட் பெருமகனரின் அறக் கொள்கைகளை நாம் தெளிய உணரலாம் இனி அவைகளைத் திருவள்ளுவர் தம் திருக்குறட் கருத்துக் களோடு இணைத்துச் சிந்தித்தல் வேண்டும்.

## ஒப்புமைகள்

### *1.* அறிவின் நியதிகளே அறநியதிகள்

காண்ட் பெருமகனர் அறத்தின் நியதிகளை வரையறுக்கும் அடிப்படை-யானது அறிவே எனக் கண்டார். மனிதனுக்கு அறிவுவழி நடத்தலே தன்வழி நிற்றல் என்பதாம். அறநியதிகள் கட்டாயத் தன்மை வாய்ந்தவை. அவைகளை நாம் பின் பற்ற வேண்டியதன் காரணம் அவைகள் அறிவினல் நமக்குத் தரப் பெற்றவை என்பதனலேயே.

அறிவுக்கும் அறத்துக்கும் உள்ள இத் தகைய அடிப்படை இணைப்பைத் திருவள்ளுவரும் ஒப்புக்கொள்ளுகிருர்.

திருவள்ளுவர் அறன் வலியுறுத்தல் என்ற அதிகாரத்தில் அறம் என்பதற்கு இலக்கணங் கூறுகிருர். மனிதனின் உயர்வு அறிவினலேயே. அவன் அறிவின்வழிநிற்றல் வேண்டும். அப்போதே அவன் மனிதன். தமிழகத் தத்துவ வரலாற்றில் மனிதன் மட்டு மன்று எல்லா உயிர்களும் அறிவின் அடிப் படையிலேயே கணக்கிடப் பெற்றிருக் கின்றன. உயிர்கள் மேற்கொள்ளும் உடம்புகள் அறிவைப் படிப்படியாக வளர்க்கும் முறையிலேயே அமைக்கப் பெற்றுள்ளன.

"ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனெடு நாவே
மூன்றறி வதுவே அவற்ருெடு மூக்கே
நான்கறி வதுவே அவற்ருெடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்ருெடு செவியே
ஆறறி வதுவே அவற்ருெடு மனனே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே"

என்பர் தொல்காப்பியர். இந்நூற்பாவில் 'மனம்' என்ற ஒன்றை ஏனை நாக்கு, மூக்கு என்பனபோன்றே ஒரு அறிகருவி எனக் கூறப்பெற்றிருப்பினும் மனம் ஏனையவை போலப் பருப்பொருளன்று. உற்றறியும் கருவி முதலாகச் செவிவரையுள்ள கருவிகள் ஐந்தையும் பெற்றிருந்தாலும் அவைகள் மனம் என்ற கருவியைப் பெருதபோது அஃறிணைகளே. அஃறிணைகளுக்கு உயர் திணையாம் தன்மையை யளிப்பது மனமே. அதுமட்டுமன்றி ஏனைய ஐந்து புலன்களின் அடக்கம் வேறு; மன அடக்கம் வேறு. ஐம்புல அடக்கங்களைத் தனியாகவும் மன அடக்கத்தைத் தனியாகவும் வேறு பிரித்துக் காட்டும் சான்ருேர்கள் ஐம்புல அடக்கத்தை பெறுவதற்கு மன அடக்கம் தேவை என்றும் மன அடக்கம் பெறுவதற்கு அறிவே தேவை என்றும் வகுத்தனர்.

"மனம் அடங்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே"

என்ருர் தாயுமானவர்.

"கற்க இடர்ப்பட்டு மிகக் கற்றவெல்லாம்
கற்றவர்பால்
தற்கமிட்டு நாய்போலச் சள்ளெனவோ—
நற்கருணை
வெள்ளம் அடங்கும் விரிசடையார்க்கு ஆளாகி
உள்ளம் அடங்க அலவோ".

என்பது சிவபோக சாரம்.

மனம் தன்வழிநிற்றல் என்பது அறிவின் வழிநிற்றல். அறிவின்வழிநிற்றலால் அது தூய்மையுடையதாக இருக்கின்றது. அப்போது அது அறநியதிகளை உள்ளவாறு உணரவும் உணர்த்தவும் ஆற்றல் உடையதாக ஆகிறது. அத்தகைய மனமே விருப்பு வெறுப்புக்களைச் சார்ந்து நின்று தொழிற்படும்போது மாசு உடையதாக ஆகிறது. விருப்பு வெறுப்புக்களால் இழுக்கப்பெறாத-மாசுபடுத்தப் பெறாத மனநிலையே; மனமானது தன்வழி நிற்றல் எனப்பெறும் நிலையாகிய அறிவின் வழிநின்ற நிலையே அறம் எனவும் அறத்துக்கு மூலம் எனவும் வரையறை செய்கிறார் திருவள்ளுவர்.

"மனத் துக்கண் மாசு இலன்
ஆதல் அனைத்து அறன்"

என அறத்தின் இலக்கணத்தை வரையறுத்துக் காட்டினார். இது மனத்தின் இலக்கணமா? அறத்தின் இலக்கணமா? என்ற வினா எழுப்புவர். மனத்தின் இயல்பான நிலை அறிவு நிலையே; அறிவின் நிலையே அறத்தின் நிலை என்ற இம்மூன்றன் இணைப்பை நமக்கு அறிவுறுத்தும் போக்கிலேயே மனத்தின் இலக்கணமாகவே அறத்தின் இலக்கணத்தை வரையறுத்தார்.

மாசுகலந்த மனமும், முன்னர் அறிவின் வழிநின்ற பயிற்சி காரணமாகச் சில அறங்களை வெளிப்படுத்தும். அத்தகைய அறநியதிகள் ஆரவாரத் தன்மை உடையனவே யன்றி, உள்ளார்ந்த அமைதித்தன்மை உடையன அல்ல என்பதனாலேயே 'ஆகுல நீர பிற' என்றார். மனத்தில் மாசு இருக்கிறது என்பதை உணருவதற்கு உரிய அறிகுறிகளாக அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் என்ற நான்கையும் எடுத்துக் காட்டினார். முதல் இரண்டும் காரணமாக ஒருவன் தன்மனத்தில் மாசு இருக்கிறது என்பதையும், பின் இரண்டும் காரணமாக ஒருவன் மற்றவன் மனத்தில் மாசு இருக்கிறது என்பதையும் உணரலாம்.

"அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்"

என அவ்வறிகுறிகளையும் எடுத்துக்காட்டி அறத்தின் இலக்கணத்தை உணர்த்தினர்.

"மனத்தது மாசாக மாண்டார் நீராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்"

"வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்"

என்றும் கூறி, மேற்சொன்ன கருத்தையே வலியுறுத்தினர்.

மனிதன் மனத்தூய்மையைக் காப்பதே அறிவின் வழிநிற்றல் எனப்பெறும் தன்வழி நிற்றல். அதுவே அறவழி நிற்றல் ஆகும் என்ற கருத்தை, காண்ட் அவர்களின் கருத்தோடு ஒப்புமையுடையதாகக் கொள்ளலாம். இது ஒருபுடை ஒற்றுமையே.

## 2. அறநியதிகளை அறிதல்

அறக்கட்டளைகளை, அறநியதிகளை ஒருவன் எப்படி அறிந்து கொள்வது? திருவள்ளுவரும் ஒழுக்கம் இது என வரையறுத்தாரில்லை. ஒழுக்கம் எனப்படுவது யாது? என்ற வினாவிற்குத் திருவள்ளுவர் நேராக விடையளிக்கவில்லை. நல்லொழுக்கம் தீயொழுக்கம் என்ற பிரிவுகளை ஒத்துக் கொள்ளும் திருவள்ளுவர் அவைகளை இலக்கணம் கூறி வரையறை செய்யவில்லை. ஆயினும் ஒழுக்கமுடைமை என்னும் அதிகாரத்தின் இறுதியில்

"உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்."

என்று கூறுகிறார். அறநியதிகளைக் கடைப்பிடிக்காதவர்கள் அறிவில்லாதவர்களே என்று கூறும் காண்ட் அவர்களின்

கருத்தைத் திருவள்ளுவரும் உடன்படுகிறார். ஒழுக்கத்துக்கும் அறிவுடைமைக்கும் உள்ள இணைப்பை எடுத்துக் காட்டிய திருவள்ளுவர் அறிவுடைமை என்ற அதிகாரத்தில்

"உலகம் தழீஇயது ஒட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்லது அறிவு"

என்றும்,

'எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு"

என்றும் கூறிச் சில உண்மைகளை நுட்பமாக எடுத்துக் காட்டுகிறார்.

உலகம் இருவகை நிலைகளையுடையது; புறத்தோற்ற நிலை; அகனமர்ந்த நிலை என. உலகம் புறத்தோற்ற நிலையில் மாற்றங்களுக்கு உட்பட்டதாகக் காணப்பெறும்; அகனமர்ந்த நிலையில் அது மாறாத ஒன்று. புறத்தோற்ற நிலையில் பன்மைக் காட்சியை வழங்கும் உலகம் அகனமர்ந்த நிலையில் ஒருமைக் காட்சியை வழங்குகிறது. இவ்விருவகைகளைக் காண்ட் அவர்கள் Phenomenal and Noumenal எனக் குறிப்பிடுவார். புறத்தோற்ற நிலையில் உலகம் பலவகையான முரண்பாடுகளுக்கும் இடம் தருவதாக அமைகிறது. புறநிலை உலகு புலன்களுக்கே இயைபுடையதாக இருப்பதால் அவ்வுலகோடு அறிவோ அறமோ தொடர்புடையதாகக் கருதப்பெற முடியாது.

மேலே குறிப்பிடப் பெற்ற காண்ட் அவர்களின் கருத்தைப் போலவே திருவள்ளுவரும் உலகின் உள்ளார்ந்த நிலை அல்லது அகனமர்ந்த நிலையைக் குறிப்பிடுகிறார். எவ்வது உறைவது உலகம்? என்ற வினாவினால் உலகின் அகனமர்ந்த நிலையை வள்ளுவர் குறிப்பிடுகிறார். அத்தகைய அகனமர்ந்த நிலையிலுள்ள உலகத்தோடு அகனமர்ந்த நிலையில் அறநியதியாகத் தொடர்பு கொண்டுள்ளதே அறிவு. மாற்றத்திற்கு இடந்தராத அகனமர்ந்த நிலையில் உள்ள உலகோடு தொடர்புடைய காரணத்தால்தான் அறிவும் மலர்தலும் கூம்புதலும் இல்லாமல் ஒரே நிலையில் இருக்கிறது என்றார். அவ்வறிவின் அடிப்படையில் அறநியதிகளும் மாற்றமின்றி ஒரே தன்மைத்தாக இருக்கும் என்றார். இங்கேதான் உலகம், அறிவு, அறம் மூன்றும் இணைந்து, முரண்பாடு இல்லாமல் திகழும் என்று திருவள்ளுவரும் இணைத்துக் காட்டினார்.

உலகின் அகநிலைத் தன்மையை ஒன்றி உணர்வதே அறிவு என்றும் அது மலர்தலும் கூம்பலும் இல்லாத தன்மையுடையது என்றும் அவ்வறிவுக்கு ஏற்ற ஒழுக்கமுடைமையே உலகத்தோடு ஒட்ட ஒழுகல் என்றும் அது இல்லாதவர் எவ்வளவு கற்றிருந்தாலும் கல்லாதவரே என்றும் கூறினார் திருவள்ளுவர்.

அறநியதியின்படி வாழ எண்ணும் ஒருவன் இவ்வளவு கடுமையான முயற்சியைச் செய்து அறிய முடியுமா? என்னில், அத்தகைய இணைப்பைத் திருவள்ளுவர் காட்டுகிறாரே யொழிய, இத்தகைய சிரமம் இன்றியே நம்மால் இவ்வறநியதிகளை உணரமுடியும் என்று குறிப்பிடுகிறார். விருப்பு வெறுப்புக்களை நீக்கி நின்ற எந்த மனத்திலும் அறநியதிகள் தானே விளங்கும் என்ற உண்மையை மிகத் தெளிவாக விளக்கியவர் திருவள்ளுவரே எனலாம்.

மனம் தூய்மையாக இருந்துவிட்டால் போதும் உலகில் அகனமர்ந்த காட்சியைக் காணலாம்; அறநியதிகளை அறியலாம் என்று மிக எளிமையாக அறநெறியை அறியும் முறையைத் திருவள்ளுவர் கூற, காண்ட் அவர்கள் விருப்பு வெறுப்புக்கள்தாம் வேறுபாடுகளுக்குக் காரணம். அறிவு அனைவர்க்

கும் பொதுநிலையில் இருப்பது. எனவே நாம் அறிவு வயப்பட்டு நின்றால் அற நியதிகளை உணர முடியும் என்று கூறினர் காண்ட் பெருமகனர். அறிவில் எழு சிக்கல் போன்றவைகளை விரிவாக ஆராய்ந்து நமக்கு விளக்குகிறார் திருவள்ளுவர். முடிவு இருவருக்கும் ஒன்றே.

### 3. அறத்தின் பொதுத்தன்மை

அறநியதிகள் தனிப்பட்டியலும் விருப்பு வெறுப்புக்களுக்கு அப்பாற்பட்டவை என்பதால் அவைகள் அனைவர்க்கும் பொதுமையானவைகளாகவே இருக்கும். அறிவுநியதி மனிதனின் பொதுநியதியானமையால் அதைச் சார்ந்த அறநியதிகளும் பொதுமையானவைகளே. சமூக, பொருளாதார ஏற்றத் தாழ்வுகளால் அறநியதிகள் மாறுபடுவன அல்ல. பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் எனவும் கற்றுத் துறைபோய காவலையினும் கல்லா நிலையினனுகிக் கடுமாப் பார்க்கும் வேடனயினும் உண்பது நாழி; உடுப்பது இரண்டே, பிறவும் எல்லாம் ஓரொக்கும்மே எனவும் கூறினாற்போல அறநியதி அனைவர்க்கும் ஒன்றே. இக்கருத்தை காண்ட் பெருமகனர், அறநியதிகள் சார்பற்ற குறிக்கோள்கள் ஆகும்; அவை கட்டாயத் தன்மை உடையவை என்பதோடு பொதுமைத் தன்மையும் உடையவை என வலியுறுத்தினர். இதையே திருவள்ளுவரும் அறத்தின் வழி இதுதான் என்று பொருளாதார, சமூக வேறுபாட்டை அடிப்படையாகக் கொண்டு எடுத்து விளக்க வேண்டாம் என அறன் வலியுறுத்தல் என்ற அதிகாரத்தில் அமைத்துக் காட்டுகிறார் திருவள்ளுவர்.

அறத்தின் வழி அல்லது அறநியதி இது என்று சிவிகையைத் தாங்குபவனையும் சிவிகையில் ஊர்ந்துசெல்பவனையும் அடிப்படையாகக்கொண்டு, பொருளாதார, சமூக ஏற்றத்தாழ்வுகளை அடிப்படையாகக் கொண்டு கூறவேண்டா எனக் கூறினர்.

> "அறத்தாறு இது என வேண்டா; சிவிகை
> பொறுத்தானேடு ஊர்ந்தான் இடை"

அறவழிகள்; அறக்கோட்பாடுகள் அனைவர்க்கும் பொது; வேறுபாடுகளை அமைத்துக் கூறவேண்டா என்பதே திருவள்ளுவர் கருத்து. ஆறு என்பதற்குப் பயன் என்ற பொருளைக் கொண்டதால் எழுந்த சிக்கல்கள் பல.

### 4. அறன் கடைநின்றான் மனம்

அறநியதியைக் கடைப்பிடித்து ஒழுகும் போது மனித உள்ளம் எவ்வாறு இருக்க வேண்டும்?

காண்ட் அவர்கள் அறத் தத்துவத்தில் நுகர்ச்சிக் கொள்கைக்குச் சிறிதும் இடம் தரவில்லை. அறிவு முதற்கொள்கையையே வலிமையாகப் பின்பற்றுகிறார். அறிவின் வழியில் கட்டற்ற நிலையில் பணியாற்றும் தன்மை உள்ளதாகிய நல்ல இயற்றிநிலை என்ற ஒன்றைத் தவிர வேறு எத்தகைய பண்புகளுக்கும் காண்ட் இடமளிக்கவில்லை. இரக்கம், துணிவு, அன்பு ஆகியவைகளினால் அறத்துக்கு மாறான செயல்களும் நடைபெறுகின்றன. ஆகையால் அவைகளை முழுதும் நன்மை உடையவைகளே என்று கூற முடியாது. பயனை எதிர்பார்க்காமலும் தன்னுடைய பலவகையான திறமைகளை ஒன்று திரட்டியும், தன்னுடைய முயற்சியில் வெற்றி கிடைக்குமா? இம்முயற்சி வேறு நிகழ்ச்சிகளால் தடைப்படுத்தப் படுமா? என்றெல்லாம் கருதாமலும் கடமை என்ற ஒன்றையே பெரிதெனக் கொண்டு, மதிக்க வேண்டும் என்பதற்காகப் பாடுபடும் நல்ல இயற்றிநிலை (Good will) ஒன்றே தன்னியல்பில் நன்மையுடையது. (Good in itself). இவ்வடிப்படையில் ஒருவன் செயலாற்றும்போது அறம் அறத்துக்காகவே

என்ற வெற்றுக் கடமையுணர்ச்சியுடன் செயலாற்ற வேண்டும் என்பதை, காண்ட் வலியுறுத்துகிறார். விளைவு கருதாது அறம் அறத்துக்காகவே; கடமை கடமைக்காகவே செய்யப் பெறவேண்டும். (Duty for duty's sake) என்பதே காண்ட் அவர்களின் கருத்து.

விளைவு கருதாது அறம் அறத்துக் காகவே செய்யப் பெறவேண்டும் என்ற கருத்தை,

"இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம் எனும்
அறவிலை வணிகன் ஆய் அலன் பிறரும்
சான்றோர் சென்ற நெறி என
ஆண்டுப் பட்டன்று அவன் கைவண்மையே"

என்னும் புறநானூற்றுப் பாடலால் தெளியலாம்.

பிற எப்பயனும் கருத்திற் கொள்ளாது செய்யப்பெறுவதே கடப்பாடு கடமை என்ற கருத்தைத் திருவள்ளுவர் மிக அழகாக எடுத்தாளுகிறார். இக்கருத்தை,

"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்ஆற்றுங் கொல்லோ வுலகு"

என்ற குறளாற் குறிப்பிடுகிறார்.

இக்கருத்தை வலியுறுத்திக் கூறும் காண்ட் அவர்கள் இதை முடிந்த முடிபாகக் கொள்ளவில்லை. அதுவே முழுமையான மன நிறைவைக் கொடுத்துவிடும் என்ற கருத்தை அவர் திட்டவட்டமாகக் கருதிய தாகக் கொள்ளமுடியாது.

"என் கடன் பணி செய்து கிடப்பதே" என்று அப்பரடிகள் கூறினாற் போலவே காண்ட் அவர்களும் வலியுறுத்தியுள் ளார்கள். ஆனால் "தன்கடன் அடியேனையும் தாங்குதல்" என்ற வகையில் சமயக் கொள்கையானது அறக் கொள்கைக்கு ஆதரவு தந்து நிற்கிறது என்பதைக் காண்ட் அவர்களும் உடன்படுகிறார்.

## வேற்றுமைகள்

### 1. அறிவியல் நியதிகளே அறவியல் நியதிகள்

(அ) அறிவியல் நியதிகளே அறவியல் நியதிகள் என்பது காண்ட் அவர்களின் கருத்து. இது முன்பேயும் விளக்கப் பெற்றது. பிற எதனுடைய சார்பும் இல்லா மல் கட்டற்ற நிலையில் இயங்கும் ஆற்றல் அறிவுக்கே உண்டு என்ற கருத்தைத் திரு வள்ளுவர் ஒப்பவில்லை. இதனாலேயே திருவள்ளுவர் அறிவே அறநியதியின் அடிப் படை என்று வெளிப்படையாகக் கூறாமல் 'மனம்' எனக் கூறி, அறிவு நிகழும் இடத்தைக் காரணமாக்கினார்.

காண்ட் அவர்களின் கருத்துக்கு எதிர்ப் பாகச் சுமார் 1700 ஆண்டுகளுக்கு முன்பே ஒரு அதிகாரம் அமைத்துள்ளார். அதை ஒரு அதிகாரம் எனக் கொள்ளாமல் ஒரு இயலாகவே அமைத்துள்ளார். அறிவைக் கட்டுப்பாடுடையதாக ஆக்குவது ஊழ் என்றார் திருவள்ளுவர். இழத்தலுக்குக் காரணமான ஊழானது, அறிவை – அறியா மைக்குட்படுத்தும் ஆற்றல் வாய்ந்தது என்றார் திருவள்ளுவர். அறத்துப் பாலின் இறுதி அமைப்பாக அமைந்த ஊழியலை மிகப்பெரும் ஆய்வு நிலையில் அமைத்துக் காணவேண்டும்.

(ஆ) அறநியதிகளுக்கு அடிப்படை அறிவு என்று ஒத்துக்கொள்ளத் தயங்காத திருவள்ளுவர் அறிவு என்று கூறாமல் 'மனம்' என்று கூறியதன் காரணம் என்ன? முதற் காரணம் அறிவு கட்டுப்படுத்தப்படக் கூடியதே. மேலும் ஒரு காரணம். மனம் அறிவுக்கு மட்டுமேயன்றி உணர்ச்சி களுக்கும் இடம்தரும் ஒன்றே. இரக்கம்,

துணிவு போன்ற உணர்ச்சிகள் தீயசெயல் களுக்கும் இடம் தருவதால் எல்லா உணர்ச்சிகளையும் முழுமையாகப் புறக் கணித்து விடுகிறார் காண்ட். ஆனால் அன்பு, அருள் என்னும் இரண்டு உணர்ச்சிகளையும் திருவள்ளுவர் நம் சிந்தனைக்குக் கொண்டு வருகிறார்.

"அறத்துக்கே அன்பு சார்பு என்ப அறியார்
மறத்துக்கும் அஃதே துணை."

என, காண்ட் அவர்களின் கருத்தையே எடுத்துப்பேசினாலும், உயிர் உடலுடன்கூடி இயங்குவதே, 'அது அன்பு இத்தகையது என்பதைப் புரிந்துகொள்ளத்தான்' என்று குறிப்பிடுகிறார்.

"அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு."

என்பது குறள்.

அறிவின்மூலம் அறநியதிகளை உணர்த்துகிறார் கடவுள் என்ற காண்ட் அவர்களின் கருத்தோடு மாறுபட்டு, அன்பே கடவுளுணர்ச்சி; அதன்மூலமே கடவுள் மனிதனிடம் இயங்குகிறார் என்ற கருத்தை எடுத்துக்காட்டி அறத்தோடு அன்புக்குள்ள தொடர்பை வலியுறுத்தினர். இதனை

"அறவாழி அந்தணன்,"

என்ற தொடராற் குறிப்பிட்டார். அவன் அறக்கடல்; அவன் தன்மை அன்பு. இக் கருத்தைத் தெளிவாக உணர்த்துவான் வேண்டித் திருவள்ளுவர்,

"அந்தணர் என்போர் அறவோர்
மற்றெவ்வுயிர்க்குச்
செந்தண்மை பூண்டொழுக லான்."

என்பதாற் குறிப்பிட்டார்.

அறிவு ஊமால் கட்டுப்படுத்தப் பெறுவதுபோன்று அன்பு எதனாலும் கட்டுப்படுத்தப் பெறுவதில்லை என்ற கருத்தையும் திருவள்ளுவர் குறிப்பிட்டார்.

"அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்
ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்."

என்பது குறள்.

அறிவுடைமை அறத்திற்குத் தேவையே. ஆனால் அது அவனைச் செயற்படுத்தாது. செயற்படுத்தும் ஆற்றல் அன்புக்கே உண்டு.

"அறிவினால் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தன்நோய்போற் போற்றாக் கடை."

என்பது குறள்.

அன்புடைமையை இல்லறத்துக்கும், அருளுடைமையைத் துறவறத்துக்கும் அடிப் படைகளாக அமைத்ததன் நுட்பத்தை உணர்தல் வேண்டும். அன்பும் அருளும் இறைவனையும் மனிதனையும், ஒரு உயிரையும் ஏனை உயிர்களையும் தொடர்புபடுத்தும் இறை உணர்ச்சிகள். ஏனை மனித உணர்ச்சி களைப் போல இவைகளை எண்ணற்க என்பதே திருக்குறட் கருத்து. இவ்வகையில் காண்ட் அவர்களுடன் மாறுபட்ட நிலையைத் திருவள்ளுவரிடத்திற் காணலாம்.

(இ) அறநியதிகள் அனைத்தும் அறிவு நிலையால் மட்டுமே மதிப்பிடப்பெறுவன அல்ல. உள்ளத்து உணர்ச்சியை அடிப் படையாகக் கொண்டும் மதிக்கப்பெறு கின்றன. தந்தையின் காலைத்தடிந்த சண்டேசர் செயலும், மகனை அறுத்துக் கறிசமைத்த சிறுத்தொண்டர் செயலும் அறிவியல் நிலையினால் அறங்கள் என ஏற்றுக்கொள்ளப் பெறாதவைகளே. சமய நம்பிக்கையினால் இவைகள் அறங்களாயின.

(ஈ) அறநியதிகள் அறிவுநியதிகள் ஆனமையால் எது அறம்? என்பது எல்லா ருடைய உள்ளங்களிலும் வேறுபாடு

இல்லாமல் வெளிப்பட்டுத் தோன்றும் என்பது காண்ட் பெருமகனர் கருத்து.

அறநியதிகள் எல்லாருடைய உள்ளங்களிலும் தெளிவாகத் தோன்றும் என்ருல் காண்ட் அவர்களே, ஒரு அறநியதி சரியா, தவரு என்பதைக் கண்டுபிடிக்க மூன்று வாய்பாடுகளை வகுக்க வேண்டிய அவசியம் இல்லை. அறம் இதுவே என்பதை அறிவதில் சிக்கல்கள் பல உள்ளன என்பதைத் திருக்குறள் எடுத்தியம்புகிறது.

"பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்."

"நன்ருற்ற லுள்ளும் தவறுண்டு அவரவர்
பண்பறிந்து ஆற்ருக் கடை."

என்பன போன்ற திருக்குறள்கள் இக் கருத்தை ஆதரிப்பன.

### 2. பிறரை அறநெறிப்படுத்தல்

காண்ட் அவர்களின் இரண்டாவது வாய்பாட்டின்படிப் பிறருக்கு அறிவுரை கூறித்திருத்த முயல்வது அவர்களைத் தம்முடைய கருத்துக்குக் கருவியாக்கிக் கொள்வதைப் போன்றது ஆகும். மற்றவர்களின் அறிவுடைமையை மதிக்காமல், அவர்களைத் தம்மளவில் முடிந்த பயனக நிற்பவர்கள் எனக்கருதாமல் அவர்களைத் தம்மினும் தாழ்வாக மதிக்கும் தன்மை இது எனக்கருதுகிருர் காண்ட் அவர்கள். பிறர் மகிழ்ச்சிக்குக் காரணமாக இருக்கவேண்டும் என்பதை ஒப்புக்கொள்ளும் அவர் பிறரை அறவாளர்களாக ஆக்க முயலுவதை ஆதரிக்கவில்லை.

தம் காலத்தில் இருந்த சில குறைகளை விலக்குவதற்காகச் சில நியதிகளை வலியுறுத்திக் கூறவேண்டிய நிலை எல்லாருக்கும் இயல்பு. காண்ட் அவர்களும் இரண்டு கருத்துக்களை வலியுறுத்துகிருர். காண்ட் அவர்கள் காலத்திலிருந்த சமய வாதிகள், கடவுள் தம் விருப்பப்படிக் கட்டளைகளைப் பிறப்பிக்கிருர் என்றுகூறி, அனைவருக்கும் அறக்கொள்கைகளை எடுத்துக்கூறும் உரிமை தங்களுக்கே உண்டு என்றும் கூறிவந்தனர். இதனுலேயே காண்ட் அவர்கள் நம்மைச் சார்பற்ற கடப்பாட்டிற்கு முரணைச் செயலாற்றுமாறு கடவுளாலும் உத்தரவிட முடியாது என்றும், மற்றவர்களை அறிவற்றவர்களாக நினைத்து அவர்களை அறமுடையவர்களாக ஆக்குதல் அவர்களை மதிக்காத தன்மை என்றும் வலியுறுத்தினர். உண்மையிலேயே இக் கருத்துக்களை அவர் மிகக் கடுமையாகக் கொண்டிருந்தார் என்று கருதுவதற்கில்லை.

இயல்பாகவே தன்னளவில் அறநியதிகளை அறிந்துநடக்க இயலாதவர்களையும் அறநெறியில் நடக்கச் செய்யுமாறு தூண்டி, அவர்களையும் நன்னெறிப்படுத்தி வாழ வைக்கும் நெறியே அறநூல்கள் ஆற்றும் தொண்டு. திருவள்ளுவர் இக்கருத்துக்கு விதிவிலக்காகார்.

### 3. அறத்தின் பயன்

அறம் தன்னளவில் நிறைவுடையது. வேறு ஒரு பயனை அடைவதற்கு அறம் கருவியன்று. அறநியதிப்படி நடந்தவன் அறவுலகக் குடிமகன் ஆகிருன். அங்கே அவனுக்குக் கடவுள் இன்பத்தைக் கொண்டு வந்து இணைக்கிருர். அறநியதிப்படி வாழ்ந்தவன் இன்பம் அனுபவிக்கத் தகுதியுடையவன் என்பதன்றி அவனுக்கு இன்பம் கொடுத்தேயாகவேண்டும் என்ற உறுதிமொழி கிடையாது. அறநியதிப்படி வாழாதவன் இறைவனை நோக்கி வேண்டிக் கொண்டால் அவனுக்கும் இன்பம் கொடுக்கிருன் இறைவன் என்று சமயவாதிகள் கூறும் கருத்தை முற்ருக வெறுக்கிருர் காண்ட் அவர்கள். புலன்களால் அறியப்

பெறும் உலகு புறவுலகு. அங்கே அறத்துக்கும் இன்பத்துக்கும் முரண்பாடுதான். ஆனல் புறவுலகுக்கு அடிப்படையான அறிவுலகில் (அறவுலகு என்றும் கொள்ளலாம்.) அறத்துக்கும் இன்பத்துக்கும் முரண் இல்லை; அறத்துக்கேற்ற இன்பம் உண்டு.

திருவள்ளுவர் இக்கருத்தை விரிவாக ஆராய்கிருர். **'அறத்தால் வருவதே இன்பம்'** என்பது அவர் முடிவு. அறமும் இன்பமும் காரணகாரியத் தொடர்புடையவை. இன்பமாவது பொருள்களைத் துய்க்கும்போது ஏற்படும் மனநிறைவு எனக் கொள்ளலாம். பொருள்களைத் தொகுத்து வைப்பதனல் இன்பம் உண்டாவது அன்று. அறநெறியில் தொகுத்த பொருளை அறநெறியில் நின்று துய்க்கும்போதுதான் இன்பம். அறநெறிக்கு மாறுபட்டதாகத் திருவள்ளுவர், கருதிய முதற்குற்றம் பிறன் மனைவியை விரும்பிச் சேர்வது. அன்புடைமையில் தொடங்கி, விருந்தோம்பல், இனியவை கூறல், செய்நன்றியறிதல், நடுவுநிலைமை, அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை என அறங்களையே வரிசைப் படுத்திக் கூறிச் செல்லும் திருவள்ளுவர் முதற்குற்றமாகப் பிறனில் விழைதலைக் காட்டி, பிறனில் விழையாமை வேண்டும் என அமைத்தார். அறநியதிக்கு மாறுபட்டவர்கள் எல்லாரிலும் பிறனுடைய மனைவியை விரும்புபவனைப் போன்ற பேதை இல்லை என்றுர். காரணம்: காமம் காரணமாக அறநெறிக்கு மாருகச் செல்பவர்கள் சிலபோது இன்பம் பெறுவதாகக் கூறிக்கொள்கிருர்கள். ஆனல் பிறன் மனைவியை விரும்பிச் சேர்பவன் மற்றவர்கள் பெற்றதாகக் கூறிக்கொள்ளுகின்ற இன்பத்தையுங்கூடப் பெறுவில்லை. அச்சம் காரணமாகத் தான் விரும்பிவந்த இன்பத்தையும் பெறமுடிவதில்லை.

நாம் காணும் இப்புறவுலகில் அறம் ஒன்றே பொருள்களை அனுபவிக்கும் உரிமையை அளிக்கிறது. பொருளுடைமை துய்க்கும் உரிமையை அளிக்காது. இன்பத்துப் பாலில் திருவள்ளுவர் ஒன்றிய காதலுடைய தலைவியோடு இன்பம் துய்க்கும்போது அவ்வின்பம் தம் இல் இருந்து, தம்முடைய பொருளைப் பிறருக்கும் பகிர்ந்துகொடுத்து, தானும் துய்க்கும்போது வரும் இன்பம் போன்றது என்றுர். தம் இல், தமது என்பவை அறநெறியால் வந்த துய்க்கும் உரிமையை எடுத்தியம்பும் சொற்கள். இற்றைநாள் மேலைநாட்டார் வகுக்கும் இருவகை ஊக்கிகளையும் [ Egoistic instincts - தன்னல ஊக்கிகள்; Altruistic instincts - பிறர்நல ஊக்கிகள். ] எடுத்துக் காட்டி, தம் இல்லத்தே இருந்து தாம் துய்ப்பது என்பதன் மூலமாகத் தன்னல ஊக்கியையும், தம்முடையதைப் பிறருக்குப் பகுத்துக் கொடுத்துவிட்டுப் பிறகு துய்ப்பது என்பதன் மூலமாகப் பிறர்நல ஊக்கியையும் அமைதியடையச் செய்யும்போதுதான் மனிதன் தன்னிறைவு பெறுகிருன் என்ற கொள்கையை இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே எடுத்துணர்த்திய பெருமை திருவள்ளுவர்க்குண்டு.

ஒருவன் அறமுறையிற் பொருளீட்டியிருக்கலாம். அதனல் அவனுக்குத் துய்க்கும் உரிமை உண்டு. அறத்தால் வந்த உரிமை அது. ஆனல் அப்பொருளை அவன் தனியே இருந்து துய்க்கும்போது அவன் தன்னுடைய தன்னல ஊக்கியை மட்டுமே நிறைவு செய்துகொள்கிருன். எனவே அவன் அரை மனிதன். அல்லது அரையளவு இன்பம் துய்த்தான் எனக் கொள்ளலாம் அன்ருே? இல்லை.

பொருள் இல்லாத வறியவன் ஒருவன். துய்த்தல் இல்லாமையால் அவனுக்கு

இன்பம் இல்லை. இறுதியில் பிச்சை எடுக்க வருகிறான்; மானத்தை இழந்து பிச்சை எடுப்பதன்மூலம் கிடைத்தபொருளை அவன் அனுபவிக்கும் உரிமை பெறுகிறான். இவ்வுரிமை அவனுக்கு அறத்தின்மூலம் வந்தது அன்று. உலகியலில் அமைந்த வழக்கப்படி வந்தது. உழைத்தல் அறமாகுமேயன்றிப் பிச்சை எடுத்தல் அறமாகாது. ஆதலின் அவன் பிச்சைப் பொருளைத் துய்த்தலின்மூலம் இன்பம் பெறுதல் இல்லை; மாறாகத் துன்பமே பெறுகிறான். ஆனால் உழைத்துப் பொருளீட்டியவன் பிறருக்குப் பகிர்ந்து கொடுக்காது துய்க்கும்போது, பிச்சைப் பொருளைத் துய்க்கின்றவன் பெறுகின்ற துன்பத்தைவிட அதிகத் துன்பத்தையே பெறுகிறான். உழைத்து ஈட்டிய பொருளைத் துய்த்து இன்பம் பெறுவதற்கு அறத்தின் அடிப்படையில் உரிமையைப் பெற்றிருந்தும், பிறருக்குப் பகிர்ந்து கொடுத்து அதன்மூலம் வரும் உரிமையைப் பெருமையால் அவனுடைய துய்ப்பானது துன்பத்தையே தந்தது.

> " இரத்தலின் இன்னது மன்னோ நிரப்பிய
> தாமே தமியர் உணல்."

என்பது குறள்.

எனவே, இன்பத்துக்குக் காரணமாகிய துய்க்கும் உரிமையை வழங்குவது அறம் ஒன்றே என்பது திருவள்ளுவர் கருத்து. இது தமிழகத்தில் நிலவிவரும் கருத்தே.

> " சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
> அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல."

என்பது சான்றோர் வாக்கு.

புறஉலகில் - புலன்வழி இன்பந் துய்ப்பதற்குக் காரணமான நுகர்ச்சி உலகில் அறத்துக்கும் இன்பத்துக்கும் தொடர்பு இல்லை என்று கண்டார் காண்ட் அவர்கள். அறம் இவ்வுலகிலும் இன்பம் தருதல் கண்கூடு என்றார் திருவள்ளுவர்.

> " சிறப்புஈனும் செல்வமும்ஈனும் அறத்தினூஉங்கு
> ஆக்கம் எவனோ உயிர்க்கு."

என்ற குறளில் 'செல்வமும்' எனச் செல்வத்தை உம்மை கொடுத்துக் கூறினர். ஏன்?

> " அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை
> பொருளில்லார்க்கு
> இவ்வுலகம் இல்லாகி யாங்கு."

என்ற குறளில் இவ்வுலகிற்கும் செல்வத்துக்கும் உரிய தொடர்பை அழகாக விளக்கிக் காட்டிய திருவள்ளுவர், அறம் இவ்வுலகத்துக்குக் காரணமாகிய செல்வத்தையும் தரும் என்று வலியுறுத்துவதற்கே.

ஆயினும் காண்ட் அவர்கள் கருதிய ஒரு முரண்பாட்டைத் திருவள்ளுவர் எடுத்துச் சிந்திக்காமல் இல்லை. அது எது? அறவாழ்வு வாழ்பவன் துன்பம் அனுபவிக்கிறான்; அறம் நீங்கிய வாழ்வை மேற்கொண்டவன் இன்பம் துய்க்கிறான் என்ற முரண்பாட்டைத்தான். இந்த முரண்பாட்டை வைத்துத்தான் காண்ட் அவர்கள் அறத்துக்கும் இன்பத்துக்கும் தொடர்பு இப்புறவுலகில் இல்லை என்ற முடிவுக்கு வந்தார்.

திருவள்ளுவர் இம்முரண்பாட்டை மிக நுணுக்கமாக ஆராய்கிறார். அறம் நீங்கிய வாழ்வு வாழ்பவன் இன்பம் துய்க்கிறான் என்பதையும் அறவாழ்வு வாழ்பவன் துன்பம் துய்க்கிறான் என்பதையும் முழுமையாக மறுத்துவிடுகிறார். இல்லை என அறுதியிட்டுக் கூறுகிறார். அறத்துக்கும் இன்பத்துக்கும் தொடர்பு இல்லை என்பது தவறான கருத்து என்றார் வள்ளுவர். பின் முரண்பாடு எங்கே? அறத்தின் நீங்கிய வாழ்வை மேற்கொண்டவனிடம் செல்வம் —

பொருள் குவிந்திருக்கிறது; அறவாழ்வு மேற்கொண்டவனிடம் இருந்த பொருளும் அழிந்துவிட்டது என்ற கருத்தையே எடுத்துக்காட்டுகிறார். எடுத்துக்கொள்வது பொருட் பெருக்கமும்; பொருட் குறைவுமே. அறத்திலிருந்து நீங்கியவனிடம் பொருள் அதிகமாகக் குவிவதற்கும்; அறவாழ்வு மேற்கொண்டவனிடம் பொருள் இல்லாமல் கெடுவதற்கும் காரணம் என்ன? என்ற முரண்பாட்டை ஆய்ந்து, நினைக்கப்படும் என்றார்.

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்.

என்பது குறள்.

*18ஆம்* நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் வாழ்ந்தவரின் வளர்ந்த சிந்தனையை, *1900* ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவரிடம் காண்கிறோம். பதினெட்டாம் நூற்றாண்டுச் சிந்தனையானது தெளிந்து எடுத்தமுடிவை மறுத்து வேறுவழியை எடுத்துக்காட்டிய சிந்தனை வளர்ச்சியை நாம் திருவள்ளுவரிடம் காணமுடிகிறது.

### 4. அறத்தைச் செயற்படுத்தும் முறை

காண்ட் அவர்கள் அறவியலில் மூன்று கருத்துக்களுக்கு முக்கிய இடம் கொடுத்தார்.

(*1*) கடமையின் சிறப்பு (*2*) அறநியதிகள் என்பவை அறிவின் நியதிகள் ஆனமையால் அவற்றை உயர்வாக மதிக்க வேண்டும். (*3*) மனிதனின் பெருமை.

(*1*) கடமையின் சிறப்பைப் பேசும் காண்ட் அவர்கள் கடமையைக் கடமைக்காகச் செய்யவேண்டும் என்று குறிப்பிட்டார். அறத்தை அறத்துக்காகச் செய்ய வேண்டும் என்று கட்டாயத் தன்மையை வலியுறுத்தினர். பயன் கருதாது செய்ய வேண்டும் என்பதை வலியுறுத்தும் எல்லாரும் இக்கருத்தை வெவ்வேறு வகையாக எடுத்துக்கூறியுள்ளார்கள். 'Duty for Duty's Sake' என்பது ஒரு மரபு. இதை வலியுறுத்திச் சொல்லலாம்; உண்மையும் அதுவாகவே இருக்கலாம். மனித மனத்தின் இயல்புக்கு ஒத்துவருமா? என்பதே பொதுவினா.

கடமையைச் செயற்படுத்துவதற்கு அரிய ஒரு தொண்டினைச் செய்தவர் திருவள்ளுவர். திருக்குறளுக்கு மணிமுடி என அமைந்த பேரறத்தை – எந்த நாட்டு நூலிலும் இத்துணையளவு முழங்கப்பெறாத தன்மை அறத்தை எடுத்துக்காட்டி மக்கள் மனத்தைச் செயற்பட வைத்தவர் திருவள்ளுவர். அவ்வறமே **"செய்ந்நன்றியறிதல்"**. எந்த ஒரு தனிமனிதனும் தனியிடத்தமர்ந்து, தான் பிறந்தது முதல் இன்றுவரை யார்யார் என்னென்ன செய்தார்கள்? என்பதை நினைக்க நினைக்கக் கடமையுணர்வு பெரிதும் வலுப்பெறும். நான் இதுவரையில் பெற்றதற்கு நன்றியுணர்வோடு இக்கடமையைச் செய்கிறேன் என்ற எண்ணம் வலுப்பெறுமேயன்றி, மறந்தேனும் இப்பொழுது நான் செய்யும் இவ்வறத்துக்கு என்ன பயன்? என்று சிந்திக்கும் மனநிலையே எழாது. பிற்கால அறக்கொள்கைகளில் வலியுறுத்திக் கூறுதல் மட்டுமே முடிந்த அறங்களை, செயற்படுத்திக் காட்டும் முறையையும் வகுத்துக்கூறிய சிறப்பைத் திருக்குறளிற் காணலாம். காண்ட் அவர்களின் அறக்கொள்கையிற் செயற்படுத்துவதற்கேற்ற வழிமுறைகள் காணப்பெறவில்லை.

(*2, 3*) அறிவின் பெருமை காரணமாக அறச்சட்டங்களை மதிக்கவேண்டும் என்றும், மனிதன் பெருமையுடையவன் என்றும் இரண்டு கருத்துக்களை வலியுறுத்தினர்.

தத்துவ இயலாயினும், அறஇயலாயினும் தனிமனிதனை மையமாக வைத்து ஆராய்ந்து கருத்துக்களை வெளியிட முற்பட்டநிலை மேலைநாட்டில் பொதுவாக விஞ்ஞான வளர்ச்சியைக் கண்டபிறகுதான். சுருங்கக்கூறினல் கி. பி. 15ஆம் நூற்றுண்டிற்குப் பின்னர்தான். தனிமனிதனை மையமாக வைத்து அமைத்த வாழ்க்கை முறைகளைச் சங்ககால இலக்கியங்களிலேயே காணலாம். தனிமனிதன் தன்னிலையிலிருந்து கீழிறங்கிச் செல்லும் நிலையையும் அவனே கடவுள் நிலைவரை உயர்ந்து நிற்கும் நிலையையும் இணைத்து, தனிமனித வாழ்வில் பொதுமையறம் கண்ட பெருமை திருவள்ளுவரின் திருக்குறளுக்கு உண்டு.

காண்ட் அவர்கள் அறத்துக்கும் இன்பத்துக்கும் இப்புறவுலகில் தொடர்பில்லை என்று கூறிய சிந்தனையிலேயே சில கருத்துக்களை நாம் நுணுகி ஆராயலாம். "அறத்தான் வருவதே இன்பம்" என்று சொன்னதோடு நில்லாமல், திருவள்ளுவர் "மற்றெல்லாம் புறத்த" என்ருர். இதைச் சிந்திக்கப்புகின் பெருகும். அறநூலில் இன்பத்துப்பாலைச் சேர்த்தது முரன் எனச் சில மேலைநாட்டு அறவியல் சிந்தனையாளர்கள் கருதுவர். அங்கேதான் உலகச் சிந்தனையாளர்கள் அறவியற் கேள்விகள் சிலவற்றிற்கு ஒதுங்கிச் செல்லும் நிலைமைகளுக்கெல்லாம் விளக்கம் காட்டுகின்ருர் திருவள்ளுவர். காண்ட் அவர்களின் கருத்தோடு மட்டுமே இணைத்துச் சிந்திப்பது இக்கட்டுரையின் நோக்கமாதலால் அக் கருத்துக்கள் இங்கே விளக்கப்பெறவில்லை.

## முடிப்புரை

மேலே எடுத்துக்காட்டப் பெற்ற வாற்ருல் காலத்தாலும் இடத்தாலும் பண்பாடுகளாலும் பிரிந்துநின்ற இருபெருஞ் சிந்தனையாளர்களின் அறம்பற்றிய ஒருமுகச் சிந்தனையை, அவ்விருவரோடும் காலத்தால் வேறுபட்டு நிற்கும் நாம், நம் சிந்தனை வளர்ச்சிக்கேற்பச் சில கருத்துக்களை ஆய்ந்து கண்டோம் எனலாம். திருவள்ளுவரின் சிந்தனை வளர்ச்சி உலக அறவியல் அறிஞர்களோடு இணைத்துக் காணும்போது எத்துணையளவு வளம்பெற்றது என்பதை அறியலாம்.

## வேண்டும் !

பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்

இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்

மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்வதிலோர் மகிமை இல்லை

திறமான புலமைஎனில் வெளிநாட்டார்
அதைவணக்கம் செய்தல் வேண்டும்.

— அமரகவி பாரதியார்.

தமிழில் மறுமலர்ச்சி

# சொல்லாக்கம்

திரு கி. இராமலிங்கனுர், எம். ஏ.,
முன்னுள் முதல்வர், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

[ பல்வேறு நுண்கலைகளையும், விஞ்ஞானப் புதுமைகளையும் தமிழிலேயே கற்பிக்க வேண்டுமென்ற எழுச்சி வெற்றியடைய வேண்டுமாயின் கலைச் சொல்லாக்கம் மிக மிக இன்றியமையாது வேண்டப்படும். இவ்வகையில் மேற்கொள்ள வேண்டிய வரையறைகளை, தம் ஆழ்ந்த அனுபவத் துணைக் கொண்டு இங்கே விளக்கவரும் ஆசிரியர், தமிழ், இவ்வகை கலைச் சொல்லாக்க முயற்சியில் பெற்றிருக்கும் வளர்ச்சியினைத் தந்து, மேலும் மேற்கொள்ள வேண்டிய வழிவகைகளை இங்கே தருகிருர். ]

தமிழ் மிகப் பழைய மொழி. உலக மொழிகளுக்குத் தாய்மொழி. இலக்கிய வளமுடையது. இலக்கண வரம்புடையது. சொல் நலம் சிறந்தது. இன்று பலப்பல வாக வளர்ந்துள்ள அறிவுத் துறைகளுக்கும் ஆட்சி முறைகளுக்கும் தேவையான சொற்கள் அத்தனையும், ஏற்கனவே தமிழ் மொழியில் காணவிட்டாலும், அத்துறை களுக்கும் முறைகளுக்கும் வேண்டிய புதுச் சொற்களைத், தமிழ் வேர்களிலிருந்தே, ஆக்கிக்கொள்ளக் கூடிய அளவுக்கு ஆற்றல் படைத்தது.

தமிழனுக்குத் தன்னம்பிக்கையும் பொறுமையுமே தேவை. புதுக் கருத்துகள், புதுப் பொருள்களை, ஆரஅமரச் சிந்தித்து, முயன்ருல், அவற்றிற்குப் பொருத்தமான தமிழ்ச் சொற்கள் கிடைக்காமற் போகா. மொழியறிவில்லாமலும், தமிழில் பற்றில்லா மலும், சிந்தனையும் முயற்சியும் இல்லாமலும், இருப்பவர்களுக்கு இப்பணியில் வெற்றி கிட்டாது. 'தமிழில் என்ன இருக்கிறது? பிறமொழிகளுக்கு இது ஈடாகுமா?' என்னும் ஏமாற்றமான எண்ணங்கொண்ட வர்கள், கட்டாயம் இத்துறையிலும் ஏமாற்றத்தைத்தான் காண்பார்கள்.

பலவகையில் இன்று மறுமலர்ச்சி யடைந்துவரும் தமிழ், இக்காலத்தில் புதிது புதிதாகத் தோன்றிக்கொண்டுள்ள கருத்துக் களையும், பொருள்களையும் குறிப்பதற்குப், புதிது புதிதான தமிழ்ச் சொற்களை ஆக்கிக் கொண்டு, புது மலர்ச்சியடைய வேண்டியு மிருக்கிறது. இச் சொல்லாக்கம், சில விதிகளுக்கு உட்பட்டு செய்யப்பெற வேண்டும். அவ்விதிகள் ஐந்து எனலாம். அவையாவன :

i. புதுச் சொல், தமிழ்ச் சொல்லாக இருக்கவேண்டும்.

ii. பொருத்தமான சொல்லாக இருக்க வேண்டும்.

iii. சிறு சொல்லாக இருக்க வேண்டும்.

iv. ஓசை நயமுடையதாக இருக்க வேண்டும்.

v. தமிழ் இலக்கண மரபுக்கு இசைந்த தாக இருக்க வேண்டும்.

**(i) புதுச் சொல், தமிழ்ச் சொல்லாக இருக்கவேண்டும்**

பிறமொழிச் சொல்லைத் தமிழ் எழுத்தில் எழுதிவிட்டால், அது தமிழ்ச்சொல் ஆகி விடுகிறது என்னும் தவறான கொள்கை மாற வேண்டும். '**உணவு விடுதி, தங்கு வசதி**' என்னும் தொடரை ஆங்கில எழுத்தில் 'Unavu Viduthi, Thangu Vasathi' என்று எழுதிவிட்டால், ஆங்கில மாகி விடுமா? 'Boarding and Lodging' என்று ஆங்கில நெடுங்கணக்கில் பொறித் தால்தானே ஆங்கிலமாகும். இவ்விதியைத், தமிழைப் பொறுத்தமட்டில், கையாள்வதில் தயக்கம் ஏன்?

**பேச்சு வழக்கு**

தேவைப்படும் தமிழ்ச் சொல் பேச்சு வழக்கிலேயே கிடைக்கலாம். தமிழகத்தின் ஒரு பகுதியில் கிட்டாத தமிழ்ச் சொல், வேறொரு பகுதியில் கிட்டலாம். 'Warehousing Corporation' என்னும் தொடரில் 'Corporation' என்பதை 'நிறுவனம்' என்று சொல்லிவிடலாம். 'Warehousing' என்பதற்கு ஈடான தமிழ்ச் சொல்லைக் காண மதுரை இராமநாதபுரம் மாவட்டத்திற்குச் செல்லவேண்டியுள்ளது. மதுரையிலிருந்து இராசப்பாளையத்திற்குப் போகும்வழியில், காய்ந்த வயலில், தென்னங் கிடுகில் அமைத்தனவும், ஐம்பது அடி நூறடி நீளமும், மூன்றடி நான்கடி உளரமுமுள்ள, கொட்டகைகள் காணப்பெற்றன. நிலத்தி லிருந்து ஓரடி தூக்கிப் போடப்பெற்றவை. மழை பெய்தால், நீர் ஓடிப் போய்விடுவ தற்காக இங்ஙனம் தூக்கிப் போடப்பெற் பெற்றிருந்தன. இக்கொட்டகைகளுக்குக், கதவோ கால் ஆதரவோ இல்லை. எதற்காக இவை இங்ஙனம் போடப்பெற்றுள்ளன என்று தெரியவில்லை. அப்பக்கத்தில் ஒருவரைக்கேட்டபோது, இவை 'பண்டடை' என்றார். உச்சரிப்புக் குறைவினால் முதலில் சொல்லின் வடிவம் சரிவர விளங்கவில்லை. மறுமுறை கேட்டதில், 'வெங்காயப் பண்டடை' என்று கூறப்பெற்றது. வெங்காயத்தை பண்டம் கெடாமல் அடைத்து வைப்பதற்காக 'Warehouse' செய்யும் முறை இது என்று அறிய வந்தது. எனவே, 'Warehousing Corporation' என்பதற்கு, 'பண்டடை நிறுவனம்' என்னும் நல்ல தமிழ்த்தொடர், தமிழகத்தின் அப்பகுதிக்குச் சென்று, பேச்சு வழக்கில் கேட்ட சொல்லை வைத்து அமைக்கவேண்டி யிருக்கிறது. இங்ஙனமே 'Alternate day' என்பதற்குத் திருநெல்வேலியில் பழக்கத்தி லுள்ள 'ஒன்றுடம்' என்னும் சொல் பயன் படுவதாகிறது.

**இலக்கியம்**

பேச்சு வழக்குக்கு அடுத்தபடி, இலக்கி யங்களில் தேடித் தமிழ்ச் சொற்களைக் காணலாம். 'Maternuty Home' என்ப தற்கு 'மகப்பேறு இல்லம்' 'தாய்மை விடுதி' என்றெல்லாம் இன்று வழங்குகிறோம். இலக்கியத்தில், இதற்கு 'ஈனில்' என்னும் மிகச் சிறிய தொடர் ஒன்று காணப்படுகிறது. 'Drinking Water Tank' என்பதற்கு, 'உண் குளம்' என்னும் சொல்லைக் காணலாம்.

**சொல் அமைத்தல்**

இலக்கியங்களில் தேடியும் காணாத சொற்களைத், தமிழ் வேர்களிலிருந்து அமைத்துக்கொள்ளலாம். Maternuty & Child Welfare Centre' என்பதை 'தாய்

செய் நல விடுதி' என்னலாம். 'Rubber' என்னும் சொல்லுக்குத், 'தேய்ப்பம்' என்னும் தமிழ் ஈடாகும். துடைப்பதற்குப் பயன்படுத்தும் கருவியைத் 'துடைப்பம்' என்கிறோம். அப்படியே தேய்ப்பதற்குப் பயன்படுத்தும் பொருளைத் 'தேய்ப்பம்' என்பதில் என்ன குறை? இப்பொருள் சக்கரங்களிலோ பிற இடங்களிலோ அமைந்தாலும், தேய்வு பெறுவதையே அறிவோம். எனவே, 'தேய்ப்பம்' என்பது 'Rubber' என்பதற்கு எல்லாவிடங்களுக்கும் பொருத்தமான தமிழ்ச் சொல்லாக அமைகிறது.

(ii) பொருத்தமான சொல்லாக இருக்க வேண்டும்

'தேய்ப்பம்' 'Rubber'-க்கு எவ்வளவு பொருத்தமாக அமைந்தது என்பதைக் கண்டோம். 'Necessary' 'Proper' 'Suitable' என்னும் மூன்று சொற்களுக்கும் பொதுவாக, தக்க என்னும் தமிழ்ச் சொல்லைப் பயன்படுத்திவிடுகிறோம். ஆனல் 'Necessary' என்பதற்குத் 'தேவையான' என்றும், Proper'-க்கு 'தக்க' என்றும், 'Suitable'-க்கு 'பொருத்தமான' என்றும் கூறுவதே பொருத்தம். மேலும் விளக்கம் புகின் பெருகுமெனும் அச்சம் மீதூர்கிறது.

(iii) சிறு சொல்லாக இருக்கவேண்டும்

பிறமொழிச் சொல்லுக்கு தமிழ்ச்சொல், அளவில் சிறியதாக இருக்க வேண்டும். எழுத்துக்கு எழுத்து, சிறியதாக இருப்பது மட்டும் போதாது. தட்டச்சுப் பொறியில் 'Typewriting Macheine'-ல் தட்டும்போதும், தட்டுக்குத் தட்டுக் குறைவாக இருக்க வேண்டும். பிறமொழிச் சொல்லுக்கு ஆகும் தட்டுகளைக் (Strokes) காட்டிலும், தமிழ்ச் சொல்லுக்கு ஆகும் தட்டுகள் குறைந்து அமைந்தால்தான் தமிழின், 'கருங்கக் கூறி விளங்கவைக்கும்' தன்மை போற்றப்படும். பிறமொழியைத் தமிழில் எழுதுவதற்கோ, தட்டச்சில் தட்டுவதற்கோ நேரம் குறைவாகி, வேலை விரைந்து நடக்கும். தமிழில் எழுதினல் நீண்டுவிடும், தவக்கமாகும் என்னும் குறை சுமத்தப் பெருது.

'Commissioner' என்பதில் *12* எழுத்துக்கள் இருக்கின்றன. தட்டச்சுப் பொறியில் *12* முறை தட்ட வேண்டும். இதற்கு நேரான 'ஆணையர்' என்னும் தமிழ்ச் சொல்லில் நான்கு எழுத்துக்களே யுள்ளன; தட்டச்சுப் பொறியில் ஆறு முறையே தட்டவேண்டி வரும். 'ணை' க்கு இரண்டு தட்டும், 'ர்' க்கு இரண்டு தட்டும் தேவைப்படுவதால், ஆறு தட்டு ஆகின்றது.

(iv) ஓசை நயமுடையதாக இருக்க வேண்டும்.

'தமிழ்' என்ருலே இனிமை என்று பொருள். தமிழில் ஆக்கப்பெறும் சொல் இனிய ஓசையுள்ளதாக அமைவதுதான் பொருத்தம். 'Doctor' என்னும் சொல்லுக்குப் 'பண்டாரகர்' என்னும் ஒரு புதுச் சொல் வழக்கத்திற்கு வரத் தொடங்கியுள்ளது. இவ்வாங்கிலச் சொல்லின் பொருள்: 'ஆசிரியர்' அறியாமையைப் போக்குகிறவர் என்பதாகும். வெறும் ஆசிரியரைக் காட்டிலும் 'Doctor' நிரம்ப அறிவு பெற்றவராவர். எனவே, 'மூதறிஞர்' என்னும் சொல்லும் ஆட்சிக்கு வந்துகொண்டிருக்கிறது. இவையிரண்டில், 'மூதறிஞர்' என்னும் சொல் ஓசை நயமுடையதாக இருப்பதை உணரலாம்.

(v) தமிழ் இலக்கண மரபுக்கு இசைந்ததாக இருக்கவேண்டும்

இலக்கண மரபை மறந்தால், மொழி மறைந்து போகும். மொழியை அதன் இயல்பு கெடாது காத்துவருவது

இலக்கணமே. எனவே, இலக்கணத்திற்கு மாருன வகையில் தமிழ்ச் சொற்களை ஆக்கக் கூடாது. ‘He made a trial’ என்பதற்கு ‘முயற்சித்தான்’ என்று சொல்கிருர்களே சிலர்! ‘முயன்ருன்’ என்பதன்ரே இலக்கண மரபுக்கு ஒத்ததாகும். நீளமாக இருக்க வேண்டுமென்ருல் ‘முயற்சி செய்தான்’ என்று சொல்லிக்கொள்ளட்டும். ‘பயின்ருன்’ என்பதை ‘பயிற்சித்தான்’ என்றும் ‘மகிழ்ந்தான்’ என்பதை ‘மகிழ்ச்சித்தான்’ என்றும் சொல்லலாமா?

இவ்விதிகளுக்கு உட்பட்டுச் சொல் ஆக்க இயலாதபோது, அங்ஙனம் ஆக்கும் ஆற்றல் பெறுகிற வரையில், பிறமொழிச் சொற்களைத் தமிழ் எழுத்தில் எழுதிக் கொண்டு வரலாம். ஆனல், என்ருவது ஒருநாள் அவற்றிற்கு நேரான தமிழ்ச் சொற்களைக் கண்டாக வேண்டும் என்னும் கொள்கையை கடைப்பிடித்து வரவேண்டும். இது மாறுதல் காலமாக இருப்பதாலும், விரைந்து மாற்றங்கள் ஏற்பட்டு வருவதாலும் அறிவியல் துறையில் காணும் நுட்பக் கருத்துகளுக்கு, தமிழ்ச்சொற்கள் அமைத்த பிறகே, தமிழில் அக்கலைகளைப் படிப்பது என்று வைத்துக்கொள்ளாமல், உடனடியாகத் தமிழ்மொழியில், கூடுமான வரையில் தமிழ்ச் சொற்களை அமைத்துக்கொண்டு நூல்களை இயற்றப் பயின்றும் வருவது இப்போதைய நிலையில் வளர்ச்சி பெறுவதற்கு இன்றியமையாத செயலாகும்.

நமது கொள்கை (Principle) அனைத்துச் சொற்களையும் தமிழிலேயே ஆக்கிக் கொள்வது என்று இருந்தாலும், இப்போதைக்கான நமது கோட்பாடு (Policy) தமிழ்ச் சொற்களை விரைந்து படைத்துக் கொண்டே, இயலாத விடங்களில் பிற சொற்களையும் பயன்படுத்திக்கொண்டு, அறிவிலும் திறமையிலும் முன்னேற்றம் அடைவது என்பதாக இருக்கவேண்டும்.

### தமிழ் மணிமாலை

தண்டமிழும் சைவமும் தாரணியில் ஓங்கிட
தொண்டுபல நாளும் புரிந்துமே – மண்டுபுகழ்
கொண்டநற் கல்லூரி வெள்ளிவிழா சீர்பெற
வண்டமிழால் வாழ்த்துவன் நன்று.

— புலவர், திரு. வீ. இலக்குமிகாந்தன்.

# இராசராசனைப் பற்றிய வரலாற்றுக் கருவூலங்கள்

திரு. நடன. காசிநாதன், எம். ஏ.,
கல்வெட்டாய்வாளர்.

[கல்வெட்டாராய்ச்சி, வரலாற்றுக்கு ஒளியூட்ட முடியும் என்ற நம்பிக்கையை, தம் கல்வெட்டுக்களின் தொடக்கத்தே மெய்க்கீர்த்திகளை அமைத்ததன் மூலம் ஊட்டிய பெருஞ் சிறப்பு இராசராசசோழனையே சாரும். இத்தகு மாமன்னன் ஆட்சியில் தமிழகம் பெற்ற அளப்பரிய சிறப்புக்களை - அவனது ஆட்சிச் சிறப்பை - அரிய வரலாற்று உண்மைகளைக் கல்வெட்டு, செப்பேடுகள் துணைக்கொண்டு நுணுக்கமாக இக்கட்டுரைக்கண் ஆராய்கிறார் இதன் ஆசிரியர்.]

பேரரசன் இராஜராஜனைப் பற்றிய வரலாற்றுக் கருவூலங்களாகத் திகழ்வன, இவன் காலத்திய கல்வெட்டுகளும், செப்பேடுகளும், இவன் பின்னோர் காலத்திய செப்பேடுகளும், இவனால் வெளியிடப் பெற்ற காசுகளும் இலக்கியங்கள் சிலவும் ஆகும்.

**கல்வெட்டுகள்**

இந்தியாவில் 1965-ஆம் ஆண்டு வரை மத்திய கல்வெட்டுப் பிரிவினரால் படியெடுக்கப்பட்ட மொத்த கல்வெட்டுகள் 37066. அவற்றில் தமிழ் நாட்டிலிருந்து மட்டும் படியெடுத்த கல்வெட்டுகள் 21500. மைசூர், கேரளம், ஆந்திரம் போன்ற பிற மாநிலங்களிலிருந்து படியெடுக்கப்பட்ட தமிழ்க் கல்வெட்டுகள் 4000. எனவே மொத்தத் தமிழ் கல்வெட்டுகள் 25500 ஆகின்றன. இவைகளில் இதுவரையில் அச்சானவை 8000 ஆகும். அச்சான 8000 கல்வெட்டில் இராஜராஜன் காலத்தியது மட்டும் 350. அச்சாகிய 8000 கல்வெட்டுகளில் இராஜராஜனது மட்டும் 350 என்றால் மொத்தமுள்ள 25500 தமிழ் கல்வெட்டுகளில் கிட்டத்தட்ட 1050 கல்வெட்டுகள் இராஜராஜனுடையதாக இருக்கலாம். சிறிது குறைத்துப் பார்த்தாலும் இப்பெருமன்னன் கல்வெட்டுகள் 1000த்துக்கு மேலாகக் கிடைத்திருக்கின்றன. இவன் காலத்தியக் கல்வெட்டுகள் அண்டைநாடான இலங்கைத் தீவிலும் கிடைத்து இருக்கின்றன.

இராஜராஜனின் கல்வெட்டுகள் அவனது இரண்டாம் ஆட்சி ஆண்டு முதல் கிடைத்துள்ளன. அவனது 29 ஆம் ஆட்சி வரை எல்லா ஆண்டிலும் பொறிக்கப் பெற்ற கல்வெட்டுகள் கிடைத்திருக்கின்றன. அவனது 30 ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு தான் கிடைக்கவில்லை. 31 ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு ஒன்றும் கிடைத்துள்ளது. இவனது 31 ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு கன்னியாகுமரியிலிருந்து கிடைத்

துள்ளது. அது 'பெரும்புகழ் கோவி ராஜகேசரி' என்று ஆரம்பமாகிறது. அவனது இறுதிக் காலத்தில் அவன் பெரும்புகழ் எய்திவிட்டான் என்பதை இது காட்டுகிறது.

இராசராசனுடைய கல்வெட்டுகள் பெரும்பாலும் அழகு தமிழில் எழுதப் பட்டுள்ளன. தஞ்சைப் பெருவுடையார் கோவில் கல்வெட்டுகளைக் காணின் கண்ணில் ஒத்திக் கொள்ளலாம் போன்று தோன்றும். அந்த அளவுக்கு அழகாகவும், தெளிவாகவும் காணப்படும். எல்லா வகையான செய்தியும் தரப்பட்டிருக்கும். கன்னியாகுமரி மாவட்டத்தில் இராச ராசனது கல்வெட்டுகள் சில வட்டெழுத்தில் காணப்படுகின்றன. இவனது கல்வெட்டு களுள் சிலவற்றின் ஆரம்பத்திலும், கல்வெட்டுகளில் வடமொழியை எழுதப்பட வேண்டிய இடத்திலும் கிரந்த எழுத்தைக் காண்கிறோம்.

### மெய்க்கீர்த்தி

இராசராசனின் முன்னோர்கள் அனை வரும் தங்களது கல்வெட்டுகளில் தங்கள் பெயர்களைக்கூட குறிப்பிடாமல் 'கோஇராச கேசரி' என்றும் 'கோப்பரகேசரி' என்றும் அழைத்து வந்தனர். சில கல்வெட்டுகளில் இராஜகேசரியாக இருந்தால் இராஜகேசரி யையோ, பரகேசரியாக இருந்தால் 'பரகேசரியையோ' பெயர்களுக்கு முன்னால் இட்டு வழங்கி வந்திருக்கின்றனர். ஆனால் இராசராசன் பெரும்பாலான கல்வெட்டு களில் தனது பெயரான 'ராசராச' என் பதை முன் எழுதிப் பின்னர்தான் ராசகேசரி என்று எழுதியுள்ளான். அதன் காரண மாகத்தான் அவனுடைய கல்வெட்டுகள் 'கோராஜராஜ, ராஜகேசரிவர்மர்க்கு' என்று ஆரம்பமாகின்றன. சமஸ்கிருதப் பகுதி யிலும் 'ராஜ ராஜஸ்ய ராஜ கேசரி வர்மணஹ' என்றே குறிக்கப்படுகிறது. அதோடு மட்டுமல்லாமல் தம் முன்னோர்கள் பல நாடுகளோடு போர் தொடுத்துப் பல வெற்றிகளைக் குவித்திருந்தாலும் ஏதோ ஒரு சில போரில் கிடைத்த வெற்றியையே பெரும் வெற்றியாகக் கொண்டு அதைத் தங்கள் மெய்க்கீர்த்திகளாக வாழ்நாள்வரை கொண் டிருந்தனர். உதாரணம்: 'தஞ்சை கொண்ட கோப்பரகேசரி' 'மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி'. ஆனால் இராஜ ராஜன் தான் ஒவ்வொரு ஆண்டும் எங்தெந்த நாட்டோடு போர் தொடுத்து (அது சிறிய நாடாயினும் பெரிய நாடாயினும்) அங்கெல் லாம் வெற்றி பெற்றானோ அவை அனைத் தையும் ஆண்டுக்கு ஆண்டு தனது கல்வெட்டுகளில் தனது மெய்க்கீர்த்திப் பகுதியில் சேர்த்து வந்திருக்கிறான். இவன் இவ்வாறு தன் மெய்க்கீர்த்திப் பகுதியை எழுதியதற்குக்கூட வேள்விக்குடிச் செப் பேடுபோன்ற பாண்டியர் செப்பேடுகள்தான் காரணமாக அமைந்திருக்க வேண்டும். பல்லவர் செப்பேடுகளிலும் இவனது முன்னோர்களின் செப்பேடுகளிலும் சமஸ் கிருதப் பகுதியில் ஒவ்வொரு மன்னனுடைய வெற்றிச் சிறப்புகளையும் காணமுடிகிறது. தமிழ்ப் பகுதியில் காண முடியவில்லை.

### பெருவுடையார் கோயில்

இராசராசனின் வரலாற்றை அறிந்து கொள்வதற்குத் தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகளைப் படித்தாலே போதுமானது, அவ்வளவு செய்திகளையும் தனது நேரடி மேற்பார்வையில் அக் கோயிலின் விமானச் சுவர்களில் பொறிக்கச் செய்துள்ளான். பெரியோர்களிடத்து அவன் காட்டிய பணிவு. அக்கோயிலுக்கு அவனால் அளிக்கப்பெற்ற திருமெய்காப் பாளர்கள், திருப்பரிசாரகர்கள், மாணிகள், கரணத்தார்கள், ஸ்ரீ பண்டாரஞ் செய்யும்

பிராமணர்கள், நிபந்தக்காரர்கள், தளிச் சேரிப் பெண்டுகள், திருப்பதியம் விண் ணப்பம் செய்வார் ஆகியோர்களையும், அவன் மலைநாட்டின்மீதும் பாண்டி நாட்டின் மீதும் போர்தொடுத்து அங்குக் கவர்ந்து வந்த பொன்னையெல்லாம் ஆடவல்லானின் திருப்பாத கமலமலர்களாகச் செய்தளித்தது ஆகிய எல்லாச் செய்திகளையும் விரிவாகவும் விளக்கமாகவும் நம்மால் காணமுடிகிறது.

இராசராசன் தஞ்சைப் பெருவுடை யார் கோயிலைப் பொறுத்தமட்டில் தனது நேரடி மேற்பார்வையிலேயே வைத்திருந் திருக்கிறன் என்பது அக்கல்வெட்டுகளால் புலனாகிறது. தான் அளித்த கொடைகளைப் பற்றிய செய்திகளையும் தமது நெருங்கிய உறவினர்கள் அளித்த கொடைகளைப்பற்றிய செய்திகளையும் கோயிலின் எப்பகுதியில் எந்த முறையில் பொறித்து வைக்கவேண்டு மென்பதை 'நாம் எடுப்பிச்ச திருக்கற்றளி ஸ்ரீராஜராஜீச் வரமுடையார்க்கு நாங்குடுத் தனவும், அக்கன் குடுத்தனவும் நம் பெண்டுகள் குடுத்தனவும் ஸ்ரீவிமானத்தில் கல்லிலே வெட்டுக' என்று திருவாய் மொழிந்தருளியிருக்கிறன்.

இராஜராஜன் தம் கருவூலத்திலிருந்தும் பிற மன்னர்களைத் தோற்கடித்து அந்நாடு களிலிருந்து கொண்டு வந்ததைப் பொன்னின் சின்னங்களாகவும் பொன்னின் ஆபரணங் களாகவும் செய்தளித்ததையும் 'ஸ்ரீராஜ ராஜீச்வரம் உடைய பரமஸ்வாமிக்கு உடையார் ஸ்ரீராஜராஜ தேவர் தம் பண்டா ரங்களிலும் சேரமானையும் பாண்டியர் களையும் மலைநாட்டு எறிந்துகொண்ட பண்டாரங்களிலும் குடுத்த பொன்னின் சின்னங்களும் பொன்னின் திருஆபரணங் களும் உள்ளிட்டன' எனக் கல்வெட்டுத் தெரிவிக்கிறது.

### நிவந்தக்காரர்கள், தளிச்சேரிப் பெண்டுகள்

உடையார் ஸ்ரீராஜராஜீச்வரம் உடை யார்க்கு நிவந்தக்காரர்களையும் 400 தளிச் சேரிப் பெண்டுகளையும் நியமித்தபோது பல கட்டளைகளையும் குறிப்பிட்டு, நிர்வாகம் பாங்குறச் செயல்பட வழி வகுத்திருக்கிறன். ஒவ்வொருவருக்கு இவ்வளவு நிலம் நிவந்தம் என்று சொல்லி.

'இப்படி பங்கு பெற்ற இவர்களில் செத்தார்க்கும் அநதேசம் போனர்க்குந் தலைமாறு இவ்விவர்க்கு அடுத்த முறை கடவார் இக்காணி பெற்றும் பணி செய்யவும். அடுத்த முறை கடவார் தாந்தாம் யோக்யர் அல்லாதுவிடில் யோக்யராய் இருப்பாரை ஆளிட்டு பணி செய்வித்துக் கொள்ளப்பெறவும். அடுத்த முறை கடவார் இல்லாதுவிடில் அவ்வவர் நியாயங்களிலாரே யோக்யராய் இருப் பாரை ஆளிட்டு இட்ட அவனே காணி பெறவும்' என்று கூறப்பட்டிருக்கிறது.

இதில் கொடுக்கப்படும் என்று கூறப் பட்டுள்ள காணி அரசனுடைய சொந்த நிலமா அல்லது கோயிலின் நிலமா என்பது குறிக்கப்படவில்லை.

### திருப்பதியம் விண்ணப்பம் செய்வார்

திருப்பதியம் விண்ணப்பிப்பதற்காகப் பிடாரர்களை நியமித்தபோது அவர்கள் உடையார் உள்ளூர்ப் பண்டாரத்தே நெல் பெற்றுக் கொள்ளலாம் என்று குறிக்கப் பட்டிருக்கிறது. அதுபோன்று மேலே கண்டுள்ள காணியும் உடையார் ராஜ ராஜீச்வர முடையாருடையதாக இருக் கலாம். மேற்கூறப்பெற்ற 400 தளிச்சேரிப் பெண்டுகளும் சோழ மண்டலத்திலுள்ள பல தளிச்சேரிகளிலிருந்து வரவழைக்கப் பெற்ற வர்கள். தளிச்சேரி என்பது கோயிலோடு

ஒட்டிய பகுதி. எனவே 400 கோயில்கள் சோழமண்டலத்தில் இருந்தன என்பதும் இதனல் உணரலாம். இந்த தளிச்சேரி பெண்டுகளுக்கும் நிவந்தக்காரர்களுக்கும், திருப்பதியம் விண்ணப்பம் செய்வார் களுக்கும் சந்திராதித்ய வல்லவரை நெல் அளிக்கப்படவேண்டும் என்றும் குறிக்கப் படவில்லை.

## பண்டாரஞ் செய்வார், மாணிகள்

உடையார் ஸ்ரீராஜராஜீச்வரமுடையார்க்கு ஸ்ரீபண்டாரம் செய்ய பிராமணரையும், திருப்பரிசாரகஞ்செய்ய மாணியையும், கணக்கெழுத கரணக்கார்களேயும் கீழ்க் கணக்கர்களேயும் சோழ மண்டலத்தும், பாண்டி மண்டலத்தும், தொண்டை மண்டலத்தும் பிரம்ம தேயங்களிலிருந்து மட்டும் நியமித்திருக்கிறர். அப்படி நியமிக்கப் பெறுபவர்கள் அவ்வவ் பிரமதேயங்களில் பூமி சம்பத்தும், பந்து சம்பத்தும், அர்த்த சம்பத்தும் உடையாராயிருக்க வேண்டும் என்று கட்டளைப் பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. அந்த பிரம்ம தேயங்கள் சந்ராதித்தவல் இடக்கடவார்கள் என்றும், ஒவ்வொருவருக்கும் நிபந்தம் இவ்வளவு என்றும் குறிப்பிட்டுவிட்டுத் 'திருப்பரிசாரகஞ் செய்யும் மாணிகள் பெறு நெல்லுங்காசும் உடையார் ஸ்ரீராஜராஜீச்வரம் உடையார் உள்ளூர்ப் பண்டாரத்தே பெறவும்' என்றும் பண்டாரிகளுங் கரணத்தார்களும் உடையார் ஸ்ரீராஜராஜீச்வரம் உடையார் நாட்டுப் பண்டாரத்தைப் பெறவும்' என்றும் திட்டவட்டமாகக் கூறியிருக்கிறர். பண்டாரிகளும், மாணிகளும் உள்ளூர்ப் பண்டாரத்தே பெறக்கூடாது என்பது, இதனல் தெரிகிறது. ஏனெனில் அது அவர்கள் நேர்பார்வையில் உள்ளது.

## திரு மெய் காப்பாளர்கள்

உடையார் ஸ்ரீ ராஜராஜீச்வரம் உடையார்க்குத் திரு. மெய் காப்பாளர்கள், ஊர்கள் அனுப்பவேண்டும் என்றும் அவ்வவர் ஊர்களிலாரே ஒரு ஆண்டுக்கு 100 கலம் நெல் தரவேண்டும் என்றும் கொடுக்கப் பட்டுள்ளது. இப்படி நிபந்தம் சந்திராதித்தவல் தரவேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது. இந்த வாக்குப்படிப் பார்த்தால் வெள்ளான்வகை ஊர்கள் மட்டும் தான் திரு. மெய் காப்பாளர்கள் அனுப்ப வேண்டும் என்பதாகத் தெரியும். ஆனல் சதுர்வேதி மங்கலங்களில் உள்ள சபையார்களும் மெய்காப்பார்களை அனுப்பியிருப்பதிலிருந்து, அங்கு ஊரார் என்று குறிப்பிடப் பட்டிருப்பது ஒவ்வொரு கிராமத்தையும் என்று கொள்ளல் தகும்.

## ஊர்கள்

ஸ்ரீ ராஜராஜதேவர் தேவதானமாகச் சோழ மண்டலத்தும் புற மண்டலங்களிலும் ஸ்ரீராஜராஜீச்வரமுடையார்க்குக் கொடுத்த ஊர்களைப் பற்றி மிகத் தெளிவாகக் கல்வெட்டுகள் குறிக்கின்றன. கொடுக்கப் பட்ட ஒவ்வொரு ஊரிலும் இறையிலி நிலம் எவ்வளவு, இறை கட்டின நிலம் எவ்வளவு, இறை கட்டின காணிக்கடன் எவ்வளவு என்பனவும் இறையிலி நிலங்கள் என்பவை எவை எவை என்பதும் கொடுக்கப் பட்டுள்ளன.

"ஊர் நத்தமும் ஸ்ரீ கோயில்களுங் குளங்களும் ஊடறுத்துப்போன வாய்க்கால்களும் பறைச்சேரியும் கம்மாணஞ்சேரியுஞ் சுடுகாடும் உள்ளிட்டு இறையிலி நிலங்கள்" என்று குறிக்கல் பெறுகிறது.

"தென்கடுவாயான அருமொழி தேவ வளநாட்டு இங்கனட்டுப் பாலையூர் பள்ளியும் கனி முற்றூட்டும் உட்பட அளந்தபடி நிலம்" நூற்றுமுப்பத்து நான்கேய் எட்டு மாவின் கீழ் முக்காலே மும்மாவரை யாரைக்காணி முந்திரிகக்கீழ் நான்கு மாவிலும்.

ஊர் நத்தமுங்குளமுங் கம்மாணசேரியும் பறைச்சேதியும் சுடுகாடும் இவ்வூர் நிலத்தை ஊடறுத்துபோன வாய்க்கால்களும், இறை இலி நிலம் ஔபதேய் காணி அரைக்காணி முந்திரிகைக் கீழரை நீக்கி இறை கட்டின நிலம் நூற்று இருபத்து ஐஞ்சேய் ஏழுமாவரை முந்திரிகைக்கீழ் எண்மாவரை அரைக்காணி முந்திரிகைக்கீழ் நான்கு மாவினல் இறை கட்டின காணிக்கடன் ராஜகேஸரியோ டொக்கும் ஆடவல்லா னென்னும் மரக்காலால் அளக்கக்கடவ நெல்லுப் பன்னீராயிரத்து ஐந்நூற்று முப்பதின் கலனே இருதூணிக் குறுணி ஒரு நாழி'' என்று தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டில் குறிக்கப்படுகிறது. இதில் இறையிலி நிலம் நீக்கியுள்ள இறை கட்டின நிலத்திலிருந்து இடை கட்டின காணிக்கடஞக பன்னீராயிரத்து ஐந்நூற்று முப்பதின் கலம் இரு தூணிக்குறுணி ஒரு நாழி என்று வருகிறது.

### காணிக்கடன்

காணிக்கடன் என்றல் நில வரி என்று பொருள் கொள்வர். இறை என்றல் அரசுக்குச் செலுத்தக்கூடிய வரி என்று பொருள். இங்கு இறை கட்டின காணிக் கடன் என்பதை அரசுக்கு வரி செலுத்தி யதுபோக மீதி உள்ள நிலவரி என்று நேரிடையாகப் பொருள் கொள்ளலாம். ஆனல் இங்கு இறை கட்டின காணிக்கடன் என்பதை இறையாகிய காணிக்கடன் என்று பொருள்கொண்டு அரசனுக்குச் செலுத்தவேண்டிய நெல் என்று கொள்ள வேண்டும்.

காணிக்கடனுகிய நெல் கங்கபாடி நாட்டிலுள்ள ஆலூர் என்ற ஊரிலிருந்தும் நுளம்பபாடியான நிகரிலி சோழபாடிப் பறிவை நாட்டுத் தேவதான பிரம்மதேயம் குசவூரிலிருந்தும் மலைநாட்டு வெள்ளப்ப நாட்டுப் புதுக்கோடியிலிருந்தும் ஈழமான மும்முடி சோழமண்டலத்து மாப்பிசும்பு கொட்டியாரமான ராஜராஜ வளநாட்டி லுள்ள ஒரு ஊரிலிருந்தும் அதே மண்டலத்து கணக்கன் கொட்டியாரமான விக்கிரமசோழ வளநாட்டு மாசாரிலிருந்தும் வந்திருக்கிறது. இப்படிக் கொடுக்கப்பட்ட காணிக்கடன் நெல் சந்திராதித்தவல் கொடுக்கப்பட வேண்டும்என்றுகுறிக்கப்படவில்லை. தனக்கு இறையாகத் தரப்பட வேண்டிய நெல்லை இறைவனுக்கு அனும்பும்படி கட்டளை இட்டிருக்கிறன். நிலத்தையே கோயிலுக் குத் தேவதானமாக அளித்து, அதைத் தங்கள் மேற்பார்வையில் பயிரிடச் செய்து அதிலிருந்து வருமானத்தைப் பெற்றுக் கொள்ளலாம் என்று இராஜராஜன் கூறின தாகக் கல்வெட்டுகளில் காணமுடியவில்லை.

### ஆண்டு

தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் உள்ள பல கல்வெட்டுகள் ''உடையார் ஸ்ரீ ராஜராஜதேவருக்கு யாண்டு இருபத் தொன்பதாவது வரை'' கொடுக்கப்பட்ட கொடையையே குறிக்கின்றன. இதிலிருந்து அவருடைய ஆட்சி 29ம் ஆண்டில்தான் பல ஆண்டுகளாகக் கொடுத்து வந்தவைகளை ஆராய்ந்து ஒரே சமயத்தில் அவைகளைக் கல்லில் வெட்டுவித்தான என்பது புலனகிறது.

### செப்பேடுகள்

1965 வரையில் தமிழ்நாட்டில் மொத்தம் 373 செப்பேடுகள் கிடைத்துள்ளன. இவற்றில் சோழர்கள் காலத்தவை சுமார் 10 ஆகும். இராஜராஜன் காலத்திய செப் பேடுகள் இதுவரையில் 3 தான் கிடைத்து உள்ளன.

1. திருச்செங்கோடு செப்பேடுகள் I
2. திருச்செங்கோடு செப்பேடுகள் II
3. பெரிய லெய்டன் செப்பேடு.

திருச்செங்கோடு செப்பேடுகளில் ஒன்று இராஜராஜன் 5-ஆம் ஆட்சி ஆண்டிலும், மற்றொன்று 10ஆம் ஆண்டிலும் எழுதப் பெற்றுள்ளன. முதல் செப்பேடு 5 தகடு களில் 12 வரிகளாலும் இரண்டாம் செப்பேடு 2 தகடுகளில் 12 வரிகளாலும் எழுதப் பட்டுள்ளன.

பெரிய லெய்டன் செப்பேடு 21 செப்புத் தகடுகளில் 443 வரிகளை உள்ளடக்கி எழுதப் பட்டுள்ளது. இராஜராஜனின் 21-ஆம் ஆட்சி ஆண்டில் எழுதப் பெற்றுள்ளது. கடாரத்தரசன் சூளாமணி வர்மன் என்ற மன்னனால் நாகப்பட்டினத்தில் அமைக்கப் பட்ட சூளாமணி விஹாரத்துக்குப் பள்ளிச் சந்தமாக ஆனைமங்கலம் என்ற ஊரை அளித்ததைக் குறிக்கிறது.

அரசனது ஆணையை நிறைவேற்று வதற்காக ஒப்பமிட்ட அதிகாரிகளும் அவ் வாணையைச் செயல்படுத்துவதற்காக ஒத்து ழைக்க வேண்டிய நாட்டார், ஊரார், சபை யார், நகரத்தார் ஆகியவர்களின் பட்டியல் விரிவாகத் தரப்பட்டிருக்கிறது.

பெரிய லெய்டன் செப்பேட்டில் உள்ள சமஸ்கிருதப்பகுதியும் இவனுக்குப் பின் வந்தோர் செப்பேடுகளிலுள்ள சமஸ்கிருதப் பகுதியும் இம்மன்னனின் முன்னோர்களைப் பற்றியும் அவர்கள் வாகை சூடிய போர் நிகழ்ச்சிகளையும் நன்கு விளக்குகின்றன. இராஜேந்திரனின் திருவாலங்காட்டுச் செப்பேடும், கரந்தைச் செப்பேடும், முதலாம் குலோத்துங்க சோழனின்சிறிய லெய்டன் செப்பேடும் இவனது புகழை விரித்துரைக் கின்றன. கன்னியாகுமரியிலுள்ள குமரி அம்மன் கோயிலில் உள்ள தூணில் பொறிக் கப்பட்டுள்ள வீரராஜேந்திரன் கல்வெட்டும் இராஜராஜனைப் பற்றிக் குறிக்கிறது.

இருப்பினும் 1000-க்கு மேற்பட்ட கல் வெட்டுக்களுக்குச் சொந்தக்காரனாகிய இம் மன்னன் காலத்தில் மூன்றே மூன்று செப் பேடுகள் மட்டும்தான் எழுதப்பட்டனவா? வினா எழுகிறது. பல செப்புப் பட்டயங்கள் எழுதப்பெற்றிருக்க வேண்டும். அவை பிற் காலத்தில் அழிக்கப்பட்டிருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறது. ஆனால் வேறு ஒன்றையும் நாம் கவனித்தாக வேண்டும். தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டுகள் அனைத்தும் 'கல்லில் வெட்டிந' என்றுதான் காணப்படுகிறது. சில கல்வெட்டுகளில் காணப்படுகிறபடி 'செம்பாலும் சிலையாலும் வெட்டுவித்துக் கொள்க' என்று காணப்பட வில்லை. எனவே அக்கல்வெட்டுகள் அனைத்தும் கல்லில் மட்டும்தான் வெட்டப் பெற்றுள்ளன என்பது உறுதியாகிறது. இதிலிருந்து அரசன் தன்னால் எழுப்பப் பெற்ற கோயிலுக்குத் தன்னால் அளிக்கப் பெற்ற கொடைகளைச் செப்பேட்டில் எழுதி வைக்கவேண்டும் என்று எண்ணவில்லை போலும் என்று ஊகிக்கலாம்.

**காசுகள்**

தமிழகத்தில் எந்தப் பகுதியில் காசுகள் கண்டெடுக்கப்பட்டன என்றாலும் அவற்றில் பெரும்பகுதி இராஜராஜனால் வெளியிடப் பெற்ற காசுகளாகத்தான் இருக்கின்றன. பெரும்பாலான காசுகளில் ஒரு பக்கத்தில் ஈழ மனிதனுடைய நின்ற உருவமும், மறு பக்கத்தில் ஈழ மனிதனுடைய அமர்ந்த உருவமும் காணப்பெறும். அமர்ந்த மனித னின் இடது கையின்கீழ் "ஸ்ரீ ராஜராஜன்" என்று நாகரி எழுத்தில் எழுதப்பெற் றிருக்கும். இவனுடைய மற்றொரு வகையான காசில் முன்பக்கம் புலி, இணைக்கயல், வில் ஆகிய மூன்றும், அதன் கீழ் "ஸ்ரீ ராஜராஜ சோழ" என்று நாகரி எழுத்திலும் காணப் படும். பின் பக்கமும் அதே சின்னங்கள் காணப்படும்.

### இலக்கியங்கள்

இலக்கியங்கள் சிலவும் இராஜ ராஜனைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. விக்ரம சோழன் உலா, இராஜராஜன் சேரமன்னனிடம் அனுப்பிய தூதுவனை அவன் அவமானப்படுத்தியதால் வெகுண்டெழுந்து போர் தொடுத்தான் என்பதை

"............................... தூதற்காப்
பண்டு பகலொன்றில் ஈரொன்பது சுரமுங்
கொண்டு மலைநாடு கொண்டோன்"

என்று கூறுகிறது. அதையே

"............................... சூழவும்
ஏறிப்பகலொன்றில் எச்சுரமும் போயுதகை
நூறித்தன் தூதனை நோக்கினன்"

என்று குலோத்துங்க சோழன் உலாவும்

"மதகயத்தால் ஈரொன்பது சுர முட்டி
உதகையைத் தீத்த வரவோன்"

என்று இராஜராஜன் உலாவும் பாடுகின்றன.

முதற்குலோத்துங்கன் கலிங்க மன்னன் அநந்தவர்மன் மீது போர்த்தொடுத்து வெற்றி பெற்றதைப் பரணி பாடும் கலிங்கத்துப் பரணியும் இந்நிகழ்ச்சியை,

'சதய நாள் விழா உதியர் மண்டலந்
தன்னில் வைத்தவன் தனியோர் மாவின்மேல்
உதயபானுவொத்து தகை வென்ற கோன்
ஒரு கை வாரணம் பலகவர்ந்ததும்'

என்று கூறுகிறது.

கொற்றவன் குடி உமாபதி சிவாச்சாரியார் அருளிச்செய்த திருமுறை கண்ட புராணம் இராஜராஜன் தில்லையம்பதியில் அடைபட்டுக் கிடந்த மூவர் தேவாரத்தை நம்பியாண்டார் நம்பி பேருதவியால் கண்டு வெளிப்படுத்தினன் என்ற உண்மையைக் கூறும்.

இவ்வாறு தன்னைப்பற்றிய பல வரலாற்று உண்மைகளையும் பல வடிவில் தமிழகத்தில் விட்டுவிட்டுப்போன ஒரு சில மன்னர்களில் இராஜராஜன் முதன்மையான இடத்தைப் பெறுகிறான். அவன் புகழ் ஓங்குக! அவன் வரலாறு சிறக்க!

### தமிழமுது

உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின்
வாக்கினிலே ஒளியுண் டாகும்;
வெள்ளத்தின் பெருக்கைப்போல் கலைப்பெருக்கும்
கவிப்பெருக்கும் மேவு மாயின்
பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெல்லாம்
விழிபெற்றுப் பதவி கொள்வார்;
தெள்ளுற்ற தமிழமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்

— அமரகவி, பாரதியார்.

# பழமொழியும் பாகுபாடும்

பேராசிரியர், திரு. வ. பெருமாள், எம். ஏ., பி. டி., எம். ஆர். ஏ. எஸ்.,
தமிழ்ப் பேராசிரியர் – முதல்நிலைக் கல்லூரி, உரிகம், கோலார் தங்கவயல் (KGF) மைசூர் மாநிலம்.

[ பழமொழிகள், மக்களின் ஆழ்ந்த வாழ்வின் அனுபவ வெளிப்பாடுகள். தமிழகப் பழமொழிகள் இலக்கியத் தரங்கொண்டன. அன்றன்றுடம் வழங்கப் படும் பழமொழிகள் என்றாலும், அதிலே ஆழப் பார்த்தால் எத்தனை புதுமை பொங்கிச் சிறக்கிறது என்பதை அற்புதமாக இங்கே வகைப்படுத்திக் காட்டு கிறார் ஆசிரியர். பழமொழியின் பாகுபாடுகள் விரிந்து கிடக்கும் அகன்ற பரப்பை உற்று நோக்குகையில், தமிழர்களின் பல துறைப்பட்ட ஆழ்ந் தகன்றிருந்த அனுபவங்கள்பெருமிதத்தைநல்கக் காண்கிறோம். பழமொழிகளை தொகுத்துப் பட்டியலிடுதலைத் தவிர்த்து, பொருள் வேறுபாடு காட்டிப் பகுத்திருப்பது புதிய ஆய்வுகளுக்கு வழி கோலுகிறது. பழமையைப் புதிய கண்ணோட்டத்தில் மதிப்பிடும் இக்கட்டுரை சிந்தனைக்கு விருந்தாகவே அமைகிறது ]

## முன்னுரை

பழமொழி மக்கள் இலக்கியம்; வாய்மொழி இலக்கியம்; தொன்மை இலக்கியம்; சுவைமிகுந்த இலக்கியம்; கருத்துச்செறிவுள்ள இலக்கியம்; இவை எல்லாவற்றிற்கும் மேலாக அன்றாடம் பயன்தரக்கூடிய வாழ்க்கை இலக்கியம். சுருங்கச்சொல்லி விளங்க வைக்கும் ஆற்றலும், செவிக்கும் சிந்தைக்கும் இன்பம் அளிக்கும் பெற்றியும் பழமொழிக்கு உண்டு. சுருங்கக் கூறுமிடத்துப் பழுத்த பட்டறிவின் (அனுபவம்) திரண்ட சாரமே பழமொழி. தமிழ் மொழியில் எண்ணிறந்த பழமொழிகள் அங்கிங்கெனாதபடி எங்கும் பரவிக் கிடக்கின்றன. அவற்றைச் செம்மையான முறையில் பாகுபடுத்தும் வகையைக் குறித்து ஆய்வதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

## கால அடிப்படை

தமிழ் மொழியிலுள்ள ஒவ்வொரு பழமொழியும் எந்தக் காலத்தில் தோன்றியது என்பதை அறுதியிட்டு உறுதியாகக் கூற இயலாவிட்டாலும், பொதுவாக நாட்டு வரலாற்றுக் கண்கொண்டும், குறிப்பாகத் தமிழ் மொழி – இலக்கியக் கால வரலாற்றுக் கண்கொண்டும் ஆராய்ந்தால் தமிழ்ப் பழமொழிகளில் பலவற்றைக் கால அடிப்படையில் பாகுபடுத்திவிடலாம். தமிழ்ப் பழமொழிகளைக் கால அடிப்படையில் கீழ்க்கண்டவாறு நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. சங்ககாலம் (கி. மு. 500 முதல் கி. பி. 200 வரை)
2. இடைக்காலம் (கி. பி. 201 முதல் கி. பி. 1700 வரை)
3. பிற்காலம் (கி. பி. 1701 முதல் கி. பி. 1900 வரை)
4. தற்காலம் (இருபதாம் நூற்றுண்டு)

'நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே' என்பது நக்கீரர் கூற்றாகத் தோன்றிய சங்ககாலப் பழமொழி. 'திகம்பரச் சன்னியாசிக்கு வண்ணான் உறவு ஏன்?' என்னும் பழமொழி கி. பி. மூன்றாம் நூற்றுண்டு முதல் ஏழாம் நூற்றுண்டு வரை திகம்பரச் சமண முனிவர்கள் தமிழகத்தில் செல்வாக்குடன் வாழ்ந்த காலத்தில் தோன்றியது. பட்டினத்துப் பிள்ளையார் மகனார் மருதவாணர் (கி. பி. பத்தாம் நூற்றுண்டு) தெளிந்த ஞானத்துடன் உரைத்த 'காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே' என்னும் பொருள்மொழி பழமொழியாகிவிட்டது. கி. பி. பத்தாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர் பட்டினத்தார் (பட்டினத்துப் பிள்ளையார்) அவர் தமக்கை நஞ்சு கலந்த அப்பம் செய்து கொடுத்தார். அடிகள் அதன் உண்மை உணர்ந்து தமக்கையின் வீட்டுக் கூரையில் அதை எறிந்தார். வீடு தீப்பற்றிக்கொண்டது. அப்போது பட்டினத்தார், 'தன்வினை தன்னைச் சுடும்: ஓட்டப்பம் வீட்டைச் சுடும்' என்று மொழிந்தார். அம்மொழியே பழமொழியாகிவிட்டது. ஒய்சாளர் ஆட்சியில் (கி. பி. 12, 13ஆம் நூற்றுண்டு) தமிழகத்தில் கன்னடம் சிறிது பரவிய காலத்தில் 'ஆனால் ஆதித்த வாரம்: ஆகாவிட்டால் சோமவாரம்' என்னும் பழமொழி தோன்றியது. விசயநகர ஆட்சிக் காலத்திலும், நாயக்க மன்னர்கள் தமிழகத்தில் ஆட்சிபுரிந்தபோதும் (கி. பி. 14வது நூற்றுண்டு முதல் கி. பி. 17வது நூற்றுண்டு வரை) தமிழகத்தில் தெலுங்கு பரவியது. 'பேரு பெத்த பேரு தாக நீளு லேது' என்னும் பழமொழி அக்காலத்தில் பிறந்தது. கருநாடக நவாபு தமிழகத்தில் ஆட்சி செலுத்தியபோது அராபிய, பாரசீக, உருது, இந்துத்தானி முதலிய மொழிகளிலுள்ள சொற்கள் தமிழில் கலந்தன. அக்காலத்தில் தோன்றியது 'பணம் இருந்தால் பாட்சா; பணம் இல்லாவிட்டால் பக்கிரி' என்னும் பழமொழி. இவை யாவும் தமிழக வரலாற்றின் நீண்ட இடைக்காலத்தில் வெவ்வேறு ஆட்சியின் போது தோன்றிய பழமொழிகள். 'எத்தனைமுறை சொன்னாலும் பரங்கி வெற்றிலை போடமாட்டான்' என்னும் பழமொழி ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் தோன்றியது. இந்தியா விடுதலை அடைந்த பிறகு அரசியல், பொருளாதாரம், சமுதாயம் முதலிய கருத்துக்களைக்கொண்ட முழக்கங்கள் தோன்றின. அவை பழமொழிகளாக நிலைத்துவிடுமா என்பதைக் காலம்தான் சொல்லவேண்டும்.

## பொருள் அடிப்படை

மனித சிந்தனைக்கும் செயலுக்கும் உட்பட்ட அனைத்துத் துறைகளிலும் பழமொழிகள் தோன்றி வளர்ந்து பரவியுள்ளன. மனித உணர்ச்சி, எண்ணம், செயல், அனுபவம் ஆகியவற்றை நிலைக்களனாகக் கொண்டு எழுந்த பழமொழிகள் மிகப் பல. அவற்றைத் தனித்தனியாகப் பொருள் அடிப்படையில் நுணுக்கமாக ஆராய்ந்து கலை (Arts), நுண் கலை (Fine Arts), அறிவியல் (Science), மனையியல் (Home Science) என்று

கல்வியியல் பகுப்புமுறையில் (Academic classification) நான்கு பெரும் பிரிவுகளாகவும், பல உட் பிரிவுகளாகவும் பாகுபடுத்தலாம்.

## கலை (Arts - Humanities)

அரசியல் (Politics): நாட்டுக்கு நல்ல துரை வந்தாலும் தோட்டிக்குப் புல்லு சுமை போகாது.

பொருளாதாரம் (Economics): பாய்க்குத் தகுந்தபடி காலை நீட்டு.

பணப் பொருளாதாரம் (Monetary Economics): ஒரு காசு பேணின் இரு காசு தேறும்.

பொருளாதாரக் கணக்கியல் (Econometrics): ஆற்றில் போட்டாலும் அளந்து போடு.

வாணிபம் (Commerce): கையிலே காசு வாயிலே தோசை.

சமுதாய யியல் (Sociology): ஊர் ஓட ஒக்க ஓடு.

சமயம் (Religion): அரியும் சிவனும் ஒண்ணு, அறியாதவன் வாயிலே மண்ணு.

இறையியல் (Theology): அவனன்றி ஓர் அணுவும் அசையாது.

மெய்ப்பொருளியல் (Philosphy): தத்துவம் அறிந்தவன் தவசி.

கல்வி (Education): இளமையிற் கல்வி சிலையில் எழுத்து.

கல்வி அளவு இயல் (Educational Measurements): அஞ்சுக்கு இரண்டு பழுதில்லை

கல்வி உளவியல் (Educational Psychology): கற்கையில் கல்வி கசப்பு கற்றபின் அதுவே இனிப்பு.

கல்விச் சமுதாயவியல் (Educational Sociology): சேர்க்கைக்குத் தக்க பழக்கம்.

நீதி (Ethics): எளியாரை வலியார் அடித்தால் வலியாரைத் தெய்வம் அடிக்கும்.

சட்டம் (Law): அரசன் அன்று கொல்லும் தெய்வம் நின்று கொல்லும்.

குற்றவியல் Criminology: திருடனைப் பிடிக்கத் திருடனே வேண்டும்.

அளவையியல் (Logic): நரி வலம் போனால் என்ன? இடம் போனால் என்ன? மேலே விழுந்து பிடுங்காமல் போனால் சரி.

மொழியியல் (Linguistics): தேசந்தோறும் பாஷை வேறு.

சமூகக் கிளை மொழியியல் (Social Dialectology): வெள்ளாளன் கிரந்தமும் பார்ப்பான் தமிழும் வழ வழ.

ஒலியியல் (Phonetics): பல்லுப் போனால் சொல்லுப் போச்சு.

வரலாறு (History): தோட்டிபோல் உழைத்துத் தொண்டைமான்போல் வாழ்.

உலக வரலாறு (World History): காலம் அல்லாத காலத்தில் கடலேறிக் கதிர்காமா கதிர்காமா என்றால் கைகொடுக்குமா?

படையியல் (Military Science): பந்திக்கு முந்து படைக்குப் பிந்து.

தண்டனையியல் (Penology): அடி உதவுவது போல் அண்ணன் தம்பி உதவுவார்களா?

கிராமப் பொருளாதாரம் (Agronomics): உழவின் மிகுந்த ஊதியம் இல்லை.

திருத்தொண்டர் புராண இலக்கியம் (Hagiology): நால்வர் வாக்கு வேதவாக்கு.

ஒப்பியல் மொழியியல் (Comparative Linguistics): ஒரு மொழி அறிந்தவன் ஊமை, பல மொழி அறிந்தவன் பண்டிதன்.

உழவுப் பொருளாதாரம் (Agricultural Economics): மேழிச் செல்வம் கோழை படாது.

நீதி மன்றவியல் (Forensic Science): கலகம் பிறந்தால் நியாயம் பிறக்கும்.

சமயப் பகுத்தறிவியல் (Neology): எம்மதமும் சம்மதம்.

அகராதிக் கலை (Lexicography): அகராதி படித்தவனுக்கு எதிராக பேசாதே.

பேச்சுக்கலை (Oratory): இலக்கணம் கற்றவன் இலக்கம் அற மன்னர் சபை காண்பான்.

அனுபவயியல் (Empiricism): பள்ளிக் கணக்குப் புள்ளிக்கு உதவாது.

## நுண் கலை (Fine Arts)

இசை (Music): பாடப் பாட ராகம் மூட மூட ரோகம்.

கருவி இசை (Instrumental Music): குரல் இல்லாதவனுக்கு விரல்.

ஆடல் (Dance): ஆடிய காலும் பாடிய நாவும் சும்மா இரா.

நாடகவியல் (நடிப்புக் கலை) (Histrionics): நான் அடிக்கிறது போல் அடிக்கிறேன்; நீ அழுகிறது போல அழு.

ஓவியம் (Painting): சுவரை வைத்தே சித்திரம் எழுத வேண்டும்.

சிற்பம் (Sculpture): நாயைக் கண்டால் கல்லைக் காணேம், கல்லைக் கண்டால் நாயைக் காணேம்.

முருகியல் (அழகுக் கலை) (Aesthetics): கை பட்டால் கண்ணடி.

## தொழில் கலை (Technology Arts)

மட்பாண்டக் கலை (Ceramics): குசவனுக்கு ஆறு மாதம், தடிகாரனுக்கு அரை நாழி.

## அறிவியல் (Science)

மனிதப் பாரம்பரிய யியல் (Human Genetics) : தாயைப்போலப் பிள்ளை, நூலைப் போலச் சேலை.

உடலமைப்பியல் (Anatomy) : எண்சாண் உடம்புக்குத் தலையே பிரதானம்.

உடலியல் (Physiology) : மண்டை உள்ளவரையில் சளி இருக்கும்.

உடல் நலம் (Health) : சுத்தம் சோறு போடும்.

உணவு விதியியல் (Dietetics) : அளவுக்கு மிஞ்சினல் அமிர்தமும் நஞ்சு.

மருந்துப் பொருளியல் (Pharmacology) : சுக்கு இல்லாத கஷாயம் உண்டா ?

கண் மருத்துவம் (Ophthalmology) : காமாலைக் கண்ணுக்குக் கண்டதெல்லாம் மஞ்சள்.

தோலியல் (Dermatology) : இரும்பு பிடித்த கையும் சிரங்கு பிடித்த கையும் சும்மா இருக்காது.

பல் மருத்துவம் (Dental Science) : ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி.

விலங்கு வடிவ அமைப்பியல் (Animal Morphology) : ஒட்டகத்துக்குத் தொட்ட இடமெல்லாம் கோணல்.

விலங்குப் பாரம்பரிய வியல் (Animal Genetics) : புலிக்குப் பிறந்தது பூனையாகுமா ?

பறவை யியல் (Ornithology) : கங்கையில் முழ்கினலும் காக்கை அன்னமாகுமா ?

மீனியியல் (Ichthyology) : மீன்குஞ்சுக்கு நீந்தப் பழக்க வேண்டுமா ?

பூச்சியியல் (Entomology) கொட்டினல் தேள், கொட்டாவிட்டால் பிள்ளைப் பூச்சி.

ஊர்வன வியல் (Herpetology) : பாம்பறியும் பாம்பின் கால்.

தாவரப் பாரம்பரிய வியல் (Plant Genetics) : விரை ஒன்று போடச் சுரை ஒன்று முளைக்குமா ?

நிலவியல் (Geography) : ஆறு போவதே போக்கு அரசன் சொல்வதே தீர்ப்பு.

நீரியல் (Hydrology) : இறைத்த கிணறு ஊறும் ; இறைக்காத கிணறு நாறும்.

தட்ப வெப்ப வியல் (Climatology) : ஆடிக் காற்றில் அம்மியும் பறக்கும்.

காற்றியல் (Anemology) : காற்றில்லாமல் தூசி பறக்குமா ?

வானிலை யியல் (Meteorology) : மின்னுமல் இடி விழுமா ?

வான் கோளவியல் (Astronomy) : வானத்தில் உள்ள அம்புலியை வா என்ருல் வருமா ?

கடலியல் (Oceanography) : அலை எப்போது ஓயும் தலை எப்போது முழுகுவது ?

உளவியல் (Psychology) : அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்.

சோதிடம் (Astrology) : பரணியில் பிறந்தால் தரணி ஆளுவார்.

கட்டிடக் கலை (Architecture) : வடக்குப் பார்த்த மச்சு வீட்டிலும் தெற்குப் பார்த்த குச்சு வீடு நல்லது.

தோட்டக் கலை (Horticulture) : வீட்டுச் செல்வம் மாடு, தோட்டச் செல்வம் முருங்கை.

உழவு (Agriculture) : அகல உழுவதை ஆழ உழு.

கணக்கு (Mathematics) : ஆயிரம் மாகாணி அறுபத்திரண்டரை.

சூழ்நிலை யியல் (Ecology) : பூவோடு சேர்ந்த நாறும் மணம் பெறும்.

நோய்க் குணவியல் (Pathology) : வியாதிக்கு மருந்து உண்டு, விதிக்கு மருந்து உண்டா ?

புள்ளியியல் (Statistics) : குறையறக் கற்றவன் கோடியில் ஒருவன்.

அண்டவியல் (Cosmology) : அண்டத்திற்கு உள்ளது பிண்டத்திற்கும் உண்டு.

புழுவியல் (Helminthology) : வெய்யிலிலே அகப்பட்ட புழுவைப் போல.

அட்டையியல் (ஒட்டுண்ணியியல்) [Parasitology] : அட்டையை எடுத்து மெத்தையில் வைத்தாலும் செத்தையைச் செத்தையே நாடும்.

பாலூட்டியியல் (Mammology) : பசுவைக் கொன்றால் கன்று பிழைக்குமா ?

உடற்கல்வி (Physical Education) : ஓட்டமும் ஆட்டமும் உடம்புக்கு நல்லது.

காரண காரிய வியல் (Aetiology) : நெருப்பில்லாமல் புகை வருமா ?

ஆய்வியல் (Analytics) : வெட்டு ஒன்று துண்டு இரண்டு.

காட்டுக் கலை (Arboriculture) : காட்டுக்குப் புலி ஆதரவு புலிக்குக் காடு ஆதரவு.

வேதியியல் (Chemistry) : தண்ணீரிலே விளைந்த உப்பு தண்ணீரிலே கரைய வேண்டும்.

மண்ணியல் (Geology) : தூரத்துப் பார்வைக்கு மலை மழமழப்பு, கிட்டப்போனால் கல்லும் கரடும்.

மகப்பேறு மருத்துவ யியல் (Obstetrics) : சுக்குக் கண்ட இடத்தில் பிள்ளைபெற்றுச் சூரியநாராயணன் என்று பெயர் இடுவாள்.

உலோகத் தொழில் கலையியல் (Metallurgy) : ஈயத்தைக் காய்ச்சலாம், இரும்பைக் காய்ச்சலாமா ?

செப்பிடு வித்தை (Acrobatics) : கெரடி கற்றவன் இடறி விழுந்தால் அதுவும் ஒரு வித்தை என்பான்.

நிலநீர் வாழ் உயிரியல் (Amphiobilogy): ஓணான் வேலிக்கு இழுக்கிறது, தவளை தண்ணீர்க்கு இழுக்கிறது.

உணவுக்கலை (Aristology): ஆறின கஞ்சி பழங் கஞ்சி.

நீராட்டியல் (Balneology): சனிநீராடு.

நீராட்டு மருத்துவயியல் (Balneotherapy): கூழானாலும் குளித்துக்குடி.

முட்செடியியல் (Batology): முள்ளுக்கு முனைசீவி விடுவார்களா ?

சூழல் தொடர்பு உயிரியல் (Bionomics): பன்றியுடன் சேர்ந்த கன்றும் மலம் தின்னும்.

நில ஆய்வியல் (Soil Science): நிலத்திற்குத் தகுந்த கனி.

பௌதிகம் (Physics): காந்தமும் ஊசியும் போல.

விலங்கியல் (Zoology): குதிரை எட்டடி பாய்ந்தால் குட்டி பதினாறு அடி பாயும்.

தாவரவியல் (Botany) கொடிக்குக் காய் பாரமா ?

கருவியல் (Embryology): கரு இல்லாத முட்டையும் குரு இல்லாத வித்தையும்.

மணியியல் (Campanology): யானை வரும் பின்னே, மணி ஓசை வரும் முன்னே.

நண்டு – நத்தையியல் (Careinology – Cruslaceology): நண்டைக் கொடுக்கு ஒடித்தாற் போல.

உயிரியல் (Biology) [ Flora and fauna ]

தண்டு கொழுத்தால் தரையில் இராது (flora)

நண்டு கொழுத்தால் வளையில் இராது (fauna)

கனி(பழ)யியல் (Carpology): வில்வப் பழம் தின்பார் பித்தம் போக பனம்பழம் தின்பார் பசி போக.

மன நோயியல் (Carphology): பைத்தியக்காரன் கிழித்தது கோவணத்துக்கு ஆயிற்று.

பாலியல் (Sexuology): பிள்ளை பதினாறு பெறுவாள் என்று எழுதியிருந்தாலும் புருஷன் இல்லாமல் எப்படிப் பெறுவாள் ?

பேயியல் (Demonology): பேய் அடிக்கப் பிள்ளை பிழைக்குமா ?

மரவியல் (Dendrology): மரத்தை இலை காக்கும், மானத்தைப் பணம் காக்கும்.

உயிரினப் பாகுபாட்டியல் (Taxonomy): இனம் இனத்தோடே, வெள்ளாடு தன்னோடே.

கடமையியல் (Deontology): மரம் வைத்தவனுக்குத் தண்ணீர் வார்க்கக் கடன்.

## மனையியல் (Home Science)

சமையற்கலை (Cookery): அஞ்சும் மூன்றும் அடுக்காயிருந்தால் அறியாப் பெண்ணும் கறி சமைப்பாள்.

குழந்தை வளர்ப்புக்கலை (Child Care): ஆணை அடித்து வளர்க்க வேண்டும், பெண்ணைப் போற்றி வளர்க்க வேண்டும்.

குடும்ப நலத்திட்டம் (Family Welfare Planning): ஆசைக்கு ஒரு பெண்ணும், ஆஸ்திக்கு ஓர் ஆணும்.

## தகுதி அடிப்படை

தகுதி அடிப்படையில் பழமொழிகளை மூன்று பிரிவுக்குள் அடக்கிவிடலாம். அவையாவன: 1. இலக்கியப் பழமொழி 2. பொதுப் பழமொழி 3. பேச்சுப் பழமொழி. இலக்கியத்தில் இடம்பெற்று உயர்ந்த நடையில் அமைந்து கற்றோரிடத்தில் மட்டுமே வழங்கப்பட்டு வருவதை இலக்கியப் பழமொழி என்று குறிப்பிடலாம். 'உமிக் குற்றுக் கை வருந்துமாறு' என்பது இலக்கியப் பழமொழி. இப்பழமொழி கீழ்க் காணும் பழமொழி நானூற்றில் இடம் பெற்றிருக்கின்றது.

தமக்குற்ற தேயாகத் தம்மடைந்தார்க் குற்ற
தெமக்குற்ற தென்றுணரா விட்டக்கால் என்னும்?
இமைத்தருவி பொன்வரன்றும் ஈர்ங்குன்ற நாட!
உமிக்குற்றுக் கைவருந்து மாறு. பழமொழி நானூறு: 348.

'உமிக் குற்றுக் கை வருந்துமாறு' என்னும் பழமொழி கற்றோர்க்கு மட்டுமே புரியும்; மற்றோர்க்குப் புரியாது. இரண்டாவது வகைப் பழமொழி பொதுப் பழமொழியாகும். கற்றோர்க்கும் கல்லாதார்க்கும் விளங்கக் கூடிய பழமொழியைப் பொதுப் பழமொழி என்று குறிப்பிடலாம். 'தை பிறந்தால் வழி பிறக்கும்' என்பது பொதுப் பழமொழியின் பாற்படும். மூன்றாவது வகையைச் சார்ந்தது பேச்சுப் பழமொழி. பேச்சு வழக்குச் சொற்களை மிகுதியாகக் கொண்ட இப்பழமொழிகள் பாமர மக்களிடையே மிகுதியாகப் பயிலப்பட்டு வருகின்றன. 'குடிகாரன் பேச்சு பொழுது விடிந்தால் போச்சு' என்பது பேச்சுப் பழமொழிக்கு ஓர் எடுத்துக்காட்டு ஆகும். இவ்வாறு இலக்கியத் தகுதி அடிப்படையில் பழமொழிகள் மூவகைப்படும்.

## சமுதாய அடிப்படை

ஒரே பழமொழி வெவ்வேறு சமூகத்தினரிடம் வெவ்வேறு வகையாக வழங்கப்பட்டு வருவதை நாம் காணலாம். பார்ப்பனர்களிடம் பயிலப்பட்டு வருகின்ற பழமொழிகளில் வடமொழிச் சொற்களும், பார்ப்பனர்களுக்கே உரிய சமூகக் கிளை மொழிகளும் (Social Dialect) மிகுதியாக அமைந்திருக்கின்றன. பார்ப்பனர் அல்லாதார் வழங்கும் தமிழ்ப் பழமொழிகளில் வடமொழிச் சொற்கள் மிகக் குறைவாகவே காணப்படும். 'அக்கா

உள்ளவரை **அத்திம்பேர்** உறவு' என்பது பார்ப்பனர் வழங்கும் பழமொழி. 'அக்கா உள்ளவரை மச்சான் உறவு' என்பது பார்ப்பனர் அல்லாதார் வழங்கும் பழமொழி. 'அம்மாப்பொண்ணுக்குக் கல்யாணம் **அவா அவா ஆத்திலே** சாப்பாடு' என்பது பார்ப்பனர்ப் பழமொழி. 'அய்யாசாமிக்குக் கல்யாணம் அவங்க அவங்க **வீட்டிலே** சாப்பாடு' என்பது பார்ப்பனர் அல்லாதார் பயன்படுத்தும் பழமொழி. தமிழ் மொழியி லுள்ள எல்லாப் பழமொழிகளையும் இவ்வாறு பிரிக்க இயலாது. சிலவற்றை மட்டுமே இம்முறையில் பாகுபடுத்த இயலும்.

## சமய அடிப்படை

தமிழில் சமயக் கருத்துள்ள பழமொழிகள் மிகுதியாக உண்டு. அவற்றைச் சமயக் கண்கொண்டு ஆராய்ந்து கீழ்க்கண்டவாறு சமய அடிப்படையில் பாகுபடுத்தலாம்.

**சைவம் :** 'சிவனுக்குமேல் தெய்வம் இல்லை
சித்திக்குமேல் சாத்திரம் இல்லை'

**வைணவம் :** எங்கும் சுற்றி ரங்கனைப் பாரு.

**கிறித்துவம் :** உன்னைப்போல் பிறரை நேசி.

**இசுலாம் :** எல்லாச் சொத்தும் அல்லாவுக்கு.

**பௌத்தம் :** ஆசையை விட்டால் மோட்சம் கிட்டும்.

**சமணம் :** தன்னுயிரைப்போல் மன்னுயிரை நினை.

மேற் குறிப்பிட்டவாறு பழமொழிகளைச் சமய அடிப்படையில் பாகுபடுத்தி ஆராய்ந்தால் பல்வேறு சமய உண்மைகளை நன்கு அறியலாம். 'எம்மதமும் சம்மதம்' என்பது சமயப் பொதுமையில் எழுந்த சமரசப் பழமொழியாகும்.

## ஒத்த கருத்து அடிப்படை

ஒரே கருத்தும் ஒத்த கருத்துமுள்ள பழமொழிகள் தமிழில் மிகுதியாக இருக்கின்றன. அவற்றைக் கருத்து அடிப்படையில் பாகுபடுத்திவிடலாம். அகத்தில் வறுமையும் புறத்தில் வறட்டு ஆடம்பரமும் கொண்ட போக்கு உலகத்தில் தொன்றுதொட்டு இன்றுவரை இருந்துவருகின்றது. இதை உணர்த்தத் தமிழ் மொழியில் தோன்றிய பழமொழிகள் மிகப் பல. விரிவஞ்சி ஒரு சிலவற்றைமட்டும் இங்குக் காண்போம்.

அங்கே பார்த்தால் ஆடம்பரம், இங்கே பார்த்தால் கஞ்சிக்குச் சாவு.

காசில்லாதவனுக்கு வராகன் பேச்சு எதற்கு ?

தம்பி கால்நடை, பேச்சு பல்லக்கில்.

தலைக்குத்தலை பெரியதனம் உலைக்கு அரிசி இல்லை.

தாய் கிண்ணிப் பிச்சை எடுக்கிறாள், மகன் கும்பகோணத்தில் கோதானம் செய்கிறான்.

பெற்ற தாய் பசித்திருக்கப் பிராமண போசனம் செய்வித்ததுபோல.

குடிக்கிறது கூழ், கொப்பளிக்கிறது பன்னீர்.

தாய் சீலைக்குச் சாண் துணியில்லை, தலைக்குமேலே சரிகை மேற்கட்டி.

தாய் தவிட்டுக்கு அழுகிறாள், மகள் இஞ்சிப் பச்சடி கேட்கிறாள்.

அப்பன் சோற்றுக்கு அழுகிறான் : பிள்ளை கும்பகோணத்தில் கோதானம் செய்கிறான்.

அமுதுபடி பூஜ்யம், ஆடம்பரம் சிலாக்கியம்

அங்காங்கு வைபோகமாயிருக்குகிறான், இங்கே பார்த்தால் அரைக்காசு முதலும் இல்லை.

உடுப்பது பீத்தலாடை, நடப்பது தந்தக் குறடு.

ஊரெங்கும் பேர், வீடு பட்டினி.

தான் தின்னத் தவிடு இல்லை; வாரத்திற்கு இரண்டுப் பன்றிக்குட்டி வளர்க்கிறான்.

கட்டத் துணியில்லை, கூத்தியார் இரண்டு.

கும்பி கூழுக்கு அழுகிறது, கொண்டை பூவுக்கு அழுகிறது.

சாணி சுமக்கிற சிறுமிக்குச் சந்தனப் பூச்சு எதற்கு?

மேற் குறிப்பிட்ட பழமொழிகளை நுணுகி ஆராய்ந்தால் அவை எல்லாம் ஒரே கருத்தை உணர்த்துகின்றன என்பது தெளிவு.

## ஒரு கருத்துப் பல்துறை அடிப்படை

ஒரே கருத்துள்ள பழமொழிகள் பல்வேறு துறைகளில் பல்வேறு வகையாக அந்த அந்தத் துறைக்கேற்ப வழங்கிவருவதை நாம் காண்கின்றோம். அத்தகைய பழமொழிகளைத் துறைவாரியாகப் பிரித்துப் பாகுபடுத்தலாம் இளமைப் பருவத்தில் பயிற்சிபெறாதவன் முதுமைப் பருவத்தில் ஒருக்காலும் பயிற்சிபெற முடியாது என்னும் உண்மை **உடற் கல்வி – உடற்பயிற்சித் துறையில்** 'ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?' என்னும் பழமொழியாகத் தோன்றியது. இதே கருத்துத் **தாவரவியல் துறையில்** 'செடியில் வணங்காதது மரத்தில் வணங்குமா?' என்னும் பழமொழியாகக் காட்சி அளிக்கின்றது. இவ்விரண்டையும் இணைப்பதுபோலச் 'சிறுத்திருக்கையில் வளையாதது பெருத்திருக்கையில் வளையுமா?' என்னும் பழமொழி காட்சியளிக்கின்றது.

## வட்டார அடிப்படை

வட்டாரப் பழமொழிகளைப் **பொது வட்டார பழமொழி** என்றும் **சிறப்பு வட்டார பழமொழி** என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். ஒரே மொழி வெவ்வேறு மாவட்டங்கள், மாநிலங்கள், நாடுகள் ஆகியவற்றில் வெவ்வேறு வகையில் பேசப்படுவதைப் போல, ஒரே மொழியைச் சேர்ந்த பழமொழிகள் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு வகையில் வழங்கு

கின்றன. 'இருந்தால் ஓணம் இல்லாவிட்டால் ஏகாதசி' என்பது கேரள மாநிலத்தில் வழங்கி வரும் வட்டாரப் பழமொழி. இதே கருத்துள்ள பழமொழி பிற இடங்களில், 'இருந்தால் நவாப் இல்லாவிட்டால் பக்கிரி' என்னும் வடிவத்தில் வழங்கி வருகின்றது. 'நான் ஒன்று கேட்டால் நீ ஒன்று சொல்லுகிறாய்' என்பது தமிழ் உலகம் முழுவதும் வழங்கி வரும் பொதுப் பழமொழியாகும். இதே கருத்துள்ள பழமொழி இடத்திற்கு இடம் வேறுபடுகின்றது. 'வட்டுக் கோட்டைக்கு வழி கேட்டால் துட்டுக் கெட்டுக் கொட்டைப் பாக்கு என்பதா?' இது யாழ்ப்பாணத்துப் (இலங்கை) பேச்சு வழக்கில் உள்ள தமிழ்ப் பழமொழி. (வட்டுக் கோட்டை இலங்கையில் உள்ளது) இதற்கு ஒத்த தஞ்சை மாவட்டப் பழமொழி 'பட்டுக்கோட்டைக்கு வழி கேட்டால் கொட்டைப் பாக்கு பத்து பணம் சொல்லுகிறாய்' என்பதாகும். (பட்டுக்கோட்டை தமிழகத்தில் தஞ்சை மாவட்டத்தில் உள்ளது.) 'செவல் பட்டிக்கு வழி எது என்றால் செவலக்காளை ஐம்பதுரூபா என்கிறான்' என்னும் பழமொழி முகவை (இராமநாதபுரம்) மாவட்டத்தில் வழங்கி வருகின்றது.

**'திணையே பால் இடம் பொழுது வினா இறை**
**மரபாம் ஏழும் மயங்கின்ஆம் வழுவே'**

— நன்னூல் : பொதுவியல் : 375.

நன்னூல் உரையாசிரியர் சங்கர நமச்சிவாயர் இந்நூற்பாவிற்கு உரை எழுதுமிடத்து விடை வழுவுக்கு இரண்டு பழமொழிகளை எடுத்துக் காட்டாகக் காட்டியுள்ளார். அவையாவன :—

'கடம்பூர்க்கு வழியாது எனின் இடம்பூணி என் ஆவின் கன்றன்று'

'கருவூர்க்கு வழியாது எனில் பருநூல் பன்னிரு தொடி'

கடம்பூர், திருக்கடம்பூர் என்றும் குறிக்கப்படும். அப்பராலும், சம்பந்தராலும் பாடப்பெற்ற கடம்பூர், தில்லையிலிருந்து (சிதம்பரம்) 15 கல் தொலைவிலும், ஓமாம்புலியூர்க்கு வடமேற்கே 4 கல் தொலைவிலும் உள்ளது. கரூர் திருச்சி மாவட்டத்தில் உள்ளது. இவை யாவும் வட்டாரப் பழமொழிகள். (Regional Proverbs) கடம்பூர்ப் பழமொழியும் வட்டாரப் பழமொழியின் தொன்மையைக் காட்டுகின்றன. இவை யாவும் பொது வட்டாரப் பழமொழிகளாகும்.

**கீழ்க்கண்டவை நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்த வட்டாரப் பழமொழிகளாகும் :**

கடம்பூர் வழிதுணையே, கணபதிக்குப் புளி துணையே.
குற்றாலத்துக் குரங்கே கொம்பை விட்டு இறங்கே.

பாவநாசத்து மீனைப் பிறந்தாலும் பாவமெல்லாம் போகும்.
பாறையடிப் பட்டாக்கள்ளு மாதிரி.

பத்தமடைப் பாய்க்குப் பழுதா சொல்லுவார்கள்?
வெங்கன் காவடி திங்கு திங்கென்று ஆடுது.

மூதி முழுகப் போச்சாம் மூணு குளமும் வெறுங்குளமாய்ப் போச்சாம்.

முள்ளு முனையிலே மூணு குளம் வெட்டினேன், இரண்டு குளம் பாழு ஒண்ணு தண்ணியே இல்லை.

பண்டாரம் படபடங்குது பானை சட்டி கடகடங்குது.

குறுக்குத் துறையான் துணையிருந்தால் குப்பை மேடு கோபுரமாகாதா ?

மணலில் பிடுங்கி எடுத்த பனங்கிழங்குபோல் இருக்கிறான்.

பெண்டாட்டி யாத்தா பெரியாத்தா பிழைக்கும் வழியைச் சொல்லாத்தா.

வில்லடிச்சான் கோயிலிலே விளக்கு வைக்க நேரம் இல்லை.

நாழிக் கிணற்று நீர்போல.

நான்குனேரி எண்ணெய்க் கிணறு போல நம்ம வீட்டிலும் கிணறு இருந்தால் எண்ணெய்க்குப் பஞ்சமா ?

பெரியவர்களைப் பழித்தால் நீ குறுகுறு குற்றாலமாகப் போவாய்.

கொச்சியிலே குறுணி மிளகு விற்கிறது, இங்கென்னச்சு சொல்லு.

**கீழ்க்கண்டவை செங்கல்பட்டு மாவட்டப் பழமொழிகள் :**

காஞ்சிக்குப் போனாலும் மஞ்சத்தின் கால் நான்கு.

இது இரண்டும் ஏற்றக்கோல் அளவு உயரம் இருக்கும்.

இது மூன்று ஏற்றச்சால் கொள்ளும்.

ஏற்றக்கோலை எடுத்துக்கொண்டு எட்டியவரை அடிப்பேன்.

ஏணி (சறுக்கினால்) ஒருவரைக் கொல்லும் ; ஏற்றம் மூவரைக் கொல்லும்.

காஞ்சிபுரம் சென்றால் காலாட்டிக்கொண்டு வாழலாம்.

கஞ்சி வரதப்பா எங்கே வருதப்பா ?

உங்கள் வீட்டில் காமாட்சியா ? மீனாட்சியா ?

மேற்குறிப்பிட்டவை யாவும் பொதுவட்டாரப் பழமொழிகளாகும். பொதுவட்டாரப் பழமொழிகள் வட்டாரத்திற்கு வட்டாரம் வேறுபட்டாலும் அவற்றில் பொதுப் பண்பும் பொதுக் கருத்தும் அமைந்திருப்பதைக் காணலாம்.

கீழே போனால் பிணம் மேலே வந்தால் பணம் என்பது கன்னட (மைசூர்) மாநிலக் கோலார் தங்க வயலில் (Kolar Gold Field) வழங்கி வரும் சிறப்பு வட்டாரத் தமிழ்ப் பழமொழியாகும். 'பட்டப் பகலில் கோட்டை விட்டான் நவாப்' என்பது வட ஆற்காடு மாவட்டச் சிறப்பு வட்டாரப் பழமொழியாகும் சிறப்பு வட்டாரப் பழமொழிகள் முழுக்க முழுக்க அவ்வட்டாரத்திற்கே உரியவை. இவ்வாறு வட்டார அடிப்படையில் பழமொழிகளைப் பாகுபடுத்தலாம்.

## நில எல்லை அடிப்படை

தமிழ் மொழியில் காணப்படுகின்ற பழமொழிகள் எல்லாவற்றையும் நில எல்லை அடிப்படையில் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவையாவன:

1. தமிழகத்துக்கே (தமிழ் மொழிக்கு) உரிய பழமொழிகள்.
   (எடு.: ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்)

2. திராவிட நாட்டுக்கே (திராவிட மொழிகளுக்கு) உரிய பழமொழிகள்.
   (எடு.: தமிழ்: கள்ளனை நம்பினாலும் குள்ளனை நம்பக்கூடாது.)
   மலையாளம்: கள்ளென நம்பியாலும் குள்ளனெ நம்பருது.
   கன்னடம்: கள்ளன நம்பிதரு குள்ளன நம்பபேட.
   தெலுங்கு: பொட்டி வாடினி, பொடல வாடினி நம்மராது.

3. இந்தியாவுக்கு (இந்திய மொழிகளுக்கு) உரிய பழமொழிகள்.
   (எடு.: காசிக்குப் போனாலும் கருமம் தொலையாது.)

4. உலக முழுமைக்கும் உரிய பழமொழிகள்.
   (எடு.: கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை.) (There is many a slip between the cup and the lip.

## சொல் அடிப்படை

சொல்லை மட்டும் அடிப்படையாகக் கொண்டும் பழமொழிகளைக் பாகுபடுத்தலாம். ஒரு குறிப்பிட்ட சொல் எந்தெந்தப் பழமொழிகளில் இடம் பெற்றிருக்கின்றதோ அவற்றை எல்லாம் தொகுத்து ஒரு தலைப்பின் கீழ் அடக்கி விடலாம் எடுத்துக்காட்டாக,

'பூனை கண்ணை மூடிக்கொண்டால் பூலோகம் இருண்டு விடுமா?'

'சூடு கண்ட பூனை அடுப்பங்கரைக்கு அஞ்சும்'

முதலியவற்றைப் பூனைப்பழமொழி என்னும் தலைப்பிலும்,

'காக்கைக்கும் தன் குஞ்சு பொன்குஞ்சு'

'காக்கை உட்காரப் பனம்பழம் விழ'

முதலியவற்றைக் காக்கைப் பழமொழி என்னும் தலைப்பிலும்,

'வரவர மாமியார் கழுதை போல ஆனாள்'

'ஆகாத மாமியார்க்குக் கைபட்டால் குற்றம், கால் பட்டால் குற்றம்'

முதலியவற்றை மாமியார் பழமொழி என்னும் தலைப்பிலும் அடக்கிவிடலாம். இவ்வாறு பழமொழிகளைச் சொல் அடிப்படையில் பாகுபடுத்தலாம்.

## அளவு அடிப்படை

அளவு அல்லது சொல் எண்ணிக்கை அடிப்படையிலும் பழமொழிகளைப் பாகுபடுத்தலாம். இத்தகைய பகுப்பு முறை தொன்றுதொட்டுத் தமிழ் இலக்கிய உலகத்தில் இருந்து வருகின்றது. குறுகிய அளவுள்ள (9 அடி முதல் 12 அடி வரை) பாடல்களை நற்றிணையாகவும், நீண்ட அளவுள்ள (13 அடி முதல் 31 அடிவரை) பாடல்களை நெடுந்தொகையாகவும் (அகநானூறு) பகுத்திருப்பது நினைவு கூரத்தக்கது. யாப்பிலக்கணத்தை ஆராய்ந்தால் இப்பாகுபாடு நன்கு தெளிவாகும். இரு சீரடி குறளடி ; முச்சீரடி சிந்தடி ; நாற்சீரடி அளவடி (நேரடி); ஐஞ்சீரடி நெடிலடி ; ஐஞ்சீருக்கு மிகுதியாக உள்ளது கழிநெடிலடி. சீர் எண்ணிக்கை அடிப்படையில் வெண்பா பகுக்கப்பட்டுள்ளது. குறள் வெண்பா (ஈரடி), சிந்தியல் வெண்பா (மூவடி), நாலடி வெண்பா என்னும் பாகுபாடு இவண் நோக்கத்தக்கது. ஒலி அளவு அடிப்படையில் எழுத்துக்களைக் குறில் (1 மாத்திரை) நெடில் (2 மாத்திரை) என இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருப்பதும் இங்குச் சிந்திக்கத் தக்கது. இம் முறையைப் பின்பற்றிக் குறும் பழமொழி (3 சொற்கள் வரை) நடு அல்லது இடைப் பழமொழி (4 முதல் 6 சொற்கள் வரை) நெடும்பழமொழி (6க்கு மேற்பட்ட சொற்கள்) என்று பழமொழிகளைச் சொல் எண்ணிக்கையை அடிப்படையாகக் கொண்டு முப்பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

குறும்பழமொழி : ஆசைக்கு அளவில்லை.

நடுப்(இடை) பழமொழி : பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்.

நெடும் பழமொழி : கெட்டவன் வாழ்ந்தால் தளிர்ப்பான், வாழ்ந்தவன் கெட்டால் வறையோட்டுக்கும் ஆகான்.

## கருத்து எண்ணிக்கை அடிப்படை

ஒரே கருத்துள்ளதை ஒற்றை அல்லது தனிப்பழமொழி என்றும், இரு கருத்துள்ளதை இரட்டைப்பழமொழி என்றும், மூன்று கருத்துள்ளதை மும்மடிப் பழமொழி என்றும், நான்கு கருத்துள்ளதை நான்மடிப் பழமொழி என்றும், ஐந்து கருத்துள்ளதை ஐம்மடிப் பழமொழி என்றும் கருத்து எண்ணிக்கை அடிப்படையில் பழமொழிகளை ஐந்து வகையாகப் பிரிக்கலாம்.

ஒற்றை அல்லது – தனிப்பழமொழி (Simple (Single) Proverb) :

முற்றத்து முல்லைக்கு மணம் இல்லை.

இரட்டைப் பழமொழி (Twin Proverb) :

பெற்ற மனம் பித்து ; பிள்ளை மனம் கல்லு.

மும்மடிப் பழமொழி (Triple Proverb) : ஆரூரில் பிறக்க முக்தி ; தில்லையில் தரிசிக்க முக்தி ; காசியில் இறக்க முக்தி.

நான்மடிப் பழமொழி (Quadruple Proverb) : காலைக் கடம்பர் ; மத்தியானச் சொக்கர் ; அந்தித் திருவெங்கி நாதர் ; அர்த்தசாமச் சிங்கபுரீசுவரர்.

ஐம்மடிப் பழமொழி (Quintuple Proverb): அய்யாசாமிக்குக் கல்யாணம்; அவரவர் வீட்டிலே சாப்பாடு; கொட்டு முழக்குக் கோயிலிலே; வெற்றிலே பாக்கு கடையிலே; சுண்ணும்பு சூளையிலே.

இவ்வாறு கருத்து எண்ணிக்கை அடிப்படையிலும் பழமொழிகளைப் பாகுபடுத்தலாம்.

## அமைப்பு அடிப்படை

பழமொழிகளை அவற்றின் அமைப்பு அடிப்படையில் ஆராய்ந்து கீழ்க்கண்டவாறு பாகுபாடு செய்யலாம்.

உடன்பாட்டு ஏவல் பழமொழி (Dos Proverb): காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்.

இரட்டை உடன்பாட்டு ஏவல் பழமொழி (Double Dos Proverb): வீட்டைக் கட்டிப்பார்; கல்யாணம் பண்ணிப்பார்.

எதிர்மறை ஏவல் பழமொழி (Donts Proverb): விருதுபட்டிச் சனியனை விலைக்கு வாங்காதே.

இரட்டை எதிர்மறை ஏவல் பழமொழி (Double Don'ts Proverb): கேட்டவை எல்லாம் நம்பாதே; நம்பினதெல்லாம் சொல்லாதே.

உடன்பாட்டுப் பழமொழி (Positive or Affirmative Proverb: உண்ட களைப்பு தொண்டர்க்கும் உண்டு.

உடன்பாட்டுப் வினப் பழமொழி (Positive Interrogative Proverb): உலை வாயை மூடலாம்; ஊர் வாயை மூட முடியுமா?

எதிர்மறைப் பழமொழி (Negative Proverb): துணிந்தவனுக்குத் துக்கம் இல்லை.

உடன்பாட்டு எதிர்மறை ஏவல் பழமொழி (Dos and Donts Proverb): நம்ப நட; நம்பி நடவாதே.

இரட்டை எதிர்மறைப் பழமொழி (Double Negative Proverb): பொய் சொல்லி வாழ்ந்தவனும் இல்லை; மெய் சொல்லிக் கெட்டவனும் இல்லை.

மும்மடி எதிர்மறைப் பழமொழி (Triple Negative Proverb): உன் சொல்லில் உப்பும் இல்லை; புளியும் இல்லை; பசையும் இல்லை.

உடன்பாட்டு எதிர்மறைப் பழமொழி (Positive Negative Proverb): ஞாபகம் இல்லை என்று சொல்லுவான்; ஞானம் இல்லை என்று சொல்லமாட்டான்.

எதிர்மறை உடன்பாட்டுப் பழமொழி (Negative Positive Proverb): உற்றூர்க்கு ஒரு பிள்ளை கொடான்; நமனுக்கு நாலு பிள்ளை கொடுப்பான்.

வினப் பழமொழி (Interrogative Proverb): பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சுமா?

இரட்டை வினாப் பழமொழி (Double Interrogative Proverb): பணத்தைப் பார்க்கிறதா? பழமையைப் பார்க்கிறதா?

மும்மடி வினாப் பழமொழி (Triple Interrogative Proverb): இராமன் ஆண்டால் என்ன? இராவணன் ஆண்டால் என்ன? கூட இருந்த குரங்கு ஆண்டால் என்ன?

நேர்கூற்றுப் பழமொழி (Direct Narrative Proverb): உனக்கு ஒரு பேச்சு எனக்கு ஒரு மூச்சு.

மறைமுகக் கூற்று (Indirect Narrative Proverb): எருமைக்கடா என்றாலும் குழந்தைக்குப் பால் ஒரு பீர் இல்லையா என்கிறான்.

மருஉப் பழமொழி (Metathesis Proverb): குருதை இல்லா ஊர்க்குக் கமூதை தம்பிரான்.

வினாவிடைப் பழமொழி (Catechetical or Socratic or Question Answer Proverb): பணம் என்ன செய்யும்? பணம் பத்தும் செய்யும்.

உரையாடல் பழமொழி (Conversational Proverb); தென்னை மரத்தில் ஏண்டா ஏறினாய்? கன்றுக்குப் புல் பிடுங்க ஏறினேன்.

உறுதி உண்மைப் பழமொழி (Categorical Proverb): ஆறிலும் சாவு நூறிலும் சாவு.

நிபந்தனைப் பழமொழி (Hypothetical Proverb: அத்தைக்கு மீசை முளைத்தால் சித்தப்பா.

இரட்டை நிபந்தனைப் பழமொழி (Double Hypothetical Proverb): அரிசி உண்டானால் வரிசையும் உண்டு; அக்காள் உண்டானால் மச்சானும் உண்டு.

உடன்பாட்டு எதிர்மறை நிபந்தனைப் பழமொழி (Positive Negative Hypothetical Proverb): ஒட்டினால் தொட்டிலும் கொள்ளும்; ஒட்டாவிட்டால் கட்டிலும் கொள்ளாது.

இரட்டை நிபந்தனை எதிர்மறைப் பழமொழி (Double Hypothetical Negative Proverb): விடியாமூஞ்சி, வேலைக்குப் போனால் வேலை அகப்படாது, வேலை அகப்பட்டாலும் கூலி அகப்படாது.

நிபந்தனை வினாப் பழமொழி (Hypothetical Interrogative Proverb): பசு விற்றால் கன்றுக்கு வழக்கா?

பிரிநிலைப் பழமொழி (Disjunctive Proverb): பணம் இருக்கவேணும், இல்லா விட்டால் பத்துச் சனம் இருக்க வேணும்.

மேற்குறிப்பிட்டவாறு அமைப்பு அடிப்படையில் பழமொழிகளைப் பாகுபடுத்தலாம்.

## கதை அடிப்படை

பல்வேறு கதைகளை அடிப்படையாகக் கொண்டு தோன்றிய பழமொழிகள் தமிழில் மிகுதியாக உண்டு. அவற்றைக் கதைப் பழமொழிகள் என்று குறிப்பிடலாம். அத்தகைய கதைப் பழமொழிகளை மக்கள் கதைப் பழமொழி, புராணக்கதைப் பழமொழி, விலங்குக் கதைப் பழமொழி என மூவகையாகப் பிரிக்கலாம்.

'உனக்கும் பேபே உன் அப்பனுக்கும் பேபே' என்பது மக்கள் கதைப் பழமொழி.

'மார்க்கண்டனைப்போல் தீர்க்காயுசாயிரு' என்பது புராணக் கதைப் பழமொழி.

'எட்டாத பழம் புளிக்கும்' (Sour grapism) என்பது விலங்குக் கதைப் பழமொழி.

## நூல் அடிப்படை

தமிழ் மொழியிலுள்ள இலக்கிய நூல்கள் அனைத்திலும் பழமொழிகள் இலங்கு கின்றன. முன்றுறையரையனர் இயற்றிய பழமொழி நானூறு; படிக்காசுப் புலவர் இயற்றிய தண்டலையார் சதகம்; முத்தப்பச் செட்டியார் இயற்றிய சயங்கொண்டார் சதகம், நாராயண பாரதி இயற்றிய கோவிந்த சதகம் ஆகியவை முழுக்க முழுக்கப் பழமொழிகளை அடிப்படையாகக் கொண்டும், பழமொழிகளை விளக்கவும் எழுந்தவை. அப்பர், பழமொழிகளை வைத்தே ஒரு பதிகம் (பாடல் 10) பாடியுள்ளார். இவை எல்லாவற்றையும் ஆழ்ந்து ஆராயுமிடத்துப் பழமொழிகளைத் தமிழ் இலக்கிய நூல் அடிப்படையில் பாகுபாடு செய்யலாம் என்பது புலனகும்.

பழமொழி நானூறு : குலவிச்சை கல்லாமல் பாகம்படும் (6)

தண்டலையார் சதகம் : மழை விட்டும் தூவானம் விட்டதில்லை (15)

செயங்கொண்டார் சதகம் : ஆற்றில் ஒரு காலும் சேற்றில் ஒரு காலும்.

கோவிந்த சதகம் : உடும்பு போனலும் போகட்டும், கையை விட்டால் போதும்.

அப்பர் தேவாரம் . முயல் விட்டுக் காக்கைபின் போனவாறு.

திருக்குறள் (திருவள்ளுவர்) : முயற்சி திருவினை ஆக்கும்.

திருவாசகம் (மாணிக்க வாசகர்) : இருதலைக் கொள்ளியின் உள்ளெறும்பு ஒத்து (6 : நீத்தல் விண்ணப்பம் 9).

விநோத ரச மஞ்சரி (அட்டாவதானம் வீராசாமி செட்டியார்) : கூழுக்கு மாங்காய் தோற்குமா ?

மேற்குறிப்பிட்டவாறு நூல் அடிப்படையில் பழமொழிகளைப் பாகுபாடு செய்து கொண்டே போகலாம்.

## இலக்கண இலக்கிய அடிப்படை

இலக்கிய இலக்கண அடிப்படையிலிருந்து எழுந்த பழமொழிகளை ஆறுவகையாகப் பிரிக்கலாம். அவையாவன :—

(1) இலக்கியத்தைப் பற்றியவை : (எ-டு) [கல்லாடம் படித்தவனிடம் சொல்லாடாதே].

(2) இலக்கியத்தின் பயனகப் பிறந்தவை : (எ-டு) [விடியவிடிய இராமாயணம் கேட்டுச் சீதைக்கு இராமன் சித்தப்பன் என்ருன்] இது இராமாயணம் பயின்றதன் பயனைத் தோன்றிய பழமொழி.

(3) இலக்கியத்தைப் படைத்த புலவரைப் பற்றியவை: (எ-டு) [ கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடும் ].

(4) இலக்கியப் படைப்புக்குக் காரணமாக விளங்கி இலக்கியத்திலும், இலக்கிய வரலாற்றிலும் இடம் பெற்றுள்ள புரவலரைப் பற்றியவை: (எ-டு) [செத்தும் கொடுத்தான் சீதக்காதி]

(5) இலக்கிய அடியே பழமொழியாக மாறியவை: (எ-டு) [ (ஒன்றே குலனும் ஒருவனே தேவனும்): திருமூலர்: திருமந்திரம் ]

(6) இலக்கணத்தை யொட்டி எழுந்தவை: (எ-டு) புலவர்க்கு வெண்பா புலி. (வெண்பா இயற்றும் இடர்ப்பாடு மிக்க அனுபவத்திலிருந்து இப்பழமொழி தோன்றிற்று.)

ஓர் இலக்கியத்தைப் பற்றியோ இலக்கியத்தின் பயனாகவோ ஒரே ஒரு பழமொழி மட்டும்தான் தோன்றியிருக்க முடியும் என்று எண்ணலாகாது. ஒரே இலக்கியம் எத்தனையோ பழமொழிகளுக்கு மூலகாரணமாக இருந்திருக்கின்றது என்னும் பேருண்மையை நாம் மறந்து விடலாகாது. எடுத்துக் காட்டாகப் பாரதத்தைக் காண்போம்.

ஐவர்க்கும் தேவி அழியாத பத்தினி.

புகையிலை விரிச்சால் போச்சு, பெண்கள் சிரிச்சால் போச்சு.

காதலரோடு ஆடார் கவறு.

அடியைப் பிடியடா பாரத பட்டா.

உற்றது சொன்னால் அற்றது பொருந்தும்.

கர்ணன் கொடை பாதி, காவிரி பாதி.

கார்த்திகைக்குப் பின் மழை இல்லை, கர்ணனுக்குப் பின் கொடை இல்லை.

தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போச்சு.

அறுத்தும் அரசாண்டாள் பொன்னுருவி.

ஆள்காட்டி விரலுக்கும் அன்னதானப் பலன்.

தர்மம் தலை காக்கும்.

வில்லுக்கு விசயன்.

ஆற்று மணலை எண்ணினாலும் அர்ச்சுனன் பெண்டாட்டியை எண்ண முடியாது.

பஞ்சபாண்டவாள் தெரியாதா, கட்டில் காலுபோல மூன்றுபேர் என்று சொல்லி விரலைக்காட்டி, நிலத்தில் ஒரு கோடு எழுதி அதையும் அழித்தான்.

பொறுத்தார் பூமி ஆள்வார்.

மேற்குறிப்பிட்டவை எல்லாம் பாரதத்திலிருந்து தோன்றிய பழமொழிகள் என்பது சொல்லாமலே விளங்கும்.

## செவிப்புல அடிப்படை

எதுகை, மோனை, இயைபு, இசைநயம், ஒலிக்குறிப்பு, அடுக்குத் தொடர், இரட்டைக் கிளவி, அந்தாதி, அடுக்குமொழி முதலிய ஒன்பதில் ஏதாவதொரு ஒலிநயம் ஒவ்வொரு பழமொழியிலும் மிருந்திருக்கும். அதன் அடிப்படையில் பழமொழிகளைப் பாகுபடுத்தி விடலாம்.

எதுகைப் பழமொழி: (Rhyming Proverb): அடியாத மாடு படியாது.

மோனைப் பழமொழி: (Alliterative Proverb): கடனோடு கடன் கதம்பம் காற்பணம்.

இயைபுப் பழமொழி; (Rhythmical Proverb): பணம் பந்தியிலே குலம் குப்பையிலே.

இசைநயப் பழமொழி: (Musical Proverb): ஆற்காட்டில் சண்டையானல் சந்த மாமா அடுப்பங்கரையில் ஒளிந்திருப்போம் சந்தமாமா.

ஒலிக்குறிப்புப் பழமொழி: (Onomatopoeic Proverb): வாய் வழவழ கை கரகர.

அடுக்குத்தொடர்ப் பழமொழி: (Anaphora Proverb): காடு வாவா என்கிறது, வீடு போபோ என்கிறது.

இரட்டைக் கிளவிப் பழமொழி: (Anaphora Proverb) மூடி வைத்தாலும் முணுமுணு என்னும்; தைத்து வைத்தாலும் டம்டம் என்னும்.

அந்தாதிப் பழமொழி: (Anaphora Proverb): ஆனதுக்கு ஒரு ஆகாதது; ஆகாததற்கு ஒரு ஆனது.

அடுக்குமொழிப் பழமொழி: (Phraseological Proverb): கல்லுளி மங்கன் போனவழி காடு மேடெல்லாம் தவிடுபொடி.

## அணியியல் அடிப்படை

தமிழ் மொழியில் அணி (Figures of Speech) நயம்பெற்று விளங்கும் பழமொழிகள் மிகுதியாக உள்ளன. அவற்றை அணியியல் அடிப்படையில் கீழ்க்கண்டவாறு பாகுபடுத்தலாம்:—

பிறிது மொழிதல் அணி (ஒட்டணி; உவமப்போலி; நுவலா நுவற்சி): ஒரு கண்ணிலே வெண்ணெயும் ஒரு கண்ணிலே சுண்ணாம்பும்.

உயர்வு நவற்சி அணி: (Hyperbole): அறுக்கமாட்டாதவன் இடுப்பிலே ஐம்பத்தெட்டு அரிவாள்.

உவமை அணி: (Simile): வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைந்ததுபோல.

இரட்டை உவமை அணி (Double Simile): ஐயா கதிர்போல, அம்மா குதிர்போல.

எடுத்துக் காட்டு உவமை அணி: நல்ல மாட்டுக்கு ஒரு சூடு, நல்ல பெண்ணுக்கு ஒரு சொல்.

இல்பொருள் உவமை அணி: கத்தரிக்காய்க்குக் காலும் கையும் முளைத்தது போல.

வஞ்சப் புகழ்ச்சி அணி (Grony): அரிச்சந்திரன் வீட்டுக்கு அடுத்த வீடு.

சிலேடை அணி: (Pun): சக்தி இருந்தால் செய், இல்லாவிட்டால் சிவனே என்று இரு.

ஏறணி (Climax): ஆட்டைக் கடித்து மாட்டைக் கடித்து ஆளைக் கடித்தது.

இறங்கணி (Anti climax): ஆசை அறுபது நாள்; மோகம் முப்பது நாள் தொண்ணூறு நாளும் போனால் துடைப்பக் கட்டை அடி.

## பொது அல்லது கதம்பப் பழமொழி (Miscellany)

எப்பாகுபாட்டிலும் அடங்காதவற்றை ஒழிபியல் என்னும் தலைப்பில் அடக்குவது தொன்று தொட்டு இன்று வரை நிலவி வருகின்ற உலக மரபாகும். அம்மரபை ஒட்டி எந்த ஒரு குறிப்பிட்ட பிரிவின் கீழும் அடக்க முடியாத பழமொழிகளை அவற்றின் இயல்புக்கும் தனித் தன்மைக்கும் ஏற்பத் தனித் தனித் தலைப்பிட்டுப் பிரித்து அவை எல்லாவற்றையும் பொது அல்லது கதம்பத்தின் கீழ் அடக்கி விடலாம். சிலவற்றை இங்குக் குறிக்கின்றோம்.

பகுத்தறிவுப் பழமொழி (Rational Proverb): கெட்டவன் கங்கை ஆடினால் பாவம் தீருமா?

மரபுத் தொடர்ப் பழமொழி (Idomatic Proverb): தோட்டி முதல் தொண்டைமான் வரை.

நகைச்சுவைப் பழமொழி (Humour): சோழியன் குடுமி சும்மா ஆடுமா?

முரண் பழமொழி (Antilogy): கட்டக் கரியமணி இல்லாமற்போனாலும் பேர் பொன்னம்மாள்.

நம்பிக்கைப் பழமொழி (Belief): பொன்கிடைத்தாலும் புதன் கிடைக்காது.

குழந்தை அல்லது விளையாட்டுப் பழமொழி (Nursery): அழுத பிள்ளை சிரித்ததாம், கழுதைப் பாலைக் குடித்ததாம்.

ஆசைப் பழமொழி (Ambition): பணமும் பத்தாயிருக்க வேண்டும், பெண்ணும் முத்தாயிருக்க வேண்டும்.

வெறுப்புப் பழமொழி (Hatred) செவ்வாயும் வெறுவாயும்.

சாபப் பழமொழி (Curse): உன் வாயிலே மண் விழ.

தடைப் பழமொழி (Taboo): சித்திரத்திலும் சோழியன் ஆகாது.

ஊர்ப் பழமொழி (Name of Place): உள்ளூரிலே ஓணன் பிடிக்காதவன் உடையார் பாளையம் போய் உடும்பு பிடிப்பானா?

பேர்ப் பழமொழி (Name of Person): அண்டை வீட்டுச் சுப்பிக்கும் எதிர் வீட்டுப் காமாட்சிக்குமா கவலை?

புதிர்ப் பழமொழி (Quiz): கிச்சு முச்சுத் தாம்பாலம், கியாங் கியாத் தாம்பாலம், மாச்சு மாச்சுத் தாம்பாலம், மாயா மாயாத் தாம்பாலம். (விடை : மனித வாழ்க்கை)

மேற்குறிப்பிட்டவை போன்ற பழமொழிகள் கதம்பத்தின் பாற்படும்.

## இடக்கர்ப் பழமொழிகள் (Unparliameutasy/Foul Proverbs)

நாவினால் சொல்லவோ, ஏட்டில் எழுதவோ தகாத இழி சொற்களைக் (அவையல் கிளவி) கொண்ட நூற்றுக் கணக்கான பழமொழிகள் தமிழ் மொழியில் உள்ளன. சொல் அடிப்படையில் அவை இழிந்தவையாகத் தோன்றினாலும் கருத்து அடிப்படையில் அவை உயர்ந்தவை என்பதை யாரும் மறுக்க இயலாது. இடக்கர்ப் பழமொழிகள் பாமர மக்களிடையே பெருவழக்கில் உள்ளன. பண்பு நோக்கி இடக்கர்ப் பழமொழிக்கு இவண் எடுத்துக்காட்டுக் குறிப்பிடாது விடுகிறோம்.

ஒரு பழமொழி முழுக்க முழுக்க ஒரே பிரிவுக்குள் அடங்கிவிடாது; அடக்கவும் இயலாது; அவ்வாறு அடக்குவதும் பொருத்தமன்று. 'அவரை விதைக்கத் துவரை முளைக்குமா?' என்னும் பழமொழியை நோக்குவோம். அமைப்பு அடிப்படையில் இப் பழமொழியை வினாப் பழமொழியின் கீழும், பொருள் அடிப்படையில் இதைத் தாவரப் பாரம் பரியவியல் (Plant Genetics) கீழும், அளவு அடிப்படையில் இடைப் (நடு) பழமொழியின் கீழும், சொல் அடிப்படையில் அவரை, துவரை ஆகியவற்றின் கீழும் அடக்கலாம். எனவே, ஒரே பழமொழியைப் பல்வேறு கண்கொண்டு நோக்குமிடத்துப் பல தலைப்புக்களில் அடக்கலாம் என்பது தெளிவு.

இங்கு மேற்கோளாகவும், எடுத்துக் காட்டாகவும் காட்டப்பட்டுள்ள பழமொழிகள் 'பானைச் சோற்றுக்குப் பருக்கைப் பதம்' என்னும் பழமொழிக் கேற்ப விரிவஞ்சி வகைக்கு ஒரு பழமொழி மட்டுமே குறித்துள்ளேன்.

மேற்குறிப்பிட்ட வகையில் மட்டுமே பழமொழிகளைப் பாகுபாடு செய்ய இயலும் என்பதன்று; மேலும் ஆராய்ந்தால் வேறு சில முறைகளும் தென்படலாம்.

# கண் கண்ட உண்மை

பேராசிரியர், திரு. தி. வ. காந்திமதிநாதன், பி. ஏ., (ஆனர்சு)
அ. வ. அ. கல்லூரி, மாயூரம்.

[ ஆன்மாவின் பக்குவ நிலையை அறிந்துகொள்ளும் சக்தி இறைவனுக்கு மட்டுமே உண்டு. 'வெளி வேடங்களும் – பொய்ம்மைப் பூசைகளும் இறைவனிடம் செல்லாது' என்னும் இவ்வழகிய கருத்தை அப்பர் பெருமானின் இனிய பாடலொன்றின் துணையோடு அழகுபட ஆசிரியர் இங்கே விரித்துக்காட்டுகிருர். ]

இரவு நேரத்தில் எதிரே இருக்கும் பொருள்கள் கூடக் கண்ணில் படுவதில்லே. என்ன காரணம்? அவற்றை நமக்குக் காட்டக் கூடிய ஒளி இல்லே. விளக்கேற்றி வைக்கிருேம். பொருள்கள் தெரிகின்றன. ஒன்றை நாம் பார்க்க வேண்டுமாளுல் அதைக் காட்டக் கூடிய ஒளி வேண்டும்.

பிறவிக்குருடன்; இரவு நேரம்; எதிரே உள்ள பொருள்களே அவனல் பார்க்க முடியவில்லே. உடனே சென்று ஒரு விளக்கை ஏற்றிக் கொண்டு வருகிருேம். இருள் மறைகிறது; ஒளி படர்கிறது; பொருள்கள் தெரிகின்றன; குருடனிடம் கேட்கிருேம்; ஒன்றும் தெரியவில்லே என்கிருன்.

ஒளி பொருளேக் காட்டும். எல்லாக் கண்களுக்கும் காட்டுவதில்லே. பார்க்கும் ஆற்றலுடைய கண்களுக்கு மட்டுமே காட்டும்.

ஒரு பொருளே நாம் பார்க்க வேண்டுமாளுல் காட்டக் கூடிய ஒளியும் வேண்டும், காணக்கூடிய கண்ணும் வேண்டும்.

கண் தாளுகவே பார்க்கிறதா?

சோர்ந்து தளர்ந்து போன உடம்பிலிருந்து உயிர் நெகிழ்ந்து செல்லும் நேரம்; கண் பஞ்சடையும் நேரம்; உயிர்போய் விட்டது, இப்போது கண்ணுக்கு முன்ளுல் யானேயைக் கொண்டுவந்து நிறுத்திளுலும் கண்ணுக்குத்தெரியாது. கண், ஆற்றல் இழந்து விட்டதா? இல்லே, பின் என்ன? காட்டக்கூடிய உயிர்போய் விட்டது.

அதே கண்ணே அறுவை முறையில் அகழ்ந்து எடுத்து கண்ணெளி மங்கிய உயிருள்ள மற்ருெரு மனிதனின் முகத்தில் மருத்துவ முறையில் பதியம் செய்கிருேம். அந்தக் கண்கொண்டு அவனல் பார்க்க முடிகிறது. பிறவிக் குருடனின் கண்ணே எடுத்து இப்படி இன்னெருவருக்கு மாற்றுப் பதியம் செய்தால் பயன் ஏதும் இல்லே.

ஆற்றலுள்ள கண்ணுக இருந்து, அதை இயக்க உயிரும் இருந்தால்தான் காட்சி கிடைக்கும்.

"டார்ச்லைட்"டில் "பல்ப்" தீய்ந்து போனாலும் பயன் இல்லை; "செல்" தீய்ந்து போனாலும் பயன் இல்லை. புறஒளிக்குப் பொருந்துவதே உள்ளொளிக்கும் பொருந்தும்.

மெய்யொளியைக் காணவேண்டு மானால் ஆன்மாவும் பரிபக்குவம் அடைந் திருக்கவேண்டும்—காணும் ஆற்றல் உடையதாக இருக்கவேண்டும். காட்டக் கூடிய இறைவனின் அருளும் கிடைக்க வேண்டும்.

ஆன்மாவின் பக்குவநிலையை அறிந்து கொள்ளும் சக்தி இறைவனுக்கு மட்டுமே உண்டு. நாமெல்லாம் வெளிவேடங்களையும் செயல்களையும் கண்டு மயங்குவோம். அந்தக் கண்கட்டுவித்தை இறைவனிடம் செல்லாது.

தன்னுடைய ஆட்சியில் பல கோயில் களைக் கட்டி இறைவனை வழிபட்ட கோச்செங்கட் சோழருக்கும் இறைவன் அருள்பாலித்தான். கல்லின்றி மண்ணின்றிக் கற்பனையிலேயே கோயில் கட்டிய— மானதக் கோயில் கட்டிய பூசலார் நாயனா ருக்கும் இறைவன் அருள் புரிந்தான்.

பௌத்த வேடத்தில் இருந்துகொண்டு சிவ சிந்தனையோடு கல்லை இட்டு வழிபட்ட சாக்கிய நாயனாருக்குச் சிவபெருமான் அருள் கிட்டிற்று.

சிவவேடத்தில் இருந்து பூவும் நீரும் இட்டுப் பூசனை செய்தாலும் உள்ளத்தே தூய்மை இல்லை என்றால் சிவபெருமான் அருள் கிடைக்காது. அவன் நம்முடைய உள்ளத்தினுள்ளும் இருப்பவன் — சிற்றம் பலத்தும், சிந்தையுள்ளும் இருப்பவன். அதனால் நம்முடைய வஞ்சனையை உணர்ந்து ஏளனமாகச் சிரிப்பான்.

"நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன்
பொக்கம் மிக்கவர் பூவும் நீரும் கண்டு
நக்கு நிற்பன் அவர்தமை நாணியே"

இப்படி உயிரின் தகுதியைக் கண்டு காட்டலே இறைவனின் பேராற்றல்.

காட்டுவித்தால் யாரொருவர் காணா தாரே!

### தமிழச்சாதி

"..........................................................
சிலப்பதி காரச் செய்யுளைக் கருதியும்
திருக்குறள் உறுதியும் தெளிவும் பொருளின்
ஆழமும் விரிவும் அழகும் கருதியும்
எல்லையொன் றின்மை எனும்பொருள் அதனைக்
கம்பன் குறிகளால் காட்டிட முயலும்
முயற்சியைக் கருதியும், முன்புநான் தமிழச்
சாதியை அமரத்தன்மை வாய்ந்தது என்று
உறுதி கொண்டிருந்தேன்...................."

— அமரகவி. பாரதியார்.

# வள்ளுவரும் - கார்ல் மார்க்சும்

*தவத்திரு.* குன்றக்குடி அடிகளார்

வள்ளுவத்திற்குப் பன்னூருண்டுகள் கழித்துத் தோன்றிய கார்ல் மார்க்சின் கொள்கைகள் எவ்வெவ் வகைகளில் எல்லாம் வள்ளுவத்தைத் தழுவியும் - மாறுபட்டும் செல்கின்றன என்பதனை விளக்கப்புகும் ஆசிரியர், வள்ளுவத்தில் தத்துவமாக உருவெடுத்த கருத்துக்கள் மார்க்கசீயத்தில் விரித்தமைவதையும், லெனின் அதனை மேலும் வளர்த்துச் செல்வதையும் சான்றுகள் காட்டி நிறுவுகிறார். மனித அறிவு, குணம், உழைப்பு போன்ற வற்றின் இயல்புகளையும் - வெளிப்பாட்டையும் நுண்ணிதின் ஆராயும் இருபெரும் ஆசிரியர்களது கருத்தோட்டங்கள் புதிய சிந்தனைகளைத் தோற்றி மகிழ்விக்கின்றன.

திருக்குறள் இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன் மலர்ந்தது. வரலாற்றுக்கு எட்டியவரையில் வள்ளுவத்தைப்போல் செப்பமான ஒரு வாழ்வியல் விஞ்ஞான நூல், வள்ளுவம் தோன்றிய காலத்தில் எந்த மொழியிலும் தோன்றவில்லை. ஏன் ? மாமுனிவர் கார்ல் மார்க்சு தந்த 'மூலதன'த்தைத் (Capital) தவிர இன்னமும் எந்த நூலும் தோன்றவில்லை. திருக்குறள் தோன்றியபின் பல நூற்றாண்டுகள் கழித்து கார்ல் மார்க்சின் 'மூலதனம்' முகிழ்த்திருக்கிறது. சிந்தனையில் ஒருமைப்பாடு, தத்துவப் பார்வையில் ஒருநோக்கு, திருக்குறளுக்கும், 'மூலதன'த் துக்குமிடையே இருப்பதை அறிந்தோர் அறியலாம். ஆயினும், அவற்றுக்குள் வேறுபாடு இல்லையென்று யாரும் கருத வேண்டாம். கார்ல் மார்க்சு தந்த மூலதனத் திற்கும், முதற் பாவலர் திருவள்ளுவர் தந்த திருக்குறளுக்கும் இடையில் முரண் பாடுகள் உண்டு. ஆயினும் முரண்பாடுகளைக் கடந்த விழுமிய ஒருமைப்பாடும் உண்டு. காலத்தால் பிந்தியதால் 'மூலதனம்' செய்த கார்ல் மார்க்சு, வள்ளுவம் தத்துவ மாகச் சொன்னதை விரிவாக்கி விளக்க உரை தந்துள்ளார். லெனின், அந்த 'மூலதன'த்தையும் விரிவாக்கி விளக்கினார். காலம் வளர வளரக் கருத்து வளர்தலும், தெளிவு தெரிதலும் இயற்கை

மார்க்சீயம், அறிவு நிலையானது என்று கூறுவதல்ல. அறிவு, வளர்ச்சிக் குரியது. மேலும் மேலும் வளர்வதற்குரியது. அறிவு, மேலும் மேலும் வளராமல் தேக்க நிலை யெய்துமானால் மனித சமுதாயம் பாழ்படும் என்பது மார்க்சீயத்தின் மெய்ஞ் ஞானம். ஆம் ! ஊற்றுவளம் இல்லாத நீர்நிலை கெட்டுத்தானே போகும் ? ஓடும் இயல்பில்லாத ஒன்றுக்கு ஆறு என்று பெயருண்டோ ? அதுபோல வளரும் இயல்பில்லாத ஒன்றுக்கு அறிவு என்று பெயர் சொல்ல முடியாது. திருக்குறளும் ' அறிதோறு அறியாமை" என்றது.

மனிதன், அவன் வாழும் சூழ்நிலை களால் உருவாக்கப்படுகின்ருன். அவனுக் கென்று தனியே ஒரு குணம் இல்லை. மனிதனுடைய எண்ணம், கருத்து ஆகியவை கூட அவன் சார்ந்துள்ள புறச் சூழ்நிலை களின் பிரதிபலிப்பேயாகும் என்பது மார்க்சீயத் தத்துவம். நமது திருவள்ளுவம் இதனையே,

"மனத்துளது போலக் காட்டி ஒருவற்கு
இனத்துள தாகும் அறிவு"

என்றது.

மார்க்சீயம், சொற்களுக்குக் காணும் பொருளே வேறு. மார்க்சீய அகராதியில் 'பொருள்' என்ருல் தங்கம்–நாணயம் ஆகிய வற்றை ஒருபொழுதும் குறிக்காது. மனித குலத்திற்குப் பயன்படும் தகுதிகுறித்தே பொருளுக்கு மதிப்பு என்பது மார்க் சீயத்தின் சித்தாந்தம். திருக்குறளும் 'பொருள்' என்ற சொல்லுக்கும் பொருளாகக் காட்டியது, மனிதகுலம் துய்த்து மகிழ்ந்து அனுபவித்து வாழக்கூடிய, வாழவைக்கக் கூடிய பொருள்களையே பொருள் என்று பேசுகிறது. "பொருளில்லார்க் கிவ்வுலகம் இல்லை" என்ற திருக்குறளுக்கு இதுவே கருத்து. உடல் – உயிர்ப் பிணைப்பில் நடமாடும் மனித உலகம் நெடிதுநாள் வளர– வாழ உண்பனவும், தின்பனவும் ஆகிய துய்ப்புப் பொருள்கள் தேவை. அத்தகைய பொருள்களே பொருள்கள் என்பது வள்ளு வத்தின் செழுமையான கருத்து.

உழைப் பாற்றலே மனிதனுக்குரிய ஒரே உடைமையாக இருக்க வேண்டும் என்பது மார்க்சீயம். உழைக்காதவனுக்கு உண்ண உரிமை இல்லை என்றே மார்க்சீயம் ஐயத்திற்கு இடமின்றித் தெரிவிக்கிறது. நமது திருக்குறளும்

"உள்ளம் உடைமை உடைமை"

என்றும்,

"உடைய ரெனப்படுவ தூக்க மஃதிலார்
உடைய ருடையரோ மற்று"

என்றும் கூறியுள்ளது. வள்ளுவம் உடைமை வர்க்கத்தினருக்கு எதிராக முதன்முதலில் குரல் கொடுத்திருக்கிறது.

மார்க்சீயம் உழைப்பாளிகளின் பாற் பட்டது. உழைப்பாளர் உலகத்தை உயர்த்துவது. மார்க்சீய தத்துவப்படி உழைப்பவர்களுக்கே எல்லாம்! அவர் களுக்கே மரியாதை! வள்ளுவத்தின் வழி என்ன?

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்"

என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு குரல் கொடுத்தது. உழுபவரே உயர்ந்தோர்! உழுபவரே வாழ்பவர்! உழுபவரே தொழத் தக்கவர்! ஆனல், வள்ளுவம் பிறந்த நாட்டில் இன்னமும் உழுவோரைத் தொழத்தக்க சூழ்நிலை உருவாகவில்லை.

மார்க்சீயத்தின் உயிரனைய கொள்கை, உழைப்புக்குத் தகுந்த ஊதியம் என்பது. உழைப்போர் செல்வத்தை யாரும் கொள்ளை கொள்ளக் கூடாது. இதனை வள்ளுவம் மிக நாகரிகமாக எடுத்தோதிற்று; 'தாழ்விலாச் செல்வர்' என்று! பிறரைத் தாழ்த்தாத செல்வரே தாழ்விலாச் செல்வர். அது மட்டுமா? துலாக் கோலில் எடை காண இடப்பெறும் பொருளும், எடை காட்டும் கல்லும் சமநிலையில் இருக்க வேண்டும். துலாக்கோலில் எடைக் கல்லோடு பொரு ளிடும் தட்டு சமநிலையில் நிற்காமல் தாழு மானல் பொருள் அதிகமாகும். அல்லது இடைக்கல் தாழுமானலும் அப்படியே! சில சூது வணிகர்கள் பொருளிடும் தட்டின் அடியில் புளியை ஒட்டவைத்து வஞ்சனை செய்து பொருளைக் குறைப்பர். அதுபோல ஒருவர் பெற்றிருக்கும் பொருளை அல்லது

செல்வத்தை அவருடைய உழைப்பாற்ற லோடு எண்ணி எடையிட்டுப் பார்க்கும் பொழுது அவர் உழைப்பும் ஆற்றலும், அவர் பெற்ற பொருளும் சமநிலையில் இருக்க வேண்டும். அங்ஙனமின்றி நியாயமில்லாத ஒன்றை நியாயமென்று சொல்லி, வளைந்த கோலைச் செங்கோல் என்று செப்பி, மற்றவர் பொருளை வஞ்சித்தெடுத்த செல்வம் தாழ்வுடைச் செல்வமாகும். தாழ்விலாச் செல்வர் என்று வள்ளுவம் வகுத்ததே, மார்க்சிய சிந்தனையினுடைய தொடக்க காலமாகும்.

வள்ளுவம், மார்க்சியத்திற்கு முன்னே தோன்றியது. வள்ளுவம் தமிழகப் பழமை யில் பூத்த புதுமைநெறி; பொதுமை நெறி. வள்ளுவத்தின் வழி பொதுமை மலருமானால் நம்முடைய மரபுகள் தடம்புரளா. அங்ஙனம் பொதுமை மலராது போனால் வரலாறு எந்தத் திசையில் திரும்பும் என்று இப்போதைக்குக் கற்பனை செய்து பார்க்க முடியவில்லை. வள்ளுவம் வையகத்தின் வாழ்க்கையாக மலரப் பணிசெய்வதே இன்று நம்முன் உள்ள பணி; தலையாய பணி.

வள்ளுவன் தன்னை உலகினுக் கேதந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு – நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென் றோர்மணி
ஆரம் படைத்த தமிழ்நாடு

— அமரகவி பாரதியார்

24, 25-10-72ல் நிகழ்ந்த

தருமையாதீனப்

பல்கலைக் கல்லூரியின்

வெள்ளி விழா நிகழ்ச்சி

நிழற் படங்கள்!



தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
தமிழக ஆளுநர் மேதகு கே. கே. ஷா அவர்களுக்குப்
பொன்னாடை போர்த்தி ஆசி வழங்குதல்



முதல்நாள் நிகழ்ச்சிகளுக்குத் தலைமை ஏற்ற திருப்பனந்தாள்
ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் உரையாற்றுதல்



தமிழ்நாடு ஆளுநர் மேதகு. கே. கே. ஷா அவர்கள்
தொடக்க உரையாற்றுதல்



தவத்திரு குன்றக்குடி அடிகளார், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள்,
தமிழக ஆளுநர் ஆகியோர் முன்னிலையில்
தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள்
வாழ்த்துரை வழங்குதல்



விழாப் பேருரை ஆற்றவரும் முதலமைச்சர் அவர்களை
கல்லூரி மாணவர்கள் கனிவோடு வரவேற்றல்



தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள்
தமிழ்நாடு முதலமைச்சர் டாக்டர். கலைஞர். மாண்புமிகு. திரு. மு. கருணாநிதி அவர்கட்குப்
பொன்னாடை போர்த்தி ஆசி வழங்குதல்



தருமையாதீனம்
ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம்
அவர்கள்
தமிழ்நாடு அரசு
அறநிலைய அமைச்சர்
மாண்புமிகு.
திரு. மு. கண்ணப்பன்
அவர்களுக்குப்
பொன்னாடை போர்த்தி
ஆசி வழங்குதல்



இரண்டாம் நாள்
நிகழ்ச்சியில்
அவையோர் மகிழ
அருளாசி வழங்கும்
தருமையாதீனத்
தகுகுரு முதல்வர்



இரண்டாம் நாள்
நிகழ்ச்சிகளுக்குத்
தலைமையேற்ற
அருள்நெறித் தந்தை
தவத்திரு.
அடிகளார் அவர்கள்
உரையாற்றல்



பல்கலைக் கல்லூரி
பழைய மாணவர்கள் சார்பில்
முதலமைச்சர் அவர்களுக்குத்
தவத்திரு.
அடிகளார் அவர்கள்
பொன்னுடை போர்த்தி
பாராட்டிதழ் படித்தளித்தல்



விழாவில் பங்குபற்றி
உரையாற்றிய
அறநிலைய அமைச்சர் மாண்புமிகு
திரு. மு. கண்ணப்பன்
அவர்களுக்கு
விழாக்குழு சார்பில்
கல்லூரி முதல்வர்
திரு. வி. சா. குருசாமி தேசிகர்
அவர்கள்
வரவேற்பிதழ் படித்தளித்தல்



விழாத் தலைமையேற்ற
தவத்திரு. அடிகளார்
அவர்களுக்கு
விழாக் குழு சார்பில்
கல்லூரிப் பேராசிரியர்
திரு. இரா. செல்வக்கணபதி
வரவேற்பிதழ் படித்தளித்தல்



எண்ணங்கவர் வண்ணத்தில்
உருவாக்கப்பெற்ற
வெள்ளிவிழா மலரை
வெளியிட்ட
முதலமைச்சர் அவர்கள்
முதல் மலரைத்
தருமையாதீனம்
ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம்
அவர்களிடத்தில் அளித்தல்



தமிழ்நாடு முதலமைச்சர்
மாண்புமிகு. டாக்டர். கலைஞர்.
திரு. மு. கருணாநிதி அவர்கள்
வெள்ளிவிழாப் பேருரை
நிகழ்த்துகிருர்கள்



பழைய மாணவர்கள் சார்பில் கல்லூரி நூலகத்திற்கு வழங்கப்பெற்ற ரூபாய் 500 மதிப்புள்ள நூல்களை அறநிலைய அமைச்சர் அவர்கள் கல்லூரி முதல்வரிடம் வழங்குகிருர்



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் அமைத்த, 'பல்கலைக் கல்லூரி வெள்ளிவிழா நினைவு நிதி'யில் இருந்து அளிக்கப்பெற்ற முதற்பரிசை 'நீதிநெறி விளக்கம்' கட்டுரைப் போட்டியில் வெற்றிபெற்ற மாணவர் த. சீனுவாசன் அறநிலைய அமைச்சரிடமிருந்து பெறுகிறார்



பட்டிமன்றத் தலைமை ஏற்ற தவத்திரு. அடிகளார் அவர்களுக்குப் பழைய மாணவர்கள் சார்பில் ஸ்ரீமத். மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் பொன்னாடை போர்த்துதல்



கலைக் கண்காட்சியை
பாவை விளக்கேற்றிவைத்து
தமிழக அரசின்
முதலமைச்சர் அவர்கள்
திறந்துவைத்தல்

எண்ணம்கவர் கண்காட்சியை
தமிழக முதலமைச்சரும்
அறநிலைய அமைச்சரும்
பார்த்து மகிழ்கிறார்கள்





கலைக் கண்காட்சியின்
கவின்மிகு தோற்றம்
( ஒரு பகுதி )

பல்கலைக் கல்லூரி
மாணவர்கள்
பங்கேற்று நடித்த
' இன்றுபோய் நாளைவா '
நகைச்சுவை நாடகத்தில்
பங்கேற்றோர்





பல்கலைக் கல்லூரி
மாணவர்கள்
பங்கேற்று நடித்த
' சேரன் செங்குட்டுவன் '
நாடகத்தில்
ஒரு காட்சி

# தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி

# வெள்ளிவிழா

( சிரோமணி, வித்துவான், திரு. வி. சபேசன் )

**வெள்ளி விழா :**

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியின் வெள்ளிவிழா சென்ற யாண்டில் நிகழ்த்த வேண்டும் என்று திட்டமிடப்பெற்றது. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் சிறந்த முறையில் தமிழ் விழாவாகக் கல்லூரியின் வெள்ளிவிழாவை நிகழ்த்தவேண்டும் என்றும், தமிழ்நாட்டின் ஆளுநர் அவர்களை யும் முதலமைச்சர் மாண்புமிகு கலைஞர் அவர்களையும் கொண்டு விழாவை நடத்த வேண்டுமென்றும் திருவுளம் பற்றினர்கள். விழா முயற்சிகள் மேற்கொள்ளப்பெற்றன. விழா மலர் அச்சிடும் முயற்சி மேற்கொள்ளப் பட்டது. கல்லூரியில் பயின்ற பழைய மாணவர்கள் பலரும் கூடி, தாங்கள் பயின்ற கல்லூரியின் வெள்ளிவிழா, சிறப்புற நிகழத் துணைசெய்யும் வகையில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களைத் தலைவ ராகக் கொண்ட விழாக்குழு ஒன்றை உருவாக்கிச் செயல்முறைகளைத் திட்ட மிட்டனர். சிறந்த முறையில் இவ்விழாவை நிகழ்த்தவேண்டும் என்ற காரணத்தால் விழாநாள் தள்ளிவைக்கப்பெற்றது. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் பரிபூரண மடைந்தபின் அருளாட்சி மேற்கொண்ட 26ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி அவர்கள் திருவுளம்பற்றியவாறே வெள்ளிவிழாவை நிகழ்த்தவேண்டும் என்று கட்டளையிட்டார் கள். ஆளுநர் அவர்கட்கும் முதலமைச்சர் அவர்கட்கும் ஏற்ற நாளைக் கேட்டு வெள்ளி விழா உறுதி செய்யப்பெற்றது. தவத்திரு குன்றக்குடி அடிகளாரவர்கள் முன்னிருந்து விழாநாட்களைக் குறித்தும் செயல்முறைகளை ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுடன் கலந்து உரையாடித் திட்டங்கள் வகுத்தும் உதவினர்கள். வெள்ளிவிழா 24, 25-10-72 எனத் தீர்மானிக்கப்பெற்றது.

**முன்னேற்பாடுகள் :**

தருமையாதீனத்தின் வீதிகள் விழாக் கோலம் பூண்டன. தோரணங்களாலும் மின்விளக்குகளாலும் வளைவுத்தட்டிகளாலும் வீதிகள் அலங்கரிக்கப்பெற்றன. பல்கலைக் கல்லூரி மாணவர்கள் பல்வகைக் குழுக்க ளாகப் பிரிக்கப்பெற்று தங்கட்குரியபணிகளை மேற்கொண்டனர். ஒப்பனைகள், கலைக் கூடம், வரவேற்பு முதலிய பணிகளை மாணவர்கள் செம்மையாகச் செய்தனர். பல்கலைக் கல்லூரி வண்ணக் காகிதங்களா லும் தோரணங்களாலும் விளக்குகளாலும் அலங்கரிக்கப்பெற்றது. திருநெறிய தெய்வத் தமிழ்மன்றம் திருக்குறள் அட்டைகள் கட்டப் பெற்றும் வண்ணக் காகித ஒப்பனைகள்

செய்யப்பெற்றும் அழகுறுத்தப் பெற்றது. கல்லூரிப் பேராசிரியர் வித்துவான், சிரோமணி, திரு. வி. சபேசன் அவர்கள் வரவேற்பு ஏற்பாடுகளைக் கண்காணித்தார்.

**கலைக்கூடம் :**

பல்கலைக் கல்லூரி மாணவர்கள் பல மாதங்களாகச் சேகரித்த கைவண்ணப் பொருள்களும், ஓவியங்களும் சிற்பங்களும் சித்திரங்களும் கலைக்கூடத்தை அழகு செய்தன. பல்கலைக் கல்லூரிப் பேராசிரியை வித்துவான் திருமதி ப. நீலா அவர்கள் கலைக்கூடப்பொறுப்பை ஏற்றுக் கண்ணையும் கருத்தையும் கவரும் வண்ணம் அழகு செய்தார்கள். கல்வெட்டு எழுத்துக்கள் – செப்பேடுகள் – விக்கிரகங்கள் விளக்கக் குறிப்புக்களுடன் வைக்கப்பெற்றன. திருப்பனந்தாள் வித்துவான் திரு. வே. மகாதேவன் அவர்களும், ஆதீன உயர்பள்ளி ஓவிய ஆசிரியர் திரு. கே. ஜி. மூர்த்தி அவர்களும் கல்லூரி மாணவர்களோடு இணைந்து கலைக்கூடத்தைச் சிறப்புறச் செய்வித்தனர்.

**விழா மலர் :**

சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரைகள் பலவும் அடங்கிய வெள்ளிவிழாமலர்ப் பொறுப்பைப் பேராசிரியர் வித்துவான் திரு. இரா. செல்வக்கணபதி அவர்கள் ஏற்றுச் சிறந்த முறையில் மலரை உருவாக்கினர். குடந்தை ஜெமினி அச்சகத்தினர் விழாமலர் நன்கு மலர அச்சிடும் பொறுப்பை ஏற்றுச் சிறப்புறச் செய்து உதவினர். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானங்கள், தமிழகத்தின் பெரும் பொறுப்பில் உள்ள ஆளுநர், முதலமைச்சர், உயர்நீதிமன்ற நீதிபதிகள், பேராசிரியர்கள் வழங்கிய வாழ்த்துரைகளும் கல்லூரியின் வரலாறு, அறிஞர்கள் எழுதி உதவிய சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரைகள் முதலியவைகளும் மலரில் இடம் பெற்றுள்ளன.

**தொடக்க விழா :**

24—10—72 செவ்வாய் மாலை 7 மணி அளவில் தமிழ்நாடு ஆளுநர் மேதகு கே. கே. ஷா அவர்கள் விழாவைத் தொடங்கி வைத்துப் பேருரை வழங்க ஏற்பாடு செய்யப் பெற்றிருந்தது. ஆளுநர் அவர்கள் மாலை 7-மணிக்குத் தருமைக்கு வருகை தந்தார்கள். ஸ்ரீமகாலக்ஷ்மி துர்க்காதேவி திருக்கோயிலில் பூர்ணகும்பமரியாதைகளுடன் வரவேற்கப் பெற்றார்கள். மேள வாத்தியங்களுடன் ஸ்ரீ மகாலக்ஷ்மி திருக்கோயில் சென்று வழி பாடாற்றித் திருமடத்திற்குச் சென்று ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களைத் தரிசித்தார்கள். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் ஆளுநர் அவர்களுக்குப் பொன்னாடை அணிவித்து உரையாடினார்கள். பின்னர், திருநெறிய தெய்வத் தமிழ் மன்றத்திற்கு ஆளுநர் அவர்களுடன் ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்கள் எழுந்தருளினார்கள். கடவுள் வாழ்த்தாகத் திருமுறை ஓதப் பெற்றது. கல்லூரி மாணவிகள் இறை வணக்கமாகத் திருமுறை ஓதியபின் தருமையாதீனம் வேளூர்க் கட்டளை விசாரணை வித்துவான் ஸ்ரீமத் இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரை கூறி விழாத் தலைமை ஏற்ற திருப்பனந்தாள் காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களுக்கு வரவேற் பிதழைப் படித்தார்கள். கல்லூரிப் பொறுப்பு முதல்வர் வித்துவான், திரு. வி. சா. குருசாமி தேசிகர் ஆளுநர் அவர்களுக்கு அளிக்கப் பெற்ற வரவேற்பிதழைப் படித்தார். மாலைகள் அணிவிக்கப்பெற்று வெள்ளிப் பேழைகளில் வரவேற்பிதழ்கள் அளிக்கப் பெற்றன.

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்கள் வாழ்த்துரை வழங்கி யருளினார்கள். திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசாமித்

தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தலைமையுரை நிகழ்த்தியருளினுர்கள். மேதகு ஆளுநர் அவர்கள் விழாச் சிறப்புரை நிகழ்த்தி வெள்ளிவிழாவைத் தொடங்கிவைத்தார்கள். பல்கலைக் கல்லூரியின் முன்னுள் தமிழ்த் துறைத் தலைவர் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் நன்றியுரை கூறினுர்கள். இரவு 10 மணிக்கு 'இன்றுபோய் நாளைவா' என்னும் நாடகம் பல்கலைக் கல்லூரி மாணவர்களால் சிறப்புற நிகழ்த்தப்பெற்று முதல்நாள் நிகழ்ச்சிகள் யாவும் நிறைவு பெற்றன.

**இரண்டாம் நாள் :**

*25-10-72* புதன் காலை *9* மணி அளவில் தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள் தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களைச் சிறந்த முறையில் வரவேற்க முன்னேற்பாடுகளைக் கண்காணித்துவந்தார்கள். திருநெறிய தெய்வத் தமிழ் மன்றம் அன்பர்கள் பலரின் வருகையால் நிறைந்து திகழ்ந்தது. பன்னெடு நாட்களாக ஆவலோடு எதிர்பார்த்த கலைஞர் அவர்களை அன்புததும்ப வரவேற்கப் பல்கலைக் கல்லூரி மாணவர்கள் அணி வகுத்து நின்றனர். பல்கலைக் கல்லூரி வாயிலில் அமைச்சர் அவர்களை வரவேற்க அன்பர்கள் காத்திருந்தனர்.

காலை *10* மணி : தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் மாண்புமிகு திரு. மு. கருணுநிதி அவர்களும், அறநிலைய அமைச்சர் மாண்புமிகு திரு. மு. கண்ணப்பன் அவர்களும் பல்கலைக்கல்லூரிக் கட்டிடத்தின் வாயிலுக்கு வந்து சேர்ந்தார்கள். சட்டமன்ற நாடாளுமன்ற உறுப்பினர்கள், மாவட்ட ஆட்சியாளர் மற்றும் பல அதிகாரிகள் அனைவரும் உடன் வந்தனர். சென்னை சமயப்பிரசார நிலையம் வித்துவான் ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் மாலைகள் அணிவித்து மேளவாத்திய இன்னிசை களோடு அமைச்சர் பெருமக்களை வரவேற் ருர்கள். பல்கலைக் கல்லூரி மாணவர்கள் அமைத்திருந்த கலைக்கூடத்தை முதலமைச்சர் அவர்கள் பாவை விளக்கை ஏற்றித் தொடங்கி வைத்து, மாணவர்களின் கலையார்வத்தையும் கலைப் பொருள்களின் சிறப்பையும் கண்டுகளித்தார்கள். பின்னர் ஆதீனத் திருமடத்துக்கு அழைத்துச் செல்லப்பெற்ருர். ஆதீனத் திருமடத்தின் நூலகம் சொக்கநாதர் பூஜைமடம் முதலிய இடங்களைப் பார்த்துக்கொண்டு திரு மடத்தில் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளியிருக்கும் பண்டாரக் கட்டிற்குச் சென்று ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களைத் தரிசித்து அருளாசி பெற்ருர்கள். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் முதலமைச்சர் அவர்கட்கும், அறநிலைய அமைச்சர் அவர் கட்கும் பொன்னுடைகள் போர்த்தி வாழ்த்தி யருளினுர்கள். சிறிது நேரம் உரையாடிய பின் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களும் முதலமைச்சர் அவர்களும் அறநிலைய அமைச்சர் அவர்களும் விழா மேடைக்கு வருகைதந்து அமர்ந்தனர்.

திருமுறை ஓதப்பெற்றது. கல்லூரி மாணவிகள் தமிழ்த்தாய் வாழ்த்துப்பாடினர். பல்கலைக் கல்லூரியில் பயின்ற ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர்களுள் ஒருவராகிய வித்துவான் ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் அனைவரையும் வர வேற்று முதலமைச்சர் அவர்களுக்கு அளிக் கப்பெறும் வரவேற்புரையைப் படித்து மாலை அணிவித்து வெள்ளிப் பேழையில் வைத்து முதலமைச்சரிடம் வழங்கினுர்கள். கல்லூரிப் பொறுப்பு முதல்வர் திரு. வி. சா. குருசாமி தேசிகர் அறநிலைய அமைச்சர் அவர்களுக்கு அளிக்கப்பெறும் வரவேற்புரையைப் படித்து மாலை அணிவித்து வெள்ளிப் பேழையில் வைத்து அமைச்சர் அவர்களுக்கு வழங்கி னுர்கள். கல்லூரிப் பேராசிரியர் திரு.

இரா. செல்வக்கணபதி அவர்கள் விழாத் தலைமை ஏற்ற தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்களுக்கு அளிக்கப்பெறும் வரவேற்புரையைப் படித்து மாலைகுட்டி வெள்ளிப் பேழையில் வைத்து வழங்கினர். முதலமைச்சர் அவர்கட்குச் சிறப்பாக பழைய மாணவர்கள் வழங்கிய பாமாலையை வேளூர் தேவஸ்தான திருமுறை ஓதுவா மூர்த்தி திரு. சொக்கலிங்கம் இசையோடு பாடினர். தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர் கட்கும், கலைஞர் அவர்கட்கும், அறநிலைய அமைச்சர் அவர்கட்கும் பொன்னுடைகள் போர்த்தி கலைஞர் அவர்களுக்குப் பாமாலையை வழங்கி மாலை அணிவித் தார்கள்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் முதலமைச்சர், அறநிலைய அமைச்சர்களைப் பாராட்டி வாழ்த்துரை வழங்கியருளினர்கள்.

தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள் தலைமையுரை நிகழ்த்தினர்கள்.

வெள்ளி விழா மலரை வெளியிட்டுத் தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் விழாப் பேருரை வழங்கினர்கள். தருமையாதீனம் 26 ஆவது மகாசந்நிதானம் அவர்கள் வெள்ளி விழா நினைவாகக் கல்லூரி வளர்ச்சிக்கு ரூ. 25000 நிலைநிதி நிறுவியருளியுள்ள செய்தியை முதலமைச்சர் அவர்கள் மகிழ் வோடு தெரிவித்தார்கள். தருமையாதீனப் பணிகளைப் போற்றியும், மாணவர்களின் அடக்கம் அன்பு முதலிய பண்புகளைப் பாராட்டியும் அறிவுரை கூறியும் சிறந்ததொரு பேருரை வழங்கினர்கள்.

அறநிலைய அமைச்சர் மாண்புமிகு. திரு. மு. கண்ணப்பன் அவர்கள் தருமை யாதீனப் பல்கலைக் கல்லூரியின் பழைய மாணவர்கள், தாங்கள் கற்ற கல்லூரி நூலகத் திற்கு அன்பளிப்பாக வழங்கிய ரூ. 500 மதிப்புள்ள நூல்களைக் கல்லூரி முதல்வரிடம் வழங்கிச் சிறப்புரை யாற்றினர்கள்.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் நிறுவி யுள்ள வெள்ளிவிழா நினைவு அறக் கட்டளையிலிருந்து நீதிநெறிவிளக்கக் கட்டுரைப் போட்டிப் பரிசுகளை மாணவர் களுக்கு அறநிலைய அமைச்சர் அவர்கள் வழங்கி வாழ்த்தினர்கள்.

நாட்டு வாழ்த்துடன் காலை நிகழ்ச்சிகள் நிறைவுபெற்றன.

மாலை 7 மணி: மும்முனைப் பட்டி மண்டபம், வள்ளுவர் வாழ்க்கைக்குப் பெரிதும் இன்றியமையாததென வற்புறுத்து வது அன்பா? அறிவா? ஆற்றலா? என்ற தலைப்பில் பட்டிமண்டபம் தொடங்கியது.

தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் பட்டிமண்டபத்தில் நடுவராக வீற்றிருந்து மிகச்சிறப்பாக விவாதங்களை ஆய்வுரை செய்தருளினர்கள்.

அன்பே என்ற கட்சியைச் சார்ந்து புலவர் திரு. கீரன். புலவர் திரு. இல. செ. கந்தசாமி, எம்.ஏ., புலவர் திருமதி. ப. நீலா ஆகியோரும்,

அறிவே என்ற கட்சியைச் சார்ந்து புலவர் திரு. இரா. இராமாநுசம், எம். ஏ., புலவர் திரு. சி. சம்புலிங்கம், புலவர் திருமதி. துரை. வள்ளி ஆகியோரும்,

ஆற்றலே என்ற கட்சியைச் சார்ந்து புலவர் திரு. பழநி. அரங்கசாமி, எம். ஏ., புலவர் திரு. இராமபத்திரன், பி. ஏ., புலவர் திருமதி.செல்லப்பாப்பா கீரன் ஆகியோரும் வாதிட்டனர்.

பட்டிமன்றத்தில் பங்கேற்ற நடுவர் உள்ளிட்ட அனைவரும் ஆதீனப் பல்கலைக் கல்லூரியின் முன்னாள் மாணவர்கள் என்பது சிறப்பாகக் குறிக்கத்தக்கதாகும்.

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியைப் போற்றிப் புரந்து ரூ. 25000 நிலைநிதி அமைத்து வெள்ளிவிழாவைச் சிறந்த முறையில் நிகழ்த்திடத் திருவருள் பாலித்த தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திருவடிகளுக்குப் பழைய மாணவர்கள் அன்புடன் அணிவித்த பாமாலையைப் புலவர் திரு. அரங்கசாமி படித்து வெள்ளிப் பேழையில் வைத்து ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் திருவடிகளை வணங்கிச் சேர்ப்பித்தார்.

கல்லூரிப் பொறுப்பு முதல்வர் திரு. வி. சா. குருசாமி தேசிகர் அவர்கள் நன்றியுரை கூறினார்கள்.

விழா நிகழ்ச்சிகளைத் திருச்சி அனைத்திந்திய வானொலி நிலையத்தினர் ஒலிப்பதிவு செய்து வெளியிட்டனர். சென்னை திரைப்படச் செய்தித்துறையினர் படக்காட்சிகள் எடுத்து உதவினர்.

இரவு 9மணிக்கு,சேரன் செங்குட்டுவன் என்ற வரலாற்று நாடகம் கல்லூரி மாணவர்களால் நிகழ்த்தப்பெற்றது. தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களும் தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்களும் நாடகக் காட்சிகளைக் கண்டுகளித்தார்கள்.

கல்லூரிப் பழைய மாணவர் புலவர் திரு. மதிவாணன் அவர்கள் நாடக அரங்குகளைப் பொலிவுற அமைத்து உதவினர். மாயூரம் அ. வ. அ. கல்லூரி மாணவர்களின் இசைக்குழுவினர் நாடகத்திற்குப் பின்னணி இசை அமைத்துச் சிறப்பித்தனர். திரளான முன்னாள் மாணவர்களும், பெற்றோர்களும் விழாவில் பங்கேற்றிச் சிறப்பித்தனர்.

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் மாணவர்களைப் பாராட்டி வழங்கிய நாடகப் பரிசுகளை, குன்றக்குடி ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் வழங்கியருளினர்கள்.

### குரு வணக்கம்

முப்பொருள் உண்மை நாளும்
மொழிந்தருள் மெய்கண் டான்தன்

திப்பிய சந்தா னத்துத்
திருநகர் தருமை மேவி

இப்புவித் தொடர்பின் நீக்கி
எம்மையும் அடிமை கொண்ட

சுப்பிர மணிய ஞான
சம்பந்தன் துணைத்தாள் போற்றி

## 25—10—1972 புதன்கிழமை காலை நிகழ்ந்த தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி வெள்ளிவிழாவின்

இரண்டாம் நாள் நிகழ்ச்சியில்

தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் வழங்கியருளிய

# வாழ்த்துரை

வாயானை மனத்தானை மனத்துள் நின்ற
    கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் தன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்றான் தன்னைச்
    சுடர்த்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
    தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென்கூடல் திருவா லவாய்ச்
    சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

தருமை வளர்த்த தவத்திரு குன்றக்குடி மகாசந்நிதானம் அவர்களே! தருமை யாதீனத்தோடு தொடர்புடைய தமிழக முதல்வர் அவர்களே! அறநிலைய அமைச்சர் அவர்களே! மாணவ மாணவிகளே! வெள்ளி விழாக் காணவந்துள்ள பெருமக்களே!

இற்றைநாள், தருமையாதீனப்பல்கலைக் கல்லூரி வெள்ளிவிழாக் கொண்டாட்டத் தின் இரண்டாவது திருநாள். இத்திருநாள், மிகச் சிறந்த முறையில், வானவர் மாரி நல்க-உடலும் உள்ளமும் குளிரும் வண்ணம் கொண்டாடப்படுகிறது. குருவருள் நம்மை யெல்லாம் எவ்வாறு இயக்குகின்றது என்பதை இவ்விழா நிகழ்ச்சி எடுத்துக் காட்டுகிறது.

கயிலைக் குருமணி அவர்கள் கலைஞர் அவர்களைக் கொண்டு வெள்ளி விழாவை நடத்தத் திட்டமிட்டிருந்தார்கள். அவர்கள் எண்ணம் இன்று நிறைவேறுகின்றது. அவர்கள் எண்ணத்தை நிறைவேற்ற வேண்டிய கடமையும் பொறுப்பும் நமக்கு உண்டு.

கயிலைக் குருமணி 25 ஆவது குரு மூர்த்தியாக விளங்கியவர்கள், 25 என்ற எண்ணிக்கை மிகச்சிறந்தஒன்று. மாகேசுவர மூர்த்தம் 25. அவை மதுரைத் திருக் கோயிலில் ஸ்ரீ சொக்கநாதர் சந்நிதியில் நந்தி மண்டபத்தில் 25 சிவ முகூர்த்தங் களாகச் சிற்பங்களாகத் தூண்களில் செதுக்கப்பெற்று விளங்குகின்றன. கயிலைக்

குருமணி 25 ஆண்டுகளுக்குமேல் அருளாட்சி செலுத்தினர்கள். அவர்கள் கை வண்ணத் தால் தோன்றிய இக்கல்லூரியும் பூத்துக் காய்த்துக் கனிந்து இன்று 25 ஆண்டு நிரம்பப்பெற்று வெள்ளிவிழாக் காணுகிறது. இங்கே கனிந்த ஒருகனி நமது குன்றக்குடி மகாசந்நிதானம் ஆவார்கள். நாமும் காசிவாசி அவர்களும் இங்கே உருவான வர்களே.

கயிலைக் குருமணி அவர்கள் அஸ்த விசேஷம் உடையவர்கள். இந்த ஆதீன அருளாட்சியில் பொற்காலம் தோற்று வித்தவர்கள். தங்கள் அருளாட்சிக்கு உட் பட்ட 27 திருக்கோயில்களையும் தெய்வ மணம் கமழும் கலைக் கோயில்களாக மாற்றி- 27 விண்மீன்களாக விளங்கச் செய்தவர்கள். அவர்கள் தூய உள்ளம் தோற்றிய பல்கலைக் கல்லூரி, பண்புமிக்க நல்ல பல புலவர்களை உருவாக்கியது. செயல்களின் சிறப்புக்கள் யாவும் உள்ளத்தைப் பொறுத்தே அமையும். அவர்களது தூய பக்தி உள்ளத்தின் சிறப் பிற்கு, பெறலரும் பேருகக் காசியம்பதியில், உடல்நலங் குன்ருது அமர்ந்த நிலையில் இறையடி சேர்ந்த நிகழ்ச்சி ஒன்றே சான்ரு கும். முப்பது மணி நேரத்தில் ஈராயிரம் கல் தொலைவைக் கடந்து அவர்கள் திருமேனி தருமைக்கு வந்து சேர்ந்த சிறப்பிற்கு அவர் கள் உள்ளமே காரணம். அவர்கள் திருவுள்ளம் நினைந்தன யாவும் முறையாக நிறைவேறி வருகின்றன.

இன்று 25ஆம் தேதி, இந்நன்னளில் 25 ஆவது ஆண்டு வெள்ளிவிழா வந்து அமைந்ததைத் திருவருளின் விளக்கமாகவே கருதுகின்ருேம். இங்கே, இன்றைய விழாவைச் சிறப்பிக்க வந்திருக்கும் தமிழக முதல்வர் கலைஞர் அவர்கள் நம் தருமை யாதீனக் குடிமக்களில் ஒருவராவார். அவர்கள் தந்தையார் நமது ஆதீனத்துத் திருக்குவளை தேவஸ்தானத்துக் கோயில் பணிகளில் பணியாற்றியவர். நம்முடைய ஆதீனக் குடிமக்களில் ஒருவர் தமிழ் நாட்டின் தலைமகனை விளங்குவது குறித்து நாம் பெருமகிழ்ச்சி அடைகிருேம்.

கலைஞர் அவர்கள் தமிழ்மொழி – நாகரிகம் – பண்பாடு - கலை இவற்றிற்காகவே பாடுபட்டு வருகிருர்கள். கடந்த ஒன்றரை ஆண்டாக அவர்களை நாம் இவ்விழாவிற்கு அழைத்துவருகிருேம். திருநாளைப் போவா ரைப்போல் வருகிறேன் வருகிறேன் என்றே அவர்களும் நாட்களைத் தள்ளிவந்தார்கள். உலகத்தோடு ஒட்டஒழுகல்என்றவாக்கிற்கு ஒப்ப, நம்கொள்கைவேறு; அவர்கள் கொள்கைவேறு என்று கருதி அவர்கள் இங்கே வருதற்குத் தாமதித்திருக்கலாம். மடாதிபதிகள் இன்றைய அமைச்சர் களுக்குப் பொன்னடை போர்த்துவதைப் பற்றிப் பழுத்த அரசியல்வாதி ஒருவர் குறிப் பிட்டுப் பேசியுள்ளார். இது பற்றிய ஓர் உண்மையைக்கூற விரும்புகிருேம்.

நாம் மட்டுமல்ல, மடாதிபதிகள் எல் லோரும் ஆட்சித்தலைமை ஏற்றிருப்போரை மதித்துச் சிறப்பிக்கும் கடமை உடையவர் கள். இம்மதிப்புத் தனிமனிதர்களுக்குத் தரப்படுவதல்ல. தலைமை ஆற்றலுக்குத் தரப்படுவதாகும். ஒப்பற்ற பரம்பொருளை, ‘இறைவன், கடவுள், இயவுள்’ எனமூன்று சொற்களால் நம் முன்னேர் குறித்தனர். ‘இறைவன் – எங்கும் நிறைந்திருப்பவன்; கடவுள் – எல்லாவற்றையும் கடந்து நிற்ப வன்; இயவுள் – வழியாக இருந்து நம்மை நல்வழிப் படுத்துகின்றவன்’ என்பன இவற்றின் பொருள். எங்கும் வியாபித் திருக்கும் அந்தச் சக்தி ஓராண்டாக நம்மைப் பற்றி நிற்கிறது. இவ்வாற்றலே உலகத்தை, விண்மீன்களை, சுடர்களை, அண்டகோளங் களை இயக்குகின்றது. அவ்விறையருளின் - ஆட்சி முறையின் - அடையாளமே முதல்வர். அவர் பதவிப்பிரமாணம் எடுத்துக்கொண்ட

உடனேயே - இறைமையாற்றல் அவர் வழி இயங்கத் தொடங்கிற்று என்பது கருத்து. அவ்வாற்றலையே போற்றவும், சிறப்பிக்கவும் செய்கிறோம். ஆற்றல் பலர் மூலம் உலகில் விளங்குவது கண்கூடு. சிவனது ஆற்றல் தலைமையாகவும், விநாயகர்; முருகன் போன்ற இறையவர் ஆற்றல் துணையாகவும் விளங்குவதுபோல முதல்வர் சிவன்போல என்றால், நம் அறநிலைய அமைச்சரை விநாயகர் போலக்கொள்ளலாம். 'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே' என்பது ஆழ்வார் வாக்கு. இறைவனுடைய அருட்சக்தி ஆட்சித்தலைவர் கள் வழிநின்று நிலவுவதால்தான் நாம் அவர்களைச் சிறப்பித்து வரவேற்கிறோம்.

இங்கே அமைச்சர்களுக்குப் பொன் னுடை போர்த்திச் சிறப்பித்தோம். அது வெறும் ஆடம்பரத்திற்காக அல்ல. ஒரு தத்துவம் அதில் இருக்கிறது. பொன், பயன் கருதாத தன்மையுடையது.

"பொன்னால் பிரயோசனம் பொன்படைத்
தார்க்குண்டு பொன்படைத்தோன்
தன்னால் பிரயோசனம் பொன்னுக்கங்
கேதுண்டு அத்தன்மையைப்போல்
உன்னால் பிரயோசனம் வேணதெல்
லாமுண்டு உனைப்பணியும்
என்னால் பிரயோசனம் ஏதுண்டு
காளத்தி யீசனே",

என்பது பட்டினத்தார் திருவாக்கு. இது கருதியே அப்பர் பெருமானும் இறைவனின் கைம்மாறு கருதாது அருள் வழங்கும் திருவடிகளைப்

"பொன்னார் திருவடிக்கு ஒன்றுண்டு விண்ணப்பம்,"

என்று சிறப்பித்தார், எனவேதான் பயன் கருதாத தொண்டர்களுக்குப் பயன்கருதாத பொன்னால் இழைக்கப்பெற்ற ஆடையை அணிவிக்கின்றோம். கடமை போற்றிக் கண்ணியம் காத்துக் கட்டுப்பாட்டுடன் விளங்கும் நம் முதல் அமைச்சர், தமக்கு உடல்நிலை சரியில்லாத போதிலும் நம் பல்கலைக் கல்லூரியின் வெள்ளிவிழாவில் விழா மலரை வெளியிட்டு அறிவுரையாற்ற வருகை தந்திருப்பது மகிழ்ச்சிக்குரியது. அவர்களை அன்போடு ஆசிகூறி வரவேற் கிறோம்.

இங்கே அறநிலைய அமைச்சர் அவர் களும் வந்திருக்கிறார்கள். அவர்களும் நம்மோடு தொடர்புடையவர்களே! இறைய வர் திருக்கோயில்களை எல்லாம் ஆளுகின்ற வாய்ப்பு அவர்களுக்கு வாய்த்திருப்பதே ஒரு சிறப்பாக விளங்குகின்றது. அவர் களுக்கு நம்மோடு உள்ள தொடர்பு மண்ணால் இல்லை என்றாலும், விண்ணால் – கண்ணால் ஏற்பட்டதாகும். அவர்கள் பெயரோ கண்ணப்பன். பெரியபுராண அடியார்களுள் கண்ணப்ப நாயனாரை ஒத்த சிறப்பு வேறு எவர்க்கும் இல்லை. 'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்' என்று மணிவாசகர் பாராட்டுவர். அந்த அடியார் பெயரைத் தாங்கிய அறநிலைய அமைச்சர் அவர்களும் விழாவில் பங்கேற்பது மகிழ்ச்சி தருவதாகும். அவர்களையும் அன்போடு ஆசிகூறி வரவேற்கிறோம்.

வெள்ளிவிழாக் காணும் நம் பல்கலைக் கல்லூரி தனிச் சிறப்புடையது. முதற்சிறப்பு, இங்கே பணியாற்றும் ஆசிரியர்கள் இங் கேயே பயின்றவர்கள்என்பது. தங்களுக்குள் எவ்வித பிணக்கும் இல்லாது பணியாற்றும் சிறப்பு வேறு எங்கும் காணமுடியாததாகும். மற்றொரு சிறப்பு, மாணவர்களும் – மாண வியர்களும் ஒருங்கு பயிலும் இக்கல்லூரியில் எவ்விதமான பிரச்சனைகளும் கிடையாது என்பது.

இவ்விழா நன்னாளில் மாணவ – மாண வியர்களுக்கும், பயின்ற பழைய மாணவர் களுக்கும், விழாவில் பங்குபற்றும் அனை வருக்கும் செந்தமிழ்ச் சொக்கன் திருவருள் பெருகப் பிரார்த்திக்கின்றோம்.

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி வெள்ளிவிழாவில்

24—10—72 அன்று

தமிழ்நாடு ஆளுநர்

## மேதகு. கே. கே. ஷா அவர்கள்

ஆற்றிய

# தொடக்கப் பேருரை

### இந்து சமயத் தத்துவம் :

இந்து சமயத் தத்துவம் என்பதுதான் என்ன? நாம் தொடங்குமிடம், நாதப்ரம்மம். அடுத்து வேதங்கள், தொடர்ந்து உபநிட தங்கள்: வேத உபநிடதங்களுக்குப் பின் இராமாவதாரமும், கிருஷ்ணவதாரமும் நிகழ் கின்றன. இராமாவதாரத்திற்கும், கிருஷ்ண வதாரத்திற்கும் இடையே உள்ள வேறு பாட்டை உணர்ந்தீர்களாயின், இந்துத் தத்துவத்தையே உணர்ந்தீர் ஆவீர். இராமா வதாரத்தின் அடிப்படையை உணர்தல் வேண்டுமாயின் சீதாபிராட்டி கூறுவதை நீங்கள் நினைவிற் கொள்ளுதல் வேண்டும். வினை தன்னையும் விட்டு வைக்கவில்லை என்றும், துன்புறுதற்கென்றே தான் பிறந் துள்ளதாகவும் சீதாபிராட்டி கூறுகின்றாள். இலக்குமணனுடைய செயலைச் சீதாபிராட்டி யால் பொறுத்துக்கொள்ள முடிந்ததா? பரதன் அரியணையை ஏற்றுக்கொண்டிருந் தான் என்றால் என்ன நிகழ்ந்திருக்கும்? இலவ குசர்கள் இராமனை எவ்வாறு தோல்வியுறச் செய்தார்கள்? என்னுடைய தமிழ் நண்பர்கள் இராவணன் ஒரு பிராமணன் என்பதையும், இராமன் பிராமணன் அல்லாதவன் என்பதையும் நினைவிற்கொள்ளுதல் வேண்டும்.

### முதல் கீதை :

இனி, கிருஷ்ணவதாரத்தை நோக்கு வோம். பகவத்கீதை முதன் முதலாகத் தோன்றிய கீதை அன்று. முதற்கீதை அஷ்டாவக்ர கீதை ஆகும். ஜனக வைதேகிக்கும், அஷ்டாவக்ரர்க்கும் நடந்த உரையாடலே முதல் கீதை.

### நீதியின் வன்மை :

இராமாவதாரம் இந்தியாவின் உயர் விஞ்ஞானத்திறனை விளக்குவதென்று கூறலாம். இந்தியாவிடம் பிரமாஸ்திரம் இருந்தது; நீதி வன்மை உடையதாக இருந்தது. அஸ்வமேத யக்ஞம் நீதி என்ன என்பதை முடிவு செய்வதாக இருந்தது. யார் அதிக வன்மையுடையவர் என்று அறிவதற்கும் அது துணைபுரிந்தது. நீதிக்கும் ஊழுக்கும் இடையே நிகழ்ந்த போராட்டம் இராமாவதாரத்தில் தொடங்கிவிட்ட தென்று கூறலாம். யார் வெல்வார்கள்? நீதியா? அல்லது ஊழா? ஊழின் கருவிகள் யாவை? இராக துவேஷங்களே ஊழின் தலையாய கருவிகள் எனலாம். உண்மையும் பொய்ம்மையான ஆசையும் ஊழின் சாதனங் கள் ஆகும். ஆதலால்தான் கிருஷ்ணபகவான் ஊழின் சாதனங்களை வெல்ல வேண்டும்

என்றும், தெய்விகம் வெற்றிபெறச் செய்ய வேண்டும் என்றும், 'நமக்கு உபதேசித்துள்ளார்; ஆகவேதான் கீதையில் "இராக துவேஷ விஹித" என்று கூறப்பட்டுள்ளது. இராக துவேஷங்களை விட்ட கணத்திலேயே ஊழ் செயலற்றுப் போகின்றது.

**அறிவும் ஞானமும் கலந்ததே சமயம் :**

இந்து சமயத் தத்துவந்தான் எத்தனை சிறப்பானது? இப்போது உங்களால் வினையை வெல்லக்கூடுமா? வினையை வெல்லுவது உங்களிடமே உள்ளது. இராக துவேஷங்களையும் மாச்சரியங்களையும் விட்டு நீங்கும் அக்கணம் முதலே வினையால் உங்களைத் தொடவும் தொடரவும் இயலாது; நீங்கள் அதன் பிடியிலிருந்து விடுதலைபெற்றவர்களாவீர்கள். ஆதலால்தான் இந்து மதம் அங்கே கடவுட்காட்சி உண்டு என்று உரைக்கின்றது. இராக துவேஷங்களை வென்றபொழுது உண்டாகும் அறிவும் ஞானமும் கலந்ததே சமயம். அதுவே இந்து மதம் இயம்புவது. கிருஷ்ணபகவான் கூட வசிஷ்டர் முன்புதோன்றி அவரைக் குருவாக ஏற்றுக்கொள்கிறார்; ஏனெனில் வசிஷ்டர் ஞானமும், சிரத்தையும் கூடியவராக இருந்தார். ஞானமும், சிரத்தையும் கூடிய நிலையில் ஆருகரும் வணங்க வேண்டிய நிலை பெறுகிறார். "யதா ராஜா ததா பிரஜா" (மன்னன் எப்படி மன்னுயிர் அப்படி) என்ற நாட்கள் கழிந்துவிட்டன. "யதா பிரஜா ததா ராஜா" (மன்னுயிர் எப்படி மன்னன் அப்படி) என்று ஆகிவிட்டது இன்று. மக்களே இன்று மன்னர். நாங்கள் அரசர்கள் இல்லை. அவர்கள் மக்கள் இல்லை. மக்கள் எனக்குத் தலைவர். நான் அவர்கள் தொண்டன்

**பயன் தரும் சேவை :**

ஆதலால் மக்கள் நல்லவர்களாக இருக்க இயலாவிட்டால் அரசு நல்லதாக அமைய இயலாது. ஆதலால் ஒரு கல்லூரியைத் தோற்றுவித்து, அதன்வாயிலாக எண்ணற்ற ஏழை மக்கள் வாய்ப்புப் பெறக்கூடிய பல நிலையங்களை நடத்துதலாகிய ஒரு வேள்வியைப் புரிந்துவரும் குருமகா சந்நிதானம் அவர்களை நான் பெரிதும் பாராட்ட விரும்புகிறேன். இந்தியாவின் உண்மை அரசர்களாக விளங்கும் ஏழை மக்களுக்குப் பெரிதும் உதவுகின்ற இக்கல்வி நிலையத்தைக் குருமகாசந்நிதானம் அவர்கள் நன்கு புரந்து வருகிறார்கள். இதுவே மேலும் பல்கிப்பெருகி, பல்லோருக்கும் பயன்தரும் பெரும் சேவையாக வளர வேண்டும்.

**திருக்கோயிலின் நோக்கம் :**

மிகவும் கற்றுத்தேர்ந்த ஆசிரியர்களும், குருமகாசந்நிதானம் அவர்களும் வீற்றிருக்கும் இவ்விடத்தில் இந்துமதத்தின் உட்பொருளை உரைப்பதில் நான் சங்கோசமும் பெருமகிழ்ச்சியும் எய்துகிறேன். கோயிலுக்குச் செல்லுவதும், அங்குச் சென்று "கடவுளே என்னுடைய பாவங்களை மன்னித்தருள்" என்று வேண்டிய பிறகு பாவங்களை மேலும் செய்வதற்கு உரிமை பெறுவதும்தான் இந்துமதம் என்று கொள்ளலாகாது. ஒவ்வொரு முறையும் பாவச்செயல்களைப் புரிவதும், கோயிலுக்குப் போவதும், பாவங்கள் மன்னிக்கப் பெறுவதும், மீண்டும் பாவச் செயல்களைச் செய்வதும், மீண்டும் கோயிலுக்குப் போவதுமாக இப்படி மீண்டும் மீண்டும் செய்தல் இந்து மதத்துக்குப் பொருந்துமா? இதுவா இந்து மதம்? இல்லை, இல்லை. திருக்கோயிலுக்குச் செல்வது, உன்னை நீயே மாற்றி உயர்த்திக்கொள்ளவும், மீண்டும் பாவச் செயல்கள் புரியாத நிலைபெறவுமே; திருக்கோயில் இதற்கென்றே உள்ளது. திருக்கோயில் கடவுளை ஏமாற்றுவதற்கு அன்று; தெய்விக நிலைபெறவே திருக்கோயில். இதுவே திருக்கோயிலின்

நோக்கம். ஆதலால் இந்து மதத்தைப் பொறுத்தவரை, சமயம் என்பது அறிவு மட்டுமன்று.

**மனம் கங்கையாக வேண்டும் :**

மனமே கங்கை என்று கூறப்படுகின்றது; மனமே கங்கை; ஆனல் நீங்கள் கங்கா நதியை நோக்கிப் போகவேண்டிய அவசியமில்லை. மனம் கங்கையாக ஆகவில்லை என்ருல் நீங்கள் கங்கையை நோக்கிப் போகத்தான் வேண்டும்; ஆனல் அது பொருளற்ற செயலே ஆகும். மனம் கங்கையின் தூய்மையைப் பெறுதல் வேண்டும். கங்கா நதியை நோக்கிப் போவதால் மனம் தூய்மை பெற்றுவிடாது; மனத்தைத் தூய்மையுள்ளதாக முதலில் ஆக்கிக் கொண்டுவிட்டால் கங்கை மனத்துக்குள் வந்துவிடும்: நீங்கள் கங்கையை நோக்கிப் போகவேண்டிய அவசியம் ஏற்படாது.

**அகத்தெழுச்சி :**

நான் இங்கே வந்திருப்பதில் உள்ள அகத்தெழுச்சியை நோக்குதல் வேண்டும்; நான் காலம் கடந்து உண்பவன் அல்லன்; இன்று ஒன்றரை மணி நேரம் கடந்தும், என்னுல் பேச முடிகின்றது. நான் வரவேற்கப்பட்டிருக்கும் இந்தப் புனிதத் தலத்திலிருந்து, கீதையின் ஆற்றல் உண்மையிலேயே பொதிந்திருக்கும் இந்த ஞான நிலையத்திலிருந்து ஏழை மக்கட்குப் பெரிதும் உதவுகின்ற உண்மையான ஓர் நல்ல உணர்வுடன் புறப்படுகின்றேன். இதற்காகக் குருமகாசந்நிதானம் அவர்கட்கு என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். இந்த ஆதீனத்திலிருந்து இந்தியா ஒரு புதிய போக்கினைப் பெறும் என்று நம்புகின்றேன். இந்த நம்பிக்கையோடு இந்த வெள்ளிவிழாக் கொண்டாட்டங்களைத் தொடங்கி வைப்பதில் நான் பெருமகிழ்ச்சி எய்துகின்றேன். என்னை இங்கு வரவழைத்தமைக்காக, குருமகாசந்நிதானம் அவர்களுக்கு என் வணக்கத்தையும் பெருநன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

"உலக லாமோர் பெருங்கன வஃதுளே
உண்டு உறங்கி இடர்செய்து செத்திடும்
கலக மானிடப் பூச்சிகள் வாழ்க்கையோர்
கனவி லுங்கன வாகும்"

— அமரகவி. பாரதியார்.

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி

வெள்ளி விழா மலரை வெளியிட்டு, 25—10—1972இல்

தமிழக முதலமைச்சர்

டாக்டர். கலைஞர். மாண்புமிகு. திரு. மு. கருணாநிதி அவர்கள்

ஆற்றிய

# வெள்ளி விழாப் பேருரை

வெள்ளி விழாத் தலைமையேற்றிருக்கும் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களே! தருமை ஆதீனகர்த்தர் அவர்களே! மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர், அருமை நண்பர் கண்ணப்பன் அவர்களே! நாடாளுமன்ற, சட்டமன்ற உறுப்பினர்களே! பெரியோர்களே! ஆசிரியப் பெருமக்களே! மாணவ மணிகளே! இன்று தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியினுடைய வெள்ளி விழாவில் கலந்துகொள்வதில் நான் மிகுந்த மகிழ்ச்சியும் பெருமையும் அடைகின்றேன். மடாதிபதிகள் அழைத்தால் வருவாரோ என்கின்ற ஐயம் இருந்ததாக நம்முடைய தருமையாதீனகர்த்தர் அவர்கள் இங்கே சொன்னார்கள். படாதிபதிகள் அழைத்தால் ஏற்படுகின்ற ஐயத்தைவிட, மடாதிபதிகள் அழைக்கிற நேரத்தில் ஏற்படுகின்ற ஐயம் குறைவானதுதான் என்பதை நான் முதலிலேயே தெரிவித்துக்கொள்ளுகின்றேன். நான் முதலமைச்சனாக இருந்தாலும், தருமையாதீனத்திற்குக் கட்டுப்பட்ட 27 தேவஸ்தானங்களிலே ஒன்றான திருக்குவளை என்கின்ற சிற்றூரிலே பிறந்தவன் என்பதையும், என்னுடைய தந்தையார் திருக்குவளையிலே உள்ள ஆலயத்திலே தொடர்பு கொண்டிருந்தவர் என்பதனையும் ஆதீனகர்த்தர் அவர்கள் இங்கே எடுத்துச் சொன்னார்கள். முற்றிலும் உண்மை.

இன்னும் சொல்லப்போனால், இந்த 27 தேவஸ்தானங்களில், எனக்குத் தெரிந்த மட்டில், *1935* என்று கருதுகின்றேன். திருக்குவளை ஆலயத்திலே, நவக்ரஹங்களையும் ஒரே இடத்தில் வைத்து ஒரு சிறிய மண்டபத்தைக் கட்டி அதற்குக் குடமுழுக்கினையும் அந்நாளில் செய்தார்கள். இப்படி நவக்ரஹங்களும் ஒரே இடத்திலே வரிசையாக வைக்கப்பட்டு மண்டபம் அமைக்கப்படுவது பெரும்பாலும் வழக்கமாக இருப்பதில்லை அதை அப்பொழுதே பலரும் இது ஒரு அரிய சிறப்புக்குரிய காரியமென்று அந்தக்காலத்திலே சொன்னார்கள். நவக்ரஹங்களுடைய மண்டபத்தின் குடமுழுக்கு நடைபெற்ற அந்நாளில் நவக்ரஹங்களை – அதனுடைய உற்சவ மூர்த்திகளைப் பல்லக்கிலே வைத்துப் பவனி நடாத்தி, ஆலயத்துக்குள்ளே அவைகளை மீண்டும் எடுத்துவருகிற நேரத்தில் அப்பொழுதுதான் ஞாபகம் வந்தது; வழக்கமாகக் கொடிமரத்துக்குப் பக்கத்தில் தட்டி சுற்றுவது வழக்கம். அப்படித் தட்டி சுற்றுகின்ற பெண்களுக்குப் பாடவேண்டிய பாட்டு அதுவரையிலே எழுதப்படவில்லை. உடனடியாக அங்கிருந்த அந்தக் கோயிலுடைய அர்ச்சகர்கள், பாட்டு வேண்டுமே என்று அங்கும் இங்கும் திரும்பிப்பார்த்த நேரத்தில் என்னுடைய தந்தையார் இரண்டொரு வரிகளிலே ஒரு

பாட்டை எழுதிக்கொடுத்தார். "ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், நலமான குரு சுக்கிரன், கோர சனி, ராகு, கேது, கும்ப மகர ராசிக்கதிபதி," என்று ஒரு பாடலை எழுதிக்கொடுத்து, உடனடியாக தட்டி சுற்றும் அந்தச் சடங்கு முடிந்து, அதற்குப் பிறகு நவக்ரஹங்கள் ஆலயத்துக்குள்ளே சென்ற அந்த வரலாறு எனக்கு இன்றும் பசுமையாக ஞாபகத்திலே இருக்கிறது.

என் தந்தையார் நல்ல கவித்துவம் வாய்ந்தவர்கள். பல பாடல்களை எழுதி இருக்கின்றார்கள். அதிலே அவர்கள் வேடிக்கையாக எழுதிய பாடல்களும், கருத்தாழமிக்கபாடல்களும் நிறைய உள்ளன. அவருடைய நண்பரான ஒரு சலவைத் தொழிலாளி, திருக்குவளையிலே இருந்தார். அந்த சலவைத் தொழிலாளியைக் கேலிக் செய்வதற்காக ஒரு பாடலை எழுதினர். "வெள்ளாவி பத்து நாள், வெளுக்க இருபது நாள், முள்ளாடி கஞ்சி போட முப்பது நாள், ஆயினும் காக நிறமாய், கருங்குருவி வால் நிறமாய், மேக நிறமாய் வெளுத்தானே, என் தோழன் வைத்தி லிங்கம்" என்று என் தந்தையார், நான் மிகச் சிறுவனாக இருந்த அந்தக்காலத்திலே எழுதிய பாடல்களைக் கேட்டுக்கேட்டு, நான் சுவைப்பது வழக்கம்.

அவர்கள், திருக்குவளை ஆலயத்திலே பணியாற்றியவர்கள் மாத்திரமல்ல. நல்ல இசைப் புலமையும் வாய்ந்தவர்கள். விவசாயத் தொழிலிலும் ஈடுபட்டவர்கள். இன்றைக்கும் திருக்குவளையிலே இருக்கின்ற என் தந்தையார் நினைவான, அந்த இல்லத்திற் கருகாமையில் இருக்கின்ற வயல்வெளிகளில், என் தாயும் தந்தையும் அவர்களே நடவு நட்டும், உழவுத்தொழில் செய்தும், அவர்கள் வாழ்ந்த அந்த வாழ்க்கை எல்லாம், இன்றைக்கும் எனக்கு நினைவிலே இருக்கிறது. ஆகவே கவிஞர்கள் என்னிடத்திலே போட்டிக்கு வந்தால், என் தந்தையார் ஒரு கவிஞர், அவர்களுடைய வாரிசு என்று நான் சொல்லிக்கொள்ள முடியும்.

விவசாயிகள் என்னைப் போருக்கு அழைத்தால், என்னுடைய தந்தை, தாய் இருவருமே விவசாய குடும்பத்தைச் சேர்ந்த வர்கள், என்று நான் அவர்களுக்குப் பதில் சொல்லமுடியும்.

அதைப்போலவே சங்கீதத்துறையில் உள்ளவர்கள், என்னைப் போட்டிக்கு அழைத்தால், நான் ஈடுகொடுக்கமுடியா விட்டாலும், என் தந்தையைக் காட்டி தப்பித்துக்கொள்ள முடியும்.

இப்படி தந்தை வழியில் நான் இசையும், அதைப்போலவே விவசாயத் துறையில் அக்கறையும், தமிழ்த்துறையிலே பற்றும் கொண்டு இளமைப் பருவத்திலே இருந்து வாழ்ந்த காரணத்தினுலேதான், தமிழ் எங்கெங்கே பாராட்டப்படுகிறதோ தமிழ் எங்கெங்கே வளர்க்கப்படுகிறதோ, அது பகுத்தறிவு பரப்புகின்ற இடமாக இருந்தாலும், மடாலயங்களாக இருந்தாலும், எந்த இடமாக இருந்தாலும், அங்கே தமிழ் தழைக்கிறது என்ருல், அது சைவத்தின் பெயரால் தழைத்தாலும், வைணவத்தின் பெயரால் தழைத்தாலும், பௌத்த மதத்தின் பெயரால் தழைத்தாலும், சமண மதத்தின் பெயரால் தழைத்தாலும், பெரியாரின் பெயரால் தழைத்தாலும், அண்ணுவின் பெயரால் தழைத்தாலும், அந்த இடத்தி லெல்லாம், நான் இருப்பேன்; அந்த இடத்தையெல்லாம், என்னிடமாகக் கொள் வேன் என்கின்ற அந்த வகையிலேதான் நான் இந்த இடத்திற்கு வந்திருக் கின்றேன். இங்கேபேசிய ஆதீன கர்த்தர்கள்

இருவருமே சொன்னார்கள்; கருணாநிதி வந்திருக்கிறார், கண்ணப்பன் வந்திருக்கிறார் என்று. இன்னும் சொல்லப்போனால், அவர்களுக்குப் பிரியமான சோமசுந்தரக் கடவுளையும், நான் இங்கே அழைத்து வந்திருக்கிறேன். நாடாளுமன்ற உறுப்பினர் நண்பர் S. D. சோமசுந்தரம் என்னோடு இங்கே வந்திருக்கின்றார். ஆண்டவன் எங்கும் நிரம்பியிருக்கின்றார். ஆண்டவன் இல்லாத இடமில்லை. ஏதோ ஒரு சக்தி நம்மை இயக்கிவருகிறது என்பதை யெல்லாம், நம்முடைய தருமை ஆதீன கர்த்தர் அவர்கள், குளிர்ந்த தமிழால் இங்கே எடுத்துச் சொன்னார்கள். ஏதோ ஒரு சக்தி இயக்கிவருகிறது என்பதிலே நாங்கள் இரண்டு கருத்துக் கொண்டவர்கள் அல்ல என்கின்ற காரணத்தினால்தான், எங்களையெல்லாம் ஆளாக்கிய பேரறிஞர் அண்ணா, அவர்கள், 'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' என்கின்ற, அந்த மொழியினை நாங்கள் சார்ந்துள்ள கழகத்தினுடைய கொள்கையாக ஆக்கி விட்டுச் சென்றிருக்கின்றார்கள். அதிலே எந்தவிதமான ஐயப்பாடும் நிச்சயமாகக் கிடையாது. இன்றைக்குத் தமிழ்நாட்டில், நம்முடைய தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களும், தலைமையுரையிலே தருமை ஆதீனகர்த்தர் அவர்கள், எடுத்துக் காட்டியதுபோல், ஒற்றுமை குறைந்து வருகிறது என்று சொன்னார்கள். தமிழ் அறிஞர்களுக்குள்ளே ஒற்றுமை இல்லை என்று குறிப்பிட்டார்கள். ஒரு நாட்டில், அல்லது, உலகத்தில், ஒரு இனத்தைப் பற்றிய சிறப்பைப்பற்றிக் கூறவேண்டுமே யானால், ஒவ்வொரு இனத்திற்கும் ஒரு சிறப்பு உண்டு. அதைப்போல தமிழ் இனத்திற்குரிய பெரும் சிறப்பு, ஒற்றுமை இல்லாததுதான்.

இவர்கள் யார் என்றால், இவர்கள் ஒற்றுமை இல்லாதவர்கள், ஓஹோ தமிழ் இனமா என்று கேட்டுவிடலாம். ஆகவே அந்தச் சிறப்பை நீங்கள் எடுத்துவிட வேண்டும் என்று அவர்கள் சொல்லு கிறார்கள் என்றால், எனக்கு வேடிக்கையாக இருக்கிறது. ஏனென்றால், தமிழன் ஒற்றுமையில்லாமலேதான், பல ஆண்டுக் காலம் வளர்ந்திருக்கிறான்; வாழ்ந்திருக்கி றான். அதே அளவுக்கு வீழ்ந்தும் இருக்கி றான். ஒற்றுமை அவசியம் என்பதை நாம் உணருகிறோம். ஆனால் அதே நேரத்தில் ஒற்றுமை உருவாகவேண்டும் என்பதற்காக, எல்லாவற்றையும் சேர்த்து வைத்துக் கொண்டு, இருப்பதையும் அழித்துக்கொள் வது முறையல்ல என்பதை ஆதீனகர்த்தர் கள் இருவரும் நன்றாக உணர்வார்கள் என்பதை நான் அறிகின்றேன். கனியிலே ஒரு பாகம் அழுகிவிட்டால், அதை அறுத் தெறிந்துவிடவேண்டுமேயல்லாமல், ஒற்று மைக்காக அதையும் சேர்த்து இணைத்து வைத்துக்கொண்டால், இருக்கிற கனியும் அழுகிவிடும் என்பதை அறியாதவர்கள் யாரும் இருக்கமுடியாது.

தமிழ்நாட்டில் நாம், தாயா சேயா என்கின்ற கேள்விக்குறியை எழுப்பி, விடை காணவேண்டுமேயானால், தமிழா அல்லது தமிழ் மகனா என்று அந்தக் கேள்வியை நாம் வகுத்துக்கொள்வோமே யானால், மகப்பேறு காலத்தில், தாய், பிள்ளைப்பேற்றுக்கான வலியால், வேதனைப் படுகிற நேரத்தில், கைதேர்ந்த மருத்துவர், பிள்ளைப்பேற்றுக்கு வந்திருக்கின்ற, அந்தத் தாயைப் பலமுறை சோதித்துவிட்டு, அந்தத் தாயினுடைய கணவனிடத்திலே வந்து, அல்லது பெற்றோர்களிடத்திலே வந்து, என்னுடைய கேள்விக்குப் பதில்வேண்டும், இப்போது உங்களுக்குக் குழந்தை வேண்டுமா அல்லது தாய் பிழைக்க

வேண்டுமா என்று கேட்டால், வீட்டார் சொல்லுவார்கள், குழந்தை இன்றென்று பிறகு பெற்றுக்கொள்ளலாம், எங்களுக்குத் தாய்தான் வேண்டும் என்று சொல்லுவார்கள். அதைப்போலத்தான், தமிழ் வேண்டுமா, அல்லது ஒரு தனித் தமிழன் வேண்டுமா என்று கேட்டால், நாம் சொல்கிறோம், தாயான தமிழ்தான் வேண்டும், தனிப்பட்ட ஒரு மனிதன் தேவையில்லை. ஏனென்றால் அந்தத் தமிழ் ஆயிரம் ஆயிரம், கோடானு கோடி தமிழர்களை உருவாக்கும் சக்தியைப் பெற்றிருக்கிறது என்று நாம் இன்றைக்குக் கூறுகின்றோம். ஆகவே, தாயா சேயா என்பது ஒரு மொழிக்கு மாத்திரமல்ல, ஒரு இனத்திற்கு மாத்திரமல்ல, எந்த ஒரு நிறுவனத்திலும் கூட, தாயா சேயா என்கின்ற கேள்வி எழுகிற நேரத்தில், அறிவாளிகள் அளிக்கக் கூடிய ஒரே பதில் தாய்தான் என்கின்ற பதிலாகத்தான் இருக்கும்.

ஆகவே நிறுவனமில்லாமல், நிறுவனத்திலே உள்ளவர்கள் இல்லை. ஆகவே அந்த நிறுவனத்தைக் கட்டிக்காக்கக் கூடியவர்கள், திறமையிலே வேறுபாடு உள்ளவர்களாக இருக்கலாம். இங்கே தருமை ஆதீன கர்த்தர் அவர்கள் சொன்னார்கள். இதற்கு முன்பு இருந்து மறைந்துவிட்ட பெரியவர் அவர்கள் இன்று இல்லை என்பதை அவர்கள் வேதனையோடு வெளியிட்டார்கள். உணர்ச்சி வயப்பட்டார்கள். நீங்களும் நானும் அதனை உணர்ந்தோம். ஆனாலும், ஒன்று இல்லாத இடத்தில், பொன்னிருந்த இடத்தில் பூவாவது வைக்கவேண்டும் என்பதுதான் முன்னோர்கள் பழமொழி. அந்த அளவுக்குத் திறமை உள்ளவர்களாக நாம் இருக்கிறோமா இல்லையா என்பதல்ல. அந்த அளவுக்குத் திறமையை நம்மால் மாத்திரம் காட்டமுடியாவிட்டால், இன்னும் சிலரோடு சேர்ந்து, மற்றவர்களிடத்திலே இருக்கிற திறமையையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து, இழந்துவிட்ட திறமைக்கு ஈடான, ஈடுகட்டக்கூடிய அளவுக்குத் திறமையை, சமுதாயத்திற்காக, நாட்டுக்காக நாம் அளித்துத்தீரவேண்டும். இங்கே மின் விளக்குகள் எரிந்துகொண்டிருந்தன. திடீரென்று நின்றுவிட்டன. பெட்ரோமாக்ஸ் கொளுத்திவைக்கப்பட்டிருக்கிறது. அடிக்கடி அதற்குக் காற்று அடிக்கப்பட்டால்தான் அந்த ஒளி இருக்கும். அண்ணா இருந்தார்; மின் விளக்குகளாய் மறைந்தார். பெட்ரோமாக்ஸ் விளக்குப் போல நான் இருக்கிறேன். எனக்கு அடிக்கடி காற்று அடித்தால்தான் நான் ஒளிவிட்டுக் கொண்டிருக்க முடியும். அப்படிப்பட்ட காற்றைப் பெறத்தான் தருமையாதீனத்திற்கு வந்தேன். இங்கே இந்தத் தமிழ் உணர்வைப் பெற்றேன் என்று சொன்னால் அது மிகையாகாது. இங்கே நான் அமைதியான முகமும், அன்பு வழிகின்ற இதயமும் கொண்ட உங்களையெல்லாம் காணுகின்ற இந்த நேரத்திலே மிகுந்த மகிழ்ச்சியடைகின்றேன்.

இந்தக் கல்லூரியில் பல்வேறு பயிற்சிகள் அளிக்கப்படுவதையும், அவர்கள் எடுத்துக் காட்டியதைப்போல, இந்தக் கல்லூரி மாணவர்கள், கட்டுப்பாட்டோடு இயங்குகிறார்கள்; கடமை உணர்வோடு பயிற்சி பெறுகிறார்கள்; கண்ணியத்தோடு பழகுகிறார்கள் என்பதனையும் அவர்கள் இங்கே வெகு அழகாக எடுத்துச்சொன்னார்கள். இப்படிப்பட்ட மாணவர்கள், மடாலயத்திலே இருந்து பயிற்சி பெறுகின்ற காரணத்தினாலே மாத்திரம் அந்த நெறியிலே பழகுகிறார்கள் என்று இல்லாமல், தமிழ்நாட்டில் இருக்கின்ற எல்லாக் கல்லூரிகளில் இருக்கின்ற மாணவர்கள், கடமை கண்ணியம் கட்டுப்பாடு போற்றி வாழ்வார்களேயானால், எதிர்காலத்தினுடைய தமிழ்ச் சமுதாயம்

உள்ளபடியே மற்ற நாடுகளுக்கெல்லாம், வழிகாட்டத்தக்க அளவுக்கு, வளமை பெறக் கூடிய அளவுக்கு இருக்கும். அதை இந்தக் கல்லூரி மாணவர்களுக்கு மத்தியிலே நான் பேசுகிற நேரத்தில், உங்கள் வாயிலாக மற்றக் கல்லூரியிலே இருக்கின்ற மாணவர் களுக்கும், எடுத்துச் சொல்வது என்னு டைய கடமையென்று நான் கருதுகின்றேன். பொதுவாக - இந்தப் பல்கலைக் கல்லூரியிலே யிருந்து தமிழகத்திற்கு அளிக்கப்பட்டி ருக்கின்ற செல்வங்கள் ஏராளம். அவர்கள் தந்திருக்கின்ற குறிப்பிலே கூட ஏழெட்டு முக்கியமானவர்கள், தமிழகத்திற்கு இந்தக் கல்லூரியிலேயிருந்து கிடைத்திருக்கிறார்கள் என்று குறிப்பிட்டார்கள்.

இந்தக் கல்லூரி 25 ஆண்டுகளுக்கு முன்பு அமைந்திராவிட்டால், தமிழ் நாட்டிற்குத் தமிழால் உணர்ச்சி ஊட்டுகின்ற தவத்திரு குன்றக்குடி அடிகளார் கிடைத் திருக்க மாட்டார் என்பதை நான் உள்ள படியே உணருகின்றேன். அவர்கள் இன்று மேலவையிலே ஆற்றுகின்ற பணியானாலும், தெய்வீகப் பேரவையிலே ஆற்றுகின்ற பணி யானாலும், மக்கள் மன்றங்களிலே ஆற்று கின்ற பணியானாலும், அந்தப் பணியிலெல் லாம் தமிழ் இழைந்தோடிக் கொண்டிருக் கின்றதை என்னால் காணமுடிகின்றது. அப்படிப்பட்டவர்களுக்கு நல்லாதரவு அளிக்கின்ற வகையிலும், நட்புறவோடு பழகுகின்ற வகையிலும், தருமை யாதீனத்தில் இருக்கின்ற இன்றைய ஆதீனகர்த்தர் அவர்கள் இன்றைக்கு விளங்குகிறார்கள் என்பதை, எண்ணி நான் மகிழ்ச்சி அடைகின்றேன். அவர்கள் சென்னை மாநகரத்தில் இருந்தபோது, அவர் களை அடிக்கடி சந்திக்கின்ற வாய்ப்பினை நான் பெற்றிருக்கின்றேன். எந்த விழா வானாலும், நான் வெளிநாடு செல்வதானாலும், பிறந்த நாள் விழாவானாலும், அன்றைக்கு நான் அவரைச் சந்திக்கின்ற நல்வாய்ப்புக் களைப் பெற்றிருந்தது உண்டு. இன்றைக்கு அவருக்குக் கிடைத்திருக்கின்ற பொறுப்பின் காரணமாக, இந்த மடாலயத்திற்குள்ளேயே அவர்கள் இருந்திட வேண்டும், என்கின்ற கடமையை ஆற்றவேண்டியிருந்தாலும், மாணவர்களுக்கு ஏற்ற திட்டங்களை வகுக்க இருப்பதாகச் சொன்னார்கள். அதை நானே இங்கே சொல்லவேண்டும் என்று சொன்னார் கள். இருபத்தைந்தாவது ஆண்டு விழாவில், அவர்கள் இருபத்தைந்தினுடைய சிறப்புக் களையெல்லாம் சொன்னார்கள்.

இது ஐம்பதாவது ஆண்டு விழாவாக இருந்தால், 50,000 ரூபாய் ஒதுக்கியிருப் பார்கள். பரவாயில்லை. இது வெள்ளி விழா. வெள்ளி விழாவிலே, 25,000 ரூபாய் இதற்காக அவர்கள் ஒதுக்கியிருப்பதற்காக, நான் மிகுந்த மகிழ்ச்சியடைகின்றேன். 25, என்கின்ற எண்ணைப்பற்றி அவர்கள், பெருமையோடு சொல்லி, 25-ஆம் தேதியே இன்றைக்குக் கிடைத்திருக்கிறது என்று அவர்கள் பெருமையோடு சொன்னார்கள். அந்தப்பெருமைக்குரிய நாளில் உங்களையெல் லாம் காணுகின்ற நல்ல வாய்ப்பைப் பெற் றமைக்காக, மீண்டும் மீண்டும் என்னுடைய நன்றி அறிதலைத் தெரிவித்துக்கொண்டு, இன்னும் இன்றைக்குப் பல்வேறு நிகழ்ச்சி களில், நான் கலந்துகொள்ள வேண்டிய காரணத்தினால், நீண்டநேரம் உங்க ளிடையே இருந்து உரையாற்ற முடியாமைக் காக, என்னுடைய வருத்தத்தை வெளியிட்டு, மீண்டும் ஒருமுறை, தமையாதீனகர்த்தர் அவர்களுக்கும், விழாத்தலைமை ஏற்றிருக் கின்ற, தவத்திரு அடிகளார் அவர்களுக்கும், உங்கள் அனைவருக்கும், நன்றியினை நவின்று விடைபெறுகின்றேன். வணக்கம்.